# தமிழ் இலக்கிய வரலாறு

## பதினாறாம் நூற்றாண்டு

பாகம் - 1

மு. அருணாசலம்

***The PARKAR***

தமிழியல் ஆய்வு மற்றும் வெளியீட்டு நிறுவனம்

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்*
*இராயப்பேட்டை நெடுஞ்சாலை*
*இராயப்பேட்டை*
*சென்னை - 14.*

# தமிழ் இலக்கிய வரலாறு

பதினாறாம் நூற்றாண்டு, பாகம் – 1

மு. அருணாசலம்



*முதற் பதிப்பு : சித்திரை 1977.*

*திருத்தப்பட்ட பதிப்பு : மார்கழி 2005.*

*பக்கம் : lxxii + 336 = 408.*

*பதிப்பு :*

***தி பார்க்கர்***

*293, அகமது வணிக வளாகம்,*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை,*

*இராயப்பேட்டை, சென்னை - 600 014.*

**விலை : 306. 00**

*வடிவமைப்பு :*

**வே. கருணாநிதி**

*அச்சிட்டோர்:*

***தி பார்க்கர்***

*293, அகமது வணிக வளாகம், இரண்டாவது தளம்,*

*இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை - 600 014.*

# முகவுரை

திரு மு. அ. என்றே அழைக்கப்பட்ட இவ்வாசிரியர் ஒரு பன்முக எழுத்தாளர். அவருடைய வாழ்க்கையைப் பல கட்டங்களாகப் பிரிக்கலாம். அவருடைய எழுத்தும் அவ்வாறே. எனினும் 1930இல் சென்னையில் குடியேறியதில் இருந்து, தமிழ்ப் பெரியோர்களுடன் அவருக்கு இருந்த நெருக்கமான தொடர்பினால், அவரது தமிழ் ஆர்வமும் ஆராய்ச்சியும் வாழ்நாள் முழுவதும் அமைந்தன. ஐயங்களுக்கு விடைகாணவும், முடிவுகளை விவாதிக்கவும், பல நூலகங்களையும் அனேக தமிழ் அறிஞர்களையும் நாடிச் சென்றார்.

'தமிழ் இலக்கிய வரலாறு' என்பது ஒரு தனி மனிதனின் உழைப்பும், ஆழ்ந்த அறிவின் பயனும் ஆகும். இது 1969-முதல் பகுதி, பகுதியாக, 'காந்தி வித்தியாலயம்' சார்பில் வெளியிடப்பட்டது. அன்றைய தொழில் நுட்ப முறையில் பல அச்சகங்களை நாடி, பலவிதமான தாள்களில் வெளிவந்தன. இருப்பினும், பதினொரு தொகுதிகளுக்கும் வடிவம் ஒன்றே. சுமார் இருபதாண்டுகளாக இவற்றின் பிரதிகள் கிடைக்கப் பெறாமையால் தமிழ்ப் படிப்பவர்களுக்கு ஏமாற்றமளித்தது. இன்று மிக மிக முன்னேற்றம் அடைந்த அச்சுத்தொழில் முறையில் இவற்றை வடிவமைத்து மறுபதிப்புக்காக வெளியிட 'தி பார்க்கர்' பதிப்பகத்தார் முன்வந்துள்ளனர். அவர்களுக்கு நன்றி.

திருச்சிற்றம்பலம். அ. சிதம்பரநாதன்
15. 11. 2004.

## நன்றியுரை

தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை தொகுதிகள் அனைத்தையும் அறிஞர் மு. அருணாசலம் ஐயா அவர்கள் குறித்து வைத்திருந்த திருத்தங்களுடனும் புதிய கருத்துகளுடனும் புதிதாக வடிவமைத்து மறுபதிப்புச் செய்து வெளியிட எமது நிறுவனத்திற்கு அனுமதி அளித்த ஆசிரியரின் புதல்வர் திருமிகு அ. சிதம்பரநாதன் அவர்கள் மற்றும் அவரது சகோதரிகள் அனைவருக்கும் எமது மனப் பூர்வமான நன்றிகள்!

இம்முயற்சியில் என் துணை நின்று வழிநடத்தியவர் மனைவி இ.சா. பர்வீன் சுல்தானா அவர்கள்.

இத்தொகுதிகளின் உருவாக்கப்பணியில் என் அலுவலகப் பணியாளர்களுடன் சேர்ந்துகொண்டு என் சிந்தனைக்கு வலுச் சேர்த்து உழைத்தவர், மதுரை அமெரிக்கன் கல்லூரி, தமிழ்த்துறை விரிவுரையாளர் நண்பர் உல. பாலசுப்பிரமணியன் அவர்கள்.

உத்வேகம் கொடுத்து எம்மை உழைக்க வைத்தவர் தமிழக சட்டமன்ற சபாநாயகர் காளிமுத்து ஐயா அவர்கள். தோள்கொடுத்து உதவியவர்கள் : மதுரை வணிகவரி உதவி ஆணையர் திரு. தேவேந்திர பூபதி, நண்பர் சி. ஆறுமுகம், அமுத நிலையம் உயர்திரு வீரபாகு, மைத்துனர் காலிப் அல்தாப், மைத்துனர் முகமது தானியெல், திரு. முருகன் (முருகன் பேப்பர்ஸ்), எனது தம்பிகள் வே. உதயசூரியன், வே. சிற்றரசு, அண்ணன் கோணங்கி, நண்பர் பிரபாகர் ஜெயராஜ், எம். ஜெயசந்திரன், ஜெ. சந்திரா, நண்பர்கள் நாசர், சாகுல், ஆனந்த்.

எமது நிறுவனப் பணியாளர்கள் : ஜெ. கலைவாணி, அ. ஜெயந்தி, எஸ்.என். விஜயகுமார், ஜெ சரவணன், ஜெயகுமார், தனசேகர், பால சுப்பிரமணியன், பஹிமா, மெஹபூப் சுபுஹானி, சைதாபானு, கயல் விழி, தேன்மொழி, பாத்திமா, சுகுணா, அனுராதா, சுமதி, தேவி, ஜாய்ஸ், நஸ்ரின், நஜீலா, சரஸ்வதி, தமிழ்ச்செல்வி, ஈஸ்வரி, திலகவதி, சித்ரா, கவிதா, வசந்தி, ராஜேஸ்வரி, ஷமா, கல்பனா, சையதுஅலி பாத்திமா, ஜோதி, நிஷா, கலா, பவானி, ராணிசித்ரா, மல்லிகா, அம்மு, ரதிதேவி - இதனால் சகலமானவருக்கும் எமது நன்றிகள்.

# பதிப்புரை

*தமிழ் இலக்கிய வரலாறு - நூற்றாண்டு முறை அடிப்படையிலான தொகுதிகளின் வெளியீட்டுத் திட்டத்தில், 16ஆம் நூற்றாண்டு வரலாற்றை மூன்று பாகங்களாக ஆசிரியர் எழுதி வெளியிட்டுள்ளார். இது 16ஆம் நூற்றாண்டின் முதல் பாகம்.*

*அவர் வெளியிட்டுள்ள நூற்றாண்டு முறையிலான தமிழ் இலக்கிய வரலாற்று நூல்களில் இந்த 16ஆம் நூற்றாண்டு வரலாறு மட்டுமே மூன்று பாகங்களாக அவரால் எழுதப்பட்டுள்ளது. இவை மூன்றும் சேர்ந்து 1124 பக்கங்கள் கொண்டதாக இத் திருத்தப்பதிப்பு வெளிவருகிறது. ஆசிரியர் வெளியிட்ட முதல் பதிப்பு மூன்று பாகங்களும் 1428 பக்கங்களில் கிரௌன் அளவில் வெளிவந்தது குறிப்பிடத்தக்கது.*

*இதேபோல் 9ஆம் நூற்றாண்டு வரலாற்றை அவர் மூன்று பாகங்களாக வெளியிடத் திட்டமிட்டிருந்தார். ஒரு பாகம் மட்டுமே அவரால் வெளியிடப்பட்டுள்ளது. இரண்டாம் மூன்றாம் பாகங்கள் அவர் மறைவு வரை வெளியிடப்படவில்லை. இரண்டாம் பாகத்தின் 'நம்மாழ்வார்' என்ற பகுதி மட்டும் தனி நூலாக அவரால் வெளியிடப்பட்டிருந்தது. இதனை இவ்வரலாற்றுத் தொகுதிகளுடன் 9ஆம் நூற்றாண்டின் இரண்டாம் பாகமாக நாம் வெளியிட்டுள்ளோம்*

*நூற்றாண்டு முறையிலான தமிழ் இலக்கிய வரலாற்றுத் தொகுதிகளின் வெளியீட்டு முயற்சியில் இந்த 16ஆம் நூற்றாண்டு முதல் பாகம் நூலே அவர் இறுதியாக வெளியிட்டதாகும். 1969 ஆண்டில் தொடங்கிய இவ்வெளியீட்டு முயற்சி 1977இல் இந் நூல் வெளியீட்டோடு தடைப்பட்டுப் போனது.*

*இந்த 16ஆம் நூற்றாண்டு முதல் பாகம் நூலின் முகவுரையில் ஆசிரியர், "இந்த நூலோடு பதினொரு தொகுதிகள் வெளிவந்துள்ளன இன்னும் பத்தொன்பது தொகுதிகள் வரக்கூடும்." என்று குறிப்பிட்டுள்ளார். அவர் கருத்துப்படி மொத்தம் முப்பது தொகுதிகள் வெளியிடத் திட்டமிட்டிருந்தார் போலும்.*

திருச்சிற்றம்பலத்திலுள்ள ஆசிரியரது வீட்டில் இப்பணி தொடர்பாக நாம் சிலகாலம் தங்கியிருந்தோம். அங்குள்ள அவரது நூலகத்தில் தொடர்ந்து இந்த வரலாற்று நூல்களை எழுதும் பணியில் சில ஆண்டுகளுக்கான குறிப்புகளை அவர் எழுதி வைத்துள்ளார். எழுதும் பணியையும் வெளியிடும் பணியையும் ஆசிரியர் ஒருவரே மேற்கொண்டதால் அவரது எழுத்துப் பணி தடைப்பட்டுப் போனதாகவே கருதவேண்டியுள்ளது.

அவரால் எழுதி வெளியிடப்பட்ட இலக்கிய வரலாற்றுத் தொகுதிகள் அனைத்தும் பக்கத்துக்குப் பக்கம் வெள்ளைத் தாள் இடையிட்டுக் கட்டமைப்புச் செய்யப்பட்ட ஒரு தொகுப்பு அவரது நூலகத்தில் காணப்பட்டது. இத்தொகுதிகளில் பல புதிய செய்திகளும் ஆங்காங்கே திருத்தங்களும் ஆசிரியரால் குறித்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றை ஒவ்வொரு தொகுதியிலும் சேர்த்தும் திருத்தியும் முறைப்படுத்தியுள்ளோம்.

இவ்வரலாற்றுத் தொகுதிகள் மொத்தம் 14 நூல்களாக வெளிவருகின்றன. ஆசிரியர் வெளியிட்டவை 11. நாம் புதிதாகச் சேர்த்தவை 3. இவற்றுள் 14வது தொகுதியானது மேற்படி நூல்களில் உள்ள வரலாற்று அட்டவணைகள் முன்னுரைகளுடன் சேர்த்துத் தொகுக்கப்பட்டுள்ளன.

தன் தந்தையாரின் இவ்விலக்கியப் பணியை மீண்டும் தமிழ் மக்கள் மத்தியில் வெளிக்கொணர எமக்கு அனுமதியளித்து, தனது வீட்டில் தங்கவைத்து எம்மை ஊக்கப்படுத்திய அவர் மகனார், உணவளித்து எம்மை உபசரித்த அவர் மருமகளார் இருவரும் மிகுந்த போற்றுதலுக்கு உரியவர்கள்.

ஒரு தனி மனிதன் தனது வாழ்நாளில் முப்பது ஆண்டுகளுக்கு மேலாக தமிழ் இலக்கிய வரலாற்றை எழுதுவதற்காகவே செலவிட்டிருக்கிறார். இத்தொகுதிகளை அவர் வெளியிட்ட அன்றைய காலகட்டத்தில் இருந்த அச்சமைப்பு வசதிகள் அவரது பாரிய சிந்தனைக்கு ஈடு கொடுக்காமையினால் அவரது விருப்பப்படி இத்தொகுதிகளை அவரால் வடிவமைக்க முடியவில்லை; இக்குறைபாட்டை நீக்கும் முகமாகவும் அவரது பணியைப் போற்றும் விதமாகவும் அன்னாரின் மகனார் ஒத்துழைப்பின் அடிப்படையில் எமது நிறுவனம் இவற்றை வெளியிட்டு மகிழ்கிறது.

சென்னை
25. 12. 2005.

**வே. கருணாநிதி**

# முதல் பதிப்பின் முகவுரை

அகனமர்ந்த அன்பினராய் அறுபகைசெற் றைம்புலனும்
 அடக்கி ஞானப்
புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும்
 புராணர் கோயில்
தகவுடைநீர் மணித்தலத்துச் சங்குளவர்க் கம்திகழச்
 சலசத் தீயுள்
மிகவுடைய புன்குமலர்ப் பொரியட்ட மணம் செய்யும்
 மிழலை யாமே. – சம்பந்தர்

மூர்த்தி தலந்தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.
 – தாயுமானவர்

## இந்நூல் வரலாறு

*பதினாறாம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றின் பிந்திய இரு பாகங்களும் (பாகம் 2, 3) முன்னமே வெளிவந்தது விட்டன. அவற்றுள் இந்த நூற்றாண்டு வரலாற்றுக்கு முகவுரையாக அமையத் தக்க பெரும்பான்மையான செய்திகள் சொல்லப்பட்டிருக்கின்றன. முதல் பாகம் மிகவும் தாமதித்து இப்போது வெளிவருகிறது. தாமதத்தின் காரணம் இறுதியில் குறிப்பிடுகிறோம். இந்த நூற்றாண்டில் புராணம் செய்த ஆசிரியர் இருபத்திரண்டு பேர். இவர்கள் செய்த புராணங்களிலுள்ள பாடல்களின் மொத்தத் தொகை (கிடைக்காத 5 புராணங்களையும் விலக்கி) சுமார் 60, 000. இதனால் புராணங்களின் விரிவை நன்கு அறியலாம். இது பற்றியே இம்முதல் பாகம் புரான இலக்கியம் என்று சிறப்பாகப் பெயர் சூட்டப் பெற்றிருக்கிறது.*

## இந்நூல் அமைப்பு

*முன்வந்த இலக்கிய வரலாறுகள் அனைத்திலுமே (நூற்றாண்டு 9 முதல் 15 முடிய) நூலாசிரியர் ஒருவர் செய்த நூல்கள்*

யாவும் ஒருசேர ஒரே அத்தியாத்தில் ஆராயப்பெற்று வந்துள்ளன. ஆனால் இந்த நூற்றாண்டு வரலாற்றில் அவ்வாறில்லாமல், புராணப் பகுதி என்ற இம்முதல் பகுதியில் ஆராயப்படும் ஆசிரியர் பலருடைய புராணமல்லாத பிற நூல்கள். இங்கு ஆராயப் பெறாமல், இரண்டாம் பாகம் மூன்றாம் பாகங்களில் உரிய தலைப்புக்களில் ஆராயப் பெற்றுள்ளன. (இவற்றின் அட்டவணை தனியே உள்ளது) உதாரணம்: வரதுங்க ராம பாண்டியர் - கருவை அந்தாதிகள், கொக்கோகம்; அதிவீர ராம பாண்டியர் - நைடதம், வெற்றிவேற்கை; கமலை ஞானப்பிரகாசர் - சைவ நூல்கள்; நிரம்ப அழகிய தேசிகர் - உரைகள் முதலாயின, காரணம், புராணப் பகுதி அளவால் விரிந்தமையாலும், புராணம் மட்டுமே இங்கு சொன்னமையாலும். இதற்கு விலக்கு, வரகுண ராம பாண்டியர் செய்த அம்பிகைமாலை; இது முப்பதே பாடல் கொண்ட சிறுநூல் ஆதலாலும், வரகுணராமர் இங்குள்ள புராணங்கள் இம்மாலை அன்றி வேறு நூல் செய்யவில்லை, ஆதலாலும், பெரு நூல்களைச் சொல்லியவிடத்து இச்சிறு நூலையும் கூறி முடித்தோம்.

இப்பகுதியின் அத்தியாய அமைப்புக்கள் பொருளால் இயல்பாகவே ஐந்து அத்தியாயங்களாக அமைந்துள்ளன. பாண்டியர் மூவருடைய புராணங்கள் முதல் அத்தியாயம். சிறந்த சைவ சித்தாந்த ஆசாரியரான கமலை ஞானப்பிரகாசர் செய்த புராணங்களும், அவருடைய மாணக்கராகிய சில சைவ நூலாசிரியரான துறவிகள் செய்த புராணங்களும் இரண்டாவது அத்தியாயம். மூன்றாவது சைவ - எல்லப்ப நாவலர் செய்த புராணங்கள் மட்டும். அடுத்து, பல ஆசிரியர் - புராணத் திருமலைநாதர், மறைஞான சம்பந்தர், அனதாரியப்பர் ஆகியோர். இறுதியாக ஐந்தாம் அத்தியாயத்தில் வைணவப் புராணங்கள் மட்டும் ஆராய்கின்றோம்.

ஒரு குறிப்பு எடுத்துக்காட்டத் தக்கது. இதே நூற்றாண்டில் மாசிலாமணி சம்பந்தர் என்பவர் உத்தரகோச மங்கைப் புராணம் செய்தார் என்று தேசிகர் தாம் எழுதிய இந்நூற்றாண்டின் புலவர் வரலாற்றில் குறிப்பிட்டுள்ளார். இது பொருந்தாது; இச்சம்பந்தர், பின்னால் தருமபுரத்தில் நான்காம் ஆசாரியராயிருந்தவர். நூல் செய்தவர் அவருடைய மாணாக்கர். காலம் 17ஆம் நூற்றாண்டு. இவர் கமலை ஞானப்பிரகாசரைத் துதித்

தமையாலேயே அவருடைய சீடரெனக் கருதலாகாது. ஞானப் பிரகாசர், தருமை முதல்வரான குருஞான சம்பந்தரின் குரு ஆதலால், பின்வந்தோர் அனைவரும் அவரைத் துதித்தல் சமய மரபு. இவ்வாசிரியர் வரலாறு இங்கு சொல்லப்பெறாது.

## இங்கு ஆராய்ந்த புராணங்கள்

இந்நூலுள் ஆராயப்பெற்ற புராணங்களைத் தொகுத்துச் சில சொற்கள் கூறுதல் பொருந்தும். 22 ஆசிரியர் செய்த 41 புராணங்களை இங்கு பார்க்கிறோம். இவற்றுள் 5 வைணவப் புராணங்கள், 36 சைவ புராணங்கள். வைணவம் ஐந்தில் 2 இதி காசம் (பாகவதம்), 2 தலபுராணம், ஒன்று மட்டும் சமய விசார மாகவுள்ளது. சைவம் 36இல் தலபுராணங்கள் 26, சிவ பராக் கிரமம் கூறுவன 3. சிவ தருமம், சிவ புண்ணியம் கூறுவன 7. வர லாறு கூறும் புராணங்கள் இவற்றுள் இல்லை. மகா புராணங் களாக உள்ளவை 5: இலிங்கபுராணம், கூர்ம புராணம், சிவ மகா புராணம் (நூல் இல்லை, பாகவதம், இரண்டு தீர்த்தச் சிறப் புரைக்கும் தனிப் புராணமாக உள்ளது* ஒன்று, மாக புராணம். இவற்றுள் இன்னும் அச்சாகாத புராணங்கள் 4. இறந்து போயின கிடைக்கவில்லை என்ற நிலையிலுள்ள புராணங்கள் 5, அளவால் மிகவும் பெரியவை இரு பாகவதங்களும். ஆயிரத்துக்கு மேற் பட்ட செய்யுள் உடையவை இந்நாற்பதில் 15, செய்யுட்தொகை குறிப்பிடாத ஐந்து புராணங்கள் போக, எஞ்சியுள்ளவற்றின் மொத்தச் செய்யுள் தொகை அறுபதாயிரம்.

ஆகமம் என்றும் பெயர் பெறுகின்ற சிவதருமோத்தரம் ஒரு புரணமாக இங்கு ஆராயத்தக்கது. ஆயினும் சிறப்பாக அது கூறும் சரியைப் பொருளையும், சிவபுண்ணியத்தையும் கருதி, அதை இரண்டாம் பாகத்தில் சைவ இலக்கியம் என்ற அத்தியா யத்திலேயே ஆராய்ந்திருக்கிறோம்.❖

எஞ்சியுள்ள புராணங்கள் அனைத்தையும் இந்நூற்றாண்டில் பார்க்கும்போது, எட்டில் ஒரு பங்குதான் வைணவப் புராணங் கள். இந்த நிலைமையைப் பின்னே ஐந்தாம் அத்தியாயத்தின்

---

* பிற்காலத்தில் காவேரிப் புராணம் என்ற பிரமவைவர்த்த புராணம் தோன்றியுள்ளது. ஆசிரியர் மறைசை திருச்சிற்றம்பல முனிவர், அத்தியாயம் 36, பாடல் 1474, அச்சானது 1871.

❖ தமிழ் இலக்கிய வரலாறு 16 நூற்றாண்டு பாகம் 2.

தொடக்கத்தில் சிறிதளவு குறிப்பிட்டுப் பேசுகிறோம். வைணவத்தில் பாகவதங்கள் இரண்டும் திருமாலின் அவதாரங்களைக் கூறுகின்றன. சைவ நூல்கள் சொல்வது போல தருமங்களும், புண்ணியங்களும், பொதுநிலையில் வாழ்க்கைக்கான ஒழுக்கமும் தருமமும் கூறும் நூல்கள் அச்சமயத்தில் குறைவுதான். சைவ புராணங்கள் சிவபுண்ணியம் சிவபுண்ணிய சரிதங்கள் கூறுவதோடுகூட, சில சமயம் சாத்திரப் பொருளையும் கூறுகின்றன - ஐந்தெழுத்து, உருத்திராக்கம், தியானம், யோகம், சோடசக் கிரியைகள், சிவபூசை, நித்திய கன்மம் முதலாயின.

பதினாறாம் நூற்றாண்டு, தமிழ்ப்புராண வரலாற்றில் சிறப்பான இடம்பெறுகிறது. பிற்காலம் முழுமையிலும் தலபுராணங்களே அதிகமாக எழுகின்றன. மச்ச புராணம் ஒன்றுமே அந்த நிலைக்கு விலக்கு. பதினாறுக்கு முற்பட்ட நூற்றாண்டுகளில் தோன்றிய உபதேச காண்டங்கள் இரண்டும் சிவதருமங்களைக் கூறுவன. இப்பதினாறாம் நூற்றாண்டில் மகா புராணங்களைத் தழுவிய பெரும் புராணங்கள் கூர்மம், இலிங்கம், வாயு சங்கிதை பிரமோத்தர காண்டம், காசி கண்டம் என்பன தோன்றின. இவ்வைந்தும் பாண்டி மன்னரால் செய்யப்பெற்றது மற்றொரு சிறப்பு. இதுபோலவே வைணவத்திலும் இருபெரும் பாகவத புராணங்கள் இக்காலத்தில் செய்யப்பெறுகின்றன. பின்னர் இவை போன்ற பெருநூல்கள் செய்யப் பெறவில்லை.

### புராணமும் காப்பியமே

மனத்தில் இருத்த வேண்டிய கருத்து ஒன்று உண்டு. தமிழ் நூல் கற்பவரிடையும் நூல்கள் ஆராயும் அறிஞரிடையும் ஒரு கருத்து நிலவி வருகிறது. சங்க இலக்கியங்களே தமிழ்மொழியின் பொற்காலம் என்பவர் ஒரு சாரார். சோழர் காலமே மிக்க சிறப்புடையது என்பது மற்றொரு சாரார் கருத்து. முருக பக்தரான அருணகிரி நாதர் பாடிய திருப்புகழின் காலமே பொற்காலம் என்பவர் ஒரு சாரார். புராண காலம் என்று ஒரு காலம்: அது தமிழ் வீழ்ச்சியடைந்த காலம் என்பவர் பலர். இவை சரியல்ல. ஒரு சாரார் மற்றொருவர் கருத்தை ஒப்புக்கொண்டு பேசுவதோ அதற்கும் இடமுண்டு என்று ஏற்பதோ இல்லை. இவற்றுள் உண்மை எங்கேயிருக்கிறது? இவை எல்லாமே உண்மை அல்ல. ஆனால் எல்லாவற்றிலும் உண்மை இல்லாமலும் இல்லை.

இதை உணர்ந்தால்தான் ஆராய்ச்சியை மேற்கொள்ள முடியும், ஆராய்ச்சியும் பொருள் உடையதாக அமையும்.

இலக்கியம் என்பது ஓர் ஆசிரியன் மிக்க புலமை வாய்ந்தவனாய், தனக்கென்று ஓர் இடவரம்பு கோலிக்கொண்டு அல்லது ஓர் அறைக்குள் புகுந்து கொண்டு, எழுதி வைக்கும் நூலன்று. ஏன் அவன் எழுத வேண்டும் என்பது முதற்கேள்வி. புலமையிருந்தால் எழுத வேண்டும் என்ற நிர்ப்பந்தம் இல்லை, எழுதவும் முடியாது. புலவன் சமூகத்தின் இடையில் வாழ்கிறான். குடும்பத்தார் சூழ்ந்த இல்லற வாழ்கையில் இருக்கிறான்; அல்லது மாணாக்கரும் மற்றையோரும் சூழ்ந்த துறவற வாழ்கையில் ஒழுகுகிறான். எப்படியிருந்தாலும் சமூகச் சூழ்நிலை அவனை ஓரளவு பாதிக்கின்றது. சமுதாயத்தின் போக்கு. அதன் உயர்ந்த நோக்கங்கள், அல்லது அதன் வீழ்ச்சி, அரசியல் நிலைமை, அதில் வரும் கொந்தளிப்புக்கள், கல்வியால் வரும் போட்டி, உயர்வு தாழ்வு, செல்வம், அதனால் வரும் உயர்வு தாழ்வு, வாழ்க்கையில் வரும் தோல்வி, வெற்றி, சொந்த இன்ப துன்பங்கள், அன்பருடைய போற்றுதல், வேண்டாதாருடைய தூற்றுதல் - இத்தனையும் ஒருவருடைய உள்ளப் பண்பை உருவாக்குகின்றன. இதில் விளைவதே கவிதை.

சங்க காலத்தில் மக்கட் கூட்டம் குறைவு. சமுதாயம் என்ற கூட்டு உணர்வும் குறைவு. ஆதலால் பெரும் புலவர்களாய் இருந்தவர்களும் தாங்கள் பெற்ற உள்ளத்து உணர்வுகளைச் சிறு சிறு பாடல்களாக அந்தந்த நேரத்திற்குப் பாடினார்கள். சங்க இலக்கியம் என்று நாம் சொல்வதில் பெரும்பகுதி தனிப்பாடல்களே. கலித்தொகை, பரிபாடல் இரண்டும் மற்றவற்றை நோக்க, காலத்தால் சற்றுப் பிற்பட்டவை. சங்க காலத்தில் இருந்த நிலைமை சிறிது மாறுதல் அடைந்த பின் இவை பாடப் பெற்றமையால், இவை சிறிது மாறி, தொடர்ந்த பாடல்களாய் அமைந்திருக்கின்றன. இவற்றின் பின்வந்த நூல்கள், பதினென் கீழ்க்கணக்கினுள் பெரும்பகுதி, நீதி நூல்களாய் அமைந்திருந்தன. சில தனி அகப்பொருள் நூல்களாயும் அமைந்தன. அக்காலத்தில் பெருகி வந்த சமுதாய நிலைக்கு ஏற்ப மக்களுக்குப் பொதுநீதிகளை உணர்த்தி நல்வழிப்படுத்த வேண்டிய நிலை அப்போது இருந்தது. இதற்கு அடுத்த காலம் சைவத்திலும் வைணவத்திலும் அருட்பாசுரங்கள் தோன்றிய காலம். இடைக்காலத்தில் தமிழ் நாட்டில் இருந்த சைன ஆதிக்கத்தின் பிடிப்பு பாண்டிய அரசர்களது

வெற்றியால் தளரவே ஒரு சமய எழுச்சி உண்டாயிற்று. அதன் விளைவே சைவ சமய ஆசாரியர்களும் வைணவ ஆழ்வார்களும் பாடிய அருட்பாசுரங்கள், இவற்றால் நாடெங்கும் பெருங் கோயில்கள் தோன்றலாயின, வழிபாடுகள் பெருகலாயின. சமுதாய எழுச்சியினால் பெருங் காப்பியங்கள் தோன்றின. வழிபாட்டுணர்வினால் புராணங்கள் எழுந்தன. புராணங்கள் எழுந்த காலத்தைத் தொடர்ந்து தமிழ் நாட்டில் முகம்மதியர் படையெழுச்சியும் அதன்பின் ஆங்கிலேயர் ஆதிக்கமும் வந்தன. இக் காலங்களில் மக்கள், நிலை தடுமாறினார்கள். வாழ்க்கையின் அடிப்படையே ஆட்டங்கண்டது. ஒருபால் வாழ்வை நிலை நிறுத்த வேண்டும் என்ற நோக்கத்தோடு ஒவ்வொரு சிற்றூருக்கும், அதுவே இந்திரலோகம் சந்திரலோகம் என்று சொல்லிப் புராணங்கள் பாடப்பட்டன; ஊர்ப் பற்றினால் தோன்றிய இவை பொய் என்று சொல்லவியலாது. மற்றொருபால் கோவை, கலம்பகம் பிள்ளைத்தமிழ், அந்தாதி முதலான பிரபந்தங்கள் பெருகலாயின. கல்வி கேள்வி உடையவர்களாய் வாழ்க்கையில் இன்பமோ துன்பமோ எழுச்சியோ வேதனையோ பெற்ற புலவர்கள் தங்களுக்கு ஏற்ற துறையில் நூல் புனையத் தலைப்பட்டார்கள்.

எனவே, இவ்வாறு மாறி வந்த காலப்போக்கை நாம் கவனித்தறியும்போது அதில் ஓர் அமைதி காணவேண்டும். இது உயர்வென்றும், இது தாழ்வென்றும் பேசுவது அறிவுடைமையாகாது. இப்புலவர்கள் தமிழ்நாட்டில் தான் மூச்சுவிடுகிறார்கள். காவிரி நீரையும் பொருநை நீரையும் அரிசிச் சோற்றையும் கம்பங் கூழையும் அவரை வழுதுணையையுமே அருந்தி வந்திருக்கிறார்கள். இந்த நிலையில் புலமை ஒரே தரமாகத்தான் வளர்ந்து வந்திருக்கிறது. இது எவ்விதம் மாறக்கூடும்? ஆகவே காப்பியம் (சமயம் தழுவாத பெரு நூல்) என்றால் உயர்வு, புராணம் என்றால் தாழ்வு, களவியல் என்றால் உயர்வு, துதி இயல் என்றால் தாழ்வு என்று கருதுவது, அவரவர் மனத்தில் உள்ள கோளாற்றின் விளைவாகுமே அன்றி, பொருளில் எந்தக் கோளாறும் இல்லை. ஒன்று குறிப்பிடுவோம். களவியல் என்பது இலக்கண இலக்கியத்தில் சுவைத்துப் பார்க்க நன்றாய்த்தான் இருக்கிறது. வாழ்க்கையில் என்றாவது நன்றாயிருந்திருக்குமா என்று பார்க்க வேண்டும். களவியல் வழியே தான் நாம் அனைவரும் வாழ்க்கை தொடங்கினோமா? நம் பெற்றோர் தொடங்கினார்களா? நம் பிள்ளை பெண்

கள் அப்படித் தொடங்க நாம் மனமொத்துச் சம்மதம் அளிப்போமா?

காதல் செய்திகளை ஒரு காலத்தில் குறுந்தொகைப் பாட்டாகவும் நெடுந்தொகைப் பாட்டாகவும் பாடினார்கள். ஒரு காலத்தில் கோவைப் பாட்டாகப் பாடினார்கள். பின்னும் ஒரு காலத்தில் கைக்கிளைப் படலமாகவும் மாலைப் படலமாக உபாலம்பனம், இளவேனில், புனல் பொழில் விளையாட்டுப் படலங்களாகவும் பாடினார்கள். வேறுபாடு இவ்வளவே, மனிதனும் அவன் உள்ளத்தில் எழுகின்ற உணர்ச்சியும் என்றும் போலத் தானே இருக்கின்றன? அச்சமும் அன்பும், வீரமும் பணிவும், கோபமும் பொறையும், வெறுப்பும் விருப்பும், இரக்கமும் பெருமிதமும், உள்ளத்தில் நீங்கி விடவில்லை. முற்காலத்தில் அதிகமாய்க் காணப்பட்ட சாந்த சுவைதான் இப்போது அருகி விட்டது.

## ஆராய்ச்சியின் போக்கு

சங்க இலக்கிய ஆராய்ச்சியே ஆராய்ச்சி என்ற ஓர் எண்ணம் பலர் மனத்தில் குடி கொண்டிருப்பதற்கு ஒரு காரணமும் உண்டு. 1900ஐ ஒட்டிய ஆண்டுகளில் சங்க நூல்கள் யாவும் வெளிவந்தாகவில்லை. சிந்தாமணி வெளிவந்திருந்தது. தொல்காப்பியப் பகுதிகள் வெளி வந்திருந்தன. சங்க இலக்கியங்களில் பெரும் பகுதி இன்னும் பின்னர்த்தான் வெளி வருகிறது. 20ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் பெரும்புலவர் என்று பெயர் பெற்றிருந்த தமிழ் ஆராய்ச்சியாளர் அனைவரும் 1900ஐ ஒட்டிய காலப் பகுதியில் மிக்க இளைஞராயிருந்தனர். அக்காலம் புதுமை முளைத்துத் தளிர்விடத் தொடங்கிய காலம். நம் நாட்டைப் பொறுத்தவரையில் அரசியல் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் இந்திய மக்கள் ஆங்கில ஆதிக்கத்தை எதிர்த்துப் புரட்சி செய்து வந்தார்கள். அனேக சமூகச் சீர்திருத்த இயக்கங்கள் எழ ஆரம்பித்தன. கல்வி முறையில் தலைவர்கள் அதிருப்தி கொண்டு அதை மாற்ற முற்பட்டு கொண்டிருந்தார்கள். இவை அனைத்தின் விளைவாக ஒருபுறம் வடமொழியின் மேல் வெறுப்புணர்ச்சி தோன்றி வளர்ந்தது. இதை ஒட்டிய காலத்தில், இங்கிலாந்திலும் பிற நாடுகள் பலவற்றிலுமே பகுத்தறிவு இயக்கமும் நாத்திகவாதமும் தோன்றி வளர்ந்தன; இவற்றின் இலக்கியங்

களை எல்லோரும் பயில ஆரம்பித்தார்கள். இவ்வாறு பழமை யைப் பழித்துப் பேசுவதே நாகரிகம் என்ற உணர்ச்சி எங்கும் மேலோங்கியது. நம் நாட்டிலும் இந்த நிலை வளர்ந்தது. சங்க இலக்கியங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வெளிவர ஆரம்பித்த நிலையில் நாட்டில் இந்தச் சூழ்நிலை நிலவியது. இதுவரையில் பெரியபுராணம், கம்பராமாயணம், கந்தபுராணம், வில்லி பாரதம், திருவிளையாடல் என்றே படித்தும் ஆராய்ந்தும் வந்த தமிழருக்கு, பழக்கம் இல்லாத புதிய நூல்கள் கிடைத்தபோது அவற்றை ஆர்வத்தோடு பற்றிக் கொண்டார்கள். பற்றினோர் அனைவரும் அப்போது இளைஞர். பலர் ஆங்கிலேயக் கல்வி யும் கற்றவர்கள். சமயத் தொடர்புடைய நூல்களைக் கைவிட் டுத் தொடர்பில்லாத புது நூல்களைக் கண்டபோது, அவை அவர்களுக்குப் பெரு விருந்தாய் இருந்தன. பேரார்வத்தோடு புதிய நூல் ஆராய்ச்சியில் அவர்கள் ஈடுபட்டார்கள். இவ்வீடு பாடு ஐம்பது ஆண்டுகளுக்கு மேலாக வளர்ந்திருக்கிறது. இக் கால எல்லையில் ஆராய்ச்சியாளர் சங்க இலக்கியம் ஆராய்ந் தால் தான் பெருமை என்ற நிலை குடி கொண்டது.

இந்த நிலையினால் புராணப் பயிற்சியும் மற்றெல்லா இலக் கியப் பயிற்சியும் குன்றிவிட்டது, புராண இலக்கியம் படிப்பது தாழ்வு என்ற எண்ணமும் உண்டாயிற்று.

இனி இந்தநிலை மாறவேண்டும். சங்க இலக்கியத்தை ஆராய்ந்த அளவினால், எங்கு பார்த்தாலும் சங்க இலக்கியம் கூறுகின்ற அகத்துறை, புறத்துறை, காதல், வீரம், கொடை தவிர வேறு பேச்சில்லை. இனியாவது இந்தநிலை மாற வேண் டும். சங்க இலக்கியம் என்பது இரண்டாயிரத்தைந்நூறு ஆண்டு களாக வளர்ந்து வந்துள்ள தமிழ் இலக்கியப் பரப்பில் ஓர் ஐந்நூறு ஆண்டுக் காலப்பகுதி; அவ்வளவுதான். பிற காலப் பகுதிகள் இதுபோல அனேகம் உள்ளன. ஆராய்ச்சியாளர் அவற் றில் இனியேனும் மனம் செலுத்த வேண்டும். ஆனால் பழகி யதை விட்டுப் பிரிவது யாருக்கும் எளிதன்று. நெடுங்காலம் அறிஞர் உலகம் மேற்கொண்டிருந்த சங்கநூல் ஆராய்ச்சியை ஒதுக்கி வேறு திசையில் திரும்புவது எளிதாகுமா? எனினும், திரும்புவது மிகவும் அவசியம் என்று யாம் நினைக்கிறோம். திரும்புவதற்கான துறைகள் பல உள்ளன. ஒரு துறை புராண இலக்கியம் என்ற துறையாகும். இத்துறை காலத்தால் பிற்பட்ட

தாயினும் அளவாலும் பொருளாலும் மிக விரிந்தது, சிறந்த பலன் தருவது என்பதில் ஐயம் இல்லை.

மேலும் புராண இலக்கியம் இடைக்காலத் தமிழில் அளவால் ஒரு பெரும்பகுதி. இதைப் புறக்கணிக்கிற அல்லது தூற்றுகிற எந்த வரலாறும் முழுமையுடையதாகாது. இடைக்காலம் என்ற ஒரு பெருங்கால அளவின் (நானூறு ஆண்டுக்கால அளவின்) மக்கள் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் சிறப்பு மிக்க இலக்கியத் துறையை நோக்காத வரலாற்றாராய்ச்சி ஆராய்ச்சியாகாது. இக்கால மக்கள் பெரும்பாலும் சமயத்துறையிலேயே மனம் செலுத்தியிருந்தார்கள். அதன் விளைவுகளில் ஒரு பகுதியே புராண இலக்கியம்.

அன்றியும், புராணங்கள் பல சிறந்த இலக்கியச் சுவை உடையன என்பதை மறுக்க முடியாது. இதற்கு எடுத்துக்காட்டுக்களை இந்நூலகத்து எங்கும் காணலாம். எனவே, புராண இலக்கிய வளர்ச்சியை உள்ளவாறே ஆய்ந்துணர்வது இன்றியமையாதது என்பதில் தடையில்லை. புராண இலக்கியங்களுள் சிறந்தவை பிற எந்தச் சிறந்த இலக்கியங்களுக்கும் குறைந்தவையல்ல என்று காட்டுவதும் எம் ஆராய்ச்சி நோக்கங்களுள் ஒன்றாகும். உலக நீதிகள், ஆட்சிமுறை, நாட்டு வருணனை, அகத்துறை முதலியவற்றைப் புராணங்களுள் பார்க்கும்போது, இவை பிற எந்த இலக்கியத்திற்கும் பின்தங்கியவையல்ல என்பது புலப்படும். நறுந்தொகையும் நைடதமும் பாடும் ஆற்றல் படைத்த அரசன் புராணம் செய்யப் புகுந்தால் அப்புராணத்தில் எவ்வாறு இலக்கியச் சுவை குன்றிப்போகும்?

### சில இயல்புகள்

முன் கூறிய கருத்துக்களுக்கியைய எல்லாப் புராண ஆசிரியரும் மேற்கொள்ளும் சில சிறப்பான தன்மைகளைச் சுட்டிக் காட்டலாம். போர் என்று வந்தால் எல்லா ஆசிரியரும் மிகுதியாகப் போர் வருணனையில் ஈடுபடுகிறார்கள். இதற்கும் சில காரணங்கள் உள்ளன. ஒன்று, போர், காப்பியத்துள் ஓர் அங்கம் (செலவு, இகல், வென்றி). இவர்கள் தண்டிக்குப் பிற்பட்டவர்களாதலால் போரை மிகுத்துச் சொல்கிறார்கள். இரண்டு, இவர்கள் வாழ்ந்த சூழ்நிலை, அரசியல் நிலையற்றுக் கொந்தளிப்பு மிகுந்திருந்த காலம். எனவே, போர்களைத் தாங்களே நேரில்

கண்டும் அல்லது நேரில் கண்டவர்களிடம் கேட்டும் இவர்கள் வருணிக்கிறார்கள் என்று கருதலாம். மூன்று பொதுவாக இவர்கள், எழுதுகோல் வீரர்களேயன்றி வாள்வீரர் அல்ல. எனவே தங்களுக்குப் பழக்கமில்லாத ஒன்றில் ஆர்வம் காட்டும் மனித இயல்புக்கு ஒத்து, இவர்களும் வாளேந்திப் போரிடாவிட்டாலும், தங்கள் பாடலின் மூலம் வாளேந்திப் போரிடுகிறார்கள்.

மற்றொன்று, தங்களுக்குத் தெரிந்ததெல்லாம் விரித்தும் விவரித்தும் கூறும் முயற்சி. பல புராணங்கள் இலக்கணச் செய்திகளை விவரிக்கும். இலக்கணத்துக்காக யமகம், திரிபு, மடக்கு முதலியன அதிகம் செய்து பாடுகிறார்கள். மரங்கள் என்று வந்தால் அதிகம் இருபது வகைகள்: யாவும் அடைமொழி விரவாமல். தெரிந்த தலங்கள் எல்லாம் ஒப்புவிப்பார்கள். சமயம் என்று வந்தால் சைவ சித்தாந்த செய்திகள், வைணவச் செய்திகள் யாவும்; பூசை என்று வந்தால் எல்லாக் கிரியைகளும்; இது இயல்பே. சமயத்தை வலியுறுத்திப் பாடுதலே இவர்கள் புராணம் செய்த தன் நோக்கமல்லவா? வைணவம் என்று வந்தால் பெரும்பாலும் தசாவதாரங்களையும், ஆழ்வார்களையும் குறிப்பிடாமல் இருக்க மாட்டார்கள்.

மக்களை நல்வழிப்படுத்தும் நோக்கம் மேலோங்கி நின்றமையால், ஒழுக்கநெறி பிறழ்ந்தால் நரக வாழ்வே பலன் என்பது தவறாமல் சொல்லப்படும். நரக வகைகள், நரகத் துன்பங்கள் மிகுதியாயிருக்கும். உடனே பகுத்தறிவாளர் ‘இவர் என்ன, போய்ப் பார்த்து வந்தாரா?’ என்று கேட்பார். இதில் அர்த்தமில்லை. பார்த்து அனுபவிக்காத பலவற்றை நம்பித்தான் தினசரி வாழ்க்கையில் ஏற்கிறோம். விஞ்ஞானத்திலும் வைத்தியத்திலும் இப்படி எத்தனையோ உள்ளனவோ! இவர்களும் வைத்தியம் செய்கிறார்கள். துன்பம் வேண்டாம் என்பதுதான் எல்லோருடைய எண்ணமும், ஆகவே, நெறி பிறழ்ந்தால் துன்பம் என்று சொல்லி அச்சுறுத்தியே ஒழுக்கத்தை நிலைநாட்டப் பார்க்கிறார்கள். அன்றைய சூழ்நிலைக்கு இது பொருந்துவதே. அரசன் அன்று கொல்லும் தெய்வம் நின்று கொல்லும் என்பது அன்றைய நம்பிக்கை நம்மிடம் மட்டுமல்ல: மேல் நாட்டிலும் ‘தண்டிக்கும் தெய்வம் நொண்டி, ஆனால் பிடித்துத் தண்டிப்பது உறுதி’ என்பது அவர்கள் பழமொழி. எனவே, புராணங்களின் இந்த இயல்பைப் பழிப்பது நம்மை நாமே பழிப்பதாகும். இவ்வளவும்

புராணங்களுக்கு 'வக்காலத்து' என்று நினைக்கலாம். இவை மக்களின் நன்மைக்குப் பாடுபடுகிற வரையில், ஏன் வக்காலத்து வாங்கக் கூடாது?

புன்கவிகளைக் குறித்த வசை எங்குமிருக்கும். உண்மைக் கவிதைக்கு மதிப்பு கஷ்டம்தானே! இன்றைக்கு மட்டுமல்ல, அன்றைக்குந்தான். எனவே, சில புலவர் மனம் நொந்தும் பாடுவர். பிரபந்த மரபியல் போன்ற இலக்கண நூல்கள், பிங்கலம் போன்ற நிகண்டுகள் இதை அதிகம் விரிக்கும்.

தெய்வத்தை வேண்டுதல் அன்றிருந்த ஓர் இயற்கை நியதி இன்று மனிதனைத் தெய்வமாக வேண்டவில்லையா? எனவே, தோத்திரப் பாடல்கள் நூல்களெங்கும் மிகுந்து காணப்படும். இவற்றை மனப்பாடம் செய்து பொதுமக்கள் இறைவனிடம் ஓதலாம் என்று கூட ஆசிரியர் சொல்லியிருப்பார்கள். அருளாள தாசர் பாகவதம் போன்ற நூல்களில் தோத்திரப் பாடல்களே மிகவும் அதிகம் (முந்நூறுக்குமேல்). கவச நூல்களும் அதிகமாய் எழுந்திருக்கின்றன. இவற்றின் ஒரு சிறப்பான நோக்கம், சூழ்ந்துள்ள கோளாறுகளை மறந்து மனிதனுக்கு ஆறுதலும் சாந்தியும் அளிப்பதாகும். இவை புராணம் என்ற நிலையையொட்டி எழுந்த சிறப்பான இயல்புகள். காப்பிய நிலைக்குப் பொருத்தமான எல்லா இயல்புகளும் எல்லாப் புராணங்களிலும் உள்ளன.

### சுவை மிக்க சில செய்திகள்

புராண ஆசிரியரைக் குறித்த சில செய்திகள் சுவையுடையவை. தந்தை மகன் என்ற முறையில் சில புலவர் நூல் செய்திருக்கிறார்கள். புராணத் திருமலைநாதர் பல புராணங்களும் உலாவும் பாடினார். அவருடைய புதல்வர் பரஞ்சோதி சிதம்பரப் பாட்டியல் என்ற இலக்கண நூல் செய்தார். வீரை கவிராச பண்டிதர் சௌந்தரிய லகரியைத் தமிழ்ச் செய்யுளாக மொழிபெயர்த்தார். அவர் புதல்வர் இருவரின் வீரை அம்பிகாபதி நெல்லை வருக்கக் கோவையும், பராபரை மாலையும் பாடினார். மற்றொரு புதல்வரான வீரை ஆளவந்தார் அடுத்த நூற்றாண்டுத் தொடக்கத்தில் வடமொழி ஞான வாசிட்டத்தைத் தமிழில் 2000 செய்யுட்களாகப் பாடினார்.

சகோதரர்களான மூவர் பாண்டியர் இந்த நூற்றாண்டில் பெரும் புராணங்கள் செய்ததோடு, வேறு தோத்திர நூல்கள்,

நீதி நூல், காப்பியம் முதலியனவும் பாடினார்கள்: வரகுணராம பாண்டியர், வரதுங்கராம பாண்டியர், அதிவீரராம பாண்டியர். இது வரலாறு காணாத செய்தி. சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்தில் பிராண்டி என்ற பெயருடைய பெண்கள் மூவர் சகோதரிகளாய் ஆங்கிலக் கவிதை புனைந்தார்கள் என்று ஆங்கில இலக்கிய வரலாறு கூறும். இவை அபூர்வமான வரலாறுகள். பாண்டியர் மூவருள் வரதுங்கராம பாண்டியர் மனைவியும் சிறந்த புலமையுடையவர். அவர் செய்த நூல் இல்லை. சில பாடல்களே உள்ளன. இவர் போலவே பெரும் புராணகாரரான எல்லப்ப நாவலர் மனைவியும் புலமை மிக்கவர்; நூல் செய்யவில்லை.

இனி, கமலை ஞானப்பிரகாசர் என்ற பெருஞானி திருவாரூரில் வாழ்ந்து, பல ஞான சாத்திரங்கள் செய்ததோடு இரு தல புராணங்களும் செய்தார். அவருடைய மாணாக்கராகிய ஞான புத்திரர் பலரும் புராணம் செய்யக் காண்கிறோம். அவர்களின் ஐவர் இங்கு சொல்லப்பட்டுள்ளனர். இவர்களின் வழியே பின் நூற்றுக்கணக்கான புலவரும் துறவிகளும் பிற்காலத்தில் புராணம் பாடியிருக்கிறார்கள்.

இக்காலத்தில் தோன்றிய புராணங்கள் யாவும் தல புராணங்களும், சிவதருமம் சிவபராக்கிரமம் கூறும் புராணங்களுமே. அடியார் வரலாறு முதலியன கூறும் புராணங்கள் எழவில்லை. இக்காலத்து வாழ்ந்த கமலை ஞானப்பிரகாசர், குருஞான சம்பந்தர் ஆகியோர் வரலாறுகள் பிற்காலத்தில் மான்மியங்களாகப் பாடப்பட்டுள்ளன.

இனி, சமயப் பொருளினிடத்துள்ள ஈடுபாட்டினால் ஒரே தலத்துக்கு இரு புராணங்கள் செய்யப் பெறவும் காண்கிறோம். அண்ணாமலைக்கு இரு புராணங்கள் - அருணாசல புராணம், அருணகிரிப் புராணம் என்பன; இவை அச்சில் உள்ளன; கிடைக்காத மற்றோர் அருணகிரிப் புராணமும் இருந்திருக்கிறது. திருவையாற்றுக்கு இரண்டு - நிரம்ப அழகிய தேசிகர், அவர் மாணாக்கர் ஞானக்கூத்தர். திருவாரூருக்கு இரண்டு அளகைச் சம்பந்தருடைய திருவாரூர்ப் புராணம், மறைஞான சம்பந்தருடைய கமலாலய புராணம். பிற்காலத்தில் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை இத்தலத்துக்குத் தியாகராச லீலை பாடினார். பின்னும் சில தலங்களுக்கு இக்காலத்து ஒரு புராணமும், காலத்தால்

முன்னோ, பின்னோ வேறொன்றும் எழுந்துள்ளன. திருக்காளத்தி: இக்காலத்தில் ஒன்றும், அடுத்த நூற்றாண்டில் சிவப்பிரகாசரும் அவர் சகோதரர் இருவரும் மற்றொன்றும். திருவானைக்கா: இக்காலத்தில் கமலை ஞானப்பிரகாசர், 18ஆம் நூற்றாண்டிறு தியில் கச்சியப்ப முனிவர். சங்கர நாராயணர் கோயில் - இக்காலம் சங்கர விலாசமும், பிற்காலத்தில் இருவர் சேர்ந்து செய்த ஒரு புராணமும், வேணுவன புராணம்: இது திருநெல்வேலிக்குச் சுருங்கிய தலபுராணம். 19ஆம் நூற்றாண்டில் மிகவும் பெரிய புராணமொன்று பாடப்பட்டது. அனதாரியப்பர் மதுரைக்குச் சுந்தரபாண்டியம் செய்வதற்கு முன்னே 13ஆம் நூற்றாண்டில் மதுரைக்கே நம்பி திருவிளையாடல் எழுந்திருந்தது. பின்னால் 1700ஐ ஒட்டிப் பரஞ்சோதி முனிவர் இன்று மிகவும் பிரசித்த மான திருவிளையாடல் புராணம் பாடினார். சிதம்பரத்துக்கு இக்காலத்தில் ஒரு புராணம் எழுகிறது முன்னமே 14ஆம் நூற்றாண்டில் உமாபதி சிவத்தின் கோயிற் புராணம் இருந்தது. பின்னால் 19ஆம் நூற்றாண்டில் சபாபதி நாவலருடைய சிதம் பரசபாநாத புராணம் எழுகிறது.

நூலாசிரியரைக் குறிப்பிடும் பாயிரப் பகுதிகளால் பல செய்திகள் விளக்கமாகின்றன. கமலை ஞானப்பிரகாசர் செய்த திருவானைக்காப் புராணம் இங்கு ஆராயப் பெற்றிருப்பதும், இப்படியொரு சிறப்புப் பாயிரக் குறிப்பினால்தான். திருவண்ணா மலைக்கு அருணாசல புராணம், அருணகிரிப் புராணம் என இரு புராணங்கள் இந்நூற்றாண்டில் செய்திருக்கக் காண்கிறோம். இவ்விரண்டுக்கும் முன்னதாகப் புராணத் திருமலை நாதர் மற்று மோர் அருணகிரிப் புராணம் செய்திருந்தாரென்று அறிகிறோம்: அந்நூல் கிடைக்கவில்லை. நக்கீரர் ஆறு சைவ புராணம் செய்தா ரென்ற ஒரு குறிப்புக் கிடைக்கிறது. இதற்கு விளக்கமும் இல்லை, எந்த ஒரு புராணமும் இல்லை.

நாவலர் என்கிற பட்டம் எத்தனையோ பேர் பூணுகிறார் கள். சமீப காலத்தில் யாழ்ப்பாணத்து ஆறுமுக நாவலரே இப் பட்டத்தைச் சிறப்பாகத் தரித்தார். இவரைப்போல 450 ஆண்டு களுக்கு முன் சைவ - எல்லப்பர் இப்பட்டத்தைத் தரித்திருந்தார். அவர் பாடிய புராணங்களுள் ஒன்றாகிய திருவெண்காட்டுப் புராணத்திற்கு, சேக்கிழார் பாடிய திருத்தொண்டர் புராணத் துக்கு உமாபதி சிவாசாரியர் ஒரு புராணசாரம் பாடியதுபோல,

மற்றொரு புலவர் ஒரு திருவெண்காட்டுப் புராணசாரம் பாடி யிருப்பது நாவலருக்கிருந்த பெருமையைக் காட்டுகிறது; பாடிய ஆசிரியர் பெயர் தெரியவில்லை.

இக்காலத்தில் சில வரலாறுகள் நாட்டில் பிரசித்தமாய் வழங்கின என்பது புராணக் குறிப்புக்கள் சிலவற்றால் அறிகி றோம். நளன் கதை ஒன்று. முன்னம் புகழேந்தி நளவெண்பாப் பாடினார். பின் இக்காலத்து அதிவீரராம பாண்டியர் நைடதம் பாடினார். பின், அளகைச் சம்பந்தர் தாம் பாடிய திருவாரூர்ப் புராணம் நளச்சருக்கத்தில் பன்னிரண்டே பாடல் சொல்லியவர், நளன் காட்டில் பிரிய, தனித்து விடப்பட்ட தமயந்தி புலம்பலாக நான்கு பாடல்கள் சொல்லக் காண்கிறோம். நளன் சரிதைக்கும் தமயந்தியை அவன் பிரியும் நிகழ்ச்சிக்கும் மக்களிடையிருந்த ஈடுபாட்டை இது புலப்படுத்துவதாயுள்ளது.

கபிலை கதை என்பதும் இதையொத்ததே. ஒரு பசு தன்னை யுண்ண வந்த புலியிடம் தான் சென்று கன்றுக்குப் பாலூட்டி மீண்டு இரையாகிறேன் என்று சொல்லிச் சென்று மீண்டு வந்து தன் வாக்கை நிறைவேற்றியதை இக்கதை சொல்கிறது. பலர் இக்கதையைப் பாடியிருக்கிறார்கள். மறைஞான சம்பந்தர் என்ற சைவ சமயப் பெருநூலாசிரியர் தாம் பாடிய கமலாலய புராணத் தில் குலிகேசுவரச் சருக்கத்தில் இதை விரித்துப் பாடுவதும் மேற் சொன்ன மக்கள் ஈடுபாட்டைக் காட்டும் நிலையாகும். இக் கதைக்கு வைணவத்தில் மற்றொரு வடிவமும் உண்டு. பசுவே நம்பாடுவான் என்ற தீண்டாத குல அடியவர் (பாணன்); புலியே தின்ன வந்த பிரமராக்கதன்: கன்றுக்குப் பால் கொடுத்தல் என்ற கடமையே இங்கு குறுங்குடிப் பெருமான் சந்நிதியில் காலையில் கைசிகப்பண் பாடுவது என்ற கடமை. நன்றியும் பக்தியும் கலை யுணர்வும் மிக்க வைணவர் பாணர் பாடிய நாளைக் கைசிக ஏகாதசி என்ற பெருவிழாவாக ஆக்கி வடமொழியில் புராணமும் பாடிப் பெருங் கொண்டாட்டமாகக் கொண்டாடுகிறார்கள்; வடமொழிப் புராணத்துக்கு, ஆசாரியரான பட்டர் வியாக்கி யானம் எழுதியிருக்கிறார்.

எல்லாவற்றிலும் மேலான சிறப்பு, நந்திகேசுவரர் சிவபிரா னிடம் பதினாறு பேறு வேண்டினார் என்ற செய்தி. இப்பதினாறு பேறு ‘மறைகள் நிந்தனை சைவ நிந்தனை பொறா மனமும்’

என்று தொடங்கும் நான்கு பாடல்களால் சொல்லப்பெறும் பாடல்களைச் சைவர் அனைவரும் அறிவார்கள்; இவற்றுக்கு மூலம் யாருக்கும் தெரியாது. நிரம்ப அழகிய தேசிகரின் மாணாக் கரான ஞானக்கூத்தர் என்ற அடியவர் தாம் பாடிய திருவையாற் றுப் புராணத்தில் இவ்வேண்டுகோளை (இப்பாடல்களை) அமைத்திருக்கிறார் என்பது இப்புராண ஆராய்ச்சியால் தெரிய வருகிறது.

## தல புராணம்

தல புராணம் எழுதியவர்கள் சிறந்த மனோதத்துவ நிபுணர் கள் என்றே சொல்ல வேண்டும். வெறுங்கதையாகப் புனைந் தால் மக்களுக்குப் பற்றுதலும் நம்பிக்கையும் மன நிறைவும் ஏற்பட மாட்டா; ஆகவே வடமொழியில் பிரமாண்டத்தில் அல்லது ஸ்காந்தத்தில் அல்லது பவிஷ்யோத்தர புராணத்தில் இது உள்ளது என்று சொல்லி வைத்தார்கள். அங்கு இருக்கிறதா என்று யாரும் பார்த்ததில்லை, பார்க்கவும் முடியாது: இருந் தாலல்லவா பார்ப்பதற்கு? இல்லாததனால் பொய் என்று சொல் வதும் பொருந்தாது. மக்களுக்கு ஈடுபாடு வந்து, அதன் மூலம் அவர்கள் உயர்வதானால், உயர்த்தவல்ல ஒரு கதையைப் புனை வது பொய்யாகாது. பிற்காலத்தில் இவர்கள் மிகவும் சாமர்த்திய மாகக் கதைகளை வடமொழியில் எழுதியும் வைத்தார்கள்; இதற்கு உதாரணமாகத் தென்குடித் திட்டை என்ற பாடல்பெற்ற தலத்தின் புராணத்தைக் குறிப்பிடலாம். 2170 சுலோகங்கள் 40 அத்தியாயங்களாக இதில் உள்ளன. இது சனற்குமார சம்மிதை யின் சஹ்யஜா கண்டத்தில் இருப்பதாகச் சொல்லப்பட்டது. இந்தப் புராணத்தின் முக்கிய நோக்கம் 120 வகைப்பட்ட பஞ்சாட் சர மந்திரத்தையும் அவற்றுக்குரிய யந்திரம் மூர்த்திகள் சிவபெரு மானுடைய உறுப்புக்கள் முதலிய செய்திகளையும் சொல்வதா கும். இது செய்யப்பெற்ற காலம் 14ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு தான் இருக்கும். எனவே பிற்காலத்தில்தான் வடமொழித் தல புராணங்கள் பெரும்பகுதி எழுதப்பட்டன என்பதற்கு இது சான்றாகும்.

தல புராணம் தலச் சிறப்பைக் கூறும் என்பது தெரிந்த செய்தி. ஒவ்வொரு புராணமும் அந்தத் தலமே முத்தியளிப்பது என்று கூறும். திரு ஆரூர் பிறக்க முத்தி, தில்லை காண முத்தி,

காசி இறக்க முத்தி, அருணை நினைக்க முத்தி என்று சொல்வது மரபு, கேட்க முத்தி தருவது மதுரை என்பது திருவிளையாடற் புராணம், இந்நூலுள்ளும் பல இடங்களில் இச்செய்தி சொல்லப்பட்டுள்ளது. இவையன்றி ஒற்றியூரும் நினைக்க முத்தி தரும். அரசவனம் என்னும் இறைவாச நல்லூர் இருக்க முத்தி தரும், கேதாரம் நீராட முத்தி தரும், வெண்காடு எல்லாம் தரும் என்றும் சொல்லியிருக்கக் காண்கிறோம். மேலும், அக்காலத்தில் தலங்களுக்குப் போவதும் தீர்த்தங்களுக்கு விழாக் காலங்களில் போவதும் மிகவும் சிரமம். பிரயாண வசதி, தங்கும் வசதி முதலியன குறைவாயிருந்த காலம். ஆகவே, ஆசிரியர்கள் யாத்திரையை மிகவும் வலியுறுத்திப் பேசியிருக்கிறார்கள். மாக புராணம் என்ற விரிவான புராணம் தீர்த்தத்தில் நீராடும் சிறப்பையே சொல்ல வந்தது. மூர்த்தி தலம் தீர்த்தம் என்ற முறையில் பல புராணங்களில் தீர்த்தமும் தீர்த்தமாடற் பலனும் சிறப்பாகவும் விரிவாகவும் சொல்லியிருக்கக் காண்கிறோம்.

தல புராணங்களில் ஒன்று மலராலேயே பெயர் பெறுகிறது. சிராமலை நாதருக்குச் செவ்வந்தி மலர் விருப்பமானது. ஆகையால், எல்லப்ப நாவலர் செவ்வந்தி புராணம் என்றே தம் புராணத்துக்குப் பெயரிட்டார். அவருடைய கலைப்பண்பை நாம் பெரிதும் போற்றுகிறோம்.

பாண்டியர் மூவரும் பெரும் புராணங்களை மொழிபெயர்த்துப் பாடினார்களேயன்றித் தலபுராணம் பாடவில்லை.

### இருபதாம் நூற்றாண்டு வழக்குக்கள் சில

எத்தனையோ வழக்கு புதிதுபுதிதாக நம் நூற்றாண்டில் மக்கள் வாழ்க்கையில் இடம்பெறத் தொடங்குகின்றன. இவற்றுள் பலவற்றைப் புராண ஆசிரியர் நேரில் கண்டதுபோல நான்கு நூற்றாண்டுகளுக்கு முன்னே பாடியிருப்பது பெருவியப்புக்குரியது. சிலவற்றைச் சுட்டிக் காட்டுவோம்.

இக்காலக் கொடுமைகள் சிலவற்றைப் புராணங்கள், கலியுக தருமம் அல்லது கலியுகத்தியற்கை என்று கூறுகின்றன. சென்ற உலக யுத்தத்தின்போது பெருநகரங்களில் மண்ணுக்குக் கீழ் நிலவறைகள் கட்டி, விமானக்குண்டு வீச்சிலிருந்து தப்ப மக்கள் அங்கு பல மணிநேரம் தங்கிவாழ நேர்ந்திருக்கிறது.

இதை 'வங்குபுக்கு வாழ்தல்' என்று ஒரு புராணக்காரர் கூறு கிறார். கலியுக தருமத்தைப் பேசாத நூல் இல்லை. சாதிவேற்றுமை வேண்டாம் என்ற ஜனநாயகக் கொள்கையை அக்காலப் புராண ஆசிரியர் அறிந்திருக்க முடியாது, அதை ஏற்றுக் கொள்ளவும் முடியாது. ஆகவே வருணமும், ஆசிரமங்களும் கெடும் என்று கலியுகத் தருமமாகப் பலர் கூறுகிறார்கள். பெரியோரிடத்து மரியாதையும் தெய்வ பக்தியும் குன்றும். தரும வழி நிற்பவரே துன்பமடைவர்: மக்கள் ஆயுள் குறைந்து எப்படியெல்லாம் அகால மரணமடைவர் என்று காட்டுகிறார். மணம் செய்யும் கருமம் அகலும். இளம் பருவத்திலேயே பெண்டிர் கருவுயிர்ப் பார்கள். பெண்கள் உடையின் அலங்கோலத்தைத் தாருகா வனத்து முனிபன்னியர் நிலை மூலம் காட்டுகிறார். 'சுற்றிய தூசு வீழ்ந்து துடியிடை அல்குல் தோன்றச் சென்றார்'. இன்றுள்ள பட்டிமன்றங்களின் நிலையையும் ஓராசிரியர் தம்மையறியா மலே ஒரு காப்பியமாக்கியிருக்கிறார். பட்டிமன்றங்களில் வாதங் கள் தம் கருத்தை உரைப்பதாக இல்லாமல் பிறரைப் பழிப்ப தாகவே இன்று நடைபெறுவது கண்கூடு. இதை இரு சமய விளக்க ஆசிரியர் நடத்திக் காட்டுகிறார். (நீர் ரோகம் உடை யவர், முள் கிழிக்கினும் ஆவி இழப்பர்).

கல்கி அவதாரத்தை ஓர் ஆசிரியர் பாடுவது நமக்கு அணு யுகத்தையும் பறக்கும் தட்டுகளையும் நினைவூட்டாமல் போகாது.

இப்படி கொடுமையாயின பல இருப்பினும், ஒற்றுமையை யும் ஒருமைப்பாட்டையும் இவ்வாசிரியர் அனைவரும் நன்கு வலியுறுத்திப் பாடுவது நமக்கு மிக்க மகிழ்ச்சி தருகிறது. இந்த 16ஆம் நூற்றாண்டில் சைவ வைணவ வேற்றுமை மிகுந்திருந் தது என்று நாம் நினைக்கிறோம். ஆனால் நம்மாசிரியர் பலரும் கூறுவது காணத்தக்கது. துருவன் திருமாலைத் துதிக்கும்போது விஷ்ணுவாகத் துதிக்கவில்லை: ஒரு தனிப் பரம்பொருளாகவே துதிக்கிறான். பாகவதரைப் பழிப்பதும் சைவ நெறியைப் பழிப் பதும் இரண்டுமே பதிதர் செய்கை. சிவன் பெயரும் விஷ்ணு பெயரும் மாற்றி மாற்றிச் சொல்லித் துதிக்கிறார். அஞ்செழுத் தும் எட்டெழுத்தும் ஒன்றாகவே சொல்லப்படுகின்றன. சிவ லிங்கமும் சாளக்கிராமமும் பூசித்தல், சிவதருமம் விஷ்ணு தரு மம் செய்தல், உருத்திராக்கமும் துழாய் மணியும் அணிதல், அரியரன் நாமம் துதித்தல் என்று சேர்த்தே சொல்லுகிறார்.

சமயம் மட்டுமல்ல. மொழியிலும் இப்படி இருபதாம் நூற்றாண்டின் மொழி ஆராய்ச்சியை மனத்தில் எண்ணி ஒரு ஞானாசாரியர் 'ஆரியம் தமிழாய்வாரும் அவர்கட்கு அணுக்கரும் வாழ்க' என்று வாழ்த்துகிறார்.

ஆரியங் கற்று முற்றும் அறிவுடை யாளர் வாழ்க
ஆரியந் தெரிந்துஞ் சாரும் அருந்தமி ழாய்வார் வாழ்க
ஆரியந் தமிழா ராயும் அதிமதி நிபுணர் வாழ்க
ஆரியந் தமிழா ராய்வார்க் கணுக்கரும் வாழ்க அன்பால்.

இப்படி எத்தனையோ செய்திகள்; எல்லாம் புராணத்தினிடை என்பதை நாம் மறக்கலாகாது.

### கிடைக்காத நூல்கள் சில கிடைத்த வரலாறு

கிடைக்காத நூல்கள் பல கிடைத்து ஆராய்ந்து சேர்த்திருப்பது இத்தொகுதிக்குரிய தனிச்சிறப்பு. இந்நூல்கள், திருவான்மியூர் டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையம், தஞ்சை சரசுவதி மகால் நூல் நிலையம் முதலான இடங்களில் கிடைத்தன. இவற்றை இங்கே குறிப்பிடுவோம்.

### சாமிநாதையர் நூல்நிலையம்

#### 1. கமலை ஞானப்பிரகாசர் எழுதிய தந்திவனப் புராணம் என்னும் திருவானைக்காப் புராணம்

இறந்துபோன நூல் என்று கருதப்பெற்று வந்த இப்புராணத்தின் ஏட்டுப் பிரதி இங்கு இருந்தது. தந்திவனப் புராணம் என்ற பெயரில் ஏட்டுச் சுவடி இருந்தமையால் இதைக் கவனிக்கும் நினைவு முதலில் எழவில்லை. பின்னர்த்தான் கிடைக்காமற் போன திருவானைக்காப் புராணம் இதுவே என்ற நினைவு வந்தது. இவ்வேட்டுச் சுவடியை ஆராய்ந்த குறிப்புக்களை இந்நூலில் காணலாம்.

#### 2. சீவல மாறன் கதை

இந்தநூலே இருப்பது தெரியாது. புதிதாய் அறிந்தாராய்ந்து இதுபற்றிய கட்டுரை பிற்சேர்க்கையில் சேர்க்கப் பெற்றுள்ளது.

#### 3. இறைசைப் புராணம்

இப்படியொரு நூலிருந்ததென்று சாசன வாயிலாக மட்டும் அறியப்பட்டிருந்தது. இதன் காகிதப் பிரதியொன்று இருப்பது

தற்செயலாய்த் தெரியவந்தபின் ஆராய்ந்து குறிப்புக்கள் தரப் பெற்றுள்ளன.

### தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலையம்

அச்சாகாத ததீசி புராணம், வினாவிடைப் புராணம் முன்னரே தெரியுமாயினும், நிரம்ப அழகிய தேசிகர் எழுதிய திருவையாற்றுப் புராணம் இருப்பது தெரியாது. இங்கிருக்கும் ஓர் ஏடு தேசிகர் செய்த புராணமே என்று முடிவு செய்து குறிப்புக்கள் தரப்பட்டுள்ளன. இவருடைய மாணக்கரான ஞானக்கூத்தர் செய்த வேறொரு புராணம் அச்சாகியுள்ளது.

### திருச்செங்காட்டங்குடிப் புராணம்

இந்நூலும் இதுகாறும் அச்சிடப்படாமையாலும், எந்த ஏட்டுச்சுவடி நிலையத்திலும் இதன் ஏடு இல்லாமையாலும், இறந்து போயிற்று என்றே கருத நேர்ந்திருந்தது. இந்நூல் ஏடு கிடைத்து ஆராய்ந்து குறிப்புக்கள் இங்கு தரப்பட்டுள்ளன.

### சுவை நலிந்த செய்தி

இவ்வுளவு நல்ல செய்திகளுக்கிடையில் ஒரு திருஷ்டி பரிகாரம் வேண்டுமல்லவா? பகவானுக்கே ஆழ்வார் கண்ணேறு கழிக்கப் பல்லாண்டு பாடுகிறாரே!

16ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றின் முதல் பாகமாகிய இந்நூல், இந்நூற்றாண்டின் இரண்டாம் மூன்றாம் பாகங்கள் வெளிவந்து நெடுநாள் கழித்து இன்று வெளிவருவதில் ஒரு துயர அல்லது துரோகக் கதை அடங்கியுள்ளது. அமைந்தகரை மாணிக்கம் அச்சகம் தங்கள் அச்சுத் தொழிலை நிறுத்திய பிறகு, அதில் போர்மனாக இருந்த திருநாவுக்கரசு என்பவர் முன் பழகிய பழக்கத்தால் என்னை அணுகி, தாம் ஒரு புதிய அச்சகம் தொடங்கப் போவதாயும் தமக்கு வேலை கொடுப்பதோடு பெருமளவு தொகை கடனாகத் தந்தால் நாளடைவில் அச்சுக் கூலியில் கழித்துக் கொள்ளலாம் என்றும் கேட்டுக் கொண்டார். அவரிடம் உண்டான இரக்கத்தால் அவருக்கு உரிய அளவு பணமும் கொடுத்து இந்த நூல் வேலையையும் அவரிடம் கொடுத்தோம். 4முதல் 19பாகம் வரையில் அவரால் அச்சிடப்பெற்றன. தொடக்கம் 1973. கடைசியாக நின்றது 1975 பிப்ரவரி. இதன் பின் வேலை செய்யாதது மாத்திரமல்ல. யாம் அதிக விலைக்கு

வாங்கிக் கொடுத்திருந்த காகிதம் 20 ரீமையும் திருட்டுத்தன மாக அடுத்த மாதம் நடந்த தம் மகன் கல்யாணச் செலவுக்காக விற்றுவிட்டார். நெடுநாளான பின் 1976 அக்டோபர் மத்தியில், கொடுத்திருந்த ஒரு பகுதி கையெழுத்துப் பிரதியையும் கொடுக்க வில்லை என்று சாதித்தார். எப்படியோ அவரிடமிருந்தே பிரதி யையும், அச்சான பாரங்களையும் மட்டும் (காகிதத்தையல்ல) எடுத்துக்கொண்டு வந்து நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸிடம் கொடுத்து, மிகுதியும் அச்சிட்டு, நூல் பூர்த்தி செய்து பைண்டாகி இன்று வெளிவருகிறது. திருநாவுக்கரசு, நாவலர் அச்சகம் என்ற பெயரில் என்னிடம் முன்பணமாக வாங்கியும், காகிதத்தைத் திருட்டுத்தனமாக விற்றும் விழுங்கிவிட்டது பெருந்தொகை.

அரை நூற்றாண்டுக்கு முன் அச்சிட்ட சில புத்தகங்களில் இப்படிப்பட்ட கதை உண்டு. 'இத்தனை பாரம் இன்ன அச்சுக் கூடத்தில் அச்சிட்டோம், அவர்கள் சரியாகச் செய்யாததால் காகிதத்தை வேறிடத்தில் அச்சிட்டது பிரமப் பிரயத்தனமாகி விட்டது' என்று சிலர் அச்சிட்டிருப்பதைப் பார்த்திருக்கிறோம். எமக்கே இக்கதி நேருமென்று நினைக்கவில்லை. இதைச் சொல்ல வந்தது, அச்சுத் தொழிலில் தொழில் உணர்ச்சி மட்டும் இருக்க வேண்டுமே தவிர இரக்க உணர்ச்சி பொருள் நஷ்டத்திலும் மன வேதனையிலும் தான் முடியும் என்று பிறருக்கு உணர்த்தவே.

**நன்றியுரை**

இந்த நிலையிலும், மிகவும் தாமதம் செய்த போதிலுங் கூட, எப்படியோ நூலை முடித்துக் கொடுத்த நாவல் ஆர்ட் பிரிண் டர்ஸ் நாரா. நாச்சியப்பன் அவர்களுக்கு யாம் மிகவும் நன்றி பாராட்டும் கடப்பாடுடையேம். ஏட்டுப் பிரதிகளைப் பார்க்க வசதி செய்தும் தந்தும் உதவிய திருவான்மியூர் மகா மகோபாத்தி யாய டாக்டர் உவே. சாமிநாதையர் நூல் நிலைய அதிகாரிகளுக் கும், ஏடுகள் பார்க்க வசதி செய்த தஞ்சை சரபோஜி மகாராஜா வின் சரசுவதி மகால் நூல் நிலையக் காரியதரிசியாயிருந்த பள்ளி யக்கிரகாரம் நீ. கந்தசாமிப் பிள்ளையவர்களுக்கும் பெரிதும் நன்றியுடையேம்.

திருச்செங்காட்டங்குடிப் புராண ஏட்டைப் பாதுகாத்து வைத்திருந்து உதவிய தியாகராச தேசிகரவர்களுக்கும் எமது நன்றி உரியது. இப்புராண ஏட்டை வரவழைத்து அருள் கூர்ந்து

*உதவிய தருமபுர ஆதீன மகா சந்நிதானம் ஸ்ரீசண்முக தேசிக பர மாசாரிய சுவாமிகளின் கருணைக்கு எமது வணக்கம் என்றும் உரியது.*

*வழக்கம் போல் நூலகத்தும் நூலின் இறுதியிலும் உரிய அட்டவணைகள், அகராதிகள் பலவும் சேர்க்கப்பட்டுள்ளன.*

*பொருட் போக்கைப் பார்த்த மாத்திரத்திலேயே உணர்வ தற்கு எளிதாய் இருக்கும் பொருட்டு இங்கும் பொருளடக்கத் தில் தலைப்புக்கள் விரிவாகவே தந்திருக்கிறோம்.*

*நளமகாராசனுடைய வரலாற்றைக் காப்பியமாகப் பாடிய அதிவீரராம பாண்டியனுடைய நூல்களை உள்ளடக்கிய இவ் வரலாற்றுத் தொகுதி இந்த நள வருஷம் பொங்கல் தினத்தன்று வெளிவருவது எமக்குப் பெருமகிழ்ச்சி தருகிறது. நளனுக்கும் பொங்குலுக்கும் நெருங்கிய சம்பந்தம் உண்டல்லவா? இந்த நூலோடு பதினொரு தொகுதிகள் வெளிவந்துள்ளன. இன்னும் பத்தொன்பது தொகுதிகள் வரக்கூடும்.*

*எம்மை இத்துறையில் எந்த நேரமும் ஈடுபடுத்தி நடத்தி வருகின்ற தோன்றாத் துணையும், ஆறொருவர் இவ்வண்ணம் ஆட்கொள்ளும் வித்தகரும் ஆகிய இறைவன் தாளையே சிந்திக் கின்றோம்.*

கண்ணுத லாலயம் நோக்கும் கண்களே கண்கள்;
  கறைக்கண்டன் கோயில்புகும் கால்களே கால்கள்;
பெண்ணொரு பாகனைப் பணியும் தலைகளே தலைகள்;
  பிஞ்ஞகனைப் பூசிக்கும் கைகளே கைகள்;
பண்ணவன்தன் சீர்பாடு நன்னாவே நல்நா;
  பரன்சரிதையே கேட்கப்படும் செவியே செவிகள்;
அண்ணல்பொலங் கழல் நினைக்கும் நெஞ்சமே நெஞ்சம்;
  அவனடிக் கீழ் அடிமைபுகும் அடிமையே அடிமை.

— வரதுங்கராம பாண்டியர்

*மு. அருணாசலம்*

*சென்னை*
*14. 01. 1977.*

# பொருளடக்கம்

# அட்டவணைகள்

இந்நூலகத்தும் இறுதியிலும் பல்வேறு அட்டவணைகள் பயன் கருதி அமைத்துக் காட்டப்பட்டுள்ளன. அவற்றின் பட்டியலைக் கீழே காண்க.



OOO

# இவ்வரலாற்றில் ஆராய்ந்த நூல்கள்

○○○

1. இல்லாத நூல்கள்
2. அச்சாகாத நூல்கள்
3. புத்தக வடிவில் வராத நூல்.
4. புராணமல்லாத நூல்.

# முன்னுரை

தமிழிலக்கிய வரலாற்றில் புராண இலக்கியம் பெரும் பகுதி. இது அளவாலும் மிக விரிந்தது, பொருளாலும் மிக்க ஆழமானது. இப்புராண இலக்கியம் வடமொழியைத் தழுவியே வளர்ந்தது; எனினும், முதல் தமிழ்ப் புராணம் தமிழ் மொழியில் மூல நூலாகச் செய்யப்பெற்றது, வடமொழி தழுவியல்ல என்பதைப் பின்னர்க் காண்போம்; ஆனால் பெரும் புராணங்கள் யாவும் வடமொழியிலிருந்து தமிழாக்கப் பெற்றவை. வடமொழி மகா புராணங்கள் கிறிஸ்து அப்தத்தின் முதல் சில நூற்றாண்டுகளில் முடிக்கப்பெற்றன என்று சொல்வர்; ஆனால் இவை சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகே தமிழில் பரவலாயின. புராணம் பரவியது பின்னரேயன்றி, புராணக் கதைகள் சில, சங்கநூல்களிலும் இடம் பெற்றிருக்கின்றன என்பது உண்மை. திருமூலர், சமயாசாரியர், ஆழ்வார் காலங்களிலேயே தமிழ் மொழியில் இவை அதிக இடம்பெற்றன.

புராணம் என்றால் பொதுவாகத் தலங்களின் பெருமையைச் சொல்லுகின்ற தல புராணங்கள் என்ற கருத்து நிலவுகிறது. இது பொருந்துவதன்று. புராணம் - பழங்கதை. புராணம் என்ற வடசொல் பழமை என்று பொருள்படும் திருவாசகத்தின் முதல் அகவல் சிவபுராணம் என்றே பெயர் பெற்றுள்ளது:

> சிந்தை மகிழச் சிவபுராணம் தன்னை
> முந்தை வினை முழுதும் ஓய உரைப்பன்யான்.

என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். திருவாசகப் பதிகங்களின் கருத்து எழுதினோர் இத்தொடருக்கு, சிவனது அநாதி முறைமையான பழமை என்று எழுதியுள்ளனர். புராணன் - பழமையானவன், முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளாயுள்ள இறைவன். 'போற்றி போற்றி புராண காரண' என்பது திருவாசகம்; புராண சிந்தாமணி என்பது சேந்தனார் திரு

விசைப்பா. ஆதி புராணன் என்பதும் உண்டு (திருமந்திரம் 1557), 'பூரணன் காண், புண்ணியன் காண், புராணன்தான் காண்' என்று திருக்காளத்தியில் அப்பர் பாடுகிறார்; பூம்புகலூர் மேய புராணர் போலும், பூதங்களாகிப் புராணன் தானேயாகி என்றும் சொல்லு வார். புராணன் என்ற பெயரைச் சம்பந்தர் பலமுறை குறிப்பிடு கிறார்: பாசுபதம் புரிந்தளித்த புராணர் கோயில் (1406) உள்ளப் புண்டரிகத்துள்ளிருக்கும் புராணர் கோயில் (1421), கூவிளம் ... சடையிற் பொலிவித்த புராணனார் (1536), அர்ச்சிக்க இருந்த புராணன் (1569) என்பன சில.

அருகன் பெயராக இளங்கோ அடிகள் சொல்லும் புராணன் என்ற சொல்லுக்கு, பழையவன் என்றே அடியார்க்கு நல்லார் பொருள் சொல்கிறார். இராமன் சீதையோடு காட்டிற் சென்று கடுந்துயர் உழந்தான் என்பது 'நெடுமொழி' என்று இளங்கோவடி கள் சொல்லியதை, அடியார்க்கு நல்லார் 'நெடுமொழி - புரா ணக்கதை' என்கிறார்.

### புராணம் – காப்பியம்

யாப்பருங்கல விருத்தி ஒழிபியலில் சித்திரக் கவிமாலை கூறுகின்ற ஒரு நூற்பா உள்ளது. மாலைமாற்று என்று தொடங் கிச் சித்திர கவிகளைச் சொல்லி, வேறுபல பொருள்களும் கூறு கிறது. அவற்றுள் 'விளம்பனத் தியற்கை' என்பது ஒன்று. விளம் பனம் என்பது ஆதி காலத்து மக்களின் பழக்க ஒழுக்கங்களை ஆடியும் பாடியும் நடித்துக் காட்டுதல். இதை உரையானது பின்னே விரித்துரைக்கின்றது. 'இனி விளம்பனத் தியற்கையும் என்பது:

விளம்பனத் தியற்கை விரிக்கும் காலை
ஆரியம் தமிழொடு நேரிதன் அடக்கிய
உலகின் தோற்றமும் ஊழி யிறுதியும்
வகைசால் தொண்ணூற் றறுவர தியற்கையும்
வேத நாவின் வேதியர் ஒழுக்கமும்
ஆதி காலத் தரசர் செய்கையும்
அவ்வவ நாட்டார் அறியும் வகையால்
ஆடியும் பாடியும் அறிவரக் கிளத்தல்.

'எனக் கொள்க' இது திவாகர நிகண்டிலிருந்து எடுக்கப்பட்டது எனத் தெரிகிறது. நிகண்டில் விளம்பனத்தியற்கை என்ற தொடர்

'காவியத் தியற்கை' எனக் காணப்படுவதொன்றே முக்கிய வேறு பாடு. இதைப் பார்க்கும்போது, விளம்பனம் என்பது, இன்று நாம் கருதுகின்ற புராணம் போன்ற ஒரு நூலின் பொருளைக் கொண்டு செய்யப்பட்டது எனத் தோன்றுகிறது உலகின் தோற் றம், ஊழியிறுதி, தொண்ணூற்றறுவர் இயற்கை, வேதியர் ஒழுக் கம், அரசர் செய்கை என்பன புராணப்பொருள்; இவை விளம் பனத்தில் ஆடியும் பாடியும் அறிவரக்கிளத்தல் எனச் சொல் லப்பட்டது மிகுதி எனத் தெரிகிறது. இதையே வீரசோழிய உரையில் பெருந்தேவனார் எடுத்துக்காட்டுகிறார்.

வச்சணந்தி மாலையுடையார் பெருங்காப்பிய இலக்கணம் சொல்லி, அதன் பொருளில் சில குன்றினும் அது காப்பியமா கும் என்று கூறி, பிறகு 'குலவரவு காரிகை யாப்பில் புராணமே யாம்' என்று எழுதுகிறார். அவர் கருத்தின்படி, காரிகை யாப் பில் குலவரவு - அதாவது முனிமரபு, அரச மரபு ஆகியவற்றைப் பாடினால் அது புராணம் ஆகும் என்று தெரிகிறது. எழுந்துள்ள புராணங்கள் அனைத்தையும் நோக்கும்போது, (212 பாடல் கொண்ட காஞ்சிப் புராணக் கலித்துறை என்ற மிகச் சிறு புரா ணம் நீங்கலாக) காரிகை யாப்பில் எந்தப் புராணமும் பாடப் பெறவில்லை.* எல்லாப் புராணங்களும் விருத்த யாப்பிலேயே பாடப்பட்டுள்ளன. (காரிகை யாப்பு - கட்டளைக் கலித்துறை.) பின் வந்த சிதம்பரப் பாட்டியலுடையார் 'அறம் பொருள் இன் பம் வீட்டிற் குறைபாடாகப் பெறுவது காப்பியமாகும், புராண மாகும்' என்று கூறுகிறார். இதற்குச் சமகாலம் என்று கருதத் தக்க பிரபந்த மரபியலானது 'காப்பியம் புராணமாய்க் கருதப் பெறுமே' என்று கூறுகிறது.

புராணம், அறம் பொருள் இன்பம் வீடு நான்கையும் விரித் துக் கூறுதல் இயலாது; அறத்தையும் வீட்டையுமே கூறும். பெரிய புராணம், கந்த் புராணம் என்ற இரண்டும் பொருளும் இன்ப மும் கூறினும், பொதுவாய்ப் பிற புராணங்கள் இவ்விரண்டை

* நாயன்மார் பதிகம் பாடிய செய்தியைக் கூறும் சேக்கிழார், அவ்வவ் விடத்திலும், பதிகத்தின் சந்தத்திலேயே தம் பாடலை அமைப்ப துண்டு. அப்பர் 'ஈன்றாளுமாய்' என்ற திருவிருத்தம் கட்டளைக் கலித்துறை யாப்பில் பாடியிருப்பதைக் கூறுமிடத்துப் பத்துப் பாடல் கள் கலித்துறை யாப்பிலேயே அமைத்திருப்பது குறிப்பிடத்தக்கது. (1404 - 1413).

யும் கூறுவன அல்ல. ஆகவே புராணங்கள் பெருங்காப்பியமாகா; காப்பியம் என்று மட்டும் கருதுதல் பொருந்தும்.

### வடநூல் மரபு

புராணம் வடசொல் என்று குறிப்பிட்டோம். புராணமானது வடமொழி இலக்கியத்தில் போற்றுதலுக்குரிய ஒரு சிறந்த பிரிவு. 'வேதாகம புராண இதிகாசம்' என்பது ஒரு வடமொழி வழக்கு; ஏனைய யாவும் இவற்றினுள் அடக்கம் என்பது கருத்து. இனி, வடமொழி மரபில் வித்தைகள் பதினான்கு* எனப்படும். அவையாவன: வேதம் நான்கு, வேதாங்கம் ஆறு, சாஸ்திரம் நான்கு. வேதம் நான்காவன: இருக்கு, யஜுஸ், சாமம், அதர்வம் என்பன. வேதாங்கம் ஆறாவன: சிட்சை (எழுத்திலக்கணம்), வியாகரணம் (சொல்லிலக்கணம்), சந்தஸ் (யாப்பிலக்கணம்), நிருக்தம் (வேதத்தின் சொல்லுக்குப் பொருள் கூறும் நிகண்டு), சோதிடம் (காலம் பற்றிய கணிதம்), கல்பம் (வேத கர்ம இலக்கணம்). 'ஆறங்கமாவன உலகியற் சொல்லை யொழித்து வைதிகச் சொல்லை ஆராயும் நிருத்தமும் (நிருக்தம்), அவ்விரண்டையும் உடனாராயும் ஐந்திரத் தொடக்கத்து வியாகரணமும், போதாயனீயம் பாரத் துவாசம் ஆபத்தம்பம் ஆத்திரேயம் முதலிய கற்பங்களும், நாராயணீயம் வாராகம் முதலிய கணிதங்களும் (சோதிடங்களும்), எழுத்தாராய்ச்சியாகிய பிரமமும் (சிட்சையும்), செய்யுளிலக்கணமாகிய சந்தமுமாம்' என நச்சினார்க்கினியர் எழுதியிருப்பது காண்க (தொல்காப்பியம் பொருள் சூத்திரம் 75 உரை). சாஸ்திரமாவது, மீமாம்சை, நியாயம், புராணம், தர்ம சாஸ்திரம் ஆகிய நான்கும். இங்கு வித்தைகளில் ஒன்று புராணம் என்பது கவனிக்கத்தக்கது. இதிகாச புராணங்கள், ஐந்தாவது வேதம் என்றும் சிறப்பித்துச் சொல்லப்படும்.

வடமொழியில் மட்டுமன்றி இந்திய மொழிகள் அனைத்திலுமே, புராண இலக்கியம் சிறப்பான ஒரு பகுதி. புராணம் என்ற சொல் உபநிடதங்களிலும் காணப்படுகிறது. 'இதிஹாஸ புராணானி பஞ்சமோ வேத உச்யதே' என்று சாந்தோக்யோபநிடதம் (அத்தியாயம் 7, முதற்கண்டம்) கூறுகிறது.

---

* ஆயுள் வேதம், அர்த்த வேதம், தனுர் வேதம், கந்தருவ வேதம் என்னும் நான்கு உபவேதங்களையும் காட்டி, வித்தைகள் பதினெட்டு என்னும் வழக்கும் உண்டு.

இதிகாசமும் புராணமும் ஐந்தாம் வேதம்; இங்கு, தாம் இவற் றைப் படித்திருந்ததாக நாரதர் கூறுகிறார். புராண நூல்கள் அதர்வண வேதம் தோன்றிய காலத்திலேயே ஒரு சிறந்த இலக் கியப் பகுதியாகக் கொள்ளப்பட்டன என்பர். மகாபாரதம் புராணப் பெயர்களைக் கூறுகிறது. வேத காலத்துக்கு முன் ஆதி புராணங்கள் கதைகளாகவே வழங்கின என்றும், புத்தர் காலத் துக்கு முன் ஆதி புராணங்கள் எழுதப் பெற்றிருந்தன என்றும், ஏனையவை அவர் காலத்திற்குப்பின் எழுதப்பெற்றன என்றும் ஆன்றோர் கருதுவர்.

விஷ்ணுவே வேதவியாசராக அவதரித்தார் என்பது வடநூல் மரபு. ஒன்றாகக் கலந்து கிடந்த வேதங்களை நான்காக அவர் பிரித்து அமைத்தமையால் வேதவியாசர்.

புராணம் என்கிற வடசொல், புரா - நவ என்ற இருவேர் களிலிருந்து பிறந்தது; இதன் பொருள் பழமைக்கும் பழமை யாய்ப் புதுமைக்கும் புதுமையாய் உள்ளது என்பர். இதுவே நாம் கருதும் புராணம். பழமையான எந்த வரலாறுகள் இன் னும் கூட மக்களிடையே சொல்லப்பெற்று வழங்குகின்றனவோ அவை புராணம்.

வடமொழியில் இலக்கியங்களைப் பிரபு சம்மிதை சுஹ்ருத் சம்மிதை, காந்த சம்மிதை என மூன்று வகையாகச் சொல்வர். இன்னது-செய்க, இன்னது தவிர்க என்றும் விதிக்கின்ற வேதம் ஆகமங்கள் போன்றவை பிரபு சம்மிதை. ஒரு நண்பன் புத்தி சொல்லி நல்லொழுக்க உணர்ச்சியை ஊட்டுவது போலப் பழைய கதைகளைச் சொல்லி நீதியை உணர்த்துகின்ற புராண இதிகாசங்கள் சுஹ்ருத் சம்மிதை எனப்படும். மனைவி போல அன்போடு நீதியை உணர்த்துகின்ற காவியங்களும் நாடகங் களும் காந்த சம்மிதை எனப்படும். இதனால் புராணங்கள் நண் பன் போல் உதவுவன என்பதை அறியலாம். மேலும் ஒவ்வொரு சம்மிதையிலும் ஒவ்வொரு பண்பு சிறந்து நிற்கும். வேதாகமங் களில் விதிகள், புராணங்களில் கதைகள், காவிய நாடகங்களில் சுவைகள். எனவே புராணங்களில் கதைகளே சிறந்திருப்பினும், அவை காவியங்களாகிச் சுவைகளையும் ஏற்று, தெய்வபக்தி, நல்லொழுக்கம் போன்ற நற்பண்புகளை வளர்த்து வருகின்றன. வேத வாக்கியங்களுக்குப் புராணங்களையும் இதிகாசங்களையும்

கொண்டே பொருள் செய்ய வேண்டும் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

நாட்டைப் புரக்கும் மன்னவன் பல சாஸ்திரங்களையும் கற்று வல்லவனாயிருத்தலோடு, முக்கியமாகப் புராணங்களையும் பயில வேண்டும் என்று கௌடில்யர் அர்த்த சாஸ்திரம் முதலியன விதிக்கின்றன.

**புராண வகை**

புராணங்கள் மூவகை - மகா புராணம், உப புராணம், அதி புராணம் என. இவற்றுள் மகா புராணங்களே சிறப்புடையவை; இவை வியாசரால் செய்யப்பெற்றன என்பர். புராணம் என்ற பொதுப்பெயரில் நாம் அறிய வருபவை மகா புராணங்களே. இவை தொகையால் 18. இவற்றின் பெயர்களை வடமொழி நூல்களிலும், திவாகரம், பிங்கலம், சூடாமணி ஆகிய தமிழ் நிகண்டுகளிலும் விளங்கக் காணலாம். தமிழ்க் கூர்ம புராணம் இவற்றை ஒரு பாடலால் தொகுத்துக் கூறுகிறது:

> பிரமம், நற்பதுமம், வைணவம், சைவம்,
> பேருல கேத்துபா கவதம்,
> அருமறை தெளித்த பவுடிகம், நார
> தீயம், மார்க் கண்டம், ஆக் கினேயம்,
> கருதரும் பொருள்சேர் பிரமவை வர்த்தம்,
> இலிங்கம், நல் வராகம், மெய்க் காந்தம்,
> மருவுவா மனம், சொற் கூர்மம்நீள் மச்சம்,
> காருடம், சிறந்த வாயவியம்.

இவற்றோடு, 'பிரமாண்டப் பேர் ... ஓதும் தனியோர் புராணமுளது' என்று அந்நூல் அடுத்த பாடலில் கூறுகிறது. ஆனால் சம்பிரதாயமாகப் பதினெண் புராணங்களைக் கூறுமிடங்களில், பாடலின் இறுதியில் சொன்ன வாயவியத்தை நீக்கிப் பிரமாண்டமே சொல்லப்பட்டிருக்கும். மகா புராணங்கள் சமயத்தைப் பொது நிலையிலேயே பேசும்; குறித்த ஒரு தெய்வ வழிபாட்டை அதிகம் வற்புறுத்திப் பேசா. உபபுராணங்களே, தனித்தனித் தெய்வங்களைப் புகழ்வதற்கென்று எழுந்தவை.

இருப்பினும் மகா புராணங்கள் சைவம், வைணவம் என்று பாகுபாடு செய்தே சொல்லப் பெறுகின்றன. ஆக்கினேயம் ஒன்

றும் அக்கினிபுராணம்; பிரமவைவர்த்தம் - சூரியபுராணம்; பிரமம் பதுமம் இரண்டும் பிரம புராணம்; வைணவம்,* நாரதீயம், பாகவதம், காருடம் என்ற நான்கும் விஷ்ணு புராணம்; ஏனைய பத்தும் - சிவ மகா புராணம் (சைவம்) என்று சொல்லப்பட்டது: சைவம், பவுடிகம் (பவிஷ்யோத்தரம்), மார்க்கண்டேயம், இலிங் கம், வராகம், ஸ்காந்தம், வாமனம், கூர்மம், மச்சம், பிரமாண்டம் - சிவபுராணங்கள்.* வடமொழி மகா புராணங்கள் யாவுமே அச்சாகியுள்ளன.

மகாபுராணமே வடமொழிப் பாஷ்யகாரரால் தம் பாஷ்யங் களில் மேற்கோளாய்க் காட்டப்பட்டவை; அவர்கள் உபபுரா ணங்களைக் காட்டுவதில்லை; பொதுவாக இவை ஒரு வரலாறு மட்டும் கூறாமல் ஒரே புராணத்தில் பலருடைய வரலாறுகளைக் கூறும்; ஒரே வரலாறு பல புராணங்களில் சிறிது மாறுதலுடன் கூறியிருப்பதுமுண்டு.

வியாச முனிவர் மூன்றாம் யுகத்தில் பதினெண் புராணங் களும் செய்தார், அவற்றுள் நான்காம் புராணமாகிய சைவ புராணம் வேத வாக்கியங்களை விளக்கியுரைக்கும் என்று வாயு சங்கிதை கூறுகிறது:

மற்றவன் மூன்றாம் யுகத்தினில் வியாத
　　னாகியே வந்தவ தரித்துச்
சொற்றனன் பதினெண் விஞ்சையும் சுருங்கச்
　　சொற்றவை தம்முள் நன்குணர்ந்தோர்
உற்றறி புராணம் ஓர்பதி னெட்டு: ஆங்கு
　　அவற்றினுள் உயர்மறைப் பொருளைத்
தெற்றென விளக்கும் சைவமோர் நான்காம்
　　புராணமாம் தெரித்திடுங் காலே.

வடமொழிப் புராணங்களில் சொல்லப்பட்டுள்ள மரபுகள் பண்டைய அரச பரம்பரையைத் தெளிவுறுத்தி வரலாற்றறிவுக்கு ஓரளவு துணை செய்கின்றன என்று கருதுவதுண்டு. எடுத்துக் காட்டாக விஷ்ணு புராணம் - மௌரிய பரம்பரையையும், வாயு புராணம் - குப்த பரம்பரையையும் சுட்டுகின்றன என்று சொல்வர்.

---

* வைணவம் என்னும் விஷ்ணு புராணத்தை வைணவர் புராண ரத்தினம் எனப் போற்றுவர்.

* வடமொழிச் சூதசம்மிதை, அத்தியாயம் 1, சுலோகம் 7-11.

இனி, பதினெண் புராணங்களிலும் மேலிட்டுத் தோன்றும் குணம் பற்றி அவற்றை வேறு வகையிலும் பாகுபடுத்திச் சொல்வதுண்டு. காந்தம், ஆக்கினேயம், சைவம், கூர்மம், மச்சம், இலிங்கம் என்ற ஆறும் தாமதப் புராணம்: பிரமாண்டம், பிரம வைவர்த்தம், மார்க்கண்டேயம், வாமனம், பிரமம், பவுடியம் என்ற ஆறும் இராசத புராணம்; பாகவதம், பதுமம், வராகம், வைணவம், காருடம், நாரதீயம் என்ற ஆறும் சாத்துவிகப் புராணம். இப்பாகுபாடு அத்துணைப் பொருத்தமுடையதென்று கருதவியலாது. எடுத்துக்காட்டாக, கருட புராணத்தையறிந்தோர் அது ஒரு நாளும் சாத்துவிகப் புராணமாகாது என்று உறுதியாகச் சொல்வர்.

உபபுராணங்கள் 18 என்பர்.* இவை யாவும் இன்று கிடைக்கவில்லை, சிலவே கிடைத்து அச்சிடப்பட்டுள்ளன. இவற்றுள் பல சனத்குமாரர் முதலிய முனிவர்களால் செய்யப்பெற்றவை; இவை அம்முனிவர் பெயராலேயே சனத்குமார புராணம், நாரத புராணம் என்பன போல வழங்கும். ஏனையவை வியாசர் செய்தார் என்பதே வழக்கு. மகாபுராணங்களுக்குத் துணையாய் இவை அமைந்தமையால் உபபுராணம் எனப் பெயர்பெற்றன எனலாம்.

உபபுராணங்கள் பதினெட்டையும் கூர்மபுராணம் ஒரு பாடலால் பெயர் குறிப்பிட்டுச் சொல்லும்:

நவையில் சனற் குமாரம், வளர் நார சிங்கம், புகழ்
துருவா சம் சொற்
சிவ தருமம், இயல் நார தீயம், காபிலம் புகழ்மா
ணவம், சீர் வாய்ந்த
வவுசனம், வா சிட்டலைங்கம், வாருணம், காளிகம் மூலத்
தருள் சாம் பேசம்
சவுமியம், அங்கிரம், சவுரம், பராசரம், மாரீசம், பார்க்
கவ மாம் சாற்றின்.

இவற்றை நாம் இங்கு விரித்துரைக்கவில்லை. கூர்ம புராணம் கூறிய புராணப் பெயர்களை அப்படியே தமிழ் மச்ச புராணத்திலும் உரைத்திருக்கக் காணலாம். 9ஆம் நூற்றாண்டுக்குரிய திவாகர நிகண்டு, பதினெண் புராணங்கள் உப புராணங்களின் பெயர்களைக் குறிப்பிடுவதும் அறியத்தக்கது.

---

* வடமொழிச் சூதசம்மிதை அத்தியாயம் 1, சுலோகம் 12-18.

இவையன்றி அதிபுராணம் என்ற பெயருடைய 18 புராணங்கள் இன்னும் பிற்காலத்தில் செய்யப்பெற்றன.

மகாபுராணங்களில் பாகவதம் என்ற பெயரில் விஷ்ணு பாகவதம், தேவி பாகவதம் என்ற இரண்டு உள்ளன வைணவர் விஷ்ணு பாகவதமே மகாபுராணம் என்றும் சொல்வர். விஷ்ணு பாகவதங்களும் பல. அவை பின்னே தனியே அட்டவணைப் படுத்திக் காட்டியிருக்கக் காணலாம்.

புராணங்கள் பொதுவாக, கேட்டோர் பெயராலும், சொன்னோர் பெயராலும், பொருள் அமைதியாலும் பெயர் பெற்றன. வடமொழியில் புராணங்களின் நிலை தனிப்பட்டது. வேதம் முதல் மூன்று வருணத்தாருக்கு மட்டுமே உரியது, புராணம் நான்கு வருணத்தாருக்கும் உரியது என்ற கருத்து உண்டு. இன்னும் சிறப்பாகச் சொன்னால், பெண்டிரும் கல்வியறிவு அதிகம் பெறாத பாமர மக்களும் வேதம் படிப்பதில்லை, கேட்பதில்லை; இவர்கள் அறியும் பொருட்டே புராணங்கள் செய்யப்பெற்றன. ஆகவே கோயில் முதலான பொது இடங்களில் பாமர மக்களின் பொருட்டுப் புராணப் பிரவசனம் நடைபெற்று வந்தது. புராணம் படித்தலால் மக்களிடையே நல்லொழுக்கம், நல்ஆசாரம், தெய்வ பக்தி, கூட்டுறவு, நாகரிகம், வாழ்க்கையில் திருப்தி, இன்பம், பொது அமைதி, பரோபகாரம், தன்னலமின்மை, தன்னம்பிக்கை முதலிய அரும்பண்புகள் வளர்ந்து வந்தன. வடமொழி மரபின்படி, இதிகாசம் புராணம் காவியம் என்பன வெவ்வேறு; முன்னிரண்டும் சுஸ்ருத் சம்மிதை, காவியம் சாந்தா சம்மிதை என்று முன்னே காட்டினோம். தமிழ் மரபின்படி இவை யாவும் தொடர்நிலைச் செய்யுளாதலின், யாவும் காப்பியமெனப்படும். அறம் பொருள் இன்பம் வீடு நான்கையும் கூறுவது பெருங் காப்பியம்; இந்நான்கில் குறைபாடுடையது காப்பியம்; புராணமும் காப்பியமாய்க் கருதப்பெறுகிறது.

பதினென்ண் புராணங்களும் வியாசரே செய்தார் என்று பெருமை பற்றிக் கூறப்பட்டபோதிலும், அவை யாவும் ஒரே காலத்தில் ஒரே இடத்தில் ஒருவராலேயே செய்யப்பெற்றவையல்ல என்றும் சொல்வதுண்டு. பத்மபுராணம் புஸ்கல நாட்டிலும், வாயு புராணம் கயையிலும், பிரம வைவர்த்தம் - இன்றைய ஒரியா நாட்டிலும், மார்க்கண்டேய புராணம் நர்மதை, தபதி

நதிக்கரையிலும், மச்ச புராணம் தமிழ்நாட்டிலும் செய்யப் பெற்றன என்று சொல்வதுண்டு.* தமிழ்நாட்டில் வேறு வட மொழிப் புராணம் எதுவும் செய்யப்பெற்றதா என்பது தெரிய வில்லை.

ஒரு புராணத்தில் சொல்லிய கதை மற்றொரு புராணத் தில் வேறு விதமாகவும் சொல்லப்பட்டிருக்கும். இவ்வேறுபாடு கல்ப பேதத்தால் வந்தது என்பது வடநூல் மரபு.

### தமிழில் புராணம் பற்றிய குறிப்பு

புராணம் என்பது பழமை சான்ற வரலாறு என்ற வழக்குத் தமிழில் இருந்தது என்பதை அப்பர் தேவாரத்துள் இரு பதிகப் பெயர்களாலும் அறியலாம். பழம் பஞ்சரப் பண்ணில் ஒரு பதி கம் (நாலாந் திருமுறை, பதிகம் 14) தசபுராணம் என்று பெயர் பெறுகிறது; இதன் பாடல்கள் சிவபிரான் ஆலகால விடமுண் டது, முடியோடு பாதம் அறியாமை நின்றது முதலான பராக் கிரமச் செயல்களைச் சொல்லித் துதிக்கின்றன. மற்றது, இலிங்க புராணக் குறுந்தொகை என்பது (ஐந்தாந் திருமுறை, பதிகம் 95). இது செங்கணானும் பிரமனும் தேடச் சுடர் வடிவாய்ச் சிவ பிரான் நின்ற நிலையை மட்டும் கூறுவது. இவ்விரு பதிகங்களும் பழங்கதைகளை மட்டுமே எடுத்துக் கூறுவதால் இப்பதிகங்கள் புராணம் என்று சிறப்பாய்ப் பெயர் அமைக்கப்பெற்றன என்று அறிகிறோம்.

திருமூலர் இலிங்க புராணம் என்றே ஒரு பகுதி அமைத்திருக் கிறார் (பாடல்கள் 347-52); இங்கு சிவபராக்கிரமங்கள் ஐந்தைக் குறிப்பிட்டுப் பாடுகிறார்.

இலிங்க புராணக் குறுந்தொகை என்ற பெயரைக் கொண்டு, அப்பர் காலத்தில், வடமொழி இலிங்க புராணம் தமிழில் நல்ல ஆட்சி பெற்றிருந்ததென்றும் கருதலாம். இன்னும் இரு நூற் றாண்டுகள் கழித்து,

> இலிங்கத்திட்ட புராணத்தீரும் சமணரும் சாக்கியரும்
> வலிந்து வாது செய்வீர்களும் மற்று நுந்தெய்வமாகி நின்றான்.

---

* வி.ஆர். இராமச்சந்திர தீட்சிதர், மச்ச புராண ஆராய்ச்சி ஆங்கிலம், 1935.

என்று நம்மாழ்வார் பாடுவதாலும் இப்புராணத்தின் ஆட்சி இருந்தமை நாம் நன்கறியலாம். மேலும், பதினெண் புராணங் களையும் சம்பந்தர் குறிப்பிட்டுப் பாடுவதும் இங்கு அறியத் தக்கது:

> எங்கு மாகி நின்றானும் இயல்பறி யப்படா
> மங்கை பாகங் கொண்டானும் மதிசூடு மைந்தனும்
> பங்க மில்பதி னெட்டொடு நான்குக் குணர்வுமாய்
> அங்க மாறும் சொன்னானும் ஐயாறுடை ஐயனே. 1529

என்பது இரண்டாந் திருமுறை இந்தளப்பண் ஆறாம் பதிகப் பாடல்; பங்கமில் பதினெட்டு என்பது பதினெண் புராணமாகும். நான்கு வேதம்; அங்கமாறு; வேதாங்கம் ஆறு.

காலத்தால் இன்னும் முன்னதாக மணிமேகலையானது வடமொழிப் புராணத்தைக் குறிப்பிடக் காண்கிறோம். சமயக் கணக்கர் தம் திறம் கேட்ட காதையில், வைணவவாதியைக் குறிப் பிடும்போது ஆசிரியர், 'காதல் கொண்டு கடல்வணன் புராணம் ஓதினன்' என்று குறிப்பிடுகிறார். இது விஷ்ணு புராணத்தைச் சுட்டுகின்றது என்பது வெளிப்படை. (கடல்வண்ணன் - விஷ்ணு).

பழங்கதையை உயர்த்துச் சொல்லி அதைச் சமயத்துறை யில் மதிக்க வேண்டிய ஒரு பெருங்காவிய சரித்திரமாக ஆக்கி னோர் சைனர் என்று கருதவேண்டியிருக்கிறது. இவர்கள் ஆதி யில் அன்னிய நாட்டிலிருந்து வந்தவர்களாதலாலும், தமிழுக்குப் புறம்பான ஒரு சமயத்தையும் நாகரிகத்தையும் தமிழ்நாட்டில் புகுத்த முற்பட்டவர்களாதலாலும், இவ்வாறு இவர்கள் தங் களுக்கென்று சரித்திரப் பழமையும் பழம் பெருமையும் தேடிக் குறிப்பிடும் முயற்சி மேற்கொண்டது இயற்கையே. சீவக சிந்தா மணியே ஒரு புராணம் என்று நினைவு கூரத்தக்கது. புராணம் என்ற பெயரோடு நாம் அறிவன புராண சாகரமும் சாந்தி புராண மும் ஆகும். புராண சாகரம் பஃறொடை வெண்பாவினால் ஆனது, காலம் 9ஆம் நூற்றாண்டு என்று யாப்பருங்கல விருத்தி யால் அறிகிறோம்; விளக்கமில்லை. சாந்தி புராணம் சாந்தி நாதர் என்ற பதினாறாவது சைன தீர்த்தங்கரர் வரலாற்றைக் கூறும் ஒரு விரிந்த புராணம் போலும்: இதன் பாடல்கள் சில புறத்திரட்டுள் தொகுக்கப் பெற்றுள்ளன. இதன் காலம் எட் டாம் நூற்றாண்டாகலாம். இவ்விரு நூல்களும் இன்று இல்லை.

புராணம் என்று பெயர் சூட்டியிருந்த போதிலும், புராணம் அல்லாத நூலும் உண்டு. எடுத்துக்காட்டு அரிச்சந்திர புராணம். இது புராணமன்று; மகாபாரதத்தின் பல கிளைக்கதைகளில் இதுவும் ஒன்று. வீரன் என்ற பெயருடைய ஆசுகவிராசர் இதைக் காப்பியச் சுவைபட ஒரு சிறு காவியமாகப் பாடினார்; இது போலவே சிறு காவியமாகப் பாடப்பெற்ற கிளைக்கதைகள் நளன் சரிதமாகிய நைடதம், புரூரவன் சரிதமாகிய புரூரவசரிதை என்பனவாகும். இவை மூன்றுமே இந்த நூற்றாண்டில் எழுந் திருப்பது குறிப்பிடத்தக்கது. (நளன் கதையைக் கூறும் நள வெண்பா 13ஆம் நூற்றாண்டில் எழுந்தது.) 19ஆம் நூற்றாண் டின் தொடக்க காலத்தில் இக்காவியம் அரிச்சந்திரன் சரித் திரம் என்றே அச்சிடப்பட்டிருந்தது. பின்னால் அச்சிட்டவர் கள் புராணம் என்ற பெயர் இருந்தால் மக்கள் விரும்பிப் படிப் பார்கள் என்ற எண்ணத்தால் போலும், அரிச்சந்திர புராணம் என்று பெயர் கொடுத்தார்கள், இந்நூலும் மற்ற இரண்டும் 16ஆம் நூற்றாண்டு வரலாற்றின் இரண்டாம் பாகத்தில் இலக் கியம் என்ற தலைப்பில் ஆராயப்பெறுகின்றன.

சைவத்தில் பஞ்ச புராணம் ஓதுதல் என்றொரு வழக்காறு உண்டு. சிவாலயங்களில் சந்நிதியில் திருமுறை ஓதும் வழக்கம் நாயன்மார் காலத்திலிருந்து இருந்து வருகிறது. பன்னிரு திரு முறைகளிலும் திருமுறைக்கு ஒரு பாடலாகப் பாடுவதற்குப் பதி லாக, இப்பன்னிரண்டைச் சுருக்கி ஐந்து பாடல் பாடும் வழக் கமே பஞ்ச புராணம் எனப்படுகிறது. தேவார அடங்கன் முறை முழுவதிலிருமிருந்து ஒரு பாடல், திருவாசகம் ஒன்று, திரு விசைப்பா ஒன்று, திருப்பல்லாண்டு ஒன்று, பெரியபுராணம் ஒன்று - இவ்வைந்துமே பஞ்சபுராணம் எனப்படுகிறது. இப்பெய ரில் புராணம் என்ற சொல் வருவதற்கு நியாயமே இல்லை. எனி னும் இவ்வழக்கு சுமார் நூறு ஆண்டுகளுக்கு மேலாக இருந்து வருகிறது.*

புராணப் பிரவசனம் கோயில்களில் இருந்தமையால், அங்கு பாடும் பதிகங்களுக்கும் புராணம் பாடுதல் என்ற பெயர் பின்னும் பெருமை தரும் என்ற எண்ணத்தில் பஞ்ச புராணம் பாடுதல் என்ற சொல்லாட்சி தோன்றியிருக்கக் கூடும்.

---

* சைவ சித்தாந்தப் பொன் விழா மலர், 1965, பஞ்சபுராணம் என்ற எமது கட்டுரை பார்க்க.

பூதபுராணம் மாபுராணம் என்ற பெயருடைய இரு இலக்கண நூல்கள் சங்க காலத்துக்கு முன் இருந்தன என்று பண்டைய நூலுரைகளால் அறிகிறோம். புராணம் என்ற சொல்லினால் இவ்விரு நூல்களும் பழமையாக வந்த இலக்கண மரபை எடுத்துச் சொல்கின்றன என்று கருதவேண்டும். இவை நாம் இங்கு கருதும் புராண வரிசைக்குரியனவல்ல.

தமிழில் பிறவகை இலக்கியங்களைப் போல புராண இலக்கியமும் செய்யுளில் தான் செய்யப்பட்டு வந்திருக்கிறது. முதல் புராணம் தொடங்கி, இந்த இருபதாம் நூற்றாண்டிலும் கூட, புராணம் என்றால் செய்யுள்தான். எனினும், உரைநடையில் செய்யப்பெற்ற புராணங்களும், பண்டைக் காலத்தில் இல்லாவிட்டாலும், சமீப காலத்தில் தோன்றியுள்ளன. 19ஆம் நூற்றாண்டில் பல புராணங்கள் வடமொழியிலிருந்து நேரே தமிழில் உரைநடையாக மொழிபெயர்க்கப் பெற்றன. சிறந்த எடுத்துக்காட்டு - சிவமகா புராணம். மணிப்பிரவாள நடை இன்னும் பழமையானது. சைனருடைய ஸ்ரீ புராணம் (15 நூற்றாண்டு) மணிப்பிரவாளம் என்று முன்னமே குறிப்பிட்டோம். வைணவ மரபில், பின்பழகிய பெருமாள் ஜீயர் (13நூ.). செய்த ஆறாயிரம் படி குருபரம்பரா ப்ரபாவமும் பிள்ளைலோகஞ் ஜீயர் (16 நூ.) செய்த இராமானுஜ திவ்வியாசாரிய சரிதையும் ஆசாரியர் வரலாறு கூறும் புராணங்களென்றே கருதத்தக்கவை. இவை மணிப்பிரவாளத்தில் உரைநடையில் எழுந்தவை. பின்னும் குரு பரம்பரா ப்ரபாவங்கள் பல. இவையாவும் உரைநடை.

## தமிழ்ப் புராணப் பாகுபாடு

வடமொழி மரபை விட்டு, தமிழ்ப் புராணங்களை நோக்குவோமானால், இங்கு எண்ணற்ற பெருநூல்களும் சிறுநூல்களும் தோன்றியிருக்கக் காணலாம். இவை கூறும் பொருளையும் இவற்றின் அமைப்பையும் கொண்டு, இவற்றை பின்வருமாறு பாகுபாடு செய்வது பொருந்தும்.

1. மகாபுராணம்.
2. இதிகாசம்.
3. சிவபராக்கிரமம், சிவதருமம்.
4. தலபுராணம்.
5. அடியார் வரலாறும் பிற வரலாறுகளும்
6. சாதிப் பெருமை.

இவற்றைச் சில எடுத்துக்காட்டுக்கள் தந்து விளக்கியுரைக்கலாம்.

### 1. மகாபுராணம்

வடமொழி மகாபுராணத்தை அப்படியே முழுமையாக மொழிபெயர்த்தமைத்தது. எடுத்துக்காட்டுக்கள் - சைவத்தில் கூர்ம புராணம் (16 நூற்றாண்டு). இலிங்கபுராணம் (16), மச்ச புராணம் (18); வைணவத்தில் பாகவதம் இரண்டு (16) - இவை செய்யுள் வடிவில்; உரைநடையாக சைவ மகாபுராணம் வைணவ மகாபுராணம் என இரண்டும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் உரைநடையாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவையனைத் திலும் சிவ விஷ்ணு பராக்கிரமங்களும் சிவதர்மம், சிவ புண் ணியம் போன்றனவும் விரவிவருகின்றன. மேலும், மகாபுராணங் களின் பகுதிகளான சிலவும் குறிப்பிடத்தக்கவை. சைவ புராணத் தின் பன்னிரு சங்கிதைகளில் வாயு சங்கிதை (16) காந்தபுராணத் துள் சில பாகங்களான கந்தபுராணம் (14), உபதேச காண்டம் (15) என்பன தமிழில் செய்யுள் வடிவில் மொழிபெயர்க்கப்பட் டுள்ளன. மார்க்கண்டேய புராணத்தில் சில பாகமும் உரைநடை யாக மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

### 2. இதிகாசம்

இது மகாபுராணத்தில் ஒரு பகுதியாயுமிருக்கலாம், அல்லது தனியே காவிய அமைப்போடு ஒரு தெய்வ வரலாற்றைக் கூறுவ தாயும் இருக்கலாம். எடுத்துக்காட்டு. கந்தபுராணம் (14), பாக வதம் (16), விநாயகபுராணம் (18).

### 3. சிவதர்மம் சிவபுண்ணியம்

வடமொழி மகாபுராணத்தின் ஒரு பகுதியாக இருக்கலாம். பகுதி என்பதைக் காட்ட நூற்பெயரிலேயே சங்கிதை, கண்டம், காண்டம் என்ற சொல் அமைக்கப் பெற்றிருக்கும். எடுத்துக் காட்டு - உபதேச காண்டம் (15), பிரமோத்தர காண்டம் (16), வாயு சங்கிதை (16), காசி கண்டம் (16) முதலாயின; சிவ தரு மோத்தரம் என்ற நூலும் இங்கு கருதத்தக்கது; இதை ஆகமம் என்று கூறும் வழக்கும் உண்டு.

### 4. தலபுராணம்

ஒரு தலத்திலுள்ள சிவ அல்லது விஷ்ணு ஆலயத்தில் எழுந் தருளியுள்ள சிவபெருமான் அல்லது திருமால் புகழை விரித்துச் சொல்வது தலபுராணம். இது தலத்தின் பெருமையையும், அங்

குள்ள மூர்த்தியின் பெருமையையும், தீர்த்தத்தின் பெருமையை யும் கூறி, இந்த மூர்த்தியைப் பூசித்து நற்பேறு பெற்றவர்களின் வரலாற்றையும், கடைப்பிடிக்க வேண்டிய தர்மங்களையும், விலக் கத்தக்கனவாகிய அதர்மங்களையும், நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு முதலியவற்றோடு, காவிய நயம்பட விரித்துரைப்பது. ஒரு வகையில் தல புராணங்களே மக்களுக்கு வாழ்க்கையில் திருப்தியையும், பூரணமான சாந்தியையும், இறைவன் அருள் உண்டு என்ற நம்பிக்கையையும் அளித்து, அவர்களை நன்னெறிப் படுத்தி வந்திருக்கின்றன. திருவாரூரில் பிறக்க முத்தி, தில்லையில் தெரிசிக்க முத்தி, காசியில் இறக்க முத்தி, அருணையை நினைக்க முத்தி என்று எல்லாப் புராணங்களும் பெருஞ் சிறப்போடு எடுத் துச் சொல்லும். ஆனால் எல்லாத் தல புராணங்களிலும் அந் தந்தத் தலத்தைத் தெரிசிக்கவும் நினைக்கவும் முத்தி என்று உறுதி யாய்ச் சொல்லியிருக்கவும் காண்கின்றோம். இதில் முரண் இல்லை. இவ்வாறு கூறியமையால் அவ்வவ்வூர் மக்களுக்குத் தங்களூர் வாழ்க்கையில் மகிழ்ச்சி உண்டாகி நாட்டுப்பற்றையும் தோற்றுவிக்கும் வித்தாய் இருந்து வருகிறது. எடுத்துக்காட்டாக நம்பி திருவிளையாடல் (13), கோயிற்புராணம் (14), அருணாசல புராணம் (16), பரஞ்சோதி திருவிளையாடல் (18), குற்றாலப் புராணம் (18), காஞ்சிப்புராணம் (18), தணிகைப் புராணம் (19) என்பன குறிப்பிடத்தக்கவை. இவ்வாறு எழுந்த தல புராணங்கள் நூற்றுக்கணக்கில் உள்ளன.

ஆனால் மேற்குறிப்பிட்டவை யாவும் சைவ பரமான தல புராணங்கள். வைணவத் தல புராணங்கள் மிகவும் குறைவு. திருக் குருகூர் மான்மியம், கூடற் புராணம் (இரண்டும் 16ஆம் நூற் றாண்டு), திருவேங்கடத் தலபுராணம் (18), திரு நின்றவூர்த் தல புராணம் (அச்சாகாதது) என்ற சிலவே குறிப்பிடத்தக்க பழந் தமிழ்ப் புராணங்கள்.

தமிழ்த் தலபுராணங்களைக் குறித்த ஒரு கருத்துக் குறிப் பிடத்தக்கது வட நாட்டில் சிவ வழிபாடு இருந்துங்கூட, அங்கு காபாலிகம், காளாமுகம் போன்ற சைவசமயப் பிரிவுகள் இருந் தன. இப்பிரிவுகளில் வேத விரோதமான ஒழுக்கங்களும் மிகுதி யான நிலவின. உயிர்ப்பலி, கட்குடி முதலியன அதிகம். நர பலி யும் நடந்தது. தேவாரத்தில் சீபர்ப்பதம் என்று புகழ்ந்து தேவாரம் பாடியுள்ள தலமாகிய ஸ்ரீசைலம் என்னும் மல்லிகார்ச்சுனத்தி

லும் நரபலி நடந்ததென்று அறிஞர் ஆராய்ந்து சொல்லியுள்ள னர். வட நாட்டிலிருந்து தென்னாடு வந்த பிராமணர் அத்தலத் தைத் தாங்கள் மேற்கொண்டபோது, முன் இருந்த மக்களோடு ஒன்றி, தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்ட எண்ணி இப்பலி முதலியவற்றுக்கு இடங்கொடுத்து இங்குள்ளாரை வசப்படுத் திக் கொண்டார்கள் என்பர். அத்தலத்துக்குரிய தல மகாத்மியங் கள் பலி முதலியன கூறுகின்றன. திருநீறு பூசுதல் என்ற வழக்கம் தமிழ்நாட்டுக்கும் வடநாட்டுக்கும் பொதுவாயினும், அவர்க ளுடைய கீழான ஆசாரங்கள் தமிழ்நாட்டுக்குத் தொடர்பில்லை. மாரி, பிடாரி, திரௌபதி முதலான கோயில்களில் மிருகபலி இருந்திருக்கலாம். புலால் மறுத்தலை முதல் கொள்கையாகக் கொண்ட சிவாலயங்களில் எந்த உயிர்ப்பலி பற்றிய பேச்சும் எழவியலாது. உயிர்ப்பலி காரணமாக வடக்கெல்லாம், சிவாசாரி யர்களையல்லாமல், பிற பூசாரிகளும் ஆலயங்களில் பூசை செய்வதுண்டு. தமிழ்நாட்டில் மட்டும் அன்று தொட்டு இன்று வரை சிவாசாரியரே பூசை செய்யும் வழக்கம் அகலாதிருக்கிறது. வடமொழிப் புலமையைப் பெற்றிருந்த சங்கரர், இதுவே சைவம் என்று பாசுபதத்தைப் பெரிதும் கண்டிக்கிறார்; இராமானுசர் வேத விரோதம் என்று சொல்லிக் காபாலிகத்தையும் காளாமுகத் தையும் கண்டிக்கிறார். இவற்றுக்கும் தமிழருடைய சைவத்துக் கும் சம்பந்தமில்லை. தல புராணங்கள் பாடுகின்ற சிவாலயங்கள் யாவும், இந்தக் கீழ்நிலையை அறியாத உயர்ந்த சைவ சித்தாந்தத் தையே பேசுகின்றன.*

## 5. அடியார் வரலாறு

சிவனடியார் அல்லது திருமால் அடியார் வரலாற்றைக் காவியமாகப் பெருக்கிக் கூறுவது இவ்வகைப் புராணம். சைவத் திலும், வைணவத்திலும், அடியார்களையும் பாகவதர்களையும் இறைவன் ஆகவே கருதி வழிபடுவது சமய தத்துவம். அவர் களுடைய வரலாற்றைப் புராணமாகவே பாடிப் பெருமை தரு வது இலக்கிய மரபு. இவ்வகைப் புராணங்களில் திருத்தொண் டர் புராணம் என்ற பெரியபுராணம் (12) சேக்கிழார் புராணம் (14) திருவாதவூர் அடிகள் புராணம் (15) போன்றவை சைவத் தில் குறிப்பிடத்தக்கவை. வைணவத்தில் அரிசமய தீபம் (17)

---

* சுரேந்திரநாததாஸ், குப்தா, இந்திய தத்துவ சாஸ்திர வரலாறு, பாகம் 5, 195; பக்கம் 3.

வடிவழகிய நம்பிதாசர் பாடிய குருபரம்பராப் பிரபாவம் (18) திவ்விய சூரி சரிதம் (19) என்பன குறிப்பிடத்தக்கவை. மணிப் பிரவாள உரைநடையில் முன்சொன்னபடி குரு பரம்பராப் பிரபாவம் ஆறாயிரப்படி (13) மூவாயிரப்படி, பன்னீராயிரப் படி போன்ற பல வைணவத்தில் எழுந்துள்ளன. இவ்வகைப் புராணங்களில் எதுவும் மொழிபெயர்ப்பு நூலன்று. இவையாவும் தமிழில் புதிதாகப் படைக்கப்பட்ட முதல் நூலாகும்.

இவையன்றி இருபதாம் நூற்றாண்டில் பழைய மரபைத் தழுவி மொழிபெயர்ப்பு அல்லாது புதிய புராணங்கள் பல எழுந் துள்ளன. அவற்றுள் அடியார் பற்றிய புராணங்கள்: தண்டபாணி சுவாமிகள் பாடிய அருணகிரிநாதர் புராணம், வாஞர் சொக்க லிங்கம் பிள்ளை பாடிய சேய்த்தொண்டர் புராணம், வாமதேவ முருக பட்டாரகர் பாடிய கச்சியப்ப சிவாசாரியர் புராணம், அசலாம்பிகையம்மை பாடிய இராமலிங்க சுவாமி புராணம் என்பன இருபதாம் நூற்றாண்டில் எழுந்தவை. பட்டினத்துப் பிள்ளை புராணம் என்பதும் சடகோப திவ்விய சரிதம் என்ப தும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றியவை. இவையாவும் செய்யுள். அடியார் அல்லாத பிறர் வரலாறுகளும் புராணமாகப் பாடப்பெற்று வந்துள்ளது. எடுத்துக்காட்டாக தண்டபாணி சுவாமி பாடிய புலவர் புராணம், அசலாம்பிகையம்மை பாடிய திலகர் புராணம் காந்தி புராணம், வேறு ஆறுமுகநாவலர் சரித் திரம் என்பவற்றைக் குறிப்பிடலாம்.

### 6. சாதிப் பெருமை

17, 18 நூற்றாண்டுகள் தொடங்கிச் சாதிகளை உயர்த்திச் சொல்லிப் பாடுகின்ற பிரபந்தங்கள் பல தோன்றியிருக்கின்றன. ஈட்டி எழுபது, செம்பொற் சிலை எழுபது, வாள் எழுபது, வைசியப்பள்ளு, பந்தனந்தாதி, செங்குந்தர் பிள்ளைத் தமிழ் முதலிய நூல்களை எடுத்துக்காட்டாகச் சொல்லலாம். இந்த நெறியில் சாதியைச் சிறப்பித்து பல புராணங்களும் பாடப்பெற் றிருக்கின்றன. சிலவற்றைக் குறிப்பிடலாம் - செங்குந்தர் புராணம், விசுவகர்மர் புராணம், சீர்கருணர் புராணம், சான்றார் புராணம், குலாலர் புராணம், வீரநாராயண விசயம் என்பன காண்க.

இதுகாறும் காட்டிய எடுத்துக்காட்டுக்களில் சைவ வைணவ புராணங்களையே குறிப்பிட்டோம். வைணவ புராணங்கள்

தமிழில் பத்துக்கும் குறைவாகவே உள்ளன; ஆனால், சைவ புராணங்கள் பல நூறு உள்ளன. காரணம், சிவாலயங்கள் தமிழ் நாட்டில் பல்லாயிரம், திருமால் ஆலயங்கள் இருநூற்றுக்கும் குறைவு. சைவத்தை நாம் பெருக்கிச் சொல்லுகிறோம் என்று கருதுகின்ற அன்பர்கள் இந்த நிலையை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். ஆதியில் தமிழ்நாட்டில் இருந்தது ஒரே சமயம், ஒரே தெய்வ வழிபாடு, அதுவே சைவ சமயம், சிவ வழிபாடு. இவற்றிலிருந்து கிளைத்தனவே பிற யாவும். குறிஞ்சித் தெய்வமான முருகனும் முல்லைத் தெய்வமான திருமாலும், சைவர் அனைவராலும் வணங்கப்பட்டனர். காலப்போக்கில், முருக வழிபாடு சிவ வழி பாட்டோடு ஒன்றிவிடவே, தனித்து நின்ற திருமால் வழிபாடு, தனிச் சமயமாக ஆயிற்று. தனியே திருமால் ஆலயங்கள் தோன்றலாயின. திருமால் வழிபாடு மட்டுமல்லாமல், இந்திய நாட்டில் அதிலும் சிறப்பாகத் தமிழ்நாட்டில், கிளர்ந்தெழுந்த பல்வேறு சமயங்களைத் தழுவியவர் அனைவருமே சைவத்திலிருந்து சென்றவர்கள். சம்பந்தர் வரலாறும் இராமானுசர் வரலாறும் இந்த நிலையை நன்குணர்த்தும். பண்டை நாளில் சைவமும் பௌத்தமும், பிற்காலத்தில் கிறித்தவமும் இஸ்லாமும், நாத்திகவாதமும் - யாவும் சைவத்திலிருந்து கிளைத்தனவே. சைவத்திலிருந்து பிற மதம் சென்றார்களேயன்றி, பிற மதத்திலிருந்து சைவம் வந்தார்களென்பதில்லை.

இதை உணர்ந்தால், வைணவக் கோயில்கள் புராணங்கள் குறைவாகவே இருப்பதை உணர முடியும். அப்படியே பிறவும். சைனத்தில் புராணப் பெயராய் உள்ளவை காந்தி புராணம், மேரு மந்தர புராணம், ஸ்ரீ புராணம், பௌத்தத்தில் புராணம் இல்லை. கிறித்தவத்தில் தேம்பாவணியும் ஒரு புராணமே. இஸ்லாம் சமயத்தில் சீறாப்புராணமும் முகையதீன் புராணமும் புராணங்களே. இவை அடியார் வரலாறுரைக்கும் புராணங்களாகும்.

### புராண லட்சணம்

புராண பஞ்ச லட்சணம் என்பது ஒரு பழமொழி; அதாவது புராணம் ஐந்துவித இயல்புகளைப் பெற்றிருக்க வேண்டும். இவை வடமொழியில் சருக்கம், பிரதி சருக்கம், மன்வந்தரம், வம்சம், வம்சானுசரிதம் எனப்படும்;

ஸர்கச்ச பிரதிஸர்கச்ச வம்சோ மன்வந்தராணி
வம்சானு சரிதம் சேதி புராணம் பஞ்சலக்ஷணம்.

*தமிழில் உலகத்தோற்றம், ஒடுக்கம், மன்வந்தரம் (கால அளவு) முனிவர் அரசர் மரபு, அவர்களின் சரித்திரங்கள் என்பன. இவற்றைக் கூர்ம புராணத்துப் பாடலில் காணலாம்:*

தோற்றம் உலகம் மீண்டொடுங்கல் துகர்தீர்மன்வந்தரம் முனிவர்
ஆற்றல் அரசர் மரபவர்தம் சரிதம் என்னும் ஓரைந்தும்
சாற்றும் புராண இலக்கண மென்றறிஞர் உரைப்பர்.

*இந்த ஐந்திலும் அடங்கிய பொருள்களாவன; உலக சிருஷ்டி, மனுவாதிகளின் கால எல்லை, பண்டை (வடமொழி) அரசர் பரம்பரைகள், முனிவர் பரம்பரைகள், தலப்பெருமை, தீர்த்த மகிமை, மூர்த்திகளின் அவதாரம் அல்லது தோற்றம், அவர்களுடைய லீலைகள், சமய தருமங்கள், சரியைப் பகுதிக்குரிய விரதங்கள், துதிகள், சகஸ்ரநாமங்கள், மந்திரங்கள், கிரியையாகிய பூசை, யோகம், ஞானம், கன்மம், பக்தி முதலானவை; இவை பொதுவாக எல்லாப் புராணங்களிலும் விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கும்; சில புராணங்களில் சில பகுதிகள் விரித்துச் சொல்லப்பெறும்.*

*அருங்கலச் செப்பு என்ற சைன சமய நூல், என்றும் உண்டாகி, இறையால் வெளிப்பட்டு நின்றதும், மெய்ப்பொருள் காட்டி, உயிர்கட்கு அரண் ஆகித் துக்கம் கெடுப்பதும் நூல் என்று (செய்யுள் 9, 10) நூலின் தொடக்கத்தில் சொல்லிய பிறகு, நன்ஞானம் என்ற தலைப்பில் நான்கு பாடல்கள் நூலைக் குறித்துச் சொல்கிறது (58-61):*

சரிதம், புராணம், அருத்தக் கியானம்,
அரிதின் உரைப்பது நூல்.

உலகின் கிடக்கையும், ஊழி நிலையும்,
மலைவு இன்று உரைப்பது நூல்.

இல்லறம், ஏனைத் துறவறம், என்று இவற்றைப்
புல்ல உரைப்பது நூல்.

கட்டொடு வீடும் உயிரும் பிற பொருளும்
முட்டு இன்றிச் சொல்வது நூல்.

இங்கு சொல்லப்பட்ட பொருள்கள் புராண லட்சணம் என்று கூறப்படும் இயல்புகளுக்குப் பொருந்தி வருகின்றன என்பது அறியத்தக்கது.

## புராண இயல்பு

புராண இலக்கியத்தை மேலே குறிப்பிட்டோம். சில புராண இயல்புகளை இங்கே குறிப்பிடலாம். பெரும்பான்மையான விரிந்த புராணங்கள் பூர்வகாண்டம் உத்தரகாண்டம் என இரு பிரிவுகளாய் உள்ளன. யாவுமே பொதுவாய்ப்பதிகம் பெற்றுள் ளன. சிலப்பதிகாரம், சிந்தாமணி போன்றவற்றிலுள்ள பதிகம் இங்கு நினைவு கூரத்தக்கது. பதிகமாவது நூல் நுதலிய பொருள். இன்றைய பொருளடக்கம் போன்றது. மச்ச புராணம் போன்ற பெருநூலில் (இது 5000 பாடல் உடையது) பதிகம் என்ற பகுதி 52 பாடல் கொண்டு இருப்பது காணத்தக்கது. தொடக்கத்தில் எல்லாப் புராணங்களிலும் கடவுள் வாழ்த்துப் பகுதி காணப் படும். இது அவரவர் மனம்போல, சுருங்கியும், விரிந்தும் இருப் பதுண்டு. அடுத்து நைமிசாரணியத்தில் முனிவர்கள் கேட்க சூதமுனிவர் இப்புராணத்தைச் சொன்னார் என்ற செய்தி புராண வரலாறு அல்லது நைமிசாரணியச் சிறப்பு என்ற தலைப்பில் அமைக்கப் பெற்றிருக்கும். பெருங்காப்பியம் ஒப்ப தம் புராணத் தைப் பாட விரும்பினோர் நாட்டுச்சிறப்பு, நகரச்சிறப்பு என்ற பகுதிகளையும் அமைத்திருப்பர்.

புராண அளவுரைத்தல் என்ற ஒரு பகுதி சில புராணங் களில் காணப்படும். இங்கு மகா புராணங்கள் உப புராணங்கள் என்பவற்றின் விளக்கங்களும் ஒவ்வொரு புராணமும் எந்தத் தெய்வத்துக்குரியது என்ற குறிப்பும் சொல்லப் பெற்றிருக்கும்.

மகா புராணங்களிலும், வேறு சிலவற்றிலும் உலகத் தோற் றம் ஒடுக்கம் சொல்லப்படும். இங்கு காலம் பற்றிய விளக்கமும், இடம் பற்றிய விளக்கமும் விரிவாக அமைவதுண்டு. காலம் பற் றிக் கூறும் போது தேவர்களுக்குரிய கால அளவுகள், யுகங்கள், யுகங்கள் தோறும் உள்ள மக்கள் இயல்புகள் என்பன மிக்க விளக்கமாகச் சொல்லப்பெற்றிருக்கும். பல புராணங்கள் கலியுக தர்மம் என்று விரிவாய்ப் பேசும். இங்கு இருபதாம் நூற்றாண் டில் இன்று நடக்கின்ற அரசியல், சமுதாய வாழ்க்கை முறை யாவையும் அங்கு அப்படியே படம் பிடித்து வைத்திருக்கக் காண

லாம். அதிவீரராமர் போன்ற அரசர்களும், பாகவத புராணம் பாடிய புலவர்களும் எப்படித்தான் இந்த நிலையைக் கற்பனைக் கண்ணால் கண்டு சொல்ல முடிந்தது என்று எண்ணி நாம் வியப்படையாமல் இருக்கமுடியாது.

அடுத்தது இடம் பற்றிய விளக்கம். புலவர்கள் சூரிய மண்டலம், பிற மண்டலங்கள், மூவகை உலகங்கள், நாவலர் தீவு முதலான ஏழு தீவுகள், ஏழு சமுத்திரங்கள், நரகங்கள் இவற்றை விரிவாக ஆராய்ந்து சொல்கிறார்கள். இந்த பூகோள ஆராய்ச்சி மிகவும் விசித்திரமானது. காலத்தாலும், இடத்தாலும் வரையறைப்பட்டு வாழ்ந்த மக்கள் மனம் வரையறை இல்லாது காலத்திலும், இடத்திலும் சஞ்சரிக்க விரும்புகிறது அச்சஞ்சாரத்தின் வருணனையே நம் புலவர்களுடைய விளக்கம். இந்த விளக்கந்தான் சற்றுப் பிற்காலத்தில் பிரபஞ்ச ஆராய்ச்சியை பொருளாய்க் கொண்ட பூகோள விலாசம், அண்டகோள விலாசம் போன்ற நூல்கள் தோன்றக் காரணமாய் இருந்திருக்கிறது.

அக்காலம் வருணாசிரமத்தில் பற்று மிகுதியாய் இருந்த காலம். எல்லாப் புராணங்களுமே வருணாசிரம தருமத்தை மிகவும் வலியுறுத்திப் பேசுகின்றன. காலத்தையும், இடத்தையும் பற்றிய புராண ஆராய்ச்சியை நாம் சுவையாக அனுபவிக்கலாம் என்றால், வருணாசிரமம் கூறும் பகுதியை இக்காலத்தில் சுவையோடு படிக்கவும், அனுபவிக்கவும் இயலாது; எனினும் அது அக்கால நிலை என்ற உணர்வோடு அதை நாம் அறிய முற்படவேண்டும்.

இனி புராணங்கள், முனிவர் மரபு, அரசர் மரபு விரிவாய்க் கூறுவது அறியத்தக்கது; மக்கள் தொகை குறைவாய் இருந்த காலத்தில், வாழ்வின் தேவைகள் குறைவாயும், வசதிகள் பெருகியும் இருந்த அக்காலத்தில், மக்கள் இரண்டு பண்புகளையே போற்றி ஒழுகுகிறார்கள். ஒன்று அறிவு; மற்றது வீரம். அறிவை வளர்த்து அதன் எல்லை கண்டோர் முனிவர். வீரத்தை வளர்த்து அதன் எல்லை கண்டு, முனிவர் உள்ளிட்ட பிற மக்கள் கவலையின்றி வாழ உதவினோர் அரசர். எனவே, புராணங்கள் முனிவர் மரபையும், மன்னர் மரபையும் மிக நீளமாக எடுத்துச் சொல்கின்றன. இரண்டுமே வீரவழிபாட்டின் சின்னங்கள், மக்களுடைய ஒற்றுமைக்கும் வளர்ச்சிக்கும் இவ்வீர வழிபாடு அன்று

தேவையாய் இருந்தது. ஆகவே இந்தக் கண்கொண்டு மரபுச் செய்திகளை நாம் காணவேண்டும்.

ஏனைய புராணச் செய்திகள் வெவ்வேறாய் இருந்த போதிலும் கூட, பொருள் அமைப்பால் ஒரே தரமாய் இருக்கும். இங்கு நாம் தனியே எடுத்துச் சொல்லத்தக்கது கவித்திறன். புலவர்கள் புராணக் கதை பாடவந்த போதிலும்கூட, தங்களது மனப் போக்கைக் கவிதை மூலமாக நன்கு காட்டுகிறார்கள். வாதவூரடிகள் புராணம் பாடிய கடவுள்மாமுனிவர் (14 நூ.), பக்தி ஒன்றையே நூல் முழுதும் பேசுகின்றார். உலகத்தில் பேரின்பம் அல்லது சிற்றின்பம் என ஒன்று உண்டு என்பதே தமக்குத் தெரியாதவராய் அவர் பாடுகிறார். அதேசமயத்தில் தணிகைப் புராணம் பாடிய கச்சியப்ப முனிவர் (18 நூ.) தம் புராணத்துள் கோவையின் எல்லா அகப்பொருள் கூற்றுக்களையும் அமைத்து ஒரு கோவை முழுமையுமே பாடியிருக்கிறார். நூலின் வேறுபட்ட அமைப்புக்கு இது எடுத்துக்காட்டு.

புராணம் பாடிய எல்லா ஆசிரியர்களும், சந்தப்பாடல் அமைப்பதிலும், சித்திரக்கவி அமைப்பதிலும் தங்கள் திறன் முழுமையும் காட்டியிருக்கிறார்கள். யமகம், திரிபு, மடக்கு என்பனவற்றை நூல் தோறும் காணலாம். மீனாட்சி சுந்தரம்பிள்ளை (19 நூ.) நான்கு அடியின் மிக்கு வந்த தாழிசைகளும், மிறைக் கவிகளும் தம் நூல்களில் பாடியிருக்கிறார். பலவகையான சித்திரக் கவிகளைப் பலர் புராணங்களில் காணலாம். தோத்திரப் பாடல்கள் மிகவும் அதிகம். பலர், புராணங்களில் தோத்திரங்களை அமைக்கும்போது பல பாடல்களை ஒருசேர அமைத்து மக்களுக்குத் துதி நூலாக அமைக்க வேண்டும் என்றே பாடியிருப்பதுபோல் தோன்றுகிறது.

### புராணப் பொருள்

புராணமானது இம்மை மறுமை இரண்டுக்கும் உதவக் கூடிய பொருள்களைச் சொல்கிறது. புராணத்தில் சொல்லாத பொருளே இல்லை. வேதங்களில் கூறிய பொருளை விளக்கிக் கூறுவதே புராணம். வேள்விகள், உயிர்களின் படைப்பு, உலக அமைப்பு, யோகம், நோன்பு, நவக்கிரக மண்டலம், அவற்றின் போக்கு, சுவர்க்க நரகம், வழிபாடு, உடல் அமைப்பு, வைத்தியம், நாடி விசாரணை, மந்திரம், தோத்திரம், சகுனம் முதலான

பொருள்கள் இங்கு சொல்லப்பட்டுள்ளன. இவை பற்றிக் கவச தோத்திரங்களும் தத்துவப் பொருள்களும் ஆங்காங்கு விரித்துச் சொல்லப்பட்டுள்ளன. பகவத்கீதை, மகாபாரதம் என்ற பேரிதி காசத்திலுள்ளது என்பதை நாம் அறிவோம். சிவகீதை இராம கீதை இரண்டும் பத்ம புராணத்தில் உள்ளன; ஹம்ச கீதை ரம விஷ்ணு புராணத்தில்; அகத்திய கீதை ருத்திர கீதை பிருகு கீதை வராக புராணத்தில்; ஈசுவரகீதை வியாசகீதை, கூர்ம புராணத்தில்; பிரம்ம கீதை சூத கீதை ஸ்காந்த புராணத்தில்; ரிபு கீதை குரு கீதை, பகவத்கீதைக்கு முற்பட்டதெனச் சொல்லப்படும்; அஷ்டா வர்க்கிரர் கீதை என்பனவும் இப்படியே. இவ்வாறு புராணங்கள் தத்துவ விசாரணையில் ஈடுபட்டோருக்குப் பெருவிருந்தாயுள் ளன. பத்மம் காந்தம் பிரமாண்டம் ஆகியவற்றில் தல மகாத் மியம் அதிகம். ஆக்னேயத்தில் வைத்தியம் மந்திரம் காவிய அலங் காரம் என்பன. கருட புராணத்தில் ஆசாரப் பிரேதப் பிரம காண் டங்கள் உள்ளன; இவற்றுள் பிரேத காண்டம் மட்டுமே தமிழ் மொழிபெயர்ப்பில் அதிகம் வழங்குவது.

**கவசம்**

சிவ புராணங்களில், கவசம் என்ற ஒரு தோத்திரப் பகுதி அமைத்திருப்பது ஒரு புராண இயல்பாகத் தெரிகிறது. உடலைப் பாதுகாப்பதற்காகப் போருக்குச் சென்ற வீரர்கள் இரும்புக் கவசம் அணிந்தார்கள். அதுபோல, இறைவன் புகழைச் சொல்லி அவன் இன்ன இன்ன உறுப்புக்களைக் காப்பானாக என்று அவன் பெயர்களையே சொற்கவசமாக அமைத்துக் கொள் ளுதல் ஒரு தோத்திர கவசமாகும். இவற்றை ஓதி இன்னார் நற் பலன்கள் அடைந்தார்கள் என்று புராணம் கூறுகின்றமையால், பின்வந்த மக்களும் இவற்றை ஓதி நற்பலன் பெறும் நம்பிக்கை யடைகிறார்கள். இவ்வாறு, இந்த நூற்றாண்டில் நாம் ஆராயும் புராணங்களில் காணும் கவசங்களை இனிக் குறிப்பிடுகிறோம்.

**சிவகவசம்**

வரதுங்க ராம பாண்டியர் பாடிய பிரமோத்தர காண்டம், அத்தியாயம் 12, 20 பாடல். பத்திராயு என்னும் அரசகுமார னுக்கு விடப முனிவர் அருளிச் செய்தது. சக்தி கவசம் (வச்சிர பஞ்சரம்): அதிவீர ராம பாண்டியர் பாடிய காசி கண்டம், அத் தியாயம் 72, 13 பாடல். துர்க்கன் என்னும் அசுரனை வதைத்த

உமாதேவியைத் தேவர்கள் துதித்தது. இலக்குமி (கவசம்) தோத்திரம்: காசி கண்டம், அத்தியாயம் 5 ஏழு பாடல். அகத்திய முனிவர் துதித்தது. சிவாட்டகம்: காசிகண்டம், அத்தியாயம் 10, 8 பாடல், சிவசன்மா துதித்தது. மிருத்தியுஞ்சய தோத்திரம்: மாக புராணம், மார்க்கண்டன் பிறப்புரைத்த அத்தியாயம், 17 பாடல். நாராயண கவசம்: செவ்வைச் சூடுவார் பாகவதம், கந்தம் 6 அத்தியாயம் 4, 25 பாடல். விசுவரூபன் இந்திரனுக்கு உரைத்தது.

இவையன்றி, தேவராய சுவாமி 18ஆம் நூற்றாண்டில் செய்த அகவற்பாவாலான கந்தசஷ்டி கவசமும், கச்சியப்ப முனிவரது விநாயக புராணத்திலுள்ள விநாயக கவசமும் (9 பாடல்), 20ஆம் நூற்றாண்டில் பாம்பன் குமரகுருதாச சுவாமி செய்த தனி நூலான சண்முக கவசமும் (30 பாடல்) பிற்காலத்தில் பிரசித்தி பெற்றவை. கந்தர்சஷ்டி கவசத்தில் ஆறுபடை வீடுகளுக்கும் வெவ்வேறாக ஆறு உள்ளன. திருமால் பரமாக, கந்தர்சஷ்டி கவசம்போல, அரிகவசம் என்றொரு சிறுநூலும் பிற்காலத்தில் செய்யப்பட்டுள்ளது. முதலில் காப்பு வெண்பா, பின் நூல் முழுமையும் அகவற்பாவால் ஆனது. கந்தர் சஷ்டி கவசம் போலவே, திருமால் காக்ககாக்க என்று வேண்டுகின்ற வரிகளையும் தொடர்களையும் கொண்டது (ஏட்டுச் சுவடி).

15ஆம் நூற்றாண்டின் பிறகு தமிழ் நாடெங்கும் போர்கள் மலிந்துவிட்டன. முதலில் முகம்மதியர் படையெடுப்பால் விளைந்த இன்னல்கள்; பின்னர் மேலை நாட்டினர் வியாபாரத்தைத் தொடர்ந்து ஏற்பட்ட போர்கள். இப்போர்களில் சாமானியப் போர் வீரர் மட்டுமல்லாமல், சிறந்த சமய வாழ்க்கை நடத்த வசதியான நிலையிலிருந்த மக்களும் கூட ஈடுபட நேர்ந்தது. இவர்கள் கையிலேந்திய படைகளால் தங்களைக் காத்துக் கொண்டதோடு காப்பாக ஒரு தெய்வ கவசமும் தேடினார்கள். இவர்களுடைய பக்தியுணர்வே இக்கவசம் அமைக்கும் தோட்டமாகும். இந்த நிலையில் எழுந்தனவே இக்கவசங்கள் என்று கருதலாம். இவை வடமொழியில் முதலில் எழுந்தன, பின் அந்த மரபை ஒட்டித் தமிழிலும் தோன்றலாயின. இங்கு கூறிய கவச நூல்களோடு, சாமானிய மொழியில் எழுதப்பெற்ற இடும்பன் கவசம், கடம்பன் கவசம் என்ற பிற்காலத்துச் சிறு நூல்களும் சேர்த்துக் கொள்வதற்குரியன.

## புராணப் பிரவசனம்

"அந்நாளில் பார்ப்பனர்கள் வேதங்களிலும் சாத்திரங்களிலும் வல்லுநராயிருந்தமையோடு இரவில் அம்பலங்களிலாதல் திருக்கோயில் மண்டபங்களிலாதல் அமர்ந்து வடமொழியில் உள்ள மாபாரதம் பதினெண் புராணங்கள் முதலானவற்றைப் படித்துப் பொதுமக்கள் உணர்ந்து கொள்ளுமாறு பொருள் விளக்கம் செய்தும் வாழ்ந்து வந்தனரென்று தெரிகிறது. அவர்களுடைய வடமொழிப் புலமையையும் சீலத்தையுங் கண்டு மகிழ்வெய்திய பொதுமக்கள், அன்னோரின் நல்வாழ்வின் பொருட்டு ஊர்ப்பொது நிலங்களுள் சிலவற்றை வேத விருத்தி, பட்ட விருத்தி, பாரத விருத்தி, புராண விருத்தி என்ற பெயர்களோடு இறையிலி நிலங்களாக அவர்கட்கு வழங்கிப் பெரிதும் ஆதரித்து வந்தனர் என்பது கல்வெட்டுக்களால் நன்குணரக் கிடக்கின்றது."*

வடமொழி மரபின்படி, புராணப் பிரவசனமானது, யாகங்கள் செய்யப் பெறுந்தோறும் ஒரு குறிப்பிட்ட தினத்தில் நிகழ்ந்து வந்தது. புராணப் பிரசங்கம் செய்தவர் சூதர். சூதமாமுனிவர் என்று தமிழ்ப் புராணங்கள் அவரை ஒரு முனிவராக்கி விட்ட போதிலும், மேற்குறிப்பிட்டவாறு புராணம் சொல்பவரே சூதர் எனப்பட்டார். சூதர் பழைய புராணச் செய்திகளையும், புதிதாய்ச் சேர்க்க வேண்டியவற்றையும் சேர்த்துப் பிரவசனம் செய்வார். அவர் சாதியால் பிராமணரல்லர். இக்காரணம் பற்றி, வேதங்கள் பிராமண மரபு என்றும், இதிகாச புராணங்கள் க்ஷத்திரிய மரபு என்றும் ஒரு சாரார் சொல்வதுண்டு.

வடமொழிப் புராணப் பிரசங்கத்திற்காகச் சோழமன்னர் புராண விருத்தி என்ற பெயரில் பிரசங்கிகளுக்கு நிலங்களை இறையிலியாக வழங்கினார்கள் என்று முன்னமே குறிப்பிட்டோம். இவை புராணம், புராண மானியம் என்றும் வழங்கப்பட்டன. தமிழ்ப் புராணப் பிரசங்கத்துக்கும் நிபந்தம் அமைத்தார்கள் என்று கல்வெட்டுக்களால் அறிகிறோம். புராணப் பிரசங்கத்துக்குப் புராணம் வக்காணித்தல் என்று பெயர் வழங்கிற்று புராணச் செய்திகள் முன் குறிப்பிட்டவாறு ஒரு நண்பன் அறிவூட்டுவது போல நற்புத்தி புகட்டின என்ற கருத்தினால் சோழ

---

* சதாசிவ பண்டாரத்தார், பிற்காலச் சோழர் வரலாறு, மூன்றாம் பகுதி 1971, பக்கம் 94.

மன்னர் பல புராணங்களை வக்காணிப் போருக்கும் அவையில் இருந்து கேட்போருக்கும் இட வசதிக்காகப் பல நிபந்தங்கள் அமைத்திருந்தனர். திருவாரூரிலும் திருபுவனத்திலும் புராண மண்டபம் என்ற பெயராலேயே மண்டபம் அமைக்கப்பட்டி ருந்தது. இரண்டாம் இராசாதிராசன் காலத்தில் அவனது ஒன்ப தாம் ஆட்சியாண்டில் திருவொற்றியூரில் பங்குனி யுத்தரப் பெரு விழா நடைபெற்றது. அதற்குச் சோழவேந்தனும் வந்திருந்தான். ஆறாம் திருநாளன்று திருவொற்றியூர் இறைவனான படம் பக்க நாயக தேவர் திருமகிழின் கீழ்த் திருவோலக்கம் செய்தரு ளினார். அக்காலை ஆளுடை நம்பிகள் ஸ்ரீ புராணம் விரிவுரை செய்யப்பட்டது. அதனை அங்கிருந்து வேந்தனுடன் ஒருங்கு கேட்டு இன்புற்றோருள் சதுரானன பண்டிதரும் வாகீச பண்டி தரும் சிறந்து விளங்கினர். வாகீச பண்டிதரே அப்புராணத்தை விரிவுரை செய்தார்.* ஆளுடைய நம்பிகள் புராணம் என்பது சேக்கிழார் (சுமார் 1140இல்) பாடிய பெரிய புராணத்துள் சுந்தர மூர்த்தி நாயனார் சரிதம் கூறும் பகுதி. ஒன்பதாம் ஆட்சியாண் டாவது 1172. புராணம் பாடியபின் எவ்வளவு விரைவில் இது மக் களிடைப் பிரசாரம் எய்தியது என்பதையும் இது நன்குணர்த்து கிறது.

சிலப்பதிகாரம் இந்திர விழவூரெடுத்த காதை வரி 181, திற வோருரைக்கும் செயல் சிறந்தொரு பால் என்ற தொடருக்கு உரை எழுதுமிடத்து, புராணம் படித்தல் என்று அடியார்க்கு நல்லார் உரை எழுதுகிறார். இதனால், புராணம் படித்தல் கோயில்களில் நடைபெற்றது, அருகன் கோயில்களிலும் நடை பெற்றது என்று அறிகிறோம்.

புராணப் பிரசங்கத்தைக் கேட்டு, மக்கள் சிலர் உலகப் பற்றைத் துறந்து வைராக்கியம் அடைவார்கள் என்று சொல்வ துண்டு. இத்துறவு எண்ணம் நிலை பெற்றதன்றாகையால் இது ஏளனத்துக்குரிய சொல்லாகவே வழங்குகிறது.

சூடாமணி நிகண்டு செய்த மண்டல புருடர் திருப்புகழ்ப் புராணம் என்ற பெயரில் ஒரு புராணம் பாடினார் என்று அறிகிறோம். அந்த நூல் இன்று இல்லை, அது பற்றிய வேறு

* ஒளவை துரைசாமிப்பிள்ளை, ஞானாமிர்தம், 1914, முகவுரை, பக்கம் XXXV.

செய்திகளும் தெரியவில்லை - எமது 16ஆம் நூற்றாண்டு வரலாறு பாகம் - 2இல் பார்க்க.

சீவக சிந்தாமணியைச் சைனர் வேதம் என்றும் புராண மென்றும் கருதுவர், மலரிட்டுப் பூசிப்பர்.

## சைனப் புராணம்

இப்புத்தகத்தில் சைவ - வைணவப் புராணங்களை மட்டுமே ஆராய்கிறோம். காரணம், இந்நூற்றாண்டில் செய்யப்பெற்ற சைன புராணமோ பௌத்த புராணமோ இல்லை. வரலாற்றை நோக்கினால், சைனப் புராணம் முந்திய காலப்பகுதியில் சில செய்யப் பெற்றிருந்தன என்பன நன்கு புலப்படுகிறது. அவற்றைச் சுருக்கமாக இங்கு குறிப்பிடுவது பயனுடையது. புறத்திரட்டு என்ற தொகை நூலால் அறிய வருபவை சாந்தி புராணம் நாரத சரிதை என்ற இரு புராணங்கள். சாந்தி புராணம், சாந்தி தேவர் என்ற தீர்த்தங்கரரைக் குறித்ததாகலாம். மற்றது, சைனருடைய ஸ்ரீ புராணத்தில் குறிப்பிட்ட நாரதர் வரலாறு (புராணம்) ஆகலாம். இவற்றின் காலம் முறையே 8, 10 நூற்றாண்டுகள். இரண்டு நூல்களும் இன்று இல்லை. இருப்பவை மேருமந்தர புராணமும், ஸ்ரீ புராணமும். முந்தியது மேருமந்தரர் என்ற இரு அரச குமாரர்களுடைய பல பிறவி வரலாறுகளைக் கூறுவது; 1405 பாடல் கொண்டது. பிந்தியது மணிப்பிரவாள உரைநடையில் எழுதப்பட்டது, சைனருடைய மகாபுராண சங்கிரகம் என்ற வடமொழி நூலின் மொழிபெயர்ப்பு ஆகும். இரண்டு நூல்களும் முழுமையும் உள்ளன. காலம் முறையே 14, 15ஆம் நூற்றாண்டுகள். இவையன்றி வேறு சைனருடைய புராணம் என்று எந்த நூலும் எழுந்ததில்லை. காப்பியம் என்று இன்று கருதுகின்ற சீவகசிந்தாமணியும் சூளாமணியும் ஒருவகையில் புராணம் என்று கருதுவதும் பிழையாகாது. பௌத்த சமயத்தில் புராணமெதுவும் இல்லை.

## புராணத்தால் விளைந்த பயன்

புராணங்கள் பொதுவாக வேத ஆகமங்கள் விதித்தவற்றையும் விலக்கியவற்றையும் கதைகள் மூலமாக மக்களுக்கு உணர்த்தி நன்னெறி புகட்டுவதற்காக எழுந்தவை. கதைகளோடு விதிகளும் விளக்கமாகச் சொல்லப்பட்டிருக்கும். புராணங்களில் எண்ணற்ற விரதங்கள் சொல்லப்பட்டுள்ளன. ஒவ்வொரு விரதம்

சம்பந்தமாகவும் அதன் இலக்கணம் யாது, அதைக் கைக் கொண்டு பெறத்தக்க பலன் யாது, அதை முற்காலத்தில் அனுட்டித்துப் பயன் பெற்றவர் யாவர், அவர் சரிதம் எத்தகையது என்ற பொருளையெல்லாம் விளக்கிக் கூறுவதே புராணத்தின் இயல்பு.

தமிழ்ப் புராணங்கள் செய்யுள் நடையில் எழுதப் பெற்றிருந்தபோதும் கூட, அவை சமானியக் கல்வி உள்ளவர்களுக்கும் எளிதில் பொருள் விளங்கக் கூடியவை. அன்றியும், மக்களை நல்வழிப்படுத்துதலே புராணத்தின் நோக்கமாதலால், மக்கள் மனத்தைக் கவரும் பொருட்டு அவை ஒன்பது சுவைகளும் அமையும்படி செய்யப் பெற்றுள்ளன. மேலும் மனித இயல்பைக் கடந்த செய்திகள் பல புராணங்களில் உள்ளன. ஆனால், புராணப் பிரசங்கத்தைக் கேட்போருக்கும், சமீப காலம் வரையில் அவற்றில் ஆராய்ச்சி உணர்வு தோன்றியதில்லை. அனைத்தையும் உண்மை என்றே அவர் நம்புகிறார். இது மூட நம்பிக்கை என்று சொல்வது சரியாகாது. புராணகாரரிடத்திலுள்ள சொல்லுமாற்றலாலும் கேட்போர் மனம் பக்குவப்பட்டுச் செல்லும் நெறியினாலும், எல்லாமே மெய் என்று நம்ப முடிகிறது.

இதனால் புராணகாரர் தாம் எடுத்த போதனையில் வெற்றி காண்கிறார். பாவச் செயலில் அச்சமும் வெறுப்பும் நிகழ வேண்டும் என்ற உணர்வோடு அவர் புராணம் பாடுகையில், மக்கள் மனத்தில் அச்சமும் வெறுப்புமே உதிக்கின்றன. புண்ணியச் செயல்களால் மகிழ்ச்சியும் எழுச்சியும் விளைய வேண்டுமென்று அவர் திட்டமிட்டால், மக்கள் மனத்தில் அதே மகிழ்ச்சியும் அப்புண்ணியச் செயல் செய்வதில் ஊக்கமும் பிறக்கின்றன. எனவே, புராணக் கதைகள் மக்களை ஊக்குவிக்கின்ற சிறந்த நூல்கள் என்பதில் ஐயமில்லை.

புராணக் கதைகள் பொய்க்கதைகள் என்று இகழ்வதால் பயனில்லை. பெரியபுராணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம் முதலான புராணக் கல்வியும் புராணப் பிரசங்கமும் இல்லாத ஒரு சைவ சமயத்தையும் சைவக் கல்வியையும் நாம் எண்ணிப் பார்க்க முடியுமா? பாகவதக் கதைகள் இராமாயண பாரதக் கதைகள் இல்லாத ஒரு வைணவ சமயத்தில் என்ன வைணவம் மிச்சமிருக்கும்?

அருட் பாசுரங்கள் மக்களை ஆட்கொண்டன என்பது உண்மையே. சாஸ்திர உணர்ச்சி சிலருக்கு மட்டுமே அறிவுக்கு விருந்தாக அமைய முடியும்.

இன்றைக்குப் பத்திரிகையை எடுத்துப் பார்த்தால் புராணப் பிரசங்கம் பற்றிய நிகழ்ச்சிக் குறிப்புக்களே மிக்க அதிகம். இங்கு மக்கள் திரளாக வந்து கூடுகிறார்கள். இலக்கியச் சொற்பொழிவு, சாஸ்திரப் பிரவசனம் என்றால் பெருந்திரளாக மக்கள் கூடுவ தில்லை. எனவே, புராணங்களிடத்தில் இன்றுங்கூட மக்களுக்கு இருக்கும் ஈடுபாட்டை விளக்க இது ஒன்றே போதும்.

**தல புராணத்தால் விளைந்த பயன்**

தல புராணங்களால் ஏற்பட்ட பெரு நன்மையைச் சில சொற்களால் இங்கு கூறலாம். தமிழ்நாட்டில் ஊர் தோறும் ஒரு கோயில் உண்டு. ‘கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண் டாம்’ என்ற பழஞ் சொல்லுக்கேற்ப ஆதி காலத்தில் மக்கள் கோயில் என்ற தாங்கள் கருதிய இடத்தைச் சூழ்ந்து வாழ ஆரம்பித்தார்கள். வாழ்ந்த இடங்களில் புதியதாய்க் கோயிலை அமைத்துக் கொண்டார்கள். நாயன்மார் பாடிய தலங்களுக்குச் சென்றுவரத் தொடங்கினார்கள். இவற்றால் ஒரு கோயிலைச் சூழ்ந்து பல கதைகள் தோன்றலாயின. புலமை படைத்தவர்கள் அக்கதைகளையெல்லாம் தொகுத்துப் புராணமாகப் பாடி னார்கள். அக்காலத்தில் எதுவும் வடமொழியில் இருந்தால் தான் சிறப்பு என்ற எண்ணம் பரவியிருந்தது. அதுபற்றி ஆங் காங்கு இருந்த வடமொழிவாணர், சிறப்பாக சிவாசாரியரும், புரோகிதரும், தங்கள் ஆற்றலுக்கு ஏற்பக் கதைகளைப் புராண மாக வடமொழியில் பாடி வைத்துக் கொண்டார்கள்.

பிராமணரே புராணம் பாடினார்கள் என்பதில்லை. அக் காலத்தில் கல்வி கற்ற சைவர் அனைவருமே வடமொழி நன்கு கற்றிருந்தார்கள். இவர்களில் பலரும் வடமொழியில் புராணம் செய்திருந்தார்கள். ஒரு தலத்தில் இந்திரன் முதலான தேவர்கள் சிலர், பிரமன் முதலான மூர்த்திகள், சரசுவதி, இலக்குமி முத லான சக்திகள், அகத்தியர்; துர்வாசர் முதலான முனிவர்கள், சூரியன், சந்திரன் போன்ற கோள்கள் ஆகியோர் பலரோ சிலரோ வந்து தங்கள் தங்கள் பெயரால் இலிங்கம் அமைத்துத் தடா கம் அமைத்து வழிபட்டுப் பேறு பெற்றார்கள் என்ற பல

செய்திகள் வடமொழிப் புராணங்களில் புனைந்து சேர்க்கப் பட்டன. அன்றியும் தமிழ்ச் செய்திகள் பல வடமொழியில் சொல்ல முயன்றபோது, தமிழ்ப் பெயர்களை மிகவும் விசித்திர மாக* அமைத்துக் கொண்டார்கள்.

இவ்வாறு எழுந்த தலபுராணங்கள் மிகச் சிறந்த முறையில் மக்களுக்குப் பயன்பட்டிருக்கின்றன. முதல் தலபுராணம் 13ஆம் நூற்றாண்டில் தோன்றிற்று - பெரும்பற்றப்புலியூர் நம்பி திரு விளையாடல், மதுரை. பின்னால் 16ஆம் நூற்றாண்டில் தொடங் கித்தான் தல புராணங்கள் மிகவும் அதிக அளவில் தோன்றலா யின. இவ்வாறு இவை தோன்றுவதற்குச் சூழ்நிலையே காரணம். 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ்நாட்டில் முகம் மதியர் படையெடுப்பு ஏற்பட்டு ஆலயங்களுக்கும், ஆலய வழி பாட்டுக்கும் எழுத்தில் அடங்காத கேடு நேர்ந்தது. அதே நூற் றாண்டின் இறுதிப் பகுதியில் விசயநகரப் பேரரசு ஓங்கி விளங்கி வைதிக சமயத்துக்கு ஆக்கம் கொடுத்தது. ஆனால், அடுத்த நூற்றாண்டில் அதுவும் வீழ்ச்சியடைந்தது.

இந்த நிலைகளின் பயனாய் நாட்டில் அமைதி குலைந் தது. கொந்தளிப்பு மிகுந்தது. நிலையின்மை பெருகிற்று. 'நிலை யாமை சால நிலைபெற்றது.' கல்வி முதலான ஆக்கச் செயல் கள் தடைப்பட்டன. இந்த நிலையில் கல்வியாளர் பெரும் புலமை வாய்ந்தவர்களாய் இருந்தும், தங்கள் தகுதியறிந்து ஆதரிக்கத்தக்க வள்ளல்கள் இல்லாது வாடினார்கள். 'பொய்ம் மையாளரைப் பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள், இம்மையே தரும் சோறும் கூறையும் ஏத்தலாம் இடர் கெடலு மால்' என்ற சுந்தரருடைய வாக்கு அவர்களுக்கு ஊக்கமளித் திருக்கும். ஊர்தோறும் உள்ள இறைவன் திருவுருவத்தைப் பாட ஆரம்பித்தார்கள். பலர் தலபுராணம் பாடினார்கள். இவை ஆங்காங்கு இருந்த மக்களுக்கு உவப்பளித்தன என்பது நிச்சயம். அவர்களும் இவர்களுக்கு ஆதரவு அளித்தார்கள். இவர்கள் மூலமாக இறைவன் புலவர்களுக்குச் சோறும் கூறை யும் வழங்கினான் என்பது சொல்லத் தேவையில்லை. இந்தநிலை 16ஆம் நூற்றாண்டில் தொடங்கி 19ஆம் நூற்றாண்டு வரை நிலவி யிருக்கிறது.

---

* இந்த விசித்திரங்கள் சிலவற்றை எமது தமிழ் இலக்கிய வரலாறு 12ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

புலவர்கள் சிற்றூர்களை யெல்லாம் இந்திரலோகம் என்று பாடினார்கள். பட்டிதொட்டிகளையும் கொட்டில் குடிசை களையும், மாட மாளிகை கூடகோபுரம் என்று பாடினார்கள். தங்கள் கற்பனைத் திறனால் பூமியெல்லாம் பூலோக கயிலாயம் என்று பாடினார்கள். புண்ணிய மூர்த்தியாகிய இறைவனை, முன் குறிப்பிட்டபடி எல்லாத் தேவர்களும் வந்து வழிபாடு செய்து சிறப்படைந்தபோது, பூலோகத்து மக்களும் சிற்றூர் வாசிகளும் தங்கள் தங்கள் கோயில்களில் நம்பிக்கை வைத்துத் தாங்களும் வழிபட்டுப் பேறுபெறலாம் என்று உணர்வு பெற் றார்கள். போரினாலும் பட்டினியினாலும் நொந்து, அன்னியர் தாக்குதலால் மனம் மடிந்து கிடந்த மக்களுக்கு, இத்தல புரா ணங்கள் புத்துயிர் தந்தன என்பதை யாரும் மறுக்கமுடியாது.

மற்றும் தலபுராணங்கள் சிறிதளவேனும் நாட்டு வரலாறு, நகர வரலாறுகளை அறிய உதவுகின்றன. புராணங்களில் சொல் லப்பட்ட வரலாறுகள் முழுமையும் உண்மை என்று கொள்ளா விட்டாலும், அவை ஆங்காங்கு வழங்கிய உண்மை வரலாறு களைப் புனைந்து புராணமாகப் பாடியுள்ளமையால், உண்மை வரலாறும் சிறிது விளக்கமாகிறது. கோயிற் புராணத்தில் இர ணிய வர்மன் என்ற அரசன் அந்நகரைக் கண்டான் என்பது புராணம். சிம்மவர்மன் பெயரும் அங்கு காணப்படுகிறது. பெரியபுராணம் பாடும் திருஞான சம்பந்தர் வரலாற்றால் பாண்டியன் நெடுமாறன் சரிதையும், சிறுத்தொண்டர் வரலாற் றால் நரசிம்மவர்ம பல்லவன் வரலாறும் தெரிகின்றன. திரு விளையாடற் புராணத்தில் பரஞ்சோதி முனிவர் பாண்டியர் பரம்பரையை விரிவாகக் கூறுகிறார். மாணிக்கவாசகர் வரலா றும் அதனாலேயே நமக்கு விரிவாய்த் தெரிகின்றது. முன்னமே பெருநகரங்களாய் இருந்தவை காலகதியில் அந்த நிலை மாறிச் சிற்றூராய் ஆகிவிடுகின்றன. பெருநகரின் பகுதியான சிறு ஊர்கள் வளர்ந்து பெருகியிருக்கின்றன. பழையாறை, பல மைல் நீளம் அகலம் கொண்ட பெருநகராய்ச் சோழர் தலை நகராய் ஒரு காலத்தில் இருந்தது; பாண்டியனால் அழிக்கப் பட்டது. இன்று அதன் பகுதிகள் பட்டீச்சுரம் என்றும் சத்தி முற்றம் என்றும் இன்னும் பலவாகவும் தனிச்சிறு ஊர்களாக வும் உள்ளன; பழையாறை இல்லை. உறையூர் மற்றொரு சோழர் தலைநகராயிருந்தது; அது புகழோடிருந்த காலத்தில் சிராப்

பள்ளி நகர் இல்லை. ஆனால் காலக்கிரமத்தில் உறையூர் தன் பெருமையிலிருந்து குறைந்தது, சிராப்பள்ளி உயர்ந்தது. இன்று சிராப்பள்ளியே பெருநகராகவும் உறையூர் அதன் பகுதிகளுள் ஒன்றாகவும் உள்ளன.

பேரூர் என்பது ஒரு பெரிய நகரம் என்று அதன் பெயரள வாலே நாம் அறியலாம். அதன் பக்கத்தில் உள்ளது கோவன்புத் தூர். இது புதிய சிற்றூர் என்பதை புத்தூர் என்ற இதன்பெயரே காட்டும். ஆனால் இப்புத்தூர் சில நூற்றாண்டுகளில் கோயமுத் தூர் என்ற பெயரால் இன்று நாம் அறிகிற மிகப்பெரிய நகர மாக வளர்ந்திருக்கிறது; பேரூரோ அதன் பக்கத்தில் உள்ள சிற்றூராய் அதன் பகுதியாய் விளங்குகிறது.

இந்த நிலைமைகளை மனத்தில் நிறுத்த வேண்டும். புலவர் புராணம் பாடும்போது ஊர்களின் பழைய நிலைமையை மனத் தில் எண்ணி வளமாகப் பாடுகிறார். சிற்றூரைக் கூட அமராவதி என்று பாடவல்ல புலவருக்கு உறையூர் பேரூர் போன்ற பண் டைப் பெருநகரங்களைப் பெருநகரங்களாகவே பாடுவது பெரிய காரியம் அன்று. எனவே புராணங்கள் சில சமயம் இன் றைய சிற்றூர்களின் பண்டையப் பெருமையை ஓரளவுக்கு நமக்கு உணர்த்துகின்ற வரலாற்று நூல்கள் என்று கூடக் கருத முடியும்.

தலபுராணங்கள் கோயிலைப் பாடுகின்றமையால், கோயில் பற்றிய செய்திகளும் பெரிதும் விளக்கமாகின்றன. கோயிலின் அமைப்பு, அங்குள்ள மூர்த்தி வடிவங்கள், வழிபாட்டு முறைகள், விரதங்கள், ஆயிரம் பெயர்கள் முதலிய பலகலை அறிவிற்குத் தல புராணங்கள் வித்தாக இருக்கின்றது. பல புராணங்களில் வழிபட்டாருடைய தோத்திரங்களாகப் பல துதிப்பாடல்கள் அமைந்துள்ளன; இவை அத்தலத்தில் வாழ்வோருக்கு மிகவும் பயன்படுகின்றன.

புராணங்கள் செய்யுள் வடிவில் அமைந்திருப்பதனால் அவ் வவ்வூர் மக்கள் மிக்க பற்றோடு தங்களூர்ப் புராணத்தைப் படிக்கிறார்கள். துதிப்பாடல்களை மனப்பாடம் செய்து கோயி லில் பாடுகிறார்கள். இதன் பயனாக இலக்கிய அறிவு இல்லாத வர்களுக்குக் கூட நல்ல மொழியறிவும், இலக்கிய அறிவும், கவிச்சுவை தேரும் பக்குவமும் தாமே அமைகின்றன. இது,

வேறு கவிதைகளையும் சுவைத்துணரும் ஆற்றலை வளர்க்கின்றது. கற்றோர் அவையிலும் இவர்களுக்கு இடம் கிடைக்கின்றது. எப்படியோ இன்று பாமர மக்கள் என்று அடிக்கடி பேசுகின்றோம். அவர்களில் பெரும் பகுதியினர் நாம் நினைக்கிறபடி பாமர மக்கள் அல்லர்; சிறிதளவேனும் கவிச்சுவையும், கலைச் சுவையும் நுகரத் தெரிந்தவர்கள்.

தல புராணத்தால் இங்ஙனம் ஏற்படுகின்ற பெருமையுணர்வு எவ்வளவோ கலைகளை வளர்த்திருக்கிறது. நூலில் சொல்லிய படியும், பிற நூல்களில் சொல்லியபடியும், பிற பெருங்கோயில் களில் காண்கிறபடியும் சிறப்புக்கள் நம் கோயில்களிலும் இருக்க வேண்டும் என்று மக்கள் நினைத்தார்கள். வசதியுள்ள மக்கள் அந்த நினைவைச் செயலில் செய்து முடித்தார்கள். இசை நடனம் போன்ற கலைகள், பேரூர்களில் அல்ல, சிற்றூர்களிலேயே வளர்ந்தன. இதற்கு உதாரணம் தேவையில்லை. இவ்விரு கலை களிலும் பெரும் புகழடைந்தவர்களுடைய பெயர்களையும் ஊர் களையும் நினைவு கூர்ந்தால் இதன் உண்மை தெளிவாகும். சிற்றூர் தருகின்ற அமைதியே கலைகளை வளர்க்க உதவியிருக்கிறது. அதுபோலவே இலக்கியமும். எத்தனைச் சிற்றூர்களுக்கு உலா, தூது, கலம்பகம், கோவை, குறவஞ்சி, அந்தாதி பே..ன்று எழுந் துள்ளன! இம்முயற்சிகளால் நாடு முழுமையுமே கலைகளின் வளர்ச்சியும் இசையின் முழக்கமும் கவிதையின் தோய்வும் பெரு கின. தருமம் செய்து புண்ணியம் தேட வேண்டும் என்று நினைத் தவர்கள் சிறப்புடைய தலங்களை மட்டும் தேடிப் போகவில்லை; தங்கள் ஊர்களிலேயே செய்யவும் ஆரம்பித்தார்கள்.

நாயன்மார்கள் பல தலங்களையும் சென்று பதிகம் பாடி யமையாலும், ஆழ்வார்கள் மங்களா சாசனம் செய்தமையாலும், பக்திமான்கள் பல தலங்களுக்கு யாத்திரை செல்லத் தலைப் பட்டார்கள். இந்தத் தரிசன உணர்ச்சியைத் தலபுராணம் பின் னும் பெருக்கிற்று. 'ஆசேது ஹிமாசலம்' என்பது பழமொழி. வட வேங்கடம் தென்குமரியாயிடை எழுந்துள்ள தலங்கள் அனைத் திலும் சிறந்தன சிலவற்றையேனும் தரிசிக்க வேண்டும் என்று மக்கள் விரதம் பூண்டார்கள். இதன் பயனாகச் சாலைகள் செப்பமாயின. புதிதாக அமைந்தன. வழிகள் தோறும் தருமச் சாலைகளும், தண்ணீர்ப் பந்தர்களும், குளங்களும் பெருகின. நிழல் தரும் மரங்கள் பயிரர்யின. வாழ்க்கை வளமாயிற்று. அது

மட்டுமல்ல; செல்வமுடையவர் தாம் போய்த் தரிசிக்கும் வாய்ப்பு இல்லாது இருந்தபோதும் கூட, அவ்வாறு தரிசிப்போருக்கு உதவுவது பெரும் புண்ணியம் என்று நினைத்ததோடு, தரும சத் திரம் அமைத்து உணவு அளித்தார்கள், உடை அளித்தார்கள். உணவுக் கவலையில்லாமல் யாரும் எங்கும் யாத்திரை செய்ய லாம் என்ற நிலை நிலவிற்று. நம் நாட்டில் அப்பர் சுவாமிகளே 'ஆசில் அறச்சாலைகளும் தண்ணீர்ப் பந்தரும் அமைத்தார்' என்று பெரியபுராணம் சொல்கிறது. அப்பூதியடிகள் வரலாறும் இதைக் காட்டுகிறது. இதைவிடச் சிறந்த தர்மம் வேறு இல்லை.

இவ்வாறு செல்ல முடியாதவர்கள் வாழ்வில் வாழ்க்கை வறியதாகவில்லை. எல்லோரும் தில்லைக்கோ, ஆரூருக்கோ, அண்ணாமலைக்கோ செல்ல இயல்வதில்லை. அந்தந்த ஊரி லும் ஆங்காங்கு உறைகின்ற அப்பனும் அம்மையும் அங்குள் ளோருக்கு நடராசராகவும், உமாபாகராகவும் காட்சியளித்து முத்தி வழங்கினான் என்று தல புராணங்கள் பாடியிருக்கின்றன. ஆகவே வசதியற்ற மக்கள் தங்கள் கோயிலிலேயே நடராச மூர்த்தியையும், விசுவநாதரையும், அண்ணாமலையாரையும், பிற மூர்த்திகளையும் கண்டு திருப்தி அடைகிறார்கள். 'எங்கே னும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியாருக்கு இங்கே என்று அருள் புரியும் எம்பெருமான். எல்லா மூர்த்தியும் இந்த மூர்த்தியே என்ற உண்மையான விரிந்த சமரச உணர்வு மக்கள் அனை வருக்கும் ஏற்படுகிறது. வாழ்க்கையில் நாம் வேறிடம் சென்று தீர்த்தமாடவில்லையே என்ற ஏக்கம் இல்லாது போகிறது. வாழ்க் கையில் நிறைவு ஏற்படுகிறது, இன்பந் ததும்புகிறது.

மேலும், பிரசித்தமான தில்லை போன்ற தலங்களில் வழி படும் மூர்த்திகளைத் தங்கள் தங்கள் சிற்றூரிலேயே வழிபட லாம், முழுப் புண்ணியமும் அதனால் கிடைக்கும் என்ற எண்ணம் வரும்போது, அதனடியாக, கடவுள் ஒருவரே, அவர் எங்குமிருக் கிறார், சர்வவியாபகர்; எல்லாத் தெய்வ வடிவங்களும் அவரு டைய உருவ வெளிப்பாடே என்ற எண்ணமும் பக்தர் மனத்தில் எழுகிறது. சமயங்கள் போதிக்கிற அடிப்படையான பேருண்மை இதுதானே!

அன்றியும், தங்கள் ஊருக்கு ஒரு சிறு புராணமேனும் எழும் போது, ஊரார் மனத்தில் ஒரு பெருமையுணர்ச்சியும் தன்னம்

பிக்கையும் வருகிறது. நாம் யாருக்கும் தாழ்வில்லை என்ற எண்ணம் உதிக்கிறது. 'என்றும் நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம், இரு நிலத்தில் எமக்கு எதிராவாருமில்லை' என்ற நினைவு; இது நிலைத்த உணர்வாக நிற்கிறது. இதுவே சொந்த ஊர்ப்பற்றுக்கு வித்தாகிறது. என்னுடைய கோயில் என்னுடைய இறைவன் என்ற உணர்வினால் சுருங்கிய நாட்டுப்பற்று அரும்பிப் பின்னால் பிஞ்சாகிக் காயாகி முதிர்ந்து கனியாகி நான் தமிழன், நான் இந்தியன், யாதும் எனது ஊர், யாவரும் எனது கேளிர் என்ற பெரு நினைவை ஊட்டுகிறது. தன்னலம் எல்லாம் மறைந்து இறைவன் நலத்தில் மனம் நாடுகிறது. இறைவனுக்கு இவனால் நலம் ஒன்றும் இல்லை: இறைவன் உறைவது கோயிலில் மட்டுமல்ல; அடியார் உள்ளங்களிலும் உறைகிறான் என்று உணரத் தொடங்கி, அந்த அடியாரையும் இவன் பேண ஆரம்பிக்கிறான். இன்று தேசிய ஒருமைப்பாடு என்று சொல்லுகிறார்கள். இந்த தேசிய ஒருமைப்பாடு பண்டைக் காலத்தில் கோயிலால் இருந்தது. ஆழ்ந்து சிந்தித்தால் அதற்கு ஆணிவேர் தல புராணங்கள் தோற்றுவித்த சொந்தத் தலத்தின் மீதுள்ள பக்தி என்பது நன்கு விளங்கும்.

ஒரு சிற்றூரிலுள்ள மக்கள் அனைவரும் இவ்வாறு வாழ்ந்த காலத்தில் தாயுமானவர் கூறியபடி 'எல்லாம் உன் உடைமையே, எல்லாம் உன் அடிமையே' என்ற நினைவு ஆட்சி செய்த காலத்தில், உண்மையான ஒருமைப்பாடு இருந்தது என்பதில் ஐயமில்லை.

ஓர் இயல்பைக் கூறி முடிக்கலாம். புலவர்கள் தலபுராணம் பாடியபோது கண்ணால் கண்டதை அப்படியே பாடவில்லை. எது எப்படி இருக்க வேண்டும் என்று கற்பனையில் உயர்வாய்க் கருதினார்களோ அதைப் பாடினார்கள். சிறந்த சமூகக் குறிக்கோள்களை எல்லாம் அமைத்து, சிறந்த கவிதைச் சுவைபடப் பாடினார்கள். நாட்டுப்படலம் நகரப்படலம் என்பவற்றை இந்தக் கண்கொண்டு நாம் காண வேண்டும். அக்காலத்தில் தலபுராணம் படித்தவர்களும், கேட்டவர்களும் கதைகளை மட்டும் கேட்டுக் கொண்டு போவதில்லை. முதலில் காப்புச் செய்யுள் தொடங்கி இறுதியிலுள்ள வாழ்த்துச் செய்யுள் வரை அனைத்தையும் கேட்கிறார்கள். பலன் கூறும் பாடல்களையும் நன்கு கேட்கிறார்கள். புராணம் படித்தவர்கள், கேட்டவர்கள்,

பிரசங்கம் செய்தவர்கள், ஏடு வாசித்தவர்கள், இவர்களுக்கு உணவு அளித்தவர்கள் முதலியோர் சொர்க்கத்தில் வாழ்வார்கள் என்றெல்லாம் பல சுருதி சொல்லப்பட்டிருக்கும். ஒரு புராணத்தில் கோயில் திருப்பணிக்குக் கல் சுமந்துவந்த வண்டி மாடுகளும் மேல் நிலையை அடையும் என்று சொல்லியிருக்கக் காணலாம். மக்கள் இவை யாவும் உண்மை என்றே நம்பினார்கள் அந்த நம்பிக்கை குறித்து நாம் இப்போது கவலைப்பட வேண்டாம். அந்த நம்பிக்கைக்கு அடிப்படையாக, தாங்கள் நீதி நூல்களில் சொல்லப்பட்ட அற வாழ்க்கை வாழ்ந்து தங்களைத் தகுதியாக்கிக் கொள்ள வேண்டும் என்று மக்கள் நினைத்தார்கள். இதன் பயனாய்ச் சீலமான வாழ்க்கை வாழ்ந்து வந்தார்கள்.

தல புராணங்கள் தரும் ஒரே செய்தி கடையருக்கும் இங்கு கடைத்தேற்றம் என்பது. எவ்வளவுதான் ஒருவன் பாவம் செய்திருப்பினும், அவன் தான் செய்த பிழைக்கு அகங்குழைந்து, இந்தத் தலத்தில் இந்தப் பொய்கையில் நீராடி இந்த இறைவனை வழிபட்டால், இறையருளுக்குப் பாத்திரமாகி, பாவம் நீங்கப்பெற்று, தூய்மையடைந்து நற்கதி பெறுகிறான் என்றே எல்லாப் புராணங்களும் உறுதியாய்ச் சொல்லுகின்றன. பிற்காலத்தில் நாம செபம் என்பது ஒரு தனிப்பெரும் சடங்காக இந்திய நாடு முழுவதும் வளர்ந்திருக்கிறது. 13ஆம் நூற்றாண்டு தொடங்கி இருபதாம் நூற்றாண்டு வரை வளர்ந்துள்ள எல்லாத் தலபுராணங்களும் சாத்திரங்களும் நாம செபத்தின் மகிமையைப் பெருக்கியுரைக்கின்றன. நம்முடைய மரபில் மக்களுக்கும், பிராணிகளுக்கும், தாவரங்களுக்கும் வேறுபாடில்லை. மதுரையில் இறைவன் பன்றிக் குட்டிகளுக்கு முலை கொடுக்கிறான். கரிக்குருவி முதலியன முத்தி பெறுகின்றன. தில்லையில் உமாபதி சிவாசாரியார் முள்ளிச்செடிக்கு முத்தி கொடுத்தார்; திருவோத்தூரில் இருந்த ஆண்பனைகள் ஞானசம்பந்தரால் பெண்பனை யாக்கப்பட்ட புண்ணிய விசேடத்தால் அவை சிவமே கூடின என்று சேக்கிழார் பாடுகிறார். எனவே, இப்புராணக் கூற்றுக்கள் மனித குலத்திற்கும், உய்தி உண்டு என்று உணர்த்தத் தடையில்லை. துன்பமே மிகுந்த உலகில், வறுமையும் பிணியும் இறப்பும் பிறப்பும் சூழ்ந்துள்ள வாழ்க்கையில் ஊர்தோறும் இறைவன் இருக்கிறான், நிச்சயம் அவன் நம்மைக் கடைத்தேறச் செய்கிறான், இந்தப் பிறப்பில் இல்லா விட்டாலும் அடுத்த பிறப்பில் நம்மை ஆட்

கொள்கிறான் என்ற இந்த நம்பிக்கையினால், மக்கள் துன்பத்தில் ஆழ்ந்து விடவில்லை: ஊக்கத்தோடு எதிர்காலத்தில் நன்மை விளையும் என்று நம்பமுடிகிறது. அன்றியும் சிவபெருமான் இறையனார் என்ற புலவர் வடிவில் சங்கத்தில் அமர்ந்திருந்தான், சுந்தர பாண்டியனாக உருவம் தாங்கி வந்து தமிழ்நாட்டில் மதுரை மாநகரில் ஆட்சி புரிந்தான் என்ற கதைகளும் சேர்ந்து, தமிழுக்கும் இறைவனுக்கும் ஒரு நெருங்கிய தொடர்பை உண்டு பண்ணின. திருவெஃகா என்ற தலத்தில் நகரை விட்டு நீங்கிய புலவன் பின்னே பச்சைப் பசுங்கொண்டலான திருமால் தம் பைந்நாகப் பாய்ச் சுருட்டிக் கொண்டு பைந்தமிழ்ப் பின்னே செல்லுகிறார். திருப்பரங்குன்றில் முருகன் திருமுருகாற்றுப் படைக்கு மகிழ்ந்து புலவரை விடுவிக்கிறான். இவ்வாறெல்லாம் தல வரலாற்றுச் செய்திகள் இறைவன் தமிழுக்கும் பக்திக்கும் எளிவந்த நிலைகளை உணர்த்தி, மக்களுக்கும் இறையருளில் நம்பிக்கையை ஊட்டியிருக்கின்றன.

தல புராணங்கள் கோயில் விழாக்களையும் விரிவாகச் சொல்லுகின்றன. பத்து நாள் விழா நடக்கிறது; அதிகமாகவும் நடக்கலாம், குறைவாகவும் நடக்கலாம். விழாவில் முக்கிய அம்சம், இறைவனுடைய திருவுருவம் வீதிகளில் உலா வருதல். இதன் சிறப்பான நோக்கம், நையாத மனத்தினரையும் நைவித்தல். 'இறைவனை நீ தேடிச் சென்று வழிபடா விட்டாலும், அவன் உன்னைத் தேடி வந்து உன்னைப் பக்குவப்படுத்தி ஆட்கொள்ளுகிறான்' என்று புராணங்கள் எடுத்துக்காட்டுகின்றன. இதனினும் சாந்தியளிக்கத் தக்க செய்தி யாது?

மக்களாய்ப் பிறந்த அனைவருக்கும் வீர வழிபாட்டு உணர்வு உண்டு. இளம் பருவத்தில் தாயும் தந்தையும் பள்ளி ஆசிரியரும் இவர் போன்றோரும் வழிபாட்டுக்குரியவராய் இருக்கிறார்கள். வயதில் முதிர்ச்சி பெறப் பெற, ஒரு வகையில் தெய்வங்களும், புராண கதைகளும் இந்த வழிபாட்டுணர்வுக்கு இடங்கொடுத்து வந்தன. கால மாறுதலாலும் நாகரிக வேகத்தாலும் பலவகைப் புரட்சிகளாலும் மக்களுடைய வழிபாட்டுணர்வுக்குப் புராணங்கள் இடங்கொடுக்க முடியவில்லை. ஒரு காலத்தில் 'வெள்ளைக்காரன்' என்றால் அவ்வழிபாட்டுணர்வுக்கு இடமாயிருந்தது. சுதந்திரவுணர்வு மிக்கு ஓங்கியபோது, அதுவே வெள்ளைக்காரனிடம் எதிர்ப்புணர்வாகி, சுதந்திரப்போர் நடத்திய தலை

வர்களிடம் வீரவழிபாடு சென்றது. சங்கீதம் வல்லவர்கள் ஒரு காலத்தில் இவ்வழிபாட்டைப் பெற்றார்கள். பின் நாடகம் நடிப்பவர்கள் இது மாறி, கீழ்த்தரக் கூத்துக்காரரிடம் இவ்வழி பாட்டுணர்வு செல்கிறது. எப்படியோ மனிதனுக்கு இது ஒன்று வேண்டியிருக்கிறது. புராணங்களை இவன் பற்றி, அவை இவ் வுணர்வுகளுக்குப் பற்றுக்கோடாயிருந்தவரையில் அவனுடைய வாழ்க்கையில் தெய்வப் பெயரால் கொஞ்சமேனும் நல்லொ ழுக்கம் இடம் பெற்றிருந்தது. வழிபாட்டேணி வழுக்கிவிட்டு, மனிதனை இன்று எங்கோ வீழ்த்தியிருப்பதால், அவனுடைய ஒழுக்கமும் வீழ்ச்சியுற்றிருப்பதைக் காண்கிறோம். அறமும் மனிதப் பண்பும் ஜனநாயகத்தின் முன் பலியிடப்பட்டிருப் பதைக் காண்கிறோம்.

இதுவே புராணங்களின் நிலை. இவை பிற்காலத் தமிழ் இலக்கியத்தில் பெரும்பகுதியாய் அமைந்துள்ளன. இவையும் இந்த நூற்றாண்டிலிருந்தே பெருவளர்ச்சி பெற்றுள்ளன. தமிழ் வளர்ச்சியில் எத்தனையோ நிலைகள் அவற்றுள் புராணம் என் பது மிக்க சிறப்புடையது; இக்காலப் பகுதியில் ஐம்பதாயிரத் துக்கு மேற்பட்ட பாடல்கள் இத்துறையில் எழுந்தனவென்றால், இதன் சிறப்புக்கு வேறு சொல்வது மிகை.

OOO

*அத்தியாயம் - 1*

# சைவ புராணம் – 1

# தென்காசிப் பாண்டியர்

## *முன்னுரை*

*மூன்றாம் இராசேந்திர சோழன் கி.பி. 1279இல் சந்ததி இல்லாது இறந்து போனபோது, சோழநாட்டில் சோழராட்சி முடிவடைந்தது. அவன் காலத்தில் வாழ்ந்த சிறப்பான பாண்டி மன்னன் முதலாம் சடையவர்மன் சுந்தர பாண்டியன் என்பான் (1251-1271). இவன் மூன்றாம் இராசேந்திரனை வென்று தனக்குக் கீழ்ப்படுத்தியதோடு, சோழருக்கு ஆதரவாயிருந்த கண்ணனூர்ப் போசளரையும் வென்றான். அடுத்த சிறப்புடைய பாண்டி மன்னன் முதல் மாறவர்மன் குலசேகர பாண்டியன் (1268-1310). இவனுடைய படைத்தலைவன் ஆரிய சக்கரவர்த்தி என்பவன் இலங்கை மன்னனை வென்று அங்கிருந்த புத்தர் பல்லைக் கைப்பற்றி வந்தான் என்றும், இலங்கை மன்னனாகிய பராக் கிரம பாகு, பாண்டியனைப் பகைத்துப் பயனில்லை என்று கண்டு, அவனுக்குப் பணிந்து நட்புப் பூண்டு, பின் அப்பல்லைத் தன் நாட்டுக்குப் பெற்றுச் சென்றான் என்றும் வரலாறு கூறும். இக் குலசேகரன் பிள்ளைகள் இருவர்: பட்டத்தரசியின் புதல்வ னான சுந்தரபாண்டியனும், காதற் கிழத்தியின் புதல்வனான வீரபாண்டியனும். இருவருள் இளையவனான வீரபாண்டியனே நாடாளும் தகுதியுடையவனெனக் கருதி, 1296இல் குலசேகர பாண்டியன் இவனுக்கு இளவரசு பட்டம் கட்டினான். இதனால் கோபமடைந்த சுந்தரபாண்டியன் சமயம் பார்த்திருந்து, 1310இல் தந்தையைக் கொன்று, தான் முடிசூடினான். சூடியும் அரசு நிலைக்கவில்லை. அடுத்த போரில் இவன் வீரபாண்டியனிடம் தோற்றோடி, டில்லியில் அரசு புரிந்த அலாவுதீன் கில்ஜியின் படைத் தலைவனாய்த் தென்னாடு வந்திருந்த மாலிக்காபூரின்*

துணையை நாட, அவன் படையோடு வந்து வீரபாண்டியனை அழித்ததோடல்லாமல், தன்னை அழைத்து வந்த சுந்தர பாண்டியனையும் அழித்தான். பாண்டி நாட்டைச் சூறையாடி, மதுரையை அழித்தான்; இரு பாண்டியரின் செல்வங்களையுமே டில்லிக்குக் கொண்டு சென்று விட்டான். (டில்லிக்குக் கொண்டு சென்ற செல்வம் 612 யானை, 20 ஆயிரம் குதிரை, 96 ஆயிரம் மணங்கு பொன் முத்துக்கள் அணிகலன்கள்.) சுமார் கி.பி. 1330 முதல் 1378 வரை மதுரையில் முகம்மதியர் ஆட்சி; கோயில்கள் இடிபட்டுக் கொள்ளையிடப்பட்டன; வழிபாடெல்லாம் நின்று போயிற்று; வைதிக சமயமே அனேகமாய் அழிந்தது போலத்தான். பின்னர் விசயநகர வேந்தர் தலைவன் குமார கம்பண்ணன் 1363 இல் தென்னாடு நோக்கிப் படையெடுத்து வந்து முகம்மதியரின் ஆட்சியை 1378இல் முடித்தான்; மதுரையைப் புனர்நிர்மாணம் செய்தான். இங்ஙனமாக முகம்மதியர் படையெடுப்பு ஏற்பட்டு மதுரையை அவர்கள் அழித்தபோது பாண்டியரும் அழிந்தனர்; தமிழ்நாடெங்கும் தமிழராட்சியும் அழிந்தது; ஓடி ஒளிந்த பாண்டியர் தென்காசியில் இருந்து சிலகாலம் வாழ்ந்த போதிலும், தமிழராட்சி அழிந்து போனது உண்மையே.

மதுரை விட்டு ஓடிய பாண்டியர் தங்கிய இடங்கள் கொற்கை கருவை தென்காசி முதலிய பல இடங்கள். ஒவ்வொரு காலத்தில் ஒவ்வோரிடத்தில் பாண்டிய மன்னர் மரபில் வந்த வீரர் ஒருவர் ஆட்சி புரிந்து வந்தார். மன்னர் மரபாதலால் ஒவ்வொருவரும் தம்மைப் பாண்டியர் எனக் கூறிக் கொண்டனர். 15ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சிறப்பான சிவ பக்தனாயும், தமிழைப் பெரிதும் ஆதரித்தவனாயும் வாழ்ந்த அரிகேசரி பராக்கிரம பாண்டியன் வரலாறு, சரித்திரம் அறிந்த ஒன்று. அவன் காலம் கி.பி. 1411 முதல் 1463 வரை. தென்காசி விசுவநாதர் கோயிலும் அதிலுள்ள அரிய சிற்பங்களும் அவனால் அமைக்கப் பெற்றவை.*

இப்பராக்கிரமனுக்குப் பின் தமிழ் இலக்கியத் துறையில் புகழ் வாய்ந்திருந்த பாண்டியர் மூவர். இம் மூவருமே அப் பராக்கிரம பாண்டியன் வழியில் வந்தோர். சடையவர்மன் பராக்கிரம குலசேகரன் என்பவன் 1588 வரை அரசு புரிந்தான். அவன் தம்பி நெல்வேலி மாறன் (திருநெல்வேலிப் பெருமாள்) என்பவன் 1552-64இல் தென்காசியில் ஆட்சி புரிந்து ஒரு வீர

* இப்பராக்கிரமனுடைய சிறப்பை எமது தமிழ் இலக்கிய வரலாறு 15ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

வெண்பா மாலையும் தன் மீது புனையப் பெற்றான். அடுத்துத் தென்காசியில் பட்டமேறியவன் இவன் மகனாகிய அதிவீர ராம பாண்டியன். கி.பி. 1564 முதல் 1604 வரையில்; இவ்வரலாறுகளை ஆராய்வதற்கு மூன்று ஆதாரங்கள்: 1. பாண்டியர் பற்றிய கல்வெட்டு வரலாறுகள்.* 2. சம்பிரதாயமான கதைகள்.❖ 3. அவ்வவ்வாசிரியர் பாடிய நூல்களிற் கண்ட **குறிப்புக்கள்,** ஏனைய இலக்கியக் குறிப்புக்கள்.✞ பராக்கிரம குலசேகரனுடைய புதல்வர் மூவர்: வரகுணராமன், வரதுங்கராமன், அதிவீர ராமன். யாது காரணம் பற்றியோ வரகுணராமன் பட்டமேற்கவில்லை; வரதுங்கனே பட்டமேறினான். அதிவீர ராமன் சிற்றப்பனுக்குச் சுவீகாரம் சென்றான். இம்மூவருமே தமிழில் அக்காலத்தில் நூல் செய்தார்கள். இவர்களுடைய வமிசாவளியையும் இவர்கள் செய்த நூல்களையும் பின்வரும் இரு அட்டவணைகளால் காட்டலாம்.

## புராணம் பாடிய தென்காசிப் பாண்டியர்

அபிராம பராக்கிரம பாண்டியன்
(வரலாறு விளக்கமில்லை)

சடையவர்மன் பராக்கிரம பாண்டியன் 1543 - 88 தலைநகர் - கருவை

திருநெல்வேலிப் பெருமாள் என்னும் நெல்வேலி மாறன் 1552-64 தலைநகர் - தென்காசி

(சுவீகாரம்)

வரகுணராமன் முடிசூடவில்லை 1560-1600, இடம்: முதலில் கருவையும் பின் தென்காசியும். நூல்கள்: வாயு சங்கிதை, இலிங்க புராணம் முதலியன.

குரு: அகோர சிவம், சுவாமி தேவர், இவனைக் குலசேகர பாண்டியன் என்பதும் உண்டு.

வரதுங்கராமன் 1588-1613 (?) தலைநகர்: கருவை. நூல்கள்: பிரமோத்தர காண்டம், கருவையந்தாதிகள், கொக்கோகம்,

குரு: வேம்பற்றூர் ஈசான முனிவர்.

சீவலமாறன் என்னும் அதிவீர ராமன் 1564-1610. தலைநகர்:தென்காசி. நூல்கள்: நைடதம், காசிகண்டம், கூர்ம புராணம், வெற்றிவேற்கை.

குரு: சுவாமிதேவர்.

---

* சதாசிவ பண்டாரத்தார் எழுதிய பாண்டியர் வரலாறு 1966 163 - 167 பக்கங்கள் பார்க்க.

❖ திருக்கருவைத் தலபுராணம் 1919. அனுபந்தம் பக்கம் 283 - 307.

✞ காசிக் கலியன் கவிராயர் பாடிய நாண்மங்கலம் முதலியன தமிழ் நாவலர் சரிதை தரும் தனிப்பாடல்கள்.

பாண்டியரும் அவர்கள் செய்த நூல்களும்

| எண் | நூல் | ஆசிரியர் வழக்கு | ஆசிரியர்–நூல் கூறுவது | ஆட்சிக் காலம் | குரு | நூலின் அத்தியாயம் | பாடல் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | இலிங்கபுராணம் | வரகுணராமன் | பாண்டியன் குலசேகரன் | சுமார் 1560-1600 | அகோர சிவம் | 154 | 2506 |
| 2. | வாயு சங்கிதை* | வரகுணராமன் | பாண்டியன் குலசேகரன் வரகுணராமன் | - | சுவாமி தேவர் | 61 | 1334 |
| 3. | அம்பிகைமாலை | வரகுணராமன் | குலசேகரன் | - | - | - | 32 |
| 4. | பிரமோத்தர காண்டம்* | வரதுங்கராமன் | வரதுங்கராமன் | 1588-1610 | ஈசான முனிவர் | 22 | 1323 |
| 5. | திருக்கருவை அந்தாதிகள் மூன்று | வரதுங்கராமன் | - | - | - | - | 103 |
| 6. | கொக்கோகம் | வரதுங்கராமன் | - | - | - | 7 | 231 |
| 7. | நைடதம் | அதிவீர ராமன் | அதிவீர ராமன் | 1564-1604 | சுவாமி தேவர் | 20 | 1172 |
| 8. | வெற்றி வேற்கை | அதிவீர ராமன் | வீரராமன் குலசேகரன் | - | - | - | 75 நூற்பா 137 அடி |
| 9. | கூர்ம புராணம்* | அதிவீர ராமன் | அதிவீரபூபதி | - | சுவாமி தேவர் | 97 | 3717 |
| 10. | காசி கண்டம்* | அதிவீர ராமன் | அதிவீர ராமன் | - | சுவாமி தேவர் | 100 | 2525 |

* புராணங்கள்

இங்கு காட்டிய பராக்கிரமன், அவன் பேரப்பிள்ளை களான வரகுணன், வரதுங்கன், அதிவீரன் ஆகிய நால்வரும் 'ராமன்' என்கிற முடிபையுடைய பெயர்களைப் புனைந்திருப்பது குறிப்பிடத்தக்கது - அபிராமன், வரகுணராமன், வரதுங்கராமன், அதிவீரராமன் என. இது ஒரு பட்டப் பெயராக அனைவரும் புனைந்தார்கள் போலும். வரதுங்கருக்கு, அபிராமர், அபிராம சுந்தரேசுவரர் என்ற பெயர்களும் உண்டு. 20ஆம் நூற்றாண்டில் ராமன் என்ற பெயருடையவர்கள், தமிழாயிருக்க வேண்டும் என்று எண்ணி இப்பெயரை அழகு என்று மாற்றி வைத்துக் கொள்ளக் காண்கிறோம். நிறத்தால் கருமையுடையவர்களான இப்பாண்டியர்களுக்கு, அழகுடையவன் என்று பொருள்படும் படியாக ராமன் என்ற சொல் ஒரு விகுதியாகச் சேர்க்கப்பட்ட தென்று கருத இடந்தருகிறது. குலசேகரன் என்பது பொது வாக எல்லோருக்கும் வழங்கும் பெயர். இனி இவர்கள் வரலாறு களையும் செய்த நூல்களையும் தனித்தனியே ஆராய்வோம்.

ஆசிரியர் மூவர் செய்த நூல்களில் குறிப்பிடப்படும் குருமார் மூவர். வரகுணராமனும் அதிவீர ராமனும் சுவாமி தேவரைக் குருவாகக் கொண்டிருக்கிறார்கள். ஆனால், வரகுணராமன் முதலில் அகோர தேவரைக் குருவாய்க்கொண்டு, பின்னரே சுவாமி தேவரைக் குருவாகக் கொண்டானென்று கருத இட முண்டு. ஆனால் வரதுங்கராமன் நிம்பை ஈசான முனிவரைக் குருவாகக் குறிப்பிடுகிறான். பின்னே கூறும் வரகுணராமன் வரதுங்கராமன் வரலாறுகளையும் நன்கு ஆய்ந்து, இம்மூவர் தொடர்பையும் பின்வருமாறு அமைதி செய்து காட்டலாம்.

சடையவர்மன் பராக்கிரமன் கருவையிலிருந்து அரசாண் டான் (1543-88). அப்போது அவன் தம்பி திருநெல்வேலிப் பெருமாள் என்னும் நெல்வேலி மாறன் தென்காசியில் வாழ்ந்து வந்தான். பராக்கிரமன் கருவை தென்காசியிரண்டையும் கருவை யிலிருந்தே ஆண்டான். தன் காலத்திலேயே தம்பி நெல்வேலிப் பெருமாள் தென்காசியைத் தனி ஆட்சி புரியும்படி (1552-64) விட்டுக்கொடுத்தான் போலும். நெல்வேலிப் பெருமாளுக்குப் பிள்ளையில்லை என்று தெரிகிறது. தமையன் பிள்ளையைச் சுவீகாரம் செய்துகொண்டான் என்று ஐதிக வரலாறு கூறுகிறது. சுவீகாரம் கொடுத்த தமையன், தன் மூன்றாம் பிள்ளையான அதிவீர ராமனைக் கொடுத்தான். நெல்வேலிப் பெருமாள் சில ஆண்டுகளில் காலமானான் (1564). காலமானபின் சீவலமாறன் அதிவீர ராம பாண்டியனென்ற பெயரோடு தென்காசியில்

பெருஞ் சிறப்புடன் ஆட்சி புரிந்தான் (1564-1610). இவன் ஆட்சி யினிடையேதான், சொந்தத் தகப்பனாகிய சடையவர்மன் பராக்கிரமன் நீண்ட காலம் ஆட்சி புரிந்த பின் 1588இல் கால மானான். அப்போது அவனுடைய மூத்த புதல்வன் வரகுணராமன் பட்டமேற்க விரும்பாமல், அடுத்தவனான வரதுங்கராமன்பட்ட மேற்றுக் கருவையில் அரசு புரிந்தான் போலும். இந்த நிலையில், இதுகாறும் கருவையில் வாழ்ந்த வரகுணராமன், தந்தை இறக்கவே, அந்நகரை நீங்கி, இளைய தம்பியாகிய அதிவீர ராமன் ஆண்ட தென்காசிக்குச் சென்றுவிட்டான். இங்கு சுவாமி தேவர் என்ப வர் இருவருக்கும் குருவாய் அமைந்தார்.

வரதுங்கராமன், ஈசான முனிவர் சீடனாகிக் கருவையி லிருந்து பிரமோத்தர காண்டம், அந்தாதிகள் முதலியன பாடி னான். அவனுடைய தமையனான வரகுணராமன் கருவையி லிருந்தபோது அகோர தேவர் சீடனாய் இலிங்க புராணமும், பின் தென்காசி வந்தபிறகு சுவாமி தேவரின் சீடனாய் வாயு சங்கிதை யும் பாடினான். அதிவீர ராமன் தென்காசியிலிருந்தே தன் நூல் களெல்லாம் பாடினான். இத்தகைய ஓர் அமைதியானது, சரித்திர நிகழ்ச்சிகளையும், ஐதிகக் கதைகளையும், இலக்கியக் குறிப்புக் களையும் வரலாறுகளையும், புராணக் குறிப்புக்களையும் தழுவி அமைத்ததாகும்.

இனி, ஒரு வரகுணராமன் 1613இல் பட்டமேறி ஆட்சி புரிந்தானென்றும் அவனுடைய பாரம்பரியம் விளங்கவில்லை என்றும் பாண்டியர் வரலாறு* கூறுகிறது. இவன் முன் குறிப் பிட்ட புராணங்களின் ஆசிரியரான வரகுணராமனினும் வேறா னவன் என்றே கொள்ளவேண்டும்.

இதுகாறும் இப்பாண்டியர் வரலாறும், இவர்கள் நூலா ராய்ச்சியும் எழுதிய அறிஞர் அனைவருமே இத்தகையதோர் அமைதியைக் கொள்ளவில்லை; ஆகவே வரலாறுகள் தெளி வடையவில்லை. சாசனத்தை மட்டும் துணைகொண்டு வழக்குக் களைப் புறக்கணித்தவர் சிலர். சாசனம் அறியாது வழக்குக்களை மட்டும் எழுதினோர் பலர். எல்லா நூல்களையும் அதிவீர ராமன் மேல் ஏற்றி, பிரமோத்தர காண்டம் ஒன்றுமே வரதுங்கன் பாடி யது என்றும் சிலர் எழுதியுள்ளனர். ஆனால் வாயுசங்கிதை மிக வும் தெளிவாக வரகுணராமன் என்று கூறுகிறது. இப்பெயரை

* சதாசிவ பண்டாரத்தார், பாண்டியர் வரலாறு 1966, பக்கம் 166.

யாரும் குறிப்பிடவில்லை. மேலும் குலசேகர பாண்டியன் செய்த அம்பிகைமாலையையும் இதுவரை யாரும் கருதவில்லை. இங்கு யாம் நூல்களிற் காணும் குறிப்புக்களையும் ஐதிகக் கதைகளையும் கல்வெட்டுக் குறிப்புக்களையும் தொகுத்து ஒருமைப்படுத்தி மேற்குறித்தவாறு வரலாற்றை விளக்கியிருக்கிறோம். பாண்டியர் மூவரென்று யாரும் தொகுத்துக் காணவில்லை; இருவர் என்றே கொண்டுள்ளனர். முன் காட்டிய நூல்களின் அட்டவணையைப் பார்த்தால் மூவர் வரலாறு நன்கு விளங்கும். வரதுங்கராமனுடைய மனைவியும் சிறந்த புலமையுடையவர் என்று வரலாற்றுக் கதைகளாலும் அவர் பாடிய மூன்று தனிப் பாடல்களாலும் அறிகிறோம். அவர் பெயர் சிவகாமசுந்தரி என்பது வழக்கு.

பொதுவான ஒரு கருத்தைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது. இப்பாண்டியர் மூவர் பாடிய புராணங்கள் இலிங்க புராணம், வாயுசங்கிதை, பிரமோத்தர காண்டம், கூர்ம புராணம், காசிகண்டம் என்ற ஐந்து. இவையனைத்திலும் கூறப்பட்ட பொருள்கள் தலப்பெருமையல்ல; சிவபராக்கிரமக் கதைகளும், பக்தர் பெருமையும் சொல்லப்படுகின்றன. இவற்றுக்கும் மேலாக, பெரும் சைவசாத்திரப் பொருளும், சரியை கிரியைப் பொருளும், சிவ சின்னங்களும் மிகவும் விரிவாகப் பேசப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, சிவசின்னங்களான திருநீறு, உருத்திராக்கம், திருவைந்தெழுத்து, என்பவற்றின் பெருமைகள்; தீக்கைகள், சிவலிங்க அமைப்பு, சிவபூசை, தான விசேடங்கள், பிரதிட்டை, விரதங்கள், பிரணவம், நித்திய விதிகள் ஆகிய பொருள்கள் சொல்லியிருக்கக் காண்கிறோம். புராணங்களில் இரண்டு (கூர்மம், இலிங்கம்) முழு வடமொழி மகாபுராணங்கள். மற்ற மூன்றும் புராணங்களின் பகுதிகளான சங்கிதைகள். இவற்றைக் கூர்ந்து நோக்கும்போது ஒரு கருத்து எழுகிறது. பெயர் குறிப்பிட்ட மூன்று குருமாரும் சிவாசாரியர்; ஒரு கால் இவர்களுள் அகோர சிவம் மூல ஆசாரியரும், ஈசான முனிவரும், சுவாமி தேவரும் அவருடைய பிள்ளைகளாயும் இருத்தல்கூடும்; இந்த அகோர சிவம் வேறு; இவர் கி.பி. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். சைவ பத்ததிகளும் அஷ்டப் பிரகரண வியாக்கியானங்களும் செய்த அகோர சிவம் வேறு. இம்மூவரும் இப்பாண்டியர் மூவருக்கும் சைவ சாத்திரப் பொருள் கூறும் வடமொழிப் புராணங்களை வடமொழியில் நன்கு பயிற்றுவித்து, சகோதரர்களாயிருந்து தமிழ்ப் புலமையும் சிவபக்தியும் நிரம்பப் பெற்றிருந்த இப் பாண்டியரை, தமிழில் பாடும்படி தூண்டியிருப்பார்களென்றும்,

அது காரணமாகவே இவர்கள் புராணங்களையே பாடினார்கள் என்றும் கருதத் தோன்றுகிறது. மூவரும் வடமொழி வல்லுநர் என்று சொல்லல் மிகை.

பிரமோத்தர காண்டம் தவிர ஏனைய நான்கும் பூர்வ காண்டம் உத்தரகாண்டம் என இரு பாகங்களாக உள்ளன என்பதும் குறிப்பிடத்தக்கது. எல்லாவற்றிலுமே பாயிரப் பகுதியில் சிவசக்தி வணக்கங்கள், கணபதி, முருகன், சம்பந்தராதி நால்வர், குரு வணக்கம், அடியார் வணக்கம், சிறப்புப் பாயிரம் என்ற பகுதிகளே காணப்படுகின்றன; பிற்காலப் புராணங்களில் காணப்படும் பிற வணக்கப் பகுதிகள் காணப்படுவதில்லை. பாயிரத்தையடுத்து, பதிகம் அல்லது அனுக்கிரமணியும் எல்லாவற்றிலுமே உள்ளது. அனுக்கிரமணி என்பது பொருள் அட்டவணை.

மற்றுமொரு கருத்து. இங்கு கூறப்பட்ட ஐந்து புராணங்களிலும் சைவ சமய ஒழுக்கங்கள் மிகவும் விரிவாய்க் கூறப்பட்டுள்ளன. மெய்கண்டார் முதலான சந்தான ஆசாரியார்களும் அவர்களுக்குப் பின் வந்த சைவ ஆசாரியர்களும் 13ஆம் நூற்றாண்டிலும் அதை அடுத்த வந்த காலப் பகுதியிலும், சைவ சித்தாந்தத்தின் ஞானபாதத்தை விரித்துரைத்திருக்கிறார்கள். தத்துவப் பிரகாசர் (14ஆம் நூற்றாண்டு) கிரியைப் பகுதியை அதிகம் விரித்துரைத்திருக்கிறார். இங்கு நாம் கருதும் பாண்டியர் மூவரும், தங்களுடைய ஐந்து புராணங்களிலும் சரியைப் பகுதியை மிக விரித்துச் சொல்லியிருக்கிறார்கள். அடுத்துக் கிரியையும் யோகமும் ஓரளவு சொல்லியிருக்கிறார்கள். ஞான பாதம் கூறியது குறைவு. இதை ஊன்றி நோக்கும்போது, சைவ ஒழுக்கம் குன்றாமல் காக்கும்பொருட்டு இவர்கள் ஒருகால் தங்கள் குருமாரால் தூண்டப்பட்டு இவ்வாறு சைவ ஒழுக்கமாகிய சரியையையே புராணங்களில் மிகவும் விரித்துச் சொன்னார்களென்று கருதத் தோன்றுகிறது. இப்பாண்டிய மரபினரன்றி, இந்நூற்றாண்டிற் புராணம் செய்த பிறர் அனைவரும் - கமலை ஞானப் பிரகாசர் வழியினர், எல்லப்ப நாவலர், புராணத் திருமலை நாதர் முதலியோர் - தலபுராணங்களே பாடினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

மண்டல சதகங்கள், நாட்டுச் செய்திகள் புலவர் அரசர் வரலாறுகள் என்பவற்றைக் குறிப்பிட்டுப் பாடும். இவ்வாறு பாடும் சதகங்கள் தொண்டை மண்டல சதகம் (17 நூ.), கொங்கு மண்டல சதகம், சோழ மண்டல சதகம் (18 நூ.), பாண்டி மண்டல சதகம் என்பன. இவற்றுள் சொல்லப்பட்ட செய்திகள் முழுமையும்

*வரலாற்றுணர்வின்றிக் கட்டுக் கதைகளாகவும் புனைந்துரை களாகவுமே உள்ளன. முதன் மூன்றும் இப்பாண்டியர் வரலாற்றைச் சுட்டவில்லை; அவை பாண்டிய மண்டலத்துக்கு வெளியே உள்ளனவாதலால் இது இயல்பே. பாண்டி மண்டல சதகம் மட்டும் ஒரு பாடலால் (66) அதிவீரராமனையும் வரதுங்கராமனையும் குறிப்பிடுகிறது. பாடலைப் பின்னே தரு கிறோம். ஆனால், இச்சதகம் ஆதார நூலன்று, மிகவும் புனைந்துரை யான சமீப காலத்து நூல் என்பது நினைவிலிருக்க வேண்டும்.*

நரதுங்கன் கொண்டாடு முச்சங்கம் கூறுநற் காசிகண்ட
மரதுங்க மேசொல் இலிங்க புராணமந் நைடதம்செய்
கரதுங்க சீலன் அதிவீர ராமனும் காசினியில்
வரதுங்க ராமனும் வாழ்வது பாண்டியன் மண்டலமே.

*பிற்காலப் புராணங்கள் யாவும் புராணம் என்றே பெயர் சூட்டப் பெற்றிருக்கின்றன. ஆனால் இப்பாண்டியர் பாடிய புராணங்கள் அப்படியல்ல. பாடிய ஐந்தில், இரண்டு புராணங் கள், ஒன்று சங்கிதை; ஒன்று கண்டம்; ஒன்று காண்டம். (புராணம் - பழங்கதை. சங்கிதை - பொருள் தொகுதி. கண்டம் - துண்டு, பகுதி. காண்டம் - நூலின் பெரும்பகுதி.)*

## வரகுண ராம பாண்டியர்

*16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து புராண இலக்கியம் விரி வாகப் பாடிய பாண்டியர் மூவருமே சிறப்புடையவர்கள்; இவரும் முக்கியமானவரே. இவர் அட்டவணையில் காட்டிய அபிராம பராக்கிரம பாண்டியன் புதல்வருள் மூத்தவனான சடையவர்மன் பராக்கிரமனுடைய மூத்த புதல்வர்; பட்டம் வேண்டாமென்று சொல்லி, சிவ பூசையிலும் வழிபாட்டிலுமே காலம் கழித்து விட்டார் என்பது வரலாறு.*

*வரகுணராமனும், வரதுங்கராமனும் சகோதரர். கரிவலம் வந்த நல்லூரில் இருந்தவர்கள். தங்கள் தந்தை காலமான பின் இளையவரான வரதுங்க ராமரே பட்டத்துக்கு வந்தார். மூத்தவ ரான வரகுணராமர் அரசு வேண்டாம் என்று சொல்லித் தென் காசிக்கே போய்விட்டார் என்பதை முன்னமே குறிப்பிட்டோம். இவர் பாடிய நூல்கள் மூன்று - இலிங்க புராணம் வாயுசங்கிதை என்ற இரு புராணங்களும், அம்பிகை மாலை என்ற தோத்திர நூலும். நூல்களின் சிறப்புப் பாயிரங்கள் இவரைப் பாண்டிய*

குலசேகரன், பாண்டிய குலசேகரன் வரகுணராமன் என்று குறிப்பிடும்* இலிங்க புராணச் சிறப்புப் பாயிரம்:

பூண்டபே ரன்பாற் புவிபுகழ் இலிங்க
புராண நான் மறைவகுத் திசைத்த
காண்டமும் முனிவன் உரைத்தவா றமுது
கனிந்தசெந் தமிழினால் விரித்தான்:

நீண்டநீ ராழி நெடுநில வளாகம்
நிழற்று தன் னிழல்மதிக் கவிகைப்
பாண்டிய குலசே கரன் இகல் கடந்த
பரிதிவேல் தடக்கை மீனவனே.

அம்பிகை மாலையின் சிறப்புப் பாயிரம் பின்னே தரப்பட்டுள்ளது. வாயு சங்கிதையின் சிறப்புப்பாயிரம் பின்வருமாறு:

திருவளர் கமலத் திறைவனும் காணாச்
செஞ்சடைத் தனிமுதல் புராண
அருமறைத் தெளிவாம் வாயுசங் கிதைபின்
அமுதுகு தமிழினால் உரைத்தான்:
பரிதிவாள் தடக்கைப் பாண்டிய குலசே –
கரன் அணி பனிமலர்ப் பசுந்தார்
வரகுணராமன், புவியெலாம் நிழற்றும்
மாலைவெண் கவிகைமீ னவனே.

வாயுசங்கிதையை அச்சிட்டவர், 'தெய்வீகம் பெற்ற குல சேகர வரகுணராம பாண்டியர் அருளிச் செய்தது' என்று பெயர் சூட்டி அச்சிட்டார். வரகுணராமர் கருவையில் வாழ்ந்து அகோர சிவத்தின் சீடராய், இலிங்க புராணம் பாடினார் என்பதற்கு அதன்கண் உள்ள குரு வணக்கப் பாடலே சான்றாகும்.

துன்ப வாரிநின் றேறித் துகளில்பேர்
இன்ப வாரியின் மூழ்குவித் தேர்பெற
அன்பு பூத்த அகோர சிவனடிப்
பொன்செய் தாமரை போற்றி வணங்குவாம்.

பின்னர் இவர் தென்காசியில் இருந்து, அதிவீர ராமனுக்குக் குருவாய் இருந்த சுவாமி தேவரையே தமக்கும் ஆசாரியராய்க் கொண்டு அங்கு வாழ்ந்தார் என்பதற்கு வாயுசங்கிதையில் பாடிய குருவணக்கப் பாடல் சான்றாகும்.

---

* வரகுணராமன் சச்ச புட வெண்பா செய்ததாக அதன் சிறப்புப் பாயிரம் கூறுகிறது.

முன்னைவினை இருளகல முரிதிரைப்பாற் கடலகட்டின்
முளைத்த திங்கள்
நன்னிலவு பரந்தெரிக்கும் நலத்தகு வெண் ணீறணிந்து
நளின வீட்டில்
அன்ன முயர்த் தவனறியா அஞ்செழுத்தின் தன்மையினை
அறியக் கூறித்
தன்னருள்பூத் தாண்டு கொண்ட சுவாமிதே வன்திருத்தாள்
தலைமேற் கொள்வாம்.

*வரகுணராமரைப் பற்றிய செய்திகள் எவையும் விளங்கத் தெரியவில்லை. அரசுரிமைக்காகவே போர்கள் மலிகின்ற உலகத்தில், அரசில் விருப்பமில்லாதிருப்போரையும் வரலாறெங்கும் காண்கிறோம். வரகுணராமர் அவ்வாறிருந்தவர் போலும். அவ்வாறிருந்தமையால்தான் இவர் எவ்விதப் பூசலுமின்றித் தனித் தனி ஆட்சி செலுத்திய தம் இரு சகோதரரிடமும் மாறி மாறித் தங்கியிருக்க வியன்றது. இப்பாண்டியர் அனைவருமே ஆன்மார்த்த நெறியில் அதிகம் ஈடுபட்டோர்; அவர்களில் இவர் மிகவும் அதிகம் ஈடுபட்டு, ஆட்சியை விரும்பாதவர். இவர் சிறந்து விளங்கி நூல் செய்த காலம் சுமார் கி.பி. 1560-1600 ஆக இருத்தல் இயலும். இவர் பாடிய புராணங்களை இனி ஆராய்வோம்.*

## *இலிங்க புராணம்*

*வரகுணராமர் செய்த புராணங்கள் இரண்டில் இதுவே முதலாவது. நூலின் சிறப்புப் பாயிரமும் தம் குருவான ஈசான முனிவர் வணக்கமும் முன்னே காட்டப்பட்டன. பூர்வ காண்டத்தில் பாயிரமும் அனுக்கிரமணி என்ற பதிகமும் 108 அத்தியாயங்களும், 1955 பாடல்களும் உள்ளன; உத்தர காண்டத்தில் கடவுள் வாழ்த்தும் 45 அத்தியாயங்களும் 551 பாடல்களும் உள்ளன. மொத்தம் அத்தியாயம் 154, 2506 பாடல்கள்.*

*முதலில் விநாயகர் காப்பு. இரு காண்டங்களிலும் சிவம் சக்தி விநாயகர் முருகர் வணக்கப் பாடல்கள்; தொடக்கத்தில் நடேசர் வணக்கப் பாடல் அதிகமாய்க் காணப்படுகிறது. விநாயகரைப் பால விநாயகரென்றும் முருகரைப் பழனிக் கந்தரென்றும் பதிப்பித்தோர் எழுதியுள்ளார்: ஆதாரமில்லை. இப்புராணம் நாரதர் உரைத்ததாகச் சொல்லப்பட்டுள்ளது.*

*இந்நூலின் முதல் கடவுள் வாழ்த்துப் பாடலாகிய விநாயகர் வணக்கப் பாடல் பின்வருவது:*

பிறைதவழும் எழில்தோன்றிப் பிறங்குகதிர் வெண்கோட்டால்
செறிகதிர்செய் தடங்குடுமிச் செம்பொன்மால் வரைவாய்ப்ப
மறைபுகழும் சவுந்தரிய லகரியினை வகுத்தெழுதும்
விறல்தெழுமு வேழமுகன் விரைமலர்த்தாளினை தொழுவாம்.

இங்கு மேருமலையில் சவுந்தரிய லகரியினை விநாயகர் எழுதினார் என்று சொல்வது, இவருக்கு அந்நூலினிடத்துள்ள ஈடுபாட்டினால் போலும்; விநாயகர், 'மாபாரதம் சொன்ன நாள் ஏடாக மாமேருவெற்பாக, அங்கூர் எழுத்தாணி தன் கோடாக எழுதும் பிரான்' என்பதுதான் பழைய மரபு. இவர் சொல்வது புதிய செய்தி.

முதல் காண்டம்

கால அளவு சொல்வது அக்கால நூல்களின் இயல்பு; இங்கும் உள்ளது. சிவவீரட்டச் செயல்களில் திரிபுரமெரித்தல், அந்தகாசுரன், சலந்தரன்; தக்கன் வேள்வியழிவு இங்கு விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பிற கதைகளில், தாருகாவனக் கதை, காளியோடாடல் ததீசி வரலாறுகள், சிலாதர், நந்தி, சுவேதன், துருவன், உப மன்னியு கதைகள் சொல்லப்பட்டுள்ளன. விரதங்களில் பாசுபத விரதம் முதலிய பல ஆசார விதிகள் (கொலைப் பாவம்), ஜம்புத் தீவு, பிலக்கத் தீவு முதலியவற்றின் வருணனை, சூரிய சந்திரவமிசம் போன்ற பல வமிசங்கள்; மரணத்துக்கான குறிப்பு முதலியன சொல்லப்பட்டுள்ளன. பஞ்சமூர்த்தம், அட்டமூர்த்தம், சிவபூசை, அட்டாங்க யோகம், திருவைந்தெழுத்து, பிரணவம், அட்டமா சித்தி, தியானம், தத்துவங்களின் தோற்றம், பிராயச்சித்த விதிகள் என்பன சிறப்பான சைவ சமயப் பொருள்கள். தலங்களுள் காசித்தல மொன்றே இங்கு சொல்லப்பட்டிருக்கிறது.

அட்டாங்க யோகம் இங்கு விரிவாகவே சொல்லப்பட்டுள்ளது. தமிழில் பல்வேறு நூல்கள் அட்டாங்க யோகம் பற்றிய விளக்கம் தருகின்றன. அவற்றுள் இந்நூல் கூறும் விளக்கமும் சிறந்த இடம் பெறுதற்குரியது. சமாதியைக் கூறுங்கால், ஆறாதாரங்களிலும் ஆங்காங்குள்ள தாமரை மலர்மீது, அதனதற்கு ஏற்ற 'ஒளிபோல் உன்னற்கரிய பரஞ்சுடரை உன்னி உன்னி விழுங்கித் தன்னையறிந்த தலையிருத்தல் சமாதி எனலாம்' என்று இவர் கூறுவது காணத்தக்கது.

இலிங்கபுராணம் என்ற பெயருக்கேற்ப சத்தியோ சாதம் முதலான பஞ்ச மூர்த்தங்களின் தோற்றமும் மகாலிங்கத்தின் தோற்றமும் உரைக்கிறார்.

மாணிக்கவாசகர் துதியில், புத்தரைச் செக்கிலிட்டரைத்த செய்தி கூறப்பட்டுள்ளது. இது ஒரு புதிய செய்தி. மீனாட்சி சுந்தரம்பிள்ளை பாடிய அம்பர்ப் புராணத்திலும் இது சொல்லப் படுகிறது. தீவுகளின் இயற்கை சொல்லும் இடத்து, முற்காலக் காப்பியங்களில் வரும் நாட்டுப்படலம் நகரப்படலம் போன்ற வருணனை சிறப்பாக உள்ளது. துதிப்பாடல்களும் சில இடங் களில் அருமையாக உள்ளன. முனிவர் தோத்திரம் பண்ணுவது பத்துப் பாடல்; திரிபுரம் எரித்தபோது தேவர்கள் துதித்தது எட்டுப்பாடல்; பின்வரும் பாடல் எடுத்துக் காட்டாகும்.

பருதி யதனுள் விரிவெயிலாய்,
 மதியில் நிலவாய், பனிவிசும்புள்
ஒருவா ஒளியாய், வளியதனுள்
 ஊறாய் கனலுள் உருவமாய்
திரைசேர் புனலுள் உறுசுவையாய்
 திண்மா நிலத்தின் உறைமணமாய்
மருவி யுறையும் மணிமிடற்று
 வரதா! நின்னைத் தொழுதேமே.

மற்றோர் இடத்தில் வியபோகனத் தோத்திரம் என்ற இடத்தில் பத்துப் பாடல்கள் தோத்திரமாய் உள்ளன. இது பாசுபத விரதத்தின் இறுதியில் செய்யத்தக்க தோத்திரம்; பிறவி அகன்றிட வேண்டுவது; ஆதிசங்கரர் தம்முடைய பாடியத்தில் மறுத்திருக்கிற சைவ சமயமானது பாசுபத சமயமே என்பது குறிப்பிடத்தக்கது.

இரண்டாம் காண்டத்துள் கௌசிகன், நாரதன், அம்பரீடன் முதலியோர்களின் வரலாறு, அட்டமூர்த்தம், திருவைந்தெழுத்து, பவன் முதலாய அட்டமூர்த்தம், தீக்கை, சிவ பூசை, அகோர பூசை, மந்திரம், விசயாபிடேகம், தானங்கள், பிரதிட்டை ஆகிய பொருள்கள் சொல்லப்பட்டுள்ளன. விசயாபிடேகம் என்பது அரசன் வெற்றி பெற்றுப் பகைவனது தலைநகரில் செய்து கொள்ளும் ஒரு போர் நிகழ்ச்சி. நூலாசிரியர் அரசரானமை யாலும், பாண்டியர் அப்போது ஒடுங்கிய நிலையில் இருந்தமை யாலும், ஆசிரியர் இதை விரும்பியே பாடினார் என்று கருத லாம். இல்லையானால் சிவபுராணம் கூறவந்த இந்த நூலில் அரசனுடைய வெற்றி நிகழ்ச்சியைக் கூற நியாயமில்லை.

வரகுணராம பாண்டியர் சிறந்த காவியம் செய்யும் ஆற்றல் படைத்தவர். ஆனால், காவியத்தில் தம் புலமையைக் காட்ட வேண்டாம் என்று இறைவன் புகழைப் பாடுவதிலேயே புலமையை

அர்ப்பணித்திருக்கிறார். ஓர் உதாரணம் காட்டலாம். தாருகாவனத்தில் பிட்சாடன மூர்த்தி பலியேற்கச் சென்ற போது, அவரைக் கண்டு காமுற்ற மாதர் நிலையை முப்பது பாடல்களால் உருவகிக்கிறார். தொடர்ந்த சில பாடல்கள்:

சோலையுறை கிள்ளைவளை சூழ்தளிரி னேந்திப்
பாலனைய மென்மொழி பயிற்றலும் மறந்து
காலமணி மேகலை தளர்ந்தது மருங்கென்று
ஓலமிட மாதர்சிலர் ஓகையி னடந்தார்.

மெல்லடிய பஞ்சுநிலை மேவநில மீள
ஒல்லையி னலத்தக மணிந்தவகை யொப்பச்
செல்லுமலர் சீறடி சிவப்பவெழில் மேவும்
வல்லியென அன்ன நடை மாதர்சிலர் வந்தார்.

வார்குழையின் மீதுபுனை வாசமுழு நீல
மாரும்விட மின்னமுத மாக்கும் வழி பாய,
பாரின்மிசை வீழுமவை போற்பரிய ஓடிக்
கார்மயிலை யன்னசில கன்னியர் அடைந்தார்.

கோடுபடு வெம்முலை குளித்துதிர மூழ்கும்
ஆடல்மதன் வாளிபுறம் வீழ்வதென லாகிப்
பாடகமென் சீறடிய பஞ்சுபட ஐம்பால்
சூடுமலர் சிந்தமட மாதர்சிலர் சூழ்ந்தார்.

பண்ணிசையி னாலுயீர் படுத்துலவு செவ்வாய்
அண்ணலிரு தாளுமுயர் தோளுமகன் மார்பும்
கண்ணிணை களிப்பவெழு காதன்மிக நோக்கிப்
பெண்ணமுத மாயவொரு பேதை குழை வுற்றாள்.

சொற்களின் அமைப்பும், பாடலின் ஓடுகின்ற கதைச் சுவையும் இங்கு ஒருங்கு அனுபவிக்கலாம்.

தானங்களைப் பற்றி இங்கு சிறப்பாக 16 அத்தியாயங்கள் உள்ளன. இவை வடமொழி மூலத்திலும் இருக்கலாம். எனினும், இவை முழுமையும் அப்படியே உத்தர காமிக ஆகமத்தின் இறுதியில் இதே தலைப்புக்களைக் கொண்டு 15 அத்தியாயங்களாகவே இருப்பது காணத்தக்கது. இவ்வொற்றுமையைப் பின்னே ஓர் அட்டவணையாகத் தொகுத்துத் தந்திருக்கிறோம். முழு நூலும் ஆகமங்களை வைத்து ஆராய்வது பெரும் பயன் தருவதாகும்.

கலியுகத்தியற்கை (முதற்காண்டம் அத். 39 பாடல்கள் 13) என்று நூலாசிரியர், தாம் நூல் செய்த காலமாகிய 16ஆம் நூற்

றாண்டின் இடைப்பகுதியில், இன்று 1973இல் சர்வ சாதாரண மாகிவிட்ட சில இயல்புகளைப் பெருக்கிச் சொல்வதும் பெரும் வியப்புக்கிடமாயுள்ளது. 'மறையவர் நான்காம் வருணத்தார் நெறியினில் மன்னி வாழுங்கால், அவர் கழற்கால் வணங்கி மன்ன வர் வேதியர் வாழ்வர். மற்றவரோடு உண்டிபாயல் ஒன்றாக மகிழ்ந்து உறைவர். மண வேள்வி ஆச்சிரம தருமம் இவை கெடும். மறையவரைக் கோறல் செய்து மன்னவராய்ச் சிலர் உலகம் பரிப்பர். மடமகளிர் யாவரும் கணிகையரொத்துறைவர். அந்தணர் நிற்கப் பின்னவர் ஆசனத்தின் மிசையமர்வர். அவர் அருள் வேண்டியிரந்து சென்று மறையவர் தாழ்ந்து வாழ்வர்.'

| இலிங்கபுராணமும் உத்தரகாமிகமும் | | | | | |
|---|---|---|---|---|---|
| புராண அத்தி யாயம் | அத்தியாயப்பெயர் | செய்யுள் தமிழ் | காமிகம் அத். எண். | பாடற் தொகை | பெயர் வேறுபாடு |
| 22 | துலாபுருடதானம் | 16 | 83 | 55 | துலாரோக சோடசம் |
| 23 | இரணிய கருப்பதானம் | 7 | 84 | 20 | - |
| 24 | திலபர்வததானம் | 5 | 85 | 19 | - |
| 25 | சொன்னபூமிதானம் | 5 | 86 | 6 | - |
| 26 | கற்பகதானம் | 6 | 87 | 11 | கல்ப பாதபம் |
| 27 | கணபதிதானம் | 6 | 88 | 6 | - |
| 28 | சொன்னதேவதானம் | 6 | 89 | 9 | ஹேமதேனு |
| 29 | இலட்சுமிதானம் | 5 | 90 | 7 | - |
| 30 | திலதேனுதானம் | 7 | 91 | 13 | - |
| 31 | சகத்திரகோதானம் | 5 | 92 | 7 | - |
| 32 | இரணிய அசுவதானம் | 5 | 93 | 7 | - |
| 33 | இரணிய கன்னிகாதனம் | 6 | 94 | 8 | - |
| 34 | இரணிய இடபதானம் | 5 | 95 | 9 | - |
| 35 | சொன்னகஜதானம் | 5 | 96 | 5 | - |
| 36 | திக்குப் பாலதானம் | 5 | 97 | 7 | லோக பாலாஷ்டகம் |
| 37 | விஷ்ணுபிம்பதானம் | 5 | 98 | 8 | சர்வதா னோத்தமம் |

**பதிப்பு:**

இது குலசேகர பாண்டியர் வடமொழியினின்று மொழி பெயர்த் தருளியது என்ற குறிப்பு முகப்பு ஏட்டில் உள்ளது. சென்ற நூற்றாண்டில் பல ஆகமங்களைப் பதிப்பித்த கொன்றை மாநகரம் சண்முகசுந்தர முதலியார் 1877இல் இதை அச்சிட்டார்.

தொகுப்பாகச் சொல்வதானால், இந்தப் புராணம் சரியை கிரியைப் பகுதிகள் பலவற்றை உணர்த்தும் சிறந்த ஒரு சாத்திர நூலாக அமைந்துள்ளது. வடமொழிப் புராணம் விரிவு, தமிழ்ப் புராணம் சுருக்கம். வடமொழி மூலத்தில் சிவபிரானுக்குரிய சகச்சிர நாமங்கள் இரண்டு சொல்லப்பட்டுள்ளன. தமிழில், பூர்வகாண்டம் 63ஆம் அத்தியாயம் சகத்திர நாமமுரைத்த அத்தியாயம் என்னும் பெயருடையது. இங்கு 8 விருத்தங்களில் சில நாமங்களை உரைத்துப் பின் இவை முதலா ஆயிரத்தெட்டு ஈசன் நாமம் இயம்பினர் என்று மட்டும் ஆசிரியர் கூறுகிறார். 99 மாயவன் சக்கரம் பெற்ற அத்தியாயத்தில் 'ஆதியாயிர நாம முளத் தினின் றெடுத்தோதி' என்று காட்டி நிறுத்திக் கொண்டார்; முழு மையும் தரவில்லை (பாடல் 5).

திருமந்திரம் இரண்டாம் தந்திரத்தில் இலிங்க புராணம் என்ற தலைப்பில் ஆறு பாடல் கொண்ட ஒரு பகுதி உள்ளது. இங்கு மலைமகள் பூசித்தது, முப்புரம் செற்றது' அச்சுதனுக்கு ஆழியும் பிரமனுக்கு வாளும் கொடுத்தது, கயிலையைப் பெயர்த்த இராவணனுக்கு அருள் செய்தது, சண்டேசர் தாதையை மழு வால் வெட்டி மாலை முதலியன பெற்றது, தேவர்கள் இறைவா நம என்று கும்பிட்டது ஆகிய செய்திகள் சொல்லப்பட்டுள்ளன. அட்டவீரட்டம், தக்கன் வேள்வி, திருமால் சக்கரம் பெற்றது, அடிமுடி தேடியது போன்ற வரலாறுகள் இப்பகுதியில் தனியே யும் சொல்லப் பெற்றுள்ளன.

இலிங்க புராணம் கூறும் பராக்கிரமச் செயல்களைத் தனித்தனி ஒவ்வொரு பாடலில் குறிப்பிட்டு அப்பர் சுவாமிகள் இலிங்கபுராணக் குறுந்தொகை என்று ஒரு பதிகமே பாடியிருக் கிறார். மேலும் திருநாரையூர்த் திருத்தாண்டகத்தில் (6 - 74 - 8) 'அளக்கலாகா எரி புரியும் இலிங்க புராணத்துளானை' என்று அவரே பாடுகிறார்.

11ஆம் பக்கத்தில் காட்டப்பட்ட 'பிறை தவழும் எழில் தோன்றி' என்ற இலிங்க புராணக் கடவுள் வாழ்த்துப் பாடலைச்

சைவ எல்லப்ப நாவலர் தாம் எழுதிய தமிழ்ச் சௌந்தரியலகரி உரையில் மேற்கோளாக எடுத்துக்காட்டுவதும் கருதத்தக்கது.

## வாயு சங்கிதை

புராணங்கள் பதினெட்டு என்றும் அவற்றுள் சிவ புராணங்கள் பத்து என்றும் முன்னுரையில் குறிப்பிட்டோம். சிவபுராணம் பத்தில் முதலாவது சைவபுராணம். இது, பன்னிரண்டு சங்கிதைகளும் லட்சம் கிரந்தங்களும் உடையது;* வித்தியேசுர சங்கிதை - கிரந்தம் 10 ஆயிரம்; உருத்திர சங்கிதை - 8; விநாயகம் 8; உமா 8; மாதிரு 8; ஏகாதச ருத்ரம் 13; கைலாசம் 6; சதருத்திரம் 3; கோடிருத்திரம் 9; சகச்சிரகோடி ருத்திரம் 11; தருமம் 12; வாயுசங்கிதை 4 ஆயிரம் கிரந்தம். இப்பன்னிரண்டில் இறுதியாகிய வாயுசங்கிதையை வரகுண ராமபாண்டியர் தமிழில் ஒரு புராணமாக வாயு சங்கிதை என்ற அதே பெயரோடு மொழி பெயர்த்தார். இந்நூல் பூர்வ காண்டம் உத்தர காண்டம் என்ற இரு பிரிவுகளாய் உள்ளது; இவற்றுள் பூர்வ காண்டம் பாயிரமும் 30 அத்தியாயங்களும் உடையது; பாடல் 537; உத்தரகாண்டம் மீண்டும் தனியான பாயிரமும் 30 அத்தியாயங்களும், பாடல் 797; ஆக மொத்த அத்தியாயங்கள் 60, பாடல் 1334.

முனிவர் பிரமலோக மடைந்து பிரமனை முத்தி வழி காட்டுமாறு கேட்க, அவன் "நீங்கள் இந்தச் சக்கரம் வீழ்கின்ற இடமாகிய நைமிசாரணியம் சென்று தவம் புரியுங்கள். அங்கு வாயுதேவன் வந்து முத்தி மார்க்கம் அருளுவான். பின்னர் நீங்கள் தவம் முடித்துப் பிரமலோகம் அடையலாம்" என்று அறிவித்தான். அவ்வாறே அவர்கள் தவம் செய்து, வாயுதேவனால் உபதேசிக்கப் பெற்றதைக் கூறுவதால் இந்த நூல் வாயு சங்கிதை❖ எனப் பெயர் பெற்றது.

நூலில் வழக்கம்போல் தனியான விநாயகர் காப்புச் செய்யுள் உண்டு. இரு காண்டங்களுக்கும் தனித்தனியே விநாயகர் சிவம் சக்தி முருகன் வணக்கங்கள் சொல்லப்பட்டுள்ளன. பூர்வ காண்டத்தில் சிவபெருமான் தன்மை, மாயை, பிரபஞ்சத்தில்

---

* கிரந்தம் என்பது ஒற்றெழுத்து நீக்கி 32 எழுத்துக்களுடைய ஒரு வடமொழிச் செய்யுள் அளவாகும்.

❖ வாயு சங்கிதை வாயவியசம்மிதை என்று வடமொழியில் வழங்கும். வைணவ மரபில் அம்மரபுக்குரிய ஆகமங்கள் பெரும் பகுதி சங்கிதை என்றே வழங்கப்பெறும். சம்ஹிதை என்ற வடசொல் தொகுப்பு என்று பொருள்படும்

காலம் முதலான பலவும் உற்பத்தி, பிரமன் வமிசம், தக்கயாக சங்காரம் முதலான சில சிவகதைகள், அருளின் செயல், பாசுபத விரதம், உபமன்னியு வரலாறு என்பன சொல்லப்படும். பிரமவமிச வரலாற்றில் பல இருடிகள், அவர்கள் மனைவியர், புதல்வர் முதலான வமிச பரம்பரையெல்லாம் வேறெங்கும் காணாத அளவு மிகவும் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. உத்தரகாண்டம் பெரும்பாலும் சாத்திரப் பகுதியாயுள்ளது. கண்ணனுக்குச் சிவ தீக்கை செய்த ஒரு கதை மட்டும் இங்கு கூறப்பட்டுள்ளது. கேனோபநிடதத்தில் சோதி தோன்றி உமையருளால் இந்திர னுக்குப் பரம்பொருளை உணர்த்திய வரலாறு ஓர் அத்தியாயத் தில் சொல்லப்படுகிறது. சிவமந்திர மூர்த்தங்கள், நிட்களவடிவம், சிவலிங்க இயல்புகள், உமாமகேசுவர பூசை, கிரியா பூசை, ஓமம், மாதபூசை, காமியகன்மம், அக்கினி காரியம், சிவவிரதங்கள், ஞானயோகம் என்ற பொருள்கள் சொல்லப்படும். இறுதியில் முனிவர் காசி அடைந்து பாசுபத விரதத்தால் பசு பாசம் தவிர்ந்து முத்தியடைந்தனர் என்று புராணம் முடியும். நூலெங்கும் சாத்திரமும் தோத்திரமும் பக்தியும் ததும்பி வழியக் காணலாம். பூசை முடிவில் செய்கிற தோத்திரத்தை ஒரு தனி அத்தியாயத்தில் 30 பாடல்களால் சொல்லிக் காட்டுகிறார். மேலும் பல இடங் களில் மும்மூன்று பாடல்களில் துதியமைக்கிறார். பூர்வ: 13: 3-6; 20: 5-7, 15-17; உத்தர: 24: 1-37. நூலெங்கும் அத்தியாய இறுதியில் பலசுருதி கூறுகிறார்.

இனி, சிறப்பான சில செய்திகளைத் தொகுத்துக் கூறலாம். திருத்தொண்டர் வணக்கப் பாடல் தனிச் சிறப்புடையது.

> கார்மிடற் றிறைவன் கருணைபெற் றுருகிக்
>     கனிந்துமெய் யடியவர் விரிந்த
> சீர்புகழ்ந் திடுமென் நா; அவர் கமலச்
>     சேவடி பணியுமென் தலை; மெய்
> ஓர்தரும் அவர்தம் தொழில்செயும் என்கை;
>     ஆங்கவர் உணர்ந்து நன்காக
> ஏர்பெற உரைத்த ஏவலிற் செல்லும்
>     என்னிரு கால்கள்: வைகலுமே.

சுந்தரமூர்த்தி, ‘மகத்திற் புக்கதோர் சனி எனக்கானாய்’ என்று தம் தேவாரத்துள் பாடிய தொடரை இவர் அவரது துதிப் பாடலில் எடுத்தமைத்திருக்கிறார். தமிழ் தழீஇய சாயல் என்ற சிந்தாமணித் தொடரைத் தமிழ்ச் சாயலளோடும் என்று எடுத் தமைத்துள்ளார். பிரயாகையைக் குறிப்பிடுகிறார். உமாதேவியைப்

*பாகமாக உடையவன் என்பதை 'உமையாள் பயலன்' என்கிறார்; இது திருக்கோவையாரில் கண்டது. தொடக்கத்தில் பரம் பொருளின் இயல்பை 6 பாடல்களால் சொல்லுகிறார். ஒரு பாடல் பின்வருவது:*

ஒன்றதா யுரையுங் காரணந் தன்னை
 ஒழிவற விரிப்பவன் யாவன்,
நின்றபே ருலகில் நிறைந்தமன் னுயிரை
 நீங்கலா தியக்குவோன் யாவன்,
துன்றுபே ருயிருள் உறைந்துமவ் வுயிரால்
 தோன்றிய அறிகலான் யாவன்,
மன்றநீ டுலகம் யாவையுங் கெடினும்
 மாய்கலா துறைபவன் யாவன்.

*நூல் முழுமையிலும், இலக்கியத் துறையில் கம்பராமா. யணத் தொடர்களும் கருத்துக்களும், சமயத்துறையில் சிவஞான சித்தியார்த் தொடர்களும் கருத்துக்களும் நிரம்பியுள்ளன.*

*இந்நூலிலும் அட்டாங்கயோகத்தை விரிவாகக் கூறுகிறார் (12 பாடல்கள்) - ஞானயோகம் முதலிய உரைத்த அத்தியாயம். இந்நூற் பாடல்களுக்கு எடுத்துக் காட்டாகப் பின்வருவன காண்க:*

விறகினைப் பற்றியே விளங்கு தீயினைக்
குறைவறக் காண்குவ தன்றிக் கோதிலாது
உறைதரு தீயினைக் காண ஒண்ணுமோ?
மறைதெரி பொருளினை வகுக்க வல்லிர்காள்.

தந்தைதான் புதல்வனைத் தண்டஞ் செய்தவன்
சிந்தைகொள் தீவினை சிதைக்கு மாறுபோல்,
எந்தைதான் தண்டங்கள் இயற்றி எய்திய
பந்தமங் ககற்றநல் லருள்ப ணிப்பனால்.

அணங்கிட மருத்துவன் அரிந்துஞ் சுட்டுமாங்கு
உணங்குநோ யாளனை உய்யக் கொள்ளல்போல்,
பிணங்கிய வல்வினை தீரப் பிஞ்ஞகன்
வணங்கிட வருத்தியே வருத்தந் தீர்ப்பனால்.

மண்ணினிற் கல்லினின் மரத்தின் மன்னியே
அண்ணல்நன் குறைதலால் அவற்றை அண்ணலென்று
எண்ணியாம் தொழுதுற ஏத்தி வாய்விரி
வண்ணநாண் மலர்பல தூவி வாழ்வதே.

இந்நூல் செய்தவர் வரகுணராமர் என்பதை முன் தந்துள்ள சிறப்புப் பாயிரத்தால் அறியலாம். இச் சிறப்புப் பாயிரத்துக்கும் இலிங்க புராணச் சிறப்புப் பாயிரத்திற்கும் ஒற்றுமைகள் உள்ளன. இரண்டும், புராணங்கள் மறையை வகுத்துரைத்தவை என்கின்றன. அமுது கனிந்த செந்தமிழினால், அமுதுகு செந்தமிழினால் சொல்லப்பட்டன என்கின்றன. இதனால் இரண்டையும் செய்தவர் ஒருவரேயாகலாம். பாண்டிய குலசேகரன் பாண்டிய குலசேகரன் வரகுணராமன் என்று இரு நூல்களும் கூறுவதால், அப்பாண்டிய குலசேகரன் வரகுணராமனே என்பது தெளிவு.

**பதிப்பு**

சிவஞானபாலைய தேசிகராதீனத்துச் சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் பரிசோதித்து, ஊற்றுமலை சமீன்தார் இருதயாலய மலையப்ப தேவர் பதிப்பித்தது - 1890.

## அம்பிகை மாலை

மதுராபுரி அம்பிகை மாலை என்பது முப்பது கட்டளைக் கலித்துறைப் பாக்கள் கொண்ட சிறு துதி நூல். மதுரை மீனாட்சி அம்பிகையைத் துதிப்பது. பாடல் ஒவ்வொன்றும் 'மதுராபுரி அம்பிகையே' என்று முடிவது. பக்திச் சுவை நிறைந்த எளிய பாடல்கள். இந்நூலின் கடைசிப் பாடலால் இதைப் பாடியவர் குலசேகர பாண்டியர் என்று அறிகிறோம். குலசேகரன் என்ற பெயர், 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பாண்டிய மன்னர் பலரும் தரித்துக் கொண்ட ஒரு பட்டப் பெயர். அவர்களுள் இக் குலசேகர பாண்டியர் முன்னே காட்டியபடி, இலிங்க புராணமும் வாயு சங்கிதையும் பாடிய சிறந்த பக்திமானான வரகுணராம குலசேகரனாகவே இருத்தல் பொருந்தும்.

நூலாசிரியர் குலசேகர பாண்டியர் என்பது நூலின் இறுதியிலுள்ள நூற்பயன் கூறும் பாடலால் விளங்கும்:

> பிடித்தாரக் கட்டி அணைத்தமு தூட்டிய பேயின்முலை
> குடித்தாடும் மாயன் குலசே கரன்வட குன்றைச்செண்டால்
> அடித்தான் வடித்தசொல் அம்பிகை மாலைஐ யாறுகவி
> படித்தார்கள் கற்பகக் காவும்பொன் னாடும் படைத்தவரே.

நூல், காப்புச் செய்யுள் ஒன்றும் நூற்பயன் ஒன்றும் 30 பாடல்களும் கொண்டது. பாடல்கள் கவிச்சுவை நிறைந்த இனிய பாடல்கள். இது, சமீப காலம் வரையில் பாண்டி நாட்டில் கல்வி பயிலும் சிறார் மனப்பாடம் செய்யும் தோத்திர நூலாக இருந்து

*வந்தது. 16ஆம் நூற்றாண்டில் தோன்றிய இந்நூலை ஒப்ப, அம்பிகை தோத்திரமாகிய அபிராமி அந்தாதி என்ற மற்றொரு தோத்திர நூல் 18ஆம் நூற்றாண்டில் எழுந்தது. திருக்கடவூர் அபிராமி அம்பிகையின் திருவருளைப் பெற்று எந்த நேரத் திலும் அபிராமி தியானத்திலேயே மூழ்கியிருந்த அபிராமி பட்டர், மதுவும் மாமிசமும் உண்ணும் வாம மார்க்கத்தார் என்று பிறர் சொல்லிய சொல்லைச் சோதிக்க வந்த அரசனது கேள்விக்கு, அன்று அமாவாசையாக இருந்தும் பௌர்ணமி என்று அவர் தம் நினைவு இல்லாமல் சொல்லிய பிழையால் விளையப் போகும் அரச தண்டத்திலிருந்து தம்மைக் காக்க வேண்டி அம்பிகையை உளம் கசியத் துதித்துப் பாடிய பாடலாகும். சிறந்த பக்திச் சுவை கொண்ட நூல். தமிழ் நாடெங்கும் இந்த அந்தாதியைத் தேவி பக்தர்கள் மனப்பாடம் செய்து துதிக்கிறார்கள். இது நூறு பாடல்கள் கொண்டது. அபிராமி பட்டர் தேவியின் அருளைப் பெற்றுப் பாடிய போதிலும் கூட, பழமையில் நன்கு பழகிய புலவராய்த் தெரிகிறார். அம்பிகை மாலையை நன்கு பயின்று அதிலுள்ள சொற்களையும் தொடர்களையும் கருத்துக்களை யும் இவர் அப்படியே எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறார். சில ஒப்புமைகளை மட்டும் இங்குக் காட்டுவோம்.*

**இணங்கேன் ஒருவரை, நின்னிரு தாளன்றி எப்பொழுதும்**
**வணங்கேன் ஒருவரை, வாழ்த்துகிலேன் வஞ்ச நெஞ்சருடன்**
**பிணங்கேன்.**

*என்பது அம்பிகை மாலை 87;*

**வணங்கேன், ஒருவரை வாழ்த்துகிலேன், நெஞ்சில், வஞ்சகரோடு**
**இணங்கேன், எனதுஉனது என்றிருப் பார்சிலர் யாவரொடும்**
**பிணங்கேன்.**

*என்பது அந்தாதி. 'கரும்புங் கணையைந்தும் பாசாங்கு சமுங்கைக் கொண்டு அடியேன் - திரும்புந் திசைதொறுந் தோற்று கண்டாய்' - மாலை 3: 'பார்க்குந் திசை தொறும் பாசாங்குசமும், பனிச்சிறை வண்டு, ஆர்க்கும் புதுமலர் ஐந்தும் கரும்பும் என் அல்லல் எல்லாம், தீர்க்கும் திரிபுரையாள் திருமேனியும்' - அந்தாதி 85; நுங்கேள்வர் பாகத்தும் அந்நான்மறை யெனும் நூலிடத்தும், கொங்கேய் பொகுட்டுக் கமலாலயத்துங் குடிகொண்ட நீ' - மாலை 18; 'நின் திருக்கோயில் நின் கேள்வர் ஒரு பக்கமோ, அறைகின்ற நான் மறையின் அடியோ. . . கஞ்சமோ' - அந்தாதி. 20. 'சடாடவியார் உண்ட காளவிடத்தை அமுதாக்கும் சிவானந் தமே மதுராபுரி அம்பிகையே' - மாலை 26; 'வார்சடையோன்*

அருந்திய நஞ்சு அமுதாக்கிய அம்பிகை' - அந்தாதி 5. 'உன்னடிக்கே பொழியாப் புது மலரிட்டு நிற்பார்க்கு அழியாப் பதம் தரு வாய்' - மாலை 23; புது மலரிட்டு நின் பாத விரைக்கமலம் இர வும் பகலும் இறைஞ்ச வல்லார் இமையோர் எவரும் பரவும் பதமும்' - அந்தாதி 83. 'வலிய வந்தென் தலைக்கேய் பதம் வைத்த தண்ணளியாய்' - மாலை 12; 'நின்பாதம் என்னும் வாசக்கமலம் தலைமேல் வலியவைத்து ஆண்டு' - அந்தாதி 32. பின்னும் பல. இதனால் அம்பிகை மாலையின் சிறப்பு நன்கு விளங்கும். குலசேகரன் காலம் 16ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்பது முன்னமே சொல்லப்பட்டது.

இந்நூலின் பாடல்களுக்கு எடுத்துக் காட்டாக இருபாடல் களைக் கீழே தருகிறோம்:

ஒளிகொண்ட வெண்பிறைத் தோடும் பொன்னோலையு மூறியதேன்
துளிகொண்ட செங்கனி வாயுமுத் தாரமும் தோளுமென்றன்
களிகொண்ட நெஞ்சங் குடிகொண்ட வா, விசை கக்குமணி
அளிகொண்ட பூங்குழலாய், மதுராபுரி யம்பிகையே. 7

ஒழியாப் பனித்தடங் கண்ணீர் சொரிய வந் துன்னடிக்கே
பொழியாப் புதுமல ரிட்டுநிற் பார்க்குன் பொழிகருணை
விழியாற் சுரப்ப அலர்ந்த செந்தாமரை வீடொன்றவே
அழியாப் பதந்தரு வாய், மது ராபுரி யம்பிகையே. 23

### பதிப்பு

*மதுரைத் தமிழ்ச் சங்கப் பதிப்பு 1934 (3 ஆம் பதிப்பு).*
*குஜிலிப் பதிப்புகள் எண்ணிறந்தன.*

## வரதுங்க ராம பாண்டியர்

### வரலாறு

தொடக்கத்தில் இவர் வரலாறு குறிப்பிடப்பட்டது. அபிராம பராக்கிரம பாண்டியன் புதல்வராய், வரகுணராமன் தம்பியாய், இவர் திருக்கருவையிலிருந்து பாண்டி நாட்டில் ஒரு பகுதியை ஆட்சி செய்து வந்தார். அதிவீர ராமன் பட்டம் ஏற்றது 1564; வரதுங்கராமர் பட்டத்துக்கு வந்தது 1588. இவர் அதிவீர ராமருடைய தமையன் என்றும், இவ்வாண்டுகள் எங்ஙனம் பொருந்தும் என்றும் முன்னமே குறிப்பிட்டோம். கல்வெட்டுக் களிலிருந்து இவரைப் பற்றி அறியத்தக்க செய்திகள் பின்வருவன. இவர் முன் காட்டியபடி பராக்கிரமனுடைய இரண்டாவது மகனாய், வரகுணன் தம்பியாய்ப் பட்டம் ஏற்றவர். இவர்

*கருவையில் அதிவீரராமர் காலத்திலேயே தனியாக ஆட்சி புரிந்தவர். இவர் வில்லவனை (சேரனை) வெற்றி கொண்டார், வல்லம் எறிந்தார் என்பது ஒரு சாசனப் பாடல் (வாண் மங்கலம்):*

பற்றலர் மண்கொள்ளும், பணிந்தார்க் கரசளிக்கும்,
கொற்றம் உயர்க்கும்அறங் கூறுமே:– விற்றடந்தோள்
வில்லவனை வென்றுகொண்ட வீரமா றன் செழியன்
வல்லமெறிந் தானேந்து வாள்.

*வல்லப்போர் இவர் மதுரை நாயக்கருக்குத் துணையாகச் சென்று தஞ்சை அச்சுதப்ப நாயக்கரை வென்றதைக் குறிப்பது. இளமையிலேயே இவர் அந்தணருக்குத் தானம் வழங்கியிருக் கிறார். 1582இல் சொக்க பண்டிதர் மருத்துவன் சந்திரசேகர னுக்கு முருகனேரி என்ற ஊரை முற்றூட்டாகத் தானம் வழங்கி னார். இவருக்கு அபிராமன், அபிராம சுந்தரேசுவரன், வீர பாண்டியன் (வீரமாறன்) என்ற பெயர்கள் வழங்கின.*

*இவர் பட்டம் ஏற்ற ஆண்டைத் தென்காசிக் கோயில் கல்வெட்டு ஒன்று குறிப்பிடுகின்றது:*

நண்புற் றெதிர்ந்தகலி நாலா யிரத்தறுநூற்று
எண்பத்தொன் பானில் இருங்கடல்சூழ் – மண்பெற்று
மின்னும்மகு டம்புனைந்தான் வேல்வீர மாறனெனும்
மன்னவர்கோ மானபிரா மன்.

**கதைகள்**

*இதுவரை கூறியது வரதுங்க ராமரைக் குறித்த உண்மை யான வரலாற்றுச் செய்தி. இவரைக் குறித்து நாட்டில் வழங்கிய கதைகள் பல. அவற்றையெல்லாம் தொகுத்து, 1919இல் திருக் கருவைத் தலபுராணம் அச்சிட்டவர் 'வரதுங்க மகாராசன் சரித்திரம்' என்ற தலைப்பில் 25 பக்கம் எழுதி அச்சிட்டிருக்கிறார். அன்றியும், அப்புராணம் பாடிய திருமலை வேற்கவிராயர் 'சேர வரதுங்கன் தரிசனம்பெறு சருக்கம்' என்று 24 பாடல் பாடி நூலின் இறுதிப் பகுதியாகச் சேர்த்திருக்கிறார்; (இவர் சேர என்று சொல்லியிருப்பது செழிய என்று இருக்க வேண்டும்.) சரித்திரச் சுருக்கம் பின்வருவது:*

*இச்சரித்திரம் வடமொழியில் விசுவநாத தீட்சிதரால் கூறப் பட்டுள்ளது. அதிவீர ராமன் தென்காசியை ஆண்ட பாண்டிய னுக்கு சுவீகாரம் கொடுக்கப்பட்டான், உரிய காலத்தில் வரதுங்கர் கருவையில் மகுடம் சூடினார். தக்க ஆசிரியரிடம் வரதுங்கர்*

கல்வி கற்றார். தந்தை இறந்த பின் பட்டத்துக்கு வந்தார். காசி அரசகுமாரி சிவகாமசுந்தரியை மணம் புரிந்துகொண்டார். சிவகாமசுந்தரி பிறந்த நாள் அசுவனி. இருவருக்கும் பிள்ளை இல்லாமையால், இவர் பின்னர் பரணிமுதல் ரேவதி நாள் ஈறாக இருபத்தாறு நாளிலும் பிறந்த இருபத்தாறு மங்கையரை மணந்தார்; காமநூல் விதிப்படி அவர்களைச் சுகித்திருந்தார். அந்நாளில் வடமொழிக் கொக்கோக நூலையுணர்ந்து அதைத் தமிழில் மொழிபெயர்த்தார். பின்னும் பிள்ளையில்லாது வருந்திய இவர் கனவில் கருவை நாதர் தோன்றி, இவருடைய இறுதிநாளில் தாமே வந்து இறுதிக் கடன்களை நிறைவேற்றி வைப்பதாகச் சொன்னார்.

காஞ்சி மாமண்டூரில் பிறந்த சீனிவாசாசாரியரிடம் இவர் சிவபூசை பெற்றார். அப்போது சிந்துநாட்டு அரசன் விட்டுரேன் படையெடுத்து வந்தான். இவர் ஆலயத்துள் சென்று பெருமானை வணங்கி,

> அஞ்சலென்ற கரகுலமும் கணபணகங் கணமும்
> அரைக்கிசைந்த புலியுடையும் அம்புலிச்செஞ் சடையும்
> கஞ்சமலர்ச் சேவடியும் கனைகழலும் சிலம்பும்
> கருணைபொழி திருமுகமும் கண்களொரு மூன்றும்
> நஞ்சையுண்ட மணிமிடறும் முந்நூலும் மார்பும்
> நலந்திகழ்வெண் ணீற்றொளியும் மறிமானும் மழுவும்
> பஞ்சடிச்சிற் றிடையுமையாள் ஒப்பனைபா கமுமாய்ப்
> பால்வண்ணன் உளத்திருக்கப் பயமுண்டோ எமக்கே.

என்ற பாடல் பாடித் தமக்கு உதவுமாறு வேண்டினார். இறைவன் அருளால் பகைப் படையினர் எல்லோருக்கும் வந்த வெப்பு நோய் கண்டு அஞ்சிச் சொந்த நாட்டுக்கு ஓடிவிட்டனர். பின்னர் மராட்டிய நாட்டிலிருந்து வந்த ஒரு துறவியிடம் அரசர் ஞான உபதேசம் பெற்றார். கருவை அருகே சோலை நகர் என்ற நகரை அமைத்து அங்கிருந்து ஆட்சிபுரிந்தார். கருவையில் நாதனாகிய பால்வண்ணன் செய்த அருளுக்கு மனம் உருகி அவர் மீது திருக் கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, வெண்பா அந்தாதி, கலித்துறை அந்தாதி என்ற மூன்று நூல்கள் பாடினார். இங்கிருந்தபோது, அதிவீர ராம பாண்டியர் தாம் பாடிய நைடதத்தைப் பார்வையிடு மாறு தமையனிடம் அனுப்பினார். பார்த்த தமையன், 'நம்மைப் போல் ஓர் அரசனுடைய சரித்திரத்தை எம் தம்பி பாடுவதா?' என்று மிகவும் வருத்தப்பட்டு, தாம் எழுதிய கலித்துறை அந்தாதி யில் உள்ள பின்வரும் பாடலை எழுதியனுப்பினார்:

சங்கக் குழையனைத் தென்கரு வாபுரித் தாணுவைவார்
கங்கைச் சடையனைப் பாடல்செய் யாதகவிப் புலவீர்,
அங்கச் சுமைகொண் டெழுநான்கு கோடி அருநரகப்
பங்கத்தில் வீழவன் றோ, பொன்று வார்தமைப் பாடுவதே.

இதைப் பார்த்த அதிவீர ராம பாண்டியர் அதிகக் கோபங் கொண்டு, தம்மையும் தம் நூலையும் தமையன் இகழ்ந்ததாகக் கருதிப் போர் செய்யத் துணிந்து சோலை நகரைச் சூழ்ந்து கொண்டார். அப்போது வரதுங்க ராமர், 'தம்பி வாய்த்தது இராமனுக்கு' என்ற பழமொழியை மனத்தில் கொண்டு, பின் வரும் பாடலை எழுதியனுப்பினார்:

செஞ்சுடரோன் மைந்தனையும், தென்னிலங்கை வேந்தனையும்
பஞ்சவரிற் பார்த்தனையும் பாராதே:– மிஞ்சு
விரதந் தனைக்கொண்டு மெய்யன்பு பூண்ட
பரதனையும் ராமனையும் பார்.*

பாடல் பெற்ற அதிவீர ராமர் தம் செயலுக்கு மிகவும் மனம் வருந்தித் தமையனை வந்து வணங்கினார். வரதுங்கர் நளன் கதையாகிய நரஸ்துதியால் வரும் பாவத்தை எடுத்துச் சொல்லி, அதைப் போக்கக் காசி யாத்திரை செய்து, காசி மான்மியத்தைத் தமிழில் பாடும்படி பணித்தார். அதிவீர ராமர் அப்படியே செய் தார். உரிய காலத்தில், இவர் தம் இறுதிநாள் நெருங்கி வந்தது உணர்ந்து,

ஆக்கையெனும் புழுக்குரம்பை அணைந்தணையாப் பொருளை
 அருளொளியைப் பராபரத்துக் கப்புறமாம் அறிவை
நீக்கமற மயிர்முனைக்கும் இடமற எங் கெங்கும்
 நிறைந்துநின்ற முழுமுதலை நினைவிலெழுஞ் சுடரைப்
பாக்கியங்கள் செய்தனந்தந் தவக்குறைகள் முடிக்கும்
 பழவடியார் தமக்குதவு பசுந்துணர்க்கற் பகத்தை
வாக்குமன விகற்பத்தால் அளவுபடா ஒன்றை
 மாசற்ற வெறுவெளியை மனவெளியி லடைப்பாம்.

என்ற பாடலைப் பாடி இறைவன் அடிசேர்ந்தார். அதன் பின்னர் இறைவனே ஒரு பிரமசாரியாக வந்து தான் இவருடைய தாயாதி என்று காட்டி, உடலுக்குச் செய்ய வேண்டிய கிரியைகளைச் செய்து முடித்துக் கோயிலுக்குள் சென்று மறைந்துவிட்டான்.

---

* இப்பாடலை அதிவீரராமரே பாடினார் என்று சிலர் சொல்லி யிருப்பது பிழையாகும்.

*தாயாதியாக வந்தவன் இறைவன் என்பதை மக்கள் உணர்ந் தார்கள். காசியிலிருந்து திரும்பிவந்த அதிவீர ராம பாண்டியர் நிகழ்ந்ததையறிந்து வருத்தமும் வியப்பும் அடைந்தார். கருவை யில் சென்று வழிபட்டுப் பின்வரும் பாடலைப் பாடினார்.*

புரிசூழ்ந்த வலம்புரியுஞ் சலஞ்சலமுங் கிடந்தகடல்
 புடைசூழ் சக்ர
கிரி சூழ்ந்த பெரும் புவனத் தலமனை த்துந் தேடியுங்காண்
 கிலன்யான், இந்நாள்
அரிசூழ்ந்து மலரயன்சூழ்ந் தமரரொடு முனிவார் சூழ்ந்து
 அன்பின் ஏத்தக்
கரிசூழ்ந்த நகரமர்ந்த கருங்களவின் வெண்கனியைக்
 கண்கண் டேனே.

### பிற செய்திகள்

*வரதுங்கராமர் சிறந்த புலமையும் சிவபக்திச் செல்வமும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற அரசர். இவருடைய மனைவியும் இவரைப் போலவே பக்தியும் புலமையும் நிரம்பியவர். அவரைப் பற்றிய செய்திகளைப் பின்னே தனியே கூறுவோம்.*

*வரதுங்கராமர் ஈசானிய முனிவரிடம் பயின்ற காலத்தில் சிதம்பரநாத கவி என்பவரும் உடன் பயின்றார். இவர் பின்னர் சங்கரவிலாசம் என்ற பெயரால் சங்கர நாராயணர் கோயிற் பெருமான் பெயரை அமைத்து ஒரு புராணம் பாடியிருக்கிறார். இப்பாண்டியர் அவையில் பல புலவர் வாழ்ந்தார்கள். அவருள் தலைவராயிருந்த காசிக்கலியன் கவிராயர் என்பவர் நாண் மங்கலம், குடை மங்கலம், வாண் மங்கலம் என்ற பாடல்கள் பாடினார். (இவை தனியே ஆராயப்பட்டுள்ளன.) ஐயம்பெருமாள் சிவந்த கவிராயர் என்பவர் புரூரவச் சரிதை என்ற காவியம் செய்து இவர் அவையில் அரங்கேற்றினார். இவர் இறைவன் திருவடியடைந்த காலத்தை ஒரு பாடல் கூறும்:*

அறுதியிலாப் புகழ்பரவக் கலியுக ஆண்டு
 ஒரு நாலா யிரத்து நானூற்று
அறுபது விகாரியாம் வருடமார்
 கழிமாதம் பூர்வ பக்கம்
மறுவில்சதுர்த் தசியெனும்நா ளிற்கருவை
 யம்பதிப்பால் வண்ண நாதன்
நறுமலர்த் தாட் கன்புடை யோன் வரதுங்கன்
 பரமபதம் நண்ணி னானே.

இதுகூறும் காலம் கலி 4460 (கி.பி. 1359) இது பிழை என்பது வெளிப்படை. வரதுங்கராமர் பட்டமேற்றது கி.பி. 1588. (முடி வெய்தியது கி.பி. 1613 இருக்கலாம்.)

இவர் பாடியனவாகத் தெரிந்த நூல்கள் மூன்று: பிரமோத்தர காண்டம் என்ற புராணம்; கருவையந்தாதிகள் - 16ஆம் நூற்றாண்டு வரலாறு இரண்டாம் பாகம் தோத்திர இலக்கியம் என்ற பகுதியிலும், கொக்கோகம் - அங்கு பிறவகை இலக்கியம் என்ற பகுதியிலும் ஆராயப்படுகின்றன. பிரமோத்தர காண்டத்தை மட்டும் இங்கு ஆராய்கிறோம்.

## பிரமோத்தர காண்டம்

சிவ புண்ணியக் கதைகளைக் கூறுகின்ற ஒரு நூல். வடமொழியில் கந்தபுராணத்தின் மூன்றாம் பிரிவு பிரமாண்ட புராணம், அதன் மூன்றாம் பகுதியே பிரமோத்தர காண்டம்; இது 22 அத்தியாயம் உடையது. பிரசித்தமான வடமொழித் தோத்திரமான சிவகவசம் இதில் உள்ளது: தமிழ் நூலானது, வடமொழியிலிருந்து மொழிபெயர்க்கப்பட்டது என்று சிறப்புப் பாயிரம் கூறும்:

கறங்குதிரைப் பெருங்கடல்சூழ் அவனிபுரத் திகல்கடிந்து
  கலியை மாற்றி
மறந்திகழ இயங்கியவேல் வரதுங்க ராமனியல்
  மதுரைச் சங்கம்
சிறந்தஅறு காற்பீடத் தனிற்பிரமோத் தரகாண்டந்
  தென்சொ லாக்கி
அறந்தழைக்கும் கவிஞர்செவிக் காரமுத மாகஅரங்
  கேற்றி னானே.

மதுரைச் சங்கத்தில் அறுகாற்பீடத்தில் வரதுங்கராம பாண்டியர் தம் நூலை அரங்கேற்றினார் என்று பாடல் கூறுகிறது.

வரதுங்க ராமருடைய குரு ஈசான முனிவர் என்று தொடக்கத்தில் குறிப்பிட்டோம். பிரமோத்தர காண்டத்தில் உள்ள குருவணக்கப் பாடல் பின்வருவது:

தேசான சிவஞானச் செஞ்சுடரால் மும்மலமா
மாசான இருளகற்றி மன்னுயிரைப் புரந்தளித்துத்
தூசானை யுரியசைத்தோன் தொல்சமயம் நிறுத்தும் நிம்பை
ஈசான மாமுனிவன் இணையடியை இறைஞ்சுவாம்.

இந்நூல் பாயிரமும் 22 அத்தியாயங்களும் உடையது. பாடல் தொகை 1323. இதன் அவையடக்கப் பாடல், இறைவனையே விளித்து உன் புகழை யானும் கூறுகிறேன் என்று கூறுகிறது:

அஞ்சனமி டற்றினாய், நின் நிலைமுற்றும் அளவிட் டன்றிச்
செஞ்சொலின் வழுத்தொணாதேல் விதியும் வாய் திறக்கொணாதாம்
விஞ்சையர் எவரும் தத்தம் மதியினின் விபுலங்காறும்
வஞ்சமற் றுரைக்க லாமேல், அடியனும் வழுத் தலாமால்.

பாயிரப் பகுதியில் வழக்கம் போல் நடராசர் துதியும் சிவகாமி யம்மை துதியும் நால்வர் துதி முதலியனவும் சொல்கிறார். முந்நீரில் அப்பர் மிதந்ததை 'வடதளிரின் நாரணன் போல் இனிதமர்ந்த நாவலன்' என்று சுவைபடச் சொல்கிறார். குருவாகிய நிம்பை ஈசான தேவரைத் துதிக்கும் பாடல் முன்னமே காட்டப்பட்டது. முதல் அத்தியாயம் பஞ்சாக்கர மகிமை யுரைப்பது; அதனுள் 4-7 பாடல்களில் நூலுக்குப் பதிகம் போல, அத்தியாயங்களின் பொருளை நிரல்படச் சொல்கிறார். நூலானது திருவைந்தெழுத்து, திருநீறு, உருத்திராக்கம் ஆகிய சிவ சின்னங்களின் பெருமை யையும், பிரதோஷவிரதம் உமா மகேசுவர விரதம், சோமவார விரதம், சிவராத்திரி விரதம் ஆகிய விரதங்களின் பெருமையையும், சிவபூசை உமாமகேசுவர பூசை ஆகிய பூசைகளின் சிறப்பையும், சிருத்திரம், சிவநாமம் போன்றவற்றின் மகிமையையும் கூற வந்தது. மகிமைகளைக் கதைகளாகக் கூறுகிறது. கண்மாட பாதராசன், சீமந்தினி, பத்திராயு முதலியோர் சரித்திரங்கள் பிரசித்தி பெற்றவை. ஆசிரியர் சிவராத்திரி மகிமை கூறும்போது கோகன்னத் தலத்தையே சிறப்பாய்க் கூறுகிறார்.

பெருங்காப்பியங்களை யொத்த நெறியில் ஆசிரியர் நூலை அமைத்திருப்பது பாராட்டத்தக்கது. வசுமதியின் மணங் கூறுகின்ற இடத்து, 14 பாடல்களால் சுயம்வரம் கூறுகின்றார். போர் வருணனை அதிகமான இடங்களில் அத். 4:6 பாடல் 6:8 பாடல்; 13:12 பாடல். சிந்தாமணி யொத்த பழங்காப்பியங்களிற் காண்பது போல, வரிப் பாடல்களும் துதிப்பாடல்களும் இசைக் குரியனவாகப் பல அமைத்திருக்கிறார்; இவை ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வருவனவாயுள்ளன. வஞ்சுளை துதி - சரணம் சரணம் என முடியும் 3 பாடல்; கயிலைத் துதிப் பாடல்; அருள் வேட்டல் 3 பாடல். ஏழாம் அத்தியாயத்தில் கோவை நூல்களிலும் அகப் பொருளிலக்கணத்திலும் கூறும் மரபையொட்டி, காட்சி ஐயம் தெளிவு என்று தொடங்கி, முன்னை ஊழ்வினையினால் மன்றல் எட்டினுள் கந்தருவமணம் முடிவது வரையில் முறையே

*கூறுகிறார். அரசியல் நீதிகள் எங்கும் வற்புறுத்திப் பேசப்படு கின்றன. பத்திராயுவுக்கு அரசியலளித்தது என்ற அத்தியாயம் முழுமையுமே அரசநீதிகளைக் கூறும்; சிலபாடல்கள் கீழே காண்க:*

வேந்தன் முறைதிறம்பின் வேத விதி திறம்பும்;
ஏந்திழையார் தங்கற்பும் இல்லறமும் நில்லாவாம்;
மாந்தர் பசியா லுணங்க மழை வறந்து
பாந்தள் முடிகிடந்த பாரின் விளை வஃகுமால்.

தேவர் நிலைகடவார், மேலோர் திறம் பிழையார்,
நாவி னிரண்டுரையார், நன்கல் லவைபுரியார்,
காவல் முறைதிறம்பார், காமச் செயல் பெருக்கார்,
பூவலயம் காவல் புரியும் புரவலரே.

குரவர் தமைக்காப்பர்; நெய்ந்நன்றி கொல்லார்;
கரவடரைக் காய்வர்; பழி கண்ணோட்டஞ் செய்யார்;
இரவலருக் கீவர்; எதிர்ந்தோர் முனையின்,
விரவு தமதுயிரும் எண்ணார்கள் வேந்தே.

*கோகன்ன வரலாற்றைக் கூறும்போது, விநாயகர் தம் முன் இராவணனைக் குட்டிக் கொள்ளச் செய்தார் என்பதும், அதன் மேல் அவ்வாறு குட்டிக் கொள்வது வழக்கமாயிற்று என்பதும் சொல்லப்பட்டுள்ளன.*

*நாட்டு வருணனைப் பகுதிகள் நூலினுள் பல இடங்களிலும் காணலாம். பாடல்கள் சுவையுடையன:*

கலைமகள் வடிவினை மராங் கவர்ந்தன,
மலைமகள் எழிலினைப் பூவை வாங்கின,
கொலைமகள் கவினை நீ டிலவங் கொண்டன,
அலைமகள் அழகினை அசோக ணிந்தவே.

தேசுறு கிளையின மொழுங்கிற் சேண்வழி
வீசிய சிறையவாய்ப் பறத்தல், வேனில்வேந்து
ஆசைசூ ழுலகங்கொண் டதற்கு நாட்டிய
பாசிலைத் தோரணப் பான்மை போன்றவே.

*நூலில் நிலையாமையை விரிக்கும் பாடல்கள் பல: 10:30 பாடல்கள். இதுபோலவே, நல்வினை தீவினை, சிவபுண்ணியம், சிவத்துரோகம் என்பன தொடர்ந்து பிறவியில் ஈடுபடுத்தித் தங்கள் பலனைத் தந்து கொண்டேயிருக்கும் என்பது பல இடங் களில் விரித்துச் சொல்லப்படுகிறது. விபூதி மகிமையுரைத்த விடத்தில், ஓர் அரக்கன், திருநீறு பட்ட மாத்திரத்தில் அழகிய*

*மானிட வடிவடைந்து, முன்னர் தான் யமவாதனையடைந்து உழுவை, ஞமலி, காகம், கமடம், அரக்கன் முதலான பல பிறவி கள் எடுத்தமை சொல்லுகிறான். இவ்விரிவுகள், ஆசிரியர் சைன நூல்களை ஆய்ந்திருப்பார் என்று கருதச் செய்கின்றன. சோம வார விரத பலனைக் கூறும் பாடல்கள் மிகவும் சிறப்பானவை:*

நித்தியமாய் ஆனந்த உருவமாகி
நிறைவுபடும் பொருளாகி, கறைபடாது
சத்தியமாய், அனைத்துயிர்க்கும் உள்ளீடாகி,
சங்கற்ப விகற்பங்கட் கயலாதாகி,
வைத்தசிவ தத்துவத்தின் இயல்பு தன்னை
வருகுரவன் அருளின்இனி துணர்ந்து வாழும்
அத்தகையர் பிறப்பாழி இடைநின் றேறி
அழியாத சிவகதியில் அடைவ ரன்றே.

*இப்பகுதியையடுத்து, சிவ பரம்பொருள் என்பது மும்மூர்த்தி களையும் கடந்த நிலையிலுள்ளது என்பதைப் பல பாடல்களால் சைவ சித்தாந்தக் கருத்துக்கியைய அழகுபடக் கூறுகிறார்:*

யாவனொருவன் எவ்வுயிரும்
எல்லா உலகங் களுமுடையான்,
யாவனொருவன் கடவுளருக்
கெல்லா முறைமை பூண்டுள்ளான்,
யாவனொருவன் திரிபுரமும்
எரியக் கனகச் சிலை குனித்தான்,
யவனொருவன் விடம் நுகர்ந்தான் –
அவனே எங்கட்கு இறையோனே.

என்றும் எவனி ராசதத்தின்
அயனை ஈன்று படைப்பிப்பான்,
என்றும் எவன் சாத் துவிதத்தின்
அரியை ஈன்று புரப்பிப்பான்,
என்றும் எவனோ தாமதத்தின்
அரனை யீன்று துடைப்பிப்பான்
என்றும் அவனே எம்குலத்தை
இணைத்தாள் நீழல் அளிக்குமால்.

*பாடல்கள் இவருக்கு அழகாய் அமைகின்றன. இவரும் அரச ரானமையால், அரசைப் பற்றிச் சொல்லுமிடமெல்லாம் சிறப் பாயிருக்கும்.*

வடுவிலாப் பெரும்புகழ் வயங்க வையகத்
திடுபெயர்த் தசாருகன் என்னும் மாண்பினன்,
தொடுகழற் றாளினான், புலவுச் சோரிவேல்
அடுகடற் றானையான், ஆளி மொய்ம்பினான்.

நாளினின் மனுமுறை நடாத்தும் ஆணையான்,
வாளினிற் றெவ்வர்தம் வலியை மாற்றினான்,
தோளினில் வரைகளைத் துளங்கு மாற்றலான்
வேளினின் வனப்பினான், தவத்தின் மேன்மையான்.

*நூலில் சொல்லப்பட்ட செய்திகளுட் சில குறிப்பிடலாம். மனைவி சொன்ன நன்மொழிகளைக் கேட்ட ஓர் அரசன், அவளையே உபதேசங் கேட்கிறான். அவள் முறையன்று ஒன்று கூறி ஒரு முனிவனிடம் அனுப்புகிறாள்:*

மாதர்பால் மெய்ம்மொழி மகிழ்நர் கேட்பது
நீதியன்று: அரனருள் நிறைந்த தேசிகன்
மேதகு தர்க்கர்பால் விழைவினாற் பெறப்
போதுக என்றனள்; பொருந்தி னானரோ.

*வேடன் சிவபூசை என்ற அத்தியாயத்தில், 'சிவபூசை செய்வது எப்படி?' என்று கேட்ட வேடனுக்கு, ஓர் அரசன், 'சிவலிங்கத்தை நீராட்டிக் கந்தம் சாற்றி, புகை தீபம் நல்கி, மாந்தரைச் சுட்ட சாம்பல் கொணர்ந்து முன்வைத்துப் போற்றிப் பால் அடிசில் நல்கு' என்று ஏளனமாய்ச் சொல்லவும், அவன் அதை உண்மையென்றே கொண்டு, செய்ய முற்பட்டு, சாம்பர் கிடைக்காது தவிக்கும்போது, அவன் மனைவி தன்னையே சுட்டுச் சாம்பலாக்கி அளித்தாள் என்ற கதை மிக்க உருக்கமாயுள்ளது.*

*சைவ சமயத்தில் சரியைக்கான சாத்திரப்பகுதி கூறும் நூல்கள் பெரும்பகுதி புராணங்களே. அவற்றுள் பிரமோத்தர காண்டம் முதலிடம் வகிக்கிறது. இந்த நூற்றாண்டின் தொடக்க காலம் வரையில் சோழநாட்டில் இந்நூல் ஏடு இல்லாத, ஏடு வைத்துப் பூசிக்காத, சைவர் வீடு இல்லை. நூல் மிகவும் நல்ல நூலாயமைந்தது. ஆங்காங்கு மிகச் சிறப்பான இலக்கியச் சுவை பொதிந்த பாடல்களும் இதனுட் பல. புராணம் என்றே இதை இந்த நூற்றாண்டில் ஒதுக்கிவிடுகிறார்கள். புராணமாயினும், தமிழ் கற்பவர்களால் இது இன்னும் அதிகமாய்ப் பயிலத்தக்கது. பயிற்சி குறைவாயிருக்கும் காரணத்தாலேயே இதைச் சிறிது விரிவாக இங்கு எடுத்துக் காட்டினோம். இரு சிறப்பான பாடலைக் காட்டி இப்பகுதியை முடிப்போம்:*

கண்ணுதலா லயநோக்குங் கண்களே கண்கள்;
கறைக்கண்டன் கோயில்புகுங் கால்களே கால்கள்;
பெண்ணொருபா கனைப் பணியுந் தலைகளே தலைகள்;
பிஞ்ஞகனைப் பூசிக்குங் கைகளே கைகள்;

பண்ணவன்தன் சீர்பாடும் நன்னாவே நல்நா;
பரன்சரிதை யேகேட்கப் படுஞ்செவியே செவிகள்;
அண்ணல் பொலங்கழல் நினைக்கும் நெஞ்சமே நெஞ்சம்:
அவனடிக்கீழ் அடிமைபுகும் அடிமையே யடிமை.

குணமிலராயினும், குலீனராயினும்,
மணமலி கருங்குழன் மகளிராயினும்,
பணமணி அரவரைப் பரமனன்பரே
கணமலி உலகெலாம் பரவுங் காட்சியார்.

இதேபோல அடியார்கள் செய்கின்ற அற்பமான பூசையையுங் கூட மிகச் சிறந்த வழிபாடாக இறைவன் கொள்ளுகின்றான் என்ற பாடல் மிகவும் சிறப்பானது:

நினைவரும் பாத கங்கள் ஐந்தையும் நீக்கி இன்பக்
கனை கடல் துளையப் பண்ணும் கண்ணுதல் கருத்தி லாது
தினையளவு அடியார் செய்த சிற்றியற் பூசை யேனும்
பனையள வாகக் கொள்ளும் பரமன்எம் பரமன் ஆவான்.

## பதிப்பு

நூல் மூலமும் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் செய்த உரையும் முதல் பதிப்பாகத் தில்லையம்பூர் சந்திரசேகர கவிராச பண்டிதர் முன்னிலையில் பரிசோதிக்கப்பட்டு 1878இல் வெளி வந்தது. 1897இல் இது சந்திரசேகர பண்டிதர் உரை என்றே பிழையாக அச்சிடப்பட்டும் வெளிவந்திருக்கிறது. இவற்றின் பின் குஜிலிப் பதிப்பாகப் பல முறை அச்சிடப்பட்டுள்ளது. யாவும் அச்சுப் பிழைகள் மலிந்தவை. திருத்தமான பதிப்பு இனித்தான் வரவேண்டும். பிரமோத்தரகாண்ட வசனம்: வ.த. சுப்பிரமணிய பிள்ளை இரண்டாம் பதிப்பு: 1928.

## சிவ கவசம்

பிரமோத்தர காண்டத்தில் மிகவும் சிறப்பான ஒரு பகுதி அதிலுள்ள சிவ கவசம்; சிவ கவசம் உரைத்தது என்பது, நூலின் 12ஆம் அத்தியாயம்; 20 பாடல்களால் இக்கவசம் கூறப்படு கிறது. உடலின் ஒவ்வொரு பாகத்தையும் குறிப்பிட்டு, இதை இப்பெயருடைய இவ்விறைவன் காக்க என்று கூறுவது. முதல் பாட்டு பின்வருவது:

அகிலநா யகனாய் ஞான ஆனந்த ரூபி யாகித்
துகள்தரும் அணுவாய் வெற்பின் தோற்றமாய் உயிரைஎல்லாம்
தகவுடன் அவனி யாகித் தரிப்பவன் எம்மை இந்த
மகிதல மதனில் தீமை மருவிடா தருளிக் காக்க.

இக்கவசம், நூல் தோன்றிய நாள் தொடங்கிச் சைவ மக்களின் வழிபாட்டுக்கும் பாராயணத்துக்கும் உரியதாய் விளங்குகிறது.

## வரதுங்கராம பாண்டியர் மனைவி

இவர் இயற்பெயர் சிவகாமசுந்தரி என்று சம்பிரதாயக் கதையில் சொல்லப்படுகிறது என்று முன்னமே குறிப்பிட்டோம். இப்பாண்டியர் மனையில் வரதுங்கர் தேவியாகப் புகுந்த இவருக்கு, எவ்விதத்திலும் பிறருக்குக் குறைவில்லாத தமிழ்ப்புலமை இருந்தது என்று நாட்டு வழக்குக் கூறும்* நைடதம் பாடிய' அதிவீர ராம பாண்டியர் முதலில் தமிழ்நூல் பாடிக்கொண்டு வந்தபோது, தமையன் வரதுங்கராமரிடம் அப்புலமையைக் காட்டிப் பாராட்டுப் பெற வேண்டுமென்ற எண்ணம் உண்டா யிற்று. அப்படியே நூலை அவருக்கு அனுப்பி வைத்தார். அவர் அதை ஏற்காமல் மனிதரைப் பாடுவது வீண் என்று உணர்த்திய செய்தி முன்னர்க் கூறப்பட்டது. அதுவரையில் அவர் பாடி யிருந்த பகுதி, தொடக்கத்திலிருந்து புனல்விளையாட்டுப்படலம் இறுதியாக, படலம் 19, பாடல் 940. நூல் இதுகாறும் மிக்க விரி வாக அமைந்திருந்தது. ஆனால் தமையன் இதை ஒப்புக்கொள்ள மறுத்தபடியால், அதிவீரருக்கு நூலை முன் சென்ற நெறி யிலேயே விரித்துப் பாடி முடித்தலில் மனம் செல்லவில்லை. பிற்பகுதியைச் சுருக்கிப் பாடி முடித்தார். எவ்வளவு சுருக்கினார் என்பதைப் பாடல் தொகையால் அறியலாம். பாடிய கதைப் பகுதி கொஞ்சம். பின்னர்த்தான் கதையே விரிகிறது. ஆனால் அதிவீரர் மீதியுள்ளதை 233 பாடல் கொண்ட 9 படலங்களாகப் பாடி முடித்தார். தமையன் பழித்தபோதிலுங்கூட, புலமை மிக்க தமையனின் மனைவியிடமாவது பாராட்டுதலைப் பெறலாம் என்று ஆவல் கொண்டார். அதன்மேல் முடிந்த நூலை இவருக்கு அனுப்பி வைத்தார். கண்ணுற்ற இவ்வம்மையார், அதில் 'சென்று

* தமிழ் நாவலர் சரிதை, ஔவை - துரைசாமிப் பிள்ளை பதிப்பு, 1949. பக்கம் 141 - 2. பாடல்கள் 168 - 170. தனிச் செய்யுள் சிந்தாமணி, கந்தசாமிக் கவிராயர் 1908, பக்கம் 114.

தேய்ந்திறுதல்' என்ற குற்றம் இருப்பது நோக்கி, 'இது நாய் வேட்டைக்கு விரைந்து ஓடிச்சென்று இரைக்க இரைக்க இளைத்து நின்றாற் போன்ற தன்மை உடையது' என்று சொல்லி யனுப்பினாராம். இது அதிவீர ராமருக்கு மிக்க மனவேதனை யைத் தந்திருக்கும் என்பதில் ஐயமில்லை.

இவர் பாடியனவாக மூன்று பாடல்கள் வழங்குகின்றன. மூன்றையும் இவர் தம்முடைய கணவர் மதுரை அச்சுதப்ப நாயக்கருக்குப் படைத் துணையாகச் சென்று பாசறையில் தங்கி யிருந்தபோது, அவருக்குத் தாம் அனுப்பிய பணியாரக் குடத்துள் ஓர் ஓலை நறுக்கில் எழுதி வைத்தனுப்பினார் என்று வழங்கும்:

என்னையவர் அறமறந்தும் யானவரை
மிகநினைந்திங் கிருந்து வாட
முன்னைவினைப் பயன்தானோ, இப்பிறப்பிற்
செய்ததவம் முடிந்த வாறே,
கன்னன் மதன் அபிராமன் வரதுங்க
ராமனியற் காசி நாட்டில்,
அன்னவயற் குருகினங்காள், இனியெவ்வாறு
உயிர் தரித்திங் காற்று மாறே.

செப்பாரு முகிழ்முலையார் எல்லாரும்
கணவருடன் சேர்ந்து வாழ,
ஒப்பாரு மில்லா என் கணவனுடன்
யான்கூடி உறவா டாமல்,
எப்பாலும் மிகுகாமத் துயராலும்
நாடோறும் மெலிந்து வாடி
இப்பாடு படவென்றோ இறைவனென்
தலையோட்டில் எழுதி னானே.

எண்திசா முகமுந் திங்கள்
இளநிலா வெள்ளங் காயக்
கொண்டமால் பெருகுந் தோறும்
கொழுங்கணீர் முலையிற் கோப்பப்
பண்டுநாம் அறியாக் காமத்
துயரினாற் படுவ தெல்லாம்
வண்டுகாள், உரையிர் உங்கள்
வரதுங்க ராம னுக்கே.

## அதிவீர ராம பாண்டியர்

**வரலாறு**

தமிழ் இலக்கிய வானில் மிக்க பிரகாசத்தோடு விளங்கும் சுடர்களுள் இப்பாண்டியர் ஒருவர். சமீப காலம் வரையில் இவர் பாடிய வெற்றிவேற்கையைப் படிக்காத சிறுபிள்ளைகளும் இவர் பாடிய நைடதத்தைப் படிக்காத பள்ளிற் சிறாரும் இருந்த தில்லை. சில வரலாறுகள் இவர் திருநெல்வேலிப் பெருமாள் புதல்வர் என்று கூறிய போதிலுங்கூட, இவர் திருநெல்வேலிப் பெருமாளின் சுவிகாரப் புதல்வர் என்றும், பராக்கிரம பாண் டியனின் மூன்றாம் புதல்வர், வரதுங்கராமரின் தம்பி என்றும் முந்திய பகுதிகளில் காட்டினோம். திருநெல்வேலிப் பெருமாள் வீரவெண்பாமாலை பாடப்பெற்றார் என்பதை வேறிடத்தில் விளக்கிக் கூறியிருக்கிறோம். இவர் பிறந்த நட்சத்திரம் புனர் பூசம். இவரது இயற்பெயர் அதிவீர ராமன். சடைய வர்மன் என்ற பட்டமும் உண்டு. பட்டமேற்றது தென்காசியில், ஆண்டு சகம் 1486 என்பது பின்வரும் பாடலால் அறியலாம்:

> **சகன்காலம் ஆயிரத்து நானூற்று எண்பத்தாறிற்**
> **சலதி சூழ்ந்த**
> **செகங்காண இரத்தாக்கி சித்திரையில் இருபதாந்**
> **தேதி வேந்தர்**
> **புகழ்ந்தேவல் செய்பூர்வ திதியாறில் முதல்வாரம்**
> **புனர்பூ சத்திற்**
> **சுகந்தாதி புனையழகன் சீவலவேள் எனமகுடம்**
> **சூடினானே.***

இதில் சொல்லப்பட்டது சகம் 1486, ரத்தாட்சி, சித்திரை 20; இதற்கு நேரானது கி.பி. 1564 மே 2. அதிவீர ராமர் சுவீகாரம் போனபின் நெடுநாள் கழித்து நெல்வேலிப் பெருமாளுக்கு ஒரு புதல்வன் பிறந்தான் என்றும், அவன் பெயர் வல்லபன் என் றும் அறிகிறோம். அதிவீர ராமர் பட்டமேற்ற பின், பின்னும் எட்டாண்டுகள் நெல்வேலிப் பெருமாள் இருந்தார் என்று சரித்திரம் கூறுகிறது. சிவலவேள் என்ற பட்டம் தாங்கி இவர் மகுடம் சூடினார் என்பது பாட்டு. ஸ்ரீ வல்லபன் என்பதன் மரூஉ மொழியே சீவலன் என்பது: சீவலமாறன் என்றும் இவர்

* தென்காசி விசுவநாதர் கோயில் கல்வெட்டு.

வழங்கப்பெறுவார். 'பாண்டியில் இரண்டு' என்ற ஒரு பழமொழியைச் சிலர் எடுத்துக்காட்டி, அக்காலப் பாண்டியர் கருவையிலும் தென்காசியிலும் ஆட்சி புரிந்ததை* இது காட்டுகிறது என்பர். தென்காசியில் ஆட்சிபுரிந்த அதிவீர ராமருக்குக் கொற்கையும் ஒரு நகராயிருந்தது; தம்மை 'வீரராமன் கொற்கையாளி குலசேகரன்' என்று இவர் வெற்றி வேற்கையில் கூறிக்கொள்வதும் காண்க. இவர் 40 ஆண்டுகளுக்கு மேல் ஆட்சிபுரிந்தார்.

### புலமை

அதிவீர ராம பாண்டியர் ஓர் அரசராயிருந்தது போலவே, தம் உடன் பிறந்தாரையொப்பப் பெரும் புலவராயுமிருந்து பல நூல்கள் செய்தார் என்று வரலாற்றால் அறிகிறோம். அது போலவே அக்காலம் வாழ்ந்த புலவர்களை அதிகம் ஆதரித்த வள்ளலாயும், புலவர்களின் புலமையை அளந்தறியவல்ல திறமை வாய்ந்தவராயுமிருந்தார் என்று பிற புலவர் வரலாறுகளால் அறிகிறோம். சேறைக் கவிராச பிள்ளை என்ற பெரும் புலவர் தென்காசி வந்து, அதிவீர ராமனிடத்துத் தம் புலமையைப் புலப்படுத்தி இவரால் ஆதரிக்கப்பெற்று, நூலும் பாடி வாழ்ந்திருந்தார் என்பது அவர் வரலாற்றினால் நன்குணரலாம்.❖

இவர் தம் உடன் பிறந்தார் இருவரையும் போலச் சிவபக்தர் என்பது மட்டுமல்லாமல், அவர்களினும் பார்க்க பக்தி மிக்கவராயிருந்தார் என்பதும் நன்கு விளங்குகிறது. சிறந்த சிவ

---

* சரித்திரச் செய்திகள் பலவற்றைச் சதாசிவபண்டாரத்தார் எழுதிய பாண்டியர் வரலாறு நன்கு தெளிவு செய்கிறது. அதிவீரராமன் தென்காசியில் தன் தந்தையை நினைவுகூரும் பொருட்டுக் குலசேகரமுடையாராலயம் ஒன்றை எடுப்பித்தான் என்று அவர் கூறி, இது நெல்வேலி மாறனை நினைவு கூர்வது என்று எழுதுகிறார், வரிசையாக ஆட்சிபுரிந்த பாண்டியரை முறையே சடையவர்மன் பராக்கிரம குலசேகர பாண்டியன் (1543 - 52), நெல்வேலி மாறன் (1552 - 64), அதிவீர ராமன் (1564 - 1610) என்று இவர் குறிப்பிட்டுள்ளமையால், குலசேகரமுடையாராலயம் பராக்கிரம குலசேகரனுக்கென்றும் நெல்வேலி மாறனுக்கல்லவென்றும் கருத இடமுண்டு. பராக்கிரமனைக் குலசேகரனென்று இவர் குறிப்பிட்டாரேயன்றி, நெல்வேலி மாறன் பெயர்களுள் குலசேகரன் என்பது ஒன்றாயிருந்த போதிலும் குலசேகரன் என்ற பெயரை இம்மாறனுக்குக் குறிப்பிடாமல், பராக்கிரமனுக்கே இவர் குறிப்பிட்டிருப்பது இங்கு கவனிக்கத்தக்கது. ஆகவே இவன் குலசேகரமுடையாராலயம் எடுத்தது தன் சொந்தத் தந்தைக்கே என்ற கருத்து வலியுறுகிறது.

❖ எமது 16ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு இரண்டாம் பாகம்.

புராணங்களைப் பக்திச் சுவையும் தமிழ் வளமும் சாத்திரக் கருத்தும் ஒருங்கு ததும்பும் பெரு நூல்களாக இரு நூல்கள் இவர் பாடியுள்ளமையால் இதை அறிகிறோம். இவருக்கு ஞான குரு வாயிருந்தவர் சுவாமி தேவர் என்ற சிவாசாரியர். அரசராயிருந்த இவர், பரமசிவமே மானுடச் சட்டை தரித்துச் சுவாமி தேவனாக எழுந்தருளி வந்து தமக்கு அருள்செய்தது என்று தாம்செய்த பெருநூல் மூன்றிலும்* அவருக்கு வணக்கஞ் சொல்லியிருப்பது இவரது தீவிர பக்குவத்தையும் குருபக்தியையும் எடுத்துக் காட்டும். மேலும், பெரும் புராணங்களை மொழிபெயர்க்கும் ஆற்றல் வாய்ந்திருந்த இவ்வரசர் சிறப்பான வடமொழியறியவும் பெற் றிருந்தாரென்பதும் நன்கு தெரிகிறது. அன்றியும், அதிவீர ராமர் ஆட்சியிலெழுந்த கல்வெட்டுக்களுள் ஒன்று நைஷதம் ராம கிருஷ்ணர் என்ற அந்தணருக்குத் தானம் கொடுத்த செய்தி யைக் கூறுகிறது. பெயராலேயே அவர் வடமொழிப் பண்டிதர் என்றும், அவரிடம் நைடதத்தைக் கற்றே அதிவீர ராமர் தம் நைடதக் காவியத்தைப் பாடினார் என்றும் கருதலாம்.

இனி இவருடைய தமிழ்ப் புலமையை அடிப்படையாக வைத்து, இவர்மீது அகத்துறைப் பாடல்கள் பல புனையப் பட்டன என்று வரலாறுகள் கூறும். வரதுங்க ராமனைப் போல இவர் பல மனைவியரை மணக்கவில்லை; ஒரே மனைவியை மணந்து வாழ்ந்தார். எனினும், சிற்றின்பச்சுவை பொதுளிய நைடதம் பாடிய காரணத்தால் இவர்மீது இவ்வாறு பாடல்கள் எழுந்தனபோலும். இப்பாண்டியர் காலத்தில் நடுநாட்டில் ஆறை (ஆறகழூர்) என்ற ஊரைத் தலைநகராக வைத்துச் சிற்றரசராய் ஆண்ட வாணபரம்பரையினர் பாண்டியருக்கும் என்றும் பகைவ ராயிருந்து வந்தனர். இவ்வாணர் மாவலிவாணர் எனவும் படுவர்; இவர்கள் விசயநகர மன்னரின் கீழ்த் தம் ஆட்சியை நடத்தி வந்தனர். அதிவீர ராமர் காலத்தில் ஏகம்பவாணன் என்பவன் ஆறகழூர்த் தலைவனாயிருந்தான். வலுவிழந்த பாண்டியர் அவனுக்குப் பணிய வேண்டிய நிலைமையில் இருந்தனர். பாண்டியன் தன்னைப் பணிந்தமைக்கு அடையாளமாக, ஏகம்ப வாணன் பாண்டியனுடைய வேப்பமாலையைப் பெற்று வருமாறு நான்கு தாதியரை அனுப்பினான். அவர்கள் ஒவ்வொருவராய் ஒவ்வொரு பாடல் வீதம் பின்வரும் பாடல்களைப் பாடினர்:

---

* இந்த மூன்று பாடல்களையும் பின்னே அந்தந்த நூலாராய்ச்சிப் பகுதியில் காண்க.

தென்னவா, மீனவா, சீவலமா றா, மதுரை
மன்னவா, பாண்டி வரராமா, – முன்னம்
கரும்புக்குத் தாரளித்த தூயதமிழ் நாடா,
கரும்புக்கு வேம்பிலே கண்.

மாப்பைந்தார்க் கல்ல, முத்து வண்ணத்தார்க் கல்ல, வஞ்சி
வேப்பந்தார்க் காசைகொண்டு விட்டாளே, – பூப்பைந்தார்
சேர்ந்திருக்கும் நெல்வேலிச் சீவலமா றா, தமிழை
ஆய்ந்திருக்கும் வீரமா றா.

தேம்பா கிலும் இனிய சொல்லிக்கு நீபயந்த
வேம்பா கிலுமுதவ வேண்டாவோ? – தேம்பாயும்
வேலையிலே வேலைவைத்த மீனவா, நின்புயத்து
மாலையிலே மாலைவைத்தாள் மான்.

*(சீவலமாறா என்றமையால் அதிவீர ராமர்; நெல்வேலி என்றமையால், நெல்வேலிப் பெருமாள் இடத்தில் வந்து ஆட்சி புரிந்த இவராகவே கொள்ளவேண்டும். வரராமன் என்பதும் இவரையே குறிக்கும் என்பர். வீரராமன் என்பது வரதுங்க ருடைய பெயராயிருப்பினும், பொதுவாக, தமிழை ஆய்ந்தவர் அதிவீர ராமர் ஆதலால் இப்பாடல்கள் இவரைக் குறிப்பிடு கின்றன எனக்கொள்வதே பொருத்தம்.)*

*இந்தக் காதல் துறைப் பாடல்களுக்குப் பாண்டியன் இணங்கானாக, நான்காம் தாதி, பின்வரும் பாடல் பாடினாள்; இது பாண்டியரைப் பழித்த பாட்டு:*

இலகு புகழாறை ஏகம்ப வாணன்
அலகை வரும்வரும்என் றஞ்சி – உலகறிய
வானவர்கோன் சென்னியின்மேல் பண்டு வளைஎறிந்த
மீனவர்கோன் கைவிடான் வேம்பு.

*இதுகேட்டுப் பாண்டியன் வேப்பமாலை கொடுத்தான் என்பது கதை.**

---

* *இப் பாடல்களும் வரலாறும் தமிழ் நாவலர் சரிதையில் சொல்லப் பட்டுள்ளன. 'பூதத்துணைகொண்ட போர்வாணன்' (பெருந்தொகை 1344) எனப்படுதலால், வாணரது போர் வெற்றிக்குப் பூதமொன்று துணைபுரிந்து வந்ததாக அக்காலத்தில் கருதப்பட்டது என்பது தெரியலாம்: அக்கருத்தே பற்றி 'ஏகம்பவரணன் அலகை வரு மென்றஞ்சி' என ஈண்டுக் கூறப்பட்டதென்க - என்பது மு. இராக வையங்கார் எழுதியுள்ள குறிப்பு.*

அதிவீர ராமனைப் புகழ்ந்து அகத்துறையில் அமைந்த வேறிரு பாடல்களும் இங்கு குறிப்பிடத்தக்கன. ஒன்று:

ஒருவா ணுதல்பண் டுளங்களிக்க
 உயர்வான் முகடு கிழித்தெழுந்து
மருவார் தருவின் மரங்கொணர்ந்த
 மதுரை வடிவேல் அதிவீரா!
அரவார் வேம்பின் பசுங்கண்ணி
 அந்தி இறைவிக் கருளென்னா
இரவா விருக்க நீயளித்தற்கு
 இரங்கா திருந்தாய் இதுநாளே.

சேதுபுராணம் பாடிய நிரம்ப அழகிய தேசிகர் அதிவீர ராமர் காலத்தவர் என்று சிலர் கூறுவர். திருப்பரங் குன்றத்தில் சிறிது காலம் தங்கியிருந்த இவர் வரதுங்க ராமர் காலத்தவரும் அவரோடு கல்வி பயின்றவருமான சிதம்பரநாத கவிக்குப் பூசை எழுந்தருள்வித்த ஆசிரியர் என்பதை அக்கவியின் வரலாற்றில் குறிப்பிடுவோம். தேசிகர் இப்பாண்டியர் அவையிலிருந்திருக் கலாம்; இருந்தார் என்பதற்குச் சான்று இல்லை. திருவிளை யாடற் புராணம் பாடிய பரஞ்சோதியும் இக்காலத்தவர் என்ற கருத்து முழுமையும் பிழையாகும்; முனிவர் காலம் 18ஆம் நூற்றாண்டின் தொடக்கம்; அதிவீர ராமருக்கு 150 ஆண்டுகள் பிற்பட்ட காலமாகும்.

மேலும் ஒரு செய்தி குறிப்பிடுதல் பொருத்தமாயிருக்கும். 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த தத்துவப் பிரகாசர் என்ற புலவரைக் குறை கூறி, தோணியப்பர் என்பவர், 'குட்டு தற்கோ பிள்ளைப் பாண்டியன் இங்கில்லை' என்ற தொடக்க முடைய பாடலைப் பாடியவரென்று அவர் வரலாற்றினால் அறிகிறோம்.* அப்பாடல் குறிப்பிடும் புலவர் மூவர்: பிள்ளைப் பாண்டியன், வில்லிபுத்தூரர் (வில்லி), ஒட்டக்கூத்தர் என்போர். இவர்களுள் பின்னிருவரும் முறையே 14, 12 நூற்றாண்டுக்குரிய வராவர். பிள்ளைப் பாண்டியன் என்பது அதிவீர ராம பாண் டியர் என்பது சிலர் கருத்து இப்பாண்டியர் பட்டத்திற்கு வந்த ஆண்டு கி.பி. 1564. அப்படியானால் முற்காட்டிய தோணியப்பர் காலத்தில் இவர் இளம் பிள்ளையாயிருந்திருப்பார். அரச மர பினருக்கு இளமையில் வழங்கிய பெயர் பிற்காலத்தில் வழங்கு வதில்லை. பிரசித்தி பெற்ற இராசராசன் இயற்பெயர் அருள்

* எமது தமிழ் இலக்கிய வரலாறு, 16ஆம் நூற்றாண்டு, இரண்டாம் பாகம்.

*மொழித்தேவன். அப்படியே பாண்டியரிடையிலும் வழக்குண்டு. அதிவீர ராமர் இளம்பிள்ளையாயிருந்தபோது, போலிக் கவி களைத் தலையில் குட்டிப் பிழையை எடுத்துக் காட்டி வெட்கச் செய்தார் என்பது பொருந்தக் கூடியதே: பிற்காலத்தில் அத்தகைய சிறந்த புலமை அவரிடத்தில் காணப்படுகிறது. எனவே, இவர் இவ்வாறு போலிகளைத் தண்டித்தாரென்றும், பிள்ளைப் பாண்டியன் என்று குறிப்பிடும் புலவர் இவரே என்றும் சொல் வதில் இழுக்கில்லை. பெரியவர்கள் குட்டி அவமதிப்பு ஏற்படுத்த மனந்துணியார்; இளம்பிள்ளையே இவ்வாறு செய்தல் இயற்கை என்ற அமைதியும் கருதுக.*

## கல்வெட்டுச் செய்திகள்

*தென்காசிக் கோயிற் கல்வெட்டுப் பாடலொன்று அதிவீர ராமர் செய்த ஒரு தானத்தைக் குறிப்பிடுகின்றது:*

அத்தர் தென் காசிகண் டோன்கண்ட ஆலயமும்
அடியாரும் வாழ்வு பெறவந்து
அழ்கன் அதி வீரரா மன்சருவ மானியம்
தாகக் கொடுத்த படிதான்
சித்திரைப் பரணியூர்த் தெண்ட தோடப்பொன்
திரும்பக் கொடுத்த ஊரில்
செங்கோட்டை யார் கொண்ட பகுதியும் நிறுத்தித்
திருக்கோயி லிற்பகுதியாய்
வைத்ததை யறக்கழித் தாயங் கணக்குடன்
மகா நவமி திருநாளிடை
வந்த காணிக்கைபாட் டப்பகுதி காணம்பல்
வரியிவை யெலாங்கழித் துப்
பத்தியாய்க் குணராம நாதர்க்கு மேற்படி
பணங்கழித் தடியார் வீட்டுப்
பணமுஞ் கழித்துப் படிச்சருவ மானியப்
பட்டயமும் அருளி னானே.

*கோச்சடிலவர்மரான திரிபுவனச் சக்கரவர்த்தி கோநேரின்மை கொண்டான் திருநெல்வேலிப் பெருமாள் வீரவெண்பா மாலை யான் தன்மப் பெருமாள் குலசேகர தேவர் அழகப்பெருமாள் அதிவீர ராமரான ஸ்ரீவல்லப தேவருக்கு ஆண்டு' என்பது சாசனத் தொடக்கம்.*

*தென்காசி விசுவநாதர் கோயிலுக்கு மேல்பால் ஒரு தளி எடுப்பித்து அதில் குலசேகர நாதரையும் குழல்வாய் மொழி*

மங்கை நாச்சியாரையும் பிரதிட்டை செய்தார். இதன் அருகே ஒரு விண்ணகரத்தையும் எடுப்பித்தார்.

**நூல்கள்**

இவர் செய்தனவாகத் திட்டமாய் இன்று தெரிந்தவை வெற்றிவேற்கை என்ற சிறு நீதிநூல், நைடதம் என்ற காவியம், காசி கண்டம், கூர்ம புராணம் என்ற இரு புராணங்கள் ஆக நான்கு நூல்களே. இதுவரை வரலாறெழுதினோர், வரதுங்க பாண்டியர், அதிவீர ராமர் என இரு பாண்டியரே இருந்தனர் என்றும், அவர்களுள் வரதுங்கராமன் செய்தது ஒன்றே என்றும், ஏனைய நூல்கள் யாவும் அதிவீர ராமர் செய்தன என்றும் எழுதியுள்ளனர். இந்த நிலையைத் தெளிவுபடுத்திச் சிறப்புப் பாயிரங்களையும் முக்கிய சான்றாகக் கொண்டு, பாண்டியர் மூவர் என்றும் அவர்கள் செய்த நூல்கள் இவை என்றும் தொடக்கத்தில் வரையறுத்துக் காட்டினோம். நைடதம் பாடிய காரணத்தால் அதிவீர ராமரே கொக்கோகம் பாடினார் என்றும், மதனக் கோவை என்ற ஒரு காம நூலும் இவர் பாடினார் என்றும், சொல்லியிருக்கிறார்கள். கொக்கோகம் வரதுங்கராமர் பாடியது . மதனக்கோவை என்றொரு நூல் இல்லை.

இனி அதிவீர ராமர் பாடிய நூல்களை விரிவாக ஆராய்வோம்.

## காசி கண்டம்

அதிவீர ராம பாண்டியர் செய்த இரு புராணங்களில் ஒன்று. இதை இவர் பாட நேர்ந்தது பற்றிய ஐதிகக் கதையை வரதுங்க ராமர் வரலாற்றில் கூறினோம். சிறப்புப்பாயிரம் ஆசிரியர் பெயர் கூறும்:

> புவிபுகழும் காசிகண்டம் பொருவில் பரா சரன்புதல்வன்
> புகன்ற வாறே
> செவிவழியின் அமுதுகுத்த தெனமதுரம் பொழிதமிழால்
> தெரித்தல் செய்தான்
> உவவுமதில் குடைநிழற்ற ஓராழி திசைஉருட்டி
> ஒலிநீர் வேலை
> அவனிபுரந் தருள்வழுதி அதிவீர ராமனிகல்
> அரசர் ஏறே.

வடமொழிச் சிவபுராணம் பத்தினுள் ஒன்றான காந்தம், சனத் குமாரம், சூதம், பிரமம், விஷ்ணு, சங்கரம், சூரம் என ஆறு சங்கிதை கொண்டது. இவற்றுள் சங்கர சங்கிதை பன்னிரு

*பிரிவுடையது. பிரிவு கண்டம் எனப்படும். பன்னிரண்டில் நான்காவது காசிகண்டம்; இதன் மொழிபெயர்ப்பே இத் தமிழ்ப் புராணம். இதுவும் பூர்வம் உத்தரம் என இரு பெரும் பிரிவுகளையும், சிறு பிரிவுகளான அத்தியாயம் நூறும், பாடல் 2526 உம் கொண்டது. பூர்வகண்டம் அத்தியாயம் 41, பாடல் 1209; உத்தரகண்டம் அத்தியாயம் 59, பாடல் 1317.*

*பாயிரப் பகுதியில் பிற புராணங்களை விட இதிற் சிறிது விரிவு ஏற்பட்டிருக்கக் காண்கிறோம். அறுபத்து மூவருக்குத் தனித் துதியும், சிவனடியார் வணக்கமாக இரு பாடல்களும், வாழ்த்துப் பாடலொன்றும் இங்கு அமைத்திருக்க காண்கிறோம். இவருடைய குருவாகிய சுவாமி தேவர் வணக்கப் பாடல் பின்வருவது:*

திருக்கிளர்வெண் பிறைக்கொழுந்தும் செஞ்சடையும் மறிமானும்
திரள்தோள் எட்டும்
உருக்கிளர்வெம் புலியதளும் கரந்துமா னுடவடிவின்
உலகிற் போந்து
மருட்கிடனாம் எனைப்பிணித்த வல்வினையின் தொடரனைத்தும்
மாய நூறி
அருட்கடைக்கண் அளித்தாண்ட சுவாமிதே வன்திருத்தாள்
அகத்துள் வைப்பாம்.

*பூர்வகண்டத்துள் அகத்தியர் விந்தவரையை அடக்கியது, துருவன், கலாவதி, சிவசர்மா, வயிரவன் தண்டபாணி வரலாறு கள் சொல்லப்படுகின்றன. சிவசன்மாவுக்கு யம தூதர் ஏழு கிரகங்களின் உலகங்கள், திக்குப் பாலகரின் எட்டு உலகங்கள், மக - சன - தவ - சத்தியலோகங்கள், சத்த இருடிகளின் உலகங்கள் ஆகியவற்றைக் காட்டுகின்றனர். தீர்த்த மகிமை, முத்தி தரும் சத்தபுரிகள், மணிகர்ணிகை, கங்கை, வாராணசி ஆகியவற்றின் சிறப்புக்கள் சொல்லப்படுகின்றன. சிறப்பாக பிரமசரியம், இல் லொழுக்கம் (பலமுறை), மகளிரிலக்கணம் (எண் வகை மணங் கள்), யோக நிலை, காலம் அறிதல் ஆகிய பொருள்களும் உரைக்கப்படுகின்றன*

*உத்தர கண்டத்தில், தபோதானன் வரலாறும் அடுத்து ஆதித்தர் வரலாறும், இரத்தினேசன், கிருத்திவாதேசன், துர்க்கன், திரிதிகை, துர்த்தமன், கங்களாகேது ஆகியோர் வரலாறுகளும் சொல்லப்பட்டுள்ளன. காசிக்குக் கணபதி, திருமால், சிவ கணங்கள், விசுவநாதர் முதலியோர் வந்த வரலாறும், துருவாசன்,*

தக்கன் ஆகியோர் வரலாறுகளும் சொல்லப்படுகின்றன. வீரேசர், பார்வதீசர், கங்கேசுரர், நர்மதேசர், கேதீச்சுரர், அமுதேசர், சயிலேச்சுரர் ஆகிய மூர்த்தி வரலாறுகளும், பராசரலிங்கம், ஓங்காரம், திரிலோசனம், தருமேச்சுரம், விசுவகன்மேசம் ஆகிய லிங்கங்களின் வரலாறுகளும் சொல்லப்படுகின்றன. காசியின் மகிமை, பஞ்சனது சிறப்பு, விசுவநாதர் மகிமை, க்ஷேத்திர வளம், தீர்த்த மகிமை, முத்தி மண்டபச் சிறப்பு ஆகியவை சொல்லி, இறுதியாகச் சேவிக்கும் முறைமை கூறி நூல் முடிகிறது.

இவை யாவும் அகத்திய முனிவன் கேட்க, குமரன் கூறுவ தாக நூல் அமைந்துள்ளது. காசியில் உள்ள எல்லா மூர்த்தி களையும் எவ்வாறு பணிந்து வழிபட வேண்டும் என்று இறுதிப் பகுதி 36 பாடல்களால் கூறுகிறது. கூறிய பின் நூற்பயன் பல பாடல்களால் சொல்கிறது. இவ்விரண்டு பகுதிகளுக்கும் இடை யில் நூற் பொருளை அத்தியாய முறைப்படி 24 பாடல்கள் சொல்கின்றன. இங்கு முதல் பாடல் காசி கண்டத்தின் தொடர்பு, உயர்வு, அதனுடைய சிறப்பும் 'ஆழ்கடற் பரப்பின் கண் அறிவரிதாம் அருந்தமிழ் முழுவதும் தாழ்வில் சீர் முனிவ கேள்' எனச் சூர்மாத் தடிந்தவன் அருளொடும் சாற்றும் என்று தொடங்கி, 24ஆம் பாடலில் 'சேவை புரிதரும் முறையுமாக நன்குரைத்த அத்தியாயம் ...... விலங்கலில் காண்டம் இரண்டின் அத்தியாயம் நூறு என உரைப்பர் மிக்குணர்ந்தோர்' என உள்ளது. எல்லாப் பதிப்புக்களிலும் இப்பகுதி மேற்காட்டிய படி 100 அத்தியாயத்தின் இடையில் பெய்யப்பட்டுள்ளது. பார்த்த மாத்திரத்திலேயே இது பிழை என்பதும், பாயிரத்தை அடுத்து, பதிகம் அல்லது அனுக்கிரமணி என்ற பெயரில் இருத் தற்குரியது என்பதும், நன்கு விளங்கும். முதலில் பதிப்பித்தவ ருக்குக் கிடைத்த ஏடுகளின் பக்கங்கள் முன் பின்னாக மாறி யிருந்தன என்று கருதவேண்டியிருக்கிறது. அல்லது ஆதி ஏட்டில் ஏடுகள் இவ்வாறு பிறழ்ந்து போய்ப் பழங்காலத்தில் ஏடுகளைப் பிரதி செய்தோர் பிறழ்வாகவே ஏடுகளை எழுதிக்கொண்டார் கள் என்று கருத வேண்டும். இனி வரும் பதிப்புக்களிலேனும் இப் பகுதியை மாற்றிப் பாயிரத்துக்கு அடுத்துப் பதிகம் எனப் பதிப்பித்துக் கொள்ள வேண்டும்.

காசி கண்டத்தில் சுவையுள்ள பாடல்களும் நீதிப் பாடல் களும் அதிகம். பன்னூற்றிரட்டுத் தொகுத்தவர் இதிலிருந்து 56 செய்யுட்களை எடுத்திருப்பது சிறப்பு. காசியின் சிறப்பைக் கூறும் பாடல்கள் காண்க:

காசியைக் குறித்துச் செல்லும் கால்களே கால்களாகும்;
காசியை வழுத்தும் நாவே நாவெனக் கழற லாமால்;
காசியின் கதைகள் கேட்கும் செவிகளே செவிக ளாகும்;
காசியை இனிது காணும் கண்களே கண்க ளாமால்.

*முற்காட்டிய பிரமோத்தரகாண்டப் பாடலோடு இதை ஒப்பு நோக்குக (கண்ணுதலாலயம் என்பது).*

*கற்பிலக்கணம் கூறிய அத்தியாயம் 48 பாடல்களும் சிறந்த மகளிர் நீதி புகட்டுவன.*

கொழுநன் உண்ட பின் தான் நுகர் கொள்கையும்,
விழிது யின்றபின் துஞ்சலும், மென் துயில்
எழுதன் முன்னம் எழுதலு மேயன்றோ,
பழுதில் கற்புடைப் பாவையர் செய்கையே.

*என்ற பாடல் பழமை தழுவியது.*

*காசியில் இறப்போரை விசாலாட்சியம்மை உத்தரியத்தால் விசிறி இளைப்பாறச் செய்ய, விசுவநாதர் அவர் தம் செவியில் தாரக மந்திரம் ஓதி முத்தியளிக்கிறார் என்று வழக்கு உண்டு. அதை ஆசிரியரும் குறிப்பிடுகிறார்:*

இத்தலமெய்தி இறக்குநர் யாரும் இளைப்பாற
உத்தரியங் கொடு மாதுமை வீசிட உமையோர்பால்
வைத்துவரும் பொருள் மேவரு தாரக மறையோதி
முத்தியளித்திடும் இப்பதி யளவிட முயல்வாரே.

*எட்டாம் அத்தியாயத்தில், 108 திருநாமங்கள் வரிசையாக அடைமொழியின்றிச் சொல்லப்பட்டுள்ளன. இங்கு சிவபிரான் பெயரும் திருமால் பெயரும் கலந்துவரக் காண்கிறோம்.*

*காசிபன் சிறுவன் துதிக்குமிடத்து எட்டுப் பாடல்கள் துதிப் பாடல்களாக உள்ளன. ஒரு பாடல் குறிப்பிடத்தக்கது (1:13):*

துதியும், துதிக்கப் படுவோனும்,
    துதிக்கு மவனும், உலகீன்ற
விதியும், விதியை அளிப்போனும்,
    இவர்கள் அறியா விழுப்பொருளாம்
பதியு மாகி, எவ்வுயிர்க்கும்
    உயிரா யவற்றிற் பற்றில்லா
முதல்வ, நின்னை உணர்ந்தெவ்வாறு
    எளியேன் ஏத்த முயல்வதுவே?

*இது பதியிலக்கணம் உரைப்பது சிந்திக்கத்தக்கது. துருவன் திருமாலைத் துதிப்பதாக இவர் கூறும் பாடல்கள் (1:21:1-4) சமயப் பொதுமையுணர்வோடு பாடியவையாகும்:*

அரிய நான் மறையின் காலநீ, எழுத்தின்
அகரம் நீ, அருமறைப் பொருளிற்
புரைதப நின்ற உபநிட தமும் நீ,
வேள்வியிற் புரவிநன் மகம் நீ,
விரைவினில் வளி நீ, வருணமோர் நான்கின்
வேந்தன் நீ, மருவிய கரணத்து
உரைபெறு மனம் நீ, பூதமோ ரைந்தின்
ஓங்கிரு விசும்பு நீயாமால்.

*சிவபிரான் திருமாலுக்குக் கங்கையின் பெருமையைக் கூறுமிடத்து, கங்கையின் ஆயிர நாமங்களில் 77 பெயர் கூறுகிறார் (1:29). இதுபோலவே, பாகவதரைப் பழிப்பதும் சைவநெறியைப் பழிப்பதும் பதிதர் செய்கை என்று ஒரு பாடலில் கூறுவது இவருடைய விரிந்த சமயவுணர்வைக் காட்டும் (98:19):*

பாக வதரோ டியைந்து சைவ நெறியைப்
பழித்தும், சைவநெறி
போகு மவர்பால் இயைந்து தினம்
பாக வதரைப் புறமொழிந்தும்,
யாக முனிவர்க் கிடர் விளைத்தும்,
யாவர் பொருள் நல் கினர் அவர்கட்கு
ஆக நெறியில் கரிநாளும்
பகர்ந்து பதித னாயினனால்.

*நான்கு பாடல்களில் சிவபெருமான் திருநாமங்களை இவர் அடையின்றிக் கூறிக்கொண்டு செல்வது மிகவும் அருமையாயுள்ளது (8:53-56):*

நீலகண்டன் மழுவேந்தி நெற்றிக் கண்ணன் பூதேசன்
கால காலன் விடையூர்ந்தோன் கங்கை சூடி காமாரி
சூல பாணி கரியுரித்தோன் தோகை பாகன் காபாலி
ஆல முண்டோன் மதிசூடி அந்த காரி ஈசானன்.

வாசு தேவன் சனார்த்தனன்போர் மதுசூதனனச்சுதனெடுமால்
ஈசன் அரசன்சங் கரன்கிரிச னிறைவன் பினாக பாணிசிவன்
கேசி நாசன் மணிவண்ணன் கெருடத்தவசன் நரசிங்கன்
நாச மில்லோன் விடையூர்தி நம்பன் மிருத்துஞ் செயன்பாகன்.

அரவாபரணன் அழலேந்தி யட்ட மூர்த்தி செகதீசன்
புருடோத் தமன் கேசவன் கண்ணன் புயங் சாயி புள்ளூர்தி
பரம சாந்தன் கண நாதன் பவன் முக்கண்ணன் சருவேசன்
திரிவிக்கிரமன் கமலைபதி தேவன் சவுரி மாதவனே.

புராரி தாமோ தரன்சயம்பு பூவை வண்ணன் கோபாலன்
முராரி யனந்தன் கோவிந்தன் முகுந்தன் சார்ங்க பாணியரி
கிரீச னென்னும் பெயர்முதலாக் கிளக்கு நாமம் நூற்றெட்டும்
பரவு மவர்கள் யமனுலகம் படரார், அழியாப் பதம் பெறுவார்.

*இங்கும், முதல் பாடல் முழுமையும் சிவநாமங்கள்; மற்றப் பாடல்களில், சிவநாமங்களையும் திருமால் நாமங்களையும் வரிக்கு வரி மாற்றிச் சொல்வது, இவர் வேண்டுமென்றே அரன்-அரி ஒற்றுமையைப் போதிக்க வந்தவர் போலத் தோன்றுகிறது. காயத்திரி செபித்தலின் பெருமையைப் பல பாடல்களாற் சொல்லுகிறார். ஒன்று கருதத்தக்கது:*

அறிவருங் காயத்திரி தனக்கிணையா
    அறைவதொன்றில்லை யாங்கதுபோல்
நிறைபுனல் வளங்கூர் காசியம்பதிக்கு
    நிகர்தரு பதியும் ஆங் குறையும்
இறைவனை நிகர்க்குங் கடவுளுமிலையால்
    இயம்புகா யத்திரி யெழுதா
மறையொடுங் கமல மலரின் நான் முகற்கும்
    ஈன்ற தாயென வகுத் துரைப்பார்.

*காயத்திரியை யொத்த மந்திரமில்லை, காசிக்கு நிகரான பதியுமில்லை, விசுவநாதருக்கு நிகரான கடவுளும் இல்லை; காயத்திரியே மறைக்கும் பிரமனுக்கும் ஈன்ற தாய் என்கிறார்.*

*ஆசாரம் கூறியது என்ற 38ஆம் அத்தியாயம் சிறந்த சைவ ஆசாரம் மட்டுமன்று: உலகுக்கே பொதுவான நல்லாசாரம் கூறுவது, இல்லொழுக்கங் கூறுவது என இரு அதிகாரங்கள்: 35, 38 இரண்டும், சிறந்த சரியைப் பகுதி கூறுவன.*

*ஆடவர் சாமுத்திரிகா லட்சணத்தை நாரதன் 9 பாடல்களாற் கூறுகின்றான் (1:11:17-25). பெண்கள் உருவ இலக்கணத்தையும் பலனையும் தனியே ஓரதிகாரத்தாற் கூறுகின்றார் (1:37). இல்லறங் கூறிய இடத்து (அத். 35) அட்டாங்க யோகத்தின் முதல் இரண்டு படிகளும், வானப்பிரத்தம் கூறுமிடத்து ஏனைய படி*

*களும் விளக்குகிறார். பிரமசரியம் கூறியவிடத்து, குழந்தை பிறக்கு முன் சீமந்தம் தொடங்கிச் செய்யும் சோடசக் கிரியைகளிற் பல கூறுகிறார்.*

## இலக்குமி தோத்திரம்

*ஐந்தாம் அத்தியாயத்தில் தமிழ் முனிவன் திருமகளைத் துதிப்பதாகவுள்ள ஆறு பாடல்களும் (26-31) இலக்குமி தோத்திரம் என்று தனியே அச்சிடப்பட்டு வழங்குவன. எடுத்துக்காட்டாக ஒரு பாடல்:*

கொழுதி யிசை அளிமுரலும் தாமநறும் பொகுட்டிலுள்ள
 கொள்கை யேபோல்
மழையுறழுந் திருமேனி மணிவண்ணன் இதய மலர்
 வைகும் மானே.
முழுதுலகும் இனிதீன்ற அருட்கொம்பே, கரகமலம்
 முகிழ்த்து நாளும்
கழிபெருங்கா தலிற்றொழுவோர் வினை தீர அருள்கொழிக்கும்
 கமலக்கண் ணாய்.

## சிவாட்டகம்

*சிவசன்மா தெய்வ லோகங்கள் கண்டது கூறும் அத்தியாயத்தில், எட்டுப் பாடல்கள் வடமொழியில் சிவாஷ்டகம் என வழங்கும். தமிழிலும் அப்படியே. முதற் பாட்டுப் பின்வருவது (1:10:45):*

அருவுருவாய் ஏகமாய்க் குணங்குறிகள் எவையுமின்றி
 அசல மாகி
திருமலமாய் எவ்வுயிர்க்கும் உயிராகிச் சுடரொளியாய்
 நித்த மாகிக்
கருதரிய ஆனந்தக் கடலாகி மெய்ஞ்ஞானக்
 கனியாய் நின்ற
வரதநின தடிக்கமலம் மனத்திருத்திக் கொழுமலர்தூய்
 வழுத்தல் செய்வாம்.

*மகப்பேறில்லாதவர்கள் இவ்வெட்டுப் பாடல்களையும் பாராயணம் செய்துவர மகப்பேறு உண்டாகும் என்ற நம்பிக்கை உண்டு.*

## சத்தி கவசம்

*நூலின் 72ஆம் அத்தியாயம் வச்சிரபஞ்சர கவசம் என்னும் பெயருடையது; சத்தி கவசம் என்றும் இதைச் சொல்வதுண்டு. அம்மையார், கொடிய அரக்கனாய் இருந்த துர்க்கன் என்ப*

வனை வதைத்து நின்ற நிலையில் துர்க்கை என்று பெயர் பெற்றார். துர்க்கையை வணங்கிய முகுந்தன் ஆதிய அமரர் இந்தக் கவசத்தை கூறினார்கள். இது தமிழில் 12 பாடல்களை உடையது. உடம்பின் ஒவ்வோர் உறுப்பினையும் சுட்டி, துர்க்கையின் அம்சம் ஆகிய இன்ன இன்ன தேவதைகள் காக்க என்று பாடுகிறது. எடுத்துக்காட்டாக முதல் பாடலைக் கீழே தருகிறோம்:

> அங்கையிற் கரகந் தாங்கும் பிரமணி யருளினோடும்
> துங்கமென் சென்னி காக்க, வயிணவி துகளிலாகம்
> எங்கணுங் காக்க; செய்ய ஏந்தெழில் உருத்தி ராணி
> தங்குமெண் திசையுமன்பு தழைத்திட இனிது காக்க.

இக்கவசம் நூல் தோன்றிய நாளாகச் சைவ மக்கள் மனப் பாடம் பண்ணி வழிபடுவதற்குரிய ஒரு பாடல் தொகுதியாக இருந்து வருகிறது. கவசத்தின் பின்னுள்ள பாடல்களின் கருத்தை, கவசம் மட்டும் அச்சிட்ட புத்தகங்களில் பின்வருமாறு பதிப் பித்திருக்கக் காணலாம்:

"இந்த வச்சிர பஞ்சரத்தை யாவர் செபித்தாலும் அவர் களுடைய தேகத்திலுண்டாகிய வெப்புநோயொழியும். எட்டுத் தரம் சலத்தில் அபிமந்திரித்து அதனை உட்கொண்டால் வயிற் றிலே பொருந்திய குன்மஞ் சூலை முதலிய நோயனைத்தும் நீங்கும். இரவில் நடக்கும் போது செபித்தால் பூதம் பேய் இவைகள் தொடரமாட்டாவாம். பிள்ளையைப் பெறமாட்டாமல் வருத்தப் படுகின்ற மாதருடைய அருகிலிருந்து செபித்தாலும் அல்லது நீரிலோதி உட்கொள்ளக் கொடுத்தாலும் விரைவிலே வருத்தம் நீங்கி பிள்ளைகளைப் பெறுவார்கள்; யுத்தத்திலே செபித்தால் சத்துருக்கள் தோல்வியடைவார்கள். சிறு பிள்ளைகளுக்கு நீரி லோதி உட்கொள்ளக் கொடுத்தால் வியாதிகள் நீங்கும், இதை யாவரோதினாலும் அவர்களை உமாதேவி காப்பாற்றுவாள்."

### பதிப்பு

பல பதிப்புக்கள் வெளிவந்துள்ளன. 1. புரசை ஏழுமலைப் பிள்ளையின் விவேக விளக்க அச்சுக்கூடப் பதிப்பு, பா. முனியப்ப முதலியார் பார்வை, 1865. 2. சூளை சுப்பராய நாயக்கர், பதிப்பு: 1884. 3. களத்தூர் வேதகிரி முதலியார் 1867; 357 பாடல் மட்டும். 4. "தமிழ்ப் பண்டிதர் ஈக்காடு இரத்தினவேலு முதலியார் பிரமாண சகிதம் நூதனமாகச் செய்த பொழிப்புரைப் பதிப்பு" - சென்னை ஸ்டார் ஆப் இந்தியா பிரஸ், 1895. மிகவும் சிறப்பான உரை, மிகவும் சிறப்பான பதிப்பு. 5. திருவாவடுதுறை யாதீன

*வெளியீடு 72; த.ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளை பதிப்பு 1953; மூலம் மட்டும்; முகவுரை, நூலாசிரியர் வரலாறு, அத்தியாயப் பொருட் சுருக்கம் என்ற குறிப்புக்களும் உடையது.*

## *கூர்ம புராணம்*

*பதினெண் புராணங்களில் ஒன்றும், சைவ புராணம் பத்தில் ஒன்றும் ஆகும். திருமால் கூர்மாவதார மெடுத்த காலை அவ்வடிவோடு சிவனுடைய பெருமையை முனிவர்களுக்கு உரைத்த காரணத்தால் கூர்மபுராணம் எனப்பெயர் பெற்றது. பூர்வகாண்டமானது பாயிரம் அனுக்கிரமணி என்ற பகுதிகளும் 48 அத்தியாயங்களும் 2729 பாடல்களும், உத்தர காண்டம் 47 அத்தியாயங்களும் 988 பாடல்களும் ஆக 97 அத்தியாயங்களும் 3717 பாடல்களும் உடையன. இரண்டு காண்டங்களுள்ளும் தனியே கடவுள் வாழ்த்துப் பகுதி உண்டு. இங்கு இரண்டிடத்தும் நடேசர், உமாதேவி, விநாயகர், முருகர் ஆகியோர் வணக்கம் காணப்படும். சிறப்புப் பாயிரப் பாடல் நூல் வழியும் ஆக்கி யோன் பெயரும் கூறுகிறது:*

கட்லக முழுதும் பொதிந்த பேழ் வயிற்றுக்
  கடவுள் மோட் டாமையெம் பெருமான்
வடமொழி தொகுத்த தெய்வமாக் கதையை
  வடித்தசெந் தமிழினாற் செய்தான் –
படுமதம் செருக்கிப் பாருடல் பிளந்து
  படர்கின்ற மழலைவண் டோச்சும்
அடுசினக் களிற்று மானவேல் வழுதி
  அடலதி வீரபூ பதியே.

*நூற்பயன் கூறும் இறுதிப் பாடலும் அதிவீர ராமரைக் குறிப் பிடுகிறது:*

எதிர்மலைந்தேற்ற வெஞ்சமத் தரசர்
  இடதுறை அடையளந் தறியா
மதுரையும் புகாரும் வஞ்சியும் புரக்கும்
  மானேவல் வழுதியர் பெருமான்
அதிர்பொலங் கழற்கால் அடல்அதி வீரன்
  அரில்தபத் தெரிந்துநன் கிசைத்த
முதுதமிழ்க் கூர்ம புராணமுற் றுணர்ந்தோர்
  முத்திவீட் டினிது வீற்றிருப்பார்.

பண்டைய சம்பிரதாயத்தை யொட்டிப் பாண்டியன் மதுரையும் புகாரும் வஞ்சியும் புரக்கும் ஏக சக்கராதிபதி என்று புராணங்கள் சொல்லியிருப்பது காணத்தக்கது. தமது ஞானக் குருவாகிய சுவாமிதேவரை இங்கும் அருமையாகத் துதித்திருக் கிறார்:

பாழியங் குடுமிப் பொலங்கிரி குழைத்துப்
படிந்தபின் பாவிருள் செறிந்து
காழ்பழுத் தொழுகும் எம்மனக் கருங்கல்
குழைத்து நற்கருணை நீராட்டி
ஆழ்கடற் பிறவித் துன்பமுற் றழுந்தாது
அடிமலர்ப் புணையளித் தாண்ட
சூழ்சுடர் ஞானத் திருவுரு வமைந்த
சுவாமி தேவன்பதம் பணிவாம்.

அனுக்கிர மணி என்பது வழக்கம் போல் நூலில் அமைந்த அத்தியாயப் பெயர் கூறும் பதிகமாகும். கூர்ம புராணமும், பிற சைவ புராணங்கள் போல, சிவ பராக்கிரமங்களும், சரியை கிரியை யோக ஞான நெறிகளும், அந் நெறியிற் சென்றோர் சரிதங் களும் கூறும் நூலாகும். பூர்வ காண்டமானது, வருணாச்சிரமம், யுக தருமம், உலக நிலை, சம்புத்தீவு, பிலக்கத்தீவு, மேரு, நவ கண்டம், மன்வந்தரம் என்பனவும், பிரகிருதி, தத்துவங்கள், பிரபஞ்சம் பிருகு புலத்தியன் சூரியன் சந்திரன் மனு தோற்றங் களும் மரபும், தக்கன் அந்தகன் வியாதன் ராமன் கண்ணன் ஆகியோர் வரலாறுகளும் கூறுகிறது. இராமன் வரலாறு, அவன் வைகுந்தம் சென்றது வரை மிகவும் விரிவாகச் சொல்லப்பட் டுள்ளது. அப்படியே கண்ணன் வரலாறும் ஆறு அத்தியாங் களில் மிகவும் விரிவாக சொல்லப்பட்டுள்ளது. பொதுவாக இப்பொருள்கள் எல்லாப் புராணங்களிலும் சொல்லப்படு கின்றன என்றாலும், இங்கு மிகவும் விரிவு.

இராமன் வரலாறு முழுமையிலும் கம்பராமாயணக் கருத்தும் சொல்லும் தொடரும் மிக அதிகமாய்ப் பயின்று வரக் காணலாம். மகாபலிச் சக்கரவர்த்தி கதை, தாடகை வதம், வில் இழுத்தது முதலான பகுதிகள் அப்படியே கம்பரிலிருந்து எடுக்கப்பட்டவை. இராமன் சேதுவில் சிவலிங்கப் பிரதிட்டை செய்த வரலாறு ஒரு தனி அத்தியாயம். அதிலுள்ள மூன்று துதிப்பாடல்களில் பின்வருவது ஒன்று:

அருவமாய் உருவாய் அனாதியாய் ஒன்றாய்
ஐம்பெரும் பூதமாய் வேறாய்த்
தெரிவரும் பொருளாய்த் தெரிபவை யாகிச்
செங்கண்மால் அயனென உரைக்கும்
இருவரும் காண மறைப் பொரு ளாகிச்
சகத்தினை இயக்கியும் இயக்காக்
கரியது வாகித் துரியமாய்த் துரியா –
தீ தமாம் கடவுளே போற்றி.

*சேதுவும் காசியும் நருமதையும் போற்றிச் சொல்லப்பட்டுள்ளன. எங்கும் தமிழை மிகவும் போற்றிச் சொல்கிறார். முதல் படலத்தில் 18 புராணங்களையும் கூறுகிறார். எங்கும் அழகான சந்தங்களைப் பாடுகிறார்.*

*இரண்டாம் காண்டத்தில் வயிரவன், சலந்தரவதம், சுவேதன், நந்தி, திரிபுரதகனம், உபமன்னியு, தாருகாவனம் ஆகிய கதைகள் சொல்லப் பெறுகின்றன. சரியை கிரியைப் பகுதிகள் பல இங்கு உள்ளன. சுத்தாசமனக் கிரியைகளின் பொருள் விரிவாக ஓர் அத்தியாயத்துள் சொல்லப் பெறுகிறது. நான்கு ஆசிரமங்களும் விரிவாகப் பேசப் பெறுகின்றன. அவற்றுள்ளும் இல்லறமே அதிகமாய் விரித்துச் சொல்லப்பெறுகிறது - பொது விதிகள், நீக்க வேண்டியவை, நித்திய கன்மங்கள், சிராத்தம், சூதகம், தானம் என்பன சில பொருள்கள். சாங்கிய யோகம், அட்டாங்க யோகம், பாசுபத யோகம், பத்திமை, தத்துவ தரிசனம் முதலான பொருள்களையும் காணலாம். 54 பாடல் கொண்ட யோக முரைத்த அத்தியாயம் என்பது சிவ கீதை என்று சொல்லப் பட்டுள்ளது. இதனுள் பாசுபத யோகம் என்று ஒரு பாடல் கூறுகின்றது (2:11:23):*

தத்துவ மனைத்துமருள் சார்பிர ணவத்தால்
சுத்திசெய்து தன்னுருவ மென்னுருவு தோய
வைத்துயர் மெய்ஞ் ஞானமெனும் வான்புனலி னாடி
உத்தமவெண் ணீறணிதல் பாசுபத யோகம்.

*நித்திய கன்ம முரைத்தவிடத்து, சூரிய தோத்திரமாக மூன்று பாடல்கள் அழகாக அமைத்திருக்கிறார். இவை சிவ பூசை செய்வோர் சூரிய பூசையில் சொல்லத்தக்க சிறப்பு வாய்ந்துள்ளன. முதல் பாடல் பின்வருவது:*

உள்ளத் திருளும் புறத்திருளும்
ஒழிக்குங் கதிராய்ச் சனாதனமாய்
தள்ளற் கரிய சோதியாய்
அசல மாகித் தனியமிர் தாய்
பிள்ளைப் பிறைசேர் முடியோனாய்க்
குடிலை யாகிப் பிரமமாய்த்
தெள்ளு மறையதோர் புருடனாம்
செங்கேழ்ப் பரிதி தாள்தொழுவாம்.

நூலுள் ஆங்காங்கு துதிப்பாடல்கள் பல உள்ளன. இலக்குமி துதிசெய்து திருமாலைக் காக்குமாறு வயிரவமூர்த்தியை வேண்டும் பாடல்கள் சிறப்புடையன.

வடமொழிக் கூர்மபுராணத்து உத்தரகாண்டத்தின் முதல் 11 அத்தியாயங்கள் சிவ கீதை எனப்படும்; 229 சுலோகம். இதைத் தத்துவராய சுவாமிகள் 388 செய்யுளாகத் தமிழில் ஈசுர கீதை என்ற பெயரில் மொழிபெயர்த்தார்.

பதிப்பு:

கொ. சண்முக சுந்தர முதலியார் பதிப்பு 1877. மிகவும் திருத்த மானது. பின்னால் திருச்சிற்றம்பலம் பிள்ளை உரை எழுதிச் சஞ்சிகைகளாக வெளியிட்டார். சில பகுதிகளே அச்சாகி வெளி வந்தன. கல்லிடை நகர்ச் சிதம்பரநாத கவிராயர் இதை உரை எழுதி 1884இல் அச்சிட்டு சஞ்சிகையாக வெளியிட்டார். சில பகுதிகளே வெளிவந்தன; புத்தகமாக வரவில்லை. பின்னால் கதிரைவேற்பிள்ளை எழுதிய விருத்தியுரையும் சில சஞ்சிகை களே வெளிவந்தன. முற்றுப்பெறவில்லை.

கூர்மபுராணம் பூர்வகாண்டமும் உத்தரகாண்டமும் தனித் தனியாக அச்சிட்டுப் பெரிய புத்தகங்களாக 1961-63 ஆண்டு களில் தஞ்சை சரஸ்வதி மகால் நூல் நிலைய வெளியீடுகளாக வெளிவந்தன. ஒவ்வொரு பகுதியும் 800 பக்கங்களுக்கு மேல் உள்ளன. முதற் பகுதியில் பிழை திருத்தம் மட்டும் 11 பக்கம். 20ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அச்சிடப்படுகின்ற நூல் அறிஞர்களுடைய ஆராய்ச்சிக்கு உதவும் என்று படிப்பவர்கள் கருதுவது இயற்கை. இரண்டு புத்தகங்களும் அவ்வாறு சிறிதும் பயன்படுவன அல்ல. டெம்மி அளவில் அச்சிடப்பட்ட இப் புத்தகங்களில் முதல் பாகத்திற்கு மட்டும் (2717 பாடல்கள்) செய்யுள் முதற்குறிப்பு அகராதி 97 பக்கம். இது வீணாகப் பக்கத்தைப் பெருக்கிக் கொண்டு போன வேலை என்பது, 4000 பாடல் கொண்ட நாலாயிரப் பிரபந்தம் முழுமைக்கும் இவ்

அகராதி 36 பக்கமே என்பதை எண்ணிப் பார்த்தால், நன்கு புலப்படும். புத்தகம் வெளியாதல் அரசாங்கச் செலவாதலால் பயனற்ற வீணான பக்கப் பெருக்கம் நேர்ந்திருக்கிறது. பூர்வ காண்டத்தில் "இந்நூலாசிரியரின் விரிவான வரலாற்றினை உத்தர காண்ட முகவுரையில் காண்க" என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் உத்தரகாண்ட முகவுரையிலோ "இதற்கு ஒரு விரிவான வரலாறு விரைவில் வெளிவரும்" என்று கூறப்பட்டுள்ளது!

## மாக புராணம்

மாக மாசத்தில் (மாசி) தீர்த்தமாடுவதன் புண்ணியத்தைக் கூறுவது மாக புராணம். மாகஸ்நானம் என்பது, மாசி மாதத்தில் புனித நீராடல். ஆற்றிலும் கடலிலும் இவ்வாறு ஆங்காங்குள்ள சிவாலய விஷ்ணுவாலய மூர்த்திகள் தீர்த்தங் கொடுப்பது இன்றும் வழக்கத்திலுள்ளது. ஞானசம்பந்தர் 'மாசிக் கடலாட்டுக் காணாதே போதியோ பூம்பாவாய்' என்று கூறியவிடத்து இதையே குறிப்பிடுகிறார். இது வடமொழிப் பாத்ம புராணத்தில் சொல் லப்பட்டுள்ளதாம்; வசிட்ட முனிவர் திலீப மன்னனுக்குச் சொன் னதாம். இது அதிவீர ராம பாண்டியரால் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டதாயும், 'எமது பிதா பொன்னம்பலக் குருக்கள் வருடந்தோறும் மாகஸ்நான காலத்தில் நூற்றுக்கணக்கான சிஷ்ய வர்க்கங்கள் புடை சூழ்ந்து சிரகரங் கூப்பிக் கேட்கப் பாராயணம் செய்வார்கள்; அக்காலங்களில் யாம் கையேடு வாசித்திருக்கின்றோம்' என்றும், மூன்று ஏட்டுப் பிரதிகளை வைத்துக் கொண்டு அச்சிட்டதாயும் கூறி, விருதுப்பட்டி இராமலிங்கக் குருக்கள் இதை 1904இல் அச்சிட்டார். இது பாயிரமும் 28 சருக்கங்களும் 1412+12 செய்யுட்களும் உடையது. அச்சிட்டவர் கடவுள் வாழ்த்துப் பாடல்களை மொத்த எண்ணிக்கையில் சேர்க்கவில்லை.

கடவுள் வாழ்த்துப் பகுதியில் விநாயகர், சிவபெருமான், முருகர், திருமால், உமாதேவி, சரசுவதி, நால்வர், வியாசர் துதி யுள்ளது. (அதிவீர ராமர் நூல்களில் திருமால் சரசுவதி வியாசர் துதி இருப்பதில்லை ஸ்தல விநாயகர், சிவனடியார், தமது குரு வாகிய சுவாமிதேவர் ஆகியோர் வணக்கங்கள் சிறப்பாக இருக்கும். அவை இங்கு இல்லை. வழக்கமாயுள்ள பதிகம் இங்கு இல்லை.)

இப்புராணமானது, நாள்தோறும் வைகறையில் மாக மாதம் முழுதும் சென்று காவிரி நதிபோன்ற புதுப்புனலில் நீராடுவ தால் பெறும் புண்ணியத்தை விளக்கும் பல கதைகள் சொல்லு

கிறது. தீர்த்த விசேடம், ஏகாதசி விரதம், சிவராத்திரி மகிமை விரதம், தருமம் செய்வதால் வரும் புண்ணியப் பலன், தீமை செய்வதால் வரும் நரக அனுபவம், பல்லாயிரம் நரகங்களில் நரகவேதனை, இல்லற ஆசாரங்கள், கற்பொழுக்கம் என்பவற்றை மிகவும் விரித்துச் சொல்கிறது. சம்பு, சுந்தோப சுந்தர் வதை யுண்ட கதைகள், சாந்தீபினி புதல்வன் மீண்ட கதை, சுவிருத்தை, புட்கரன், சுவிரதன், குண்டல விகுண்டலர், காஞ்சனமாலை, அக்கினிபன், சித்திரசேனன் முதலியோர் கதைகளையும், மிரு கச்சிருங்கர் அவர் புதல்வர் மிருகண்டு அவர் புதல்வர் மார்க் கண்டேயர் கதைகளையும் கூறுகிறது. சிவபிரான் துதி, காவேரி துதி, யமன் துதிக்கும் பாடல்கள் அனேகம்.

வடமொழி மிருத்தியுஞ்சயத் தோத்திரமாகிய 'நமாமி சிரசா தேவம் கிந்தோ மிருத்தியு: கரிஷ்யதி' என்ற முடிபையுடைய பாடலின் மொழிபெயர்ப்புப் போல 18 பாடல்கள் 'மறலி வந்தெது செய்யுமே?' என்று கூறுகின்றன. காவிரி நதி பெரிதும் போற்றிச் சொல்லப் பெறுகிறது. காவிரிக் கரை மருங்கிலுள்ள ஊர்களில் மாக மாத நீராட்டு இல்லை, மாகமாத மகநட்சத்திர நீராட்டு மட்டுமே வழங்குகிறது. ஐப்பசி மாத நீராட்டே இன்று பெருவழக்காயுள்ளது.

ஓரிடத்தில் விரித்த செஞ்சடை வேதியர் என்ற ஆட்சி வரு கிறது; இது திருப்பனந்தாள் இறைவன் பெயராகும். இந்நூலின் நடை நன்றாக இருந்தாலும், அதிவீர ராம பாண்டியர் செய்த தாகத் தோன்றவில்லை. 17ஆம் நூற்றாண்டில் காவேரிக் கரையில் திருப்பனந்தாளில் இருந்த ஒருவர் செய்திருக்கக்கூடும். தென் னாட்டில், விருதுப் பட்டியில் இதைப் படிக்கும் பழக்கம் அதிக மான பின்பு, மூல ஆசிரியர் பெயரைக் கைவிட்டு, தென்காசி யில் சிறந்த அரசராயும் தமிழ்ப் புலமையுடையவராயும் பல புராணங்கள் செய்தவராயும் விளங்கிய அதிவீர ராம பாண்டியர் பெயரில் இந்நூல் ஏற்றப்பட்டதென்றே தோன்றுகிறது.

பதினெண் புராணங்களில் இரண்டாவது புராணம் பாத்ம புராணம்; இதனிடத்து, சிருட்டி காண்டம், பூமி காண்டம், சுவர்க்க காண்டம், பாதல காண்டம், உத்தர காண்டம் என ஐந்து பகுதிகள்; ஐம்பத்தையாயிரம் சுலோகங்கள்; இதனுள் திலீபனுக்கு வசிட்டர் கூறியதாகிய மாக மாதத் தீர்த்தமாடற் புண்ணிய பலத்தை அதிவீரராம பாண்டியர் தமிழில் மாக புராணம் என்று பெயர் கொடுத்துப் பாடினார் என்று இங்கு

*சொல்லப்பட்டுள்ளது. நூலுக்குப் புறம்பாயுள்ள பாயிரம் என்ற ஐந்து பாடல்களும் பிற்காலத்தவர் செய்தன போலும். 'தமிழ் மதுரைப் பதியாண்ட மீனவர் தம் மரபிற் சார்ந்தோன், பெரும் புகழால் சைவ நெறி முறையொழுக்கின் மேவு நல்லோன் உலகோர் அன்பு கொளப் பரிபாலனம் புரிநல் அதிவீர ராமனெனக் குலவு மேலோன், பத்ம புராணத்திலிருந்து, மாக நீர் மூழ்கு பலனமைத்து, அத்தைத் தென் சொலாலே விருத்தத்தால் மாக புராணப் பெயரினுரைத்தான்' என்பன பாயிரம் தரும் குறிப்புக்கள். பாயிரம் போலவே நூலின் கடவுள் வாழ்த்துப் பகுதியான 12 பாடல்களும் நூலுக்குப் புறம்பாகவே அச்சிடப்பட்டுள்ளன. இப்புராணம் அதிவீர ராமர் பாடியதுதானா என்று துணிந்து சொல்லக்கூடவில்லை. பதிப்பாளர் தம் முகவுரையில் இதை வரதுங்க ராம பாண்டியர் செய்தாரென்று சொல்வா ரெனவும் கூறுகிறார். எனவே, நூல் மிகவும் பழமையானது. நல்ல நடையுடையது; சிறப்பான சமயவொழுக்கம் கூறுவது; அதிவீர ராமர் செய்ததாக வரலாறில்லையே ஒழிய, அவ்வாறு சொல்லுவதிலும் இழுக்கில்லை என்றே தெரிகிறது.*

*இந்நூலில் காப்பியக் கலித்துறைப் பாடல்களும் உள்ளன. வருணனைகள், உலக நீதிகள், துதிப் பாடல்கள் சந்தப் பாடல்கள் பல.*

> ஊன மில்லாப் பதிகற்கோ டுரிய புதல்வர் நல்கமதி
> ஈன மில்லாப் பெருஞ்செல்வம் எல்லாம் எளிதில் தரவேண்டி
> ஆன குடகிற் பிறந்தாயே, அரங்கற் கியல்பாம் ஆரணங்கே,
> கான மலர்சேர் காவிரியே, கையால் தொழுவோம் கண்டாயே.

*என்பது ஒரு காவிரித் துதி (6.3). அதிவீர ராமர் காவிரியை இவ் வளவு தெரிந்து சொல்வாரா என்பது ஐயப்பாடு. பின்வருவன மிருத்தி யுஞ்சயத் தோத்திரத்தில் இரு பாடல்கள் (17:50, 53).*

> பூதநாதனை நான் முகத்தினு மேவிதித்திடு புனிதமாம்
> வேதநாதனை ஞானநாதனை விடமருந்திய நாதனை
> ஆதிநாதனை விண்டுவே முதல் அம்பரத்தவர் ஏத்துதாள்
> நாதநாதனை அன்புளேன் முனம் நமனும் வந்தெதிர் நவிலுமே.

> கால காலனைக் கயிலை யாளியைப்
> பால லோசனப் பரம தாணுவைச்
> சூல பாணியைத் தொழுத அன்பன்மேல்
> ஏல வந்தகூற் றேது செய்யுமே.

*தீர்த்தம் என்பது யாது? (18: 16,17):*

கரத்தினின் மலர் பெய்தேத்தல், காலினிற் கோயிற்சூழ்தல்,
சிரத்தினில் வணங்கல், வாயிற் சிவன்திருப் புகழைப் பாடல்,
பெருத்திடு மனத்தில் நம்பன் பெருவடிவினைப் பாவித்தல்,
உரைத்திடு புனித தீர்த்தம் என்னுமிவ் வுலகமம்மா.

வஞ்சக மில்லா நெஞ்சே நெஞ்சாம்
மறுமனை செல்லாத் தாளே தாளாம்,
செஞ்சொ லுரைக்கும் நாவே நாவாம்.
செழுநிதி யீயுங் கையே கையாம்,
அஞ்சி நடுங்கும் ஏதிலர் தாரத்து
அவயவம் நோக்காக் கண்ணே கண்ணாம்;
எஞ்சலிலாதே யிப்பரி சுடையோர்
எய்திய இடமே புனிதமதாமால்.

*வேட்டைக்குச் சென்ற வனத்திலுள்ள மரங்களை ஒரு பாடலில் ஒரு அடையில்லாமலே சொல்லுகிறார் (21:9):*

குருவ மாமருது புன்னை கோங்குவேல் கடம்பு வன்னி
மரவங்கூ விளமிரத்தி வெள்ளிலால் மாதுளங்கம்
அரசு பாதிரி செருந்தி அங்கோல மகரு கந்தம்
சுரபுன்னை குடசம் வேங்கை மராமரம் சூரை காரை.

*திருமால் துதியாக இந்நூலில் அக்னிபன் காதை என்ற அத்தியா யத்தில் (2. 27) பதிகம் போலப் பத்துப் பாடல்கள் உள்ளன.*

பற்று நல்வினை யாளர்தங் கருமத்துப் பலன்களை யளிப்பானை,
மற்றயோகியர் தம்முழைப்பாவக மருவிய வுருவானை,
அற்ற ஞானியர்க் கெங்கணு மகம்புற மாகிவே றற்றானை,
துற்று நீரொளி யிரு சுடர்க் கண்ணனைக் கண்ணனைத் தொழுவாமே.

*மாக புராணம் இவ்வாறிருக்க, மாக புராண அம்மானை* என ஒரு நூல் உள்ளது. மாக புராண வரலாறு அதிகம் பிர சித்தம் உடையதன்று. ஆயினும், அதைத் தழுவிய விரிவான அம்மானைப் பாடலொன்று, புராணம் எழுந்த நூறு ஆண்டு களுக்குள் எழுந்ததாகத் தெரிகிறது. இது மாகஸ்நான புராண அம்மானை என்று பெயர் சூட்டப்பெற்றிருக்கிறது. ஆசிரியர், மணவை வீரபத்திரன் என்பவர்.*

*இவர் தமிழ்ப் புராணக் கதையை அம்மானைப் பாடலாகப் பாடுவதாகக் கூறுகிறார். இது 30 அத்தியாயம் கொண்டது. முதல்*

---

* *சென்னை அரசாங்க தொன்னூல் நிலையப் பதிப்பு, தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் 1956.*

பாகம் 23 அத்தியாயம், 3772 அடிகள்: இரண்டாம் பாகம் எஞ்சிய 7 அத்தியாயம், 3182 அடிகள். வழக்கம் போல் அம்மானை என்ற சொல்லை இவ்வாசிரியர் பலமுறை இடையிடையே பெய்திருக்கிறார். மேலும், அத்தியாயத் தொடக்கத்திலும் இடையிலும் இவர் மாகபுராணத்திலிருந்து 145 பாடல்களை எடுத்துப் பெய்து கொண்டிருக்கிறார். இந்நூலின் கதைகள் மாக புராணத்தைத் தழுவி வந்திருந்த போதிலும், சில இடங்களில் வேறுபாடுகளும் காணப்படுகின்றன.

## சிதம்பரநாத கவி - சங்கர விலாசம்

### ஆசிரியர்

16ஆம் நூற்றாண்டில் திருவாரூரில் வாழ்ந்த கமலை ஞானப் பிரகாசர் என்ற சைவ ஆசாரியர் பல சமய நூல்கள் செய்ததோடு சைவ சமயத் துறையில் பல சீடர்களையும் தோற்றுவித்திருக் கிறார். அவர்களில் சிலர் சைவ சமய ஆசாரிய பீடங்களை அமைத்திருக்கிறார்கள். பின்னும் பலர் நூல் செய்த ஆசிரியர் களாய் விளங்கியிருக்கிறார்கள். அவர்களைக் குறித்த விரிவான ஓர் அட்டவணையை எமது தமிழ் இலக்கிய வரலாறு 14ஆம் நூற்றாண்டில் விளங்கக் காணலாம். அங்கு பெயர் குறிப்பிடாத மாணாக்கர் பின்னும் பலர் உள்ளனர். அவர்களுள் சிதம்பரநாத கவி என்பவரும் ஒருவர்.

இவர் சங்கர விலாசம் என்ற புராணம் எழுதினார். இப் புராணம் இன்று வழக்கில் வழங்காவிட்டாலும்கூட, 1950இல் திருப்பதி ஆராய்ச்சிக் கழகத்தால் வெளியிடப்பட்டுள்ளது. இதனால் ஆசிரியரைக் குறித்த செய்திகள் சில தெரிகின்றன. இவர் விசயநாரணம் என்ற ஊரினர்; தத்துவநாதரிடம் இயல் தமிழ் கற்றார்; ஈசான தேவரிடம் இலக்கணம் கற்றார். ஈசான தேவரிடமும் கமலை வாழும் சத்திய ஞானியிடமும் உபதேசம் பெற்றார்; திருப்பரங்குன்ற மாமுனிவரிடம் பூசை எழுந்தருளப் பெற்றுக்கொண்டார் என்று அறிகிறோம்.

அங்கமலப் பீடிகையோன் மணிநாவில்
  வீற்றிருக்கு மமுதந் தூற்றுந்
திங்கணுதற் கலைமடந்தை என்னாவில்
  உறைந்தரசு செலுத்தச் செய்தான் –
பைங்கண்மழ விடையுகைக்கும் பரமனிரு
  பதங்கருதிப் பரவு மையன்

பொங்குபெருஞ் கருணைபொழி தத்துவநா –
தன்மலர்த்தாள் புந்தி வைப்பாம்.

அல்லலுற் றழுங்கும் பிறவியங் கடலின்
ஆழ்ந்திடு மிருவினை யுணராப்
புல்லொழுக் கினர்பாற் பொருந்திடா திகழிப்
புனிதனை நாவினாற் புகழச்
சொல்லுமுத் தமிழின் இலக்கணப் பகுதி
தொகுத்தளித் தென்னையாண் டருளும்
எல்லையிட் டளவா இன்பவீ டுணரும்
ஈசான தேவனைப் பணிவாம்.

கத்திகைக் கருமென் கூந்தற் கன்னிய ரிடத்தில் ஆர்வம்
வைத்துழும் மலத்தி னாழ்ந்து மருளுறா தெளியேற் கின்ப
முத்தியை வழங்கும் சைவ முனிவரன் கமலை வாழும்
சத்திய ஞானி செம்பொற் சரணினை தலைமேற் கொள்வாம்.

பருகிநாத் தெவிட்டிக் கனைத்தெதி ரெடுத்துப்
பாட்டளி பேட்டொடுந் துயில
முருகுகொப் புளிக்கும் இதழிவே ணியனை
முறையொடும் பூசனை புரியத்
திருவருள் புரிந்தென் குடிமுழு தாண்ட
திருப்பரங் குன்றமா முனிவன்
மருமலர் கமலச் சேவடித் துணைகள்
வணங்கிஎம் சென்னிமீ தணிவாம்.

முதற்பாடல் குறிப்பிடும் தத்துவ நாதர் கி.பி. 1350-1375இல் வாழ்ந்து சித்தாந்த சாத்திரங்களுள் ஒன்றான உண்மை நெறி விளக்கம் செய்து இருபா இருபதுக்கு உரையும் எழுதிய சீகாழி தத்துவ நாதர் பரம்பரையில் வந்த ஒரு சமயத் தலைவரா என்பது ஆராய்தற்குரியது. இரண்டாம் பாடல் கூறும் ஈசான தேவர் என்பவர் வரதுங்க ராம பாண்டியருக்குக் குருவாயிருந்த நிம்பை ஈசான மாமுனிவர் ஆகும். கமலை சத்தியஞானி என்பவர் கமலை ஞானப்பிரகாசர். இவரிடம் சிதம்பரநாத கவி ஞானோபதேசம் பெற்றார். திருப்பரங்குன்ற மாமுனிவன் என்பது திருப்பரங் குன்றத்தில் வாழ்ந்து ஞானப் பிரகாசருடைய சீடராயும் பின்னர் துழாவூர் மடாதிபதியாயும் இருந்து சேதுபுராணம், சித்தாந்த சாத்திர உரைகள் முதலிய பலவும் செய்த நிரம்ப அழகிய தேசிகர் ஆவார். இங்கு குறித்த வரதுங்க ராம பாண்டியர், கமலை ஞானப்

பிரகாசர், நிரம்ப அழகிய தேசிகர் ஆகிய மூவரும் 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்து நூல் செய்தவர்கள் என்பது வேறிடங்களில் விளக்கப்பட்டுள்ளது.

இந்நூலாசிரியர் சிதம்பரநாத பூபதி என்பதும் அவர் ஊர் விசயநாரணம் என்பதும் பாயிரத்தின் இறுதிப் பாடலால் விளங்குகின்றன

பொலன்கிரி குழைத்த பரபுரா ணத்திற்
புகல்கதை விசிட்டமோர்ந் தெடுத்து
நலம்பெறத் திரட்டுஞ் சங்கர விலாச
நற்றமிழ் வடித்தினி துரைத்தான் –
வலம்புரிக் குலங்கள் சூலுளைந் தலற
வழிநறா மலரினோ திமங்கள்
சிலம்புதண் பழன விசயநா ரணம்சேர்
சிதம்பர நாதபூ பதியே.

விசயநாரணம் என்பது திருநெல்வேலி ஜில்லா நான்குனேரி தாலுக்காவிலுள்ள ஓர் ஊர்.* இது ஊர் என்பதை, 'வலம்புரி குலங்கள் சூலுளைந் தலற வழிநறா, மலரின் ஓதிமங்கள் சிலம்பு தன் பழன விசயநாரணம்' என்ற அடையால் நன்கு அறியலாம்; பூபதி என்றமையால் இவர் ஒரு சிற்றரசர் அல்லது தலைவர் என்றும் அறியலாம். இதில் ஒரு பொருத்தமும் உள்ளது. ஈசான தேவருடைய மாணாக்கருள் ஒருவரான வரதுங்க ராமபாண்டியர் ஒரு அரசர். சிவ புண்ணியக் கதைகளைக் கொண்ட பிரமோத்தர காண்டம் பாடினார். மற்றொரு மாணாக்கர் சிதம்பரநாத பூபதி சிவபுண்ணியக் கதைகளைக் கொண்ட சங்கரவிலாசம் பாடினார். இவரும் ஒரு தலைவர் என்பதாகும். இதனோடு வரதுங்கராம பாண்டியர் இளமையில் பொறித்த ஒரு கல்வெட்டினால், இவர் திருவண்ணாமலைப் புலவர் என்பதும் திருமூலநாதன் என்ற இயற்பெயர் உடையார் என்பதும் சைவ வேளாள மரபினர் என்பதும், பெரும்பற்றப் புலியூராகிய சிதம்பரத்திற்கு வந்து திருஅம்பலமுடைய நயினாருக்குத் திருப்பள்ளித்தாமம் தொடுக்கும் தொண்டில் ஈடுபட்டிருந்தார் என்பதும் விளங்குகின்றன. இவர் சிதம்பரத்தில் சில காலம் தங்கித் தொண்டு செய்தவர் என்பதை, உபமன்னியு பாற்கடல் பெற்ற

---

* இது இப்புராணத்தைப் பதிப்பித்த தி.பொ. பழனியப்பப் பிள்ளையவர்கள் குறிப்பு. அவர் பதிப்பித்துள்ள பாடம் விசையை நாரணம் சொற் சிதம்பர நாத பூபதி என்பது; இது விசய நாரணம் சேர் என்றே இருத்தற்குரியது.

அத்தியாயத்தில் இவர் சிதம்பரத்தைப் புகழ்ந்து விரிவாகப் பாடும் தன்மையால் நன்குணரலாம். பின்னும் சிறிது காலம் கழித்து இவர் தென்பாண்டி நாடடைந்து ஈசான தேவர் மாணாக்கராகி வரதுங்கராம பாண்டியருடைய போற்றுதலைப் பெற்றார். அவர் தூண்டுதலால் இப்புராணம் பாடினார் என்பதை அறிகிறோம்.

திருவாரூர்க் கோவை பாடிய சைவ எல்லப்ப நாவலர், எல்லப்ப பூபதி என்றும் சொல்லப்படுவார். அரதத்தர் மாணாக்க ராய்க் கஞ்சனூரில் இருந்த ஒரு தலைவர், சிவலிங்க பூபதி எனப் படுகிறார்; அவர் சிலையும் அவ்வூர்க் கோயிலில் உள்ளது. அவர் அரதத்தரின் வடமொழி நூலுக்கு வடமொழியில் வியாக்கி யானம் செய்ததாகவும் சொல்வர்.

## சங்கர விலாசம்

சங்கர விலாசம் என்ற இந்நூல் ஒரு புராணம் என்று முன்னே சொன்னோம். நூல்களுக்கு விலாசம் என்று பெயர் வைக்கும் முறை வடமொழியிலும் தமிழிலும் உண்டு. பெரிய புராணக் கதையை வடமொழியில் அமைத்த இருவர் தம் நூல்களுக்கு உபமன்னியு பக்தவிலாசம், அகத்திய பக்த விலாசம் என்று பெயர் வைத்திருத்தல் நினைவு கூரத்தக்கது. இது சங்கரன் புகழைக் கூறுவதால் சங்கர விலாசம். அன்றியும் சீராசை என்று வழங்கு கின்ற சங்கரநயினார் கோயிலில் எழுந்தருளியுள்ள சங்கர நாரா யணப் பெருமான் அருளால் நூல் செய்ததாகப் பதிகம் இறுதிப் பாடலில் கூறுகின்றார்:

> அரிமதர் நெடுங்கட் செவ்வாய் ஆவுடை மடந்தைபாகன்
> தருவளந் தருசீ ராசைச் சங்கரன் அருளா லோங்கும்
> பொருதிரை உலகில் யாரு முணர்வுறப் புகல லுற்றேன்.

இதனாலும் நூலின் பெயர் சங்கர விலாசம் என்று அமைந்த தாகக் கருதலாம்; நூலின் இறுதிப் பாடல், பல சுருதி கூறுவது, நூல் சங்கர விலாசமென்றே கூறுகிறது.

இந்நூலானது பாயிரம் பதிகம் என்ற பகுதிகளோடு 23 அத்தியாயங்கள் உடையது. பாடல் தொகை 1437. நூலில் நால்வ ருக்கு வணக்கம் சொல்லிய பிறகு, திருமாளிகைத் தேவருக்கு இவர் வணக்கம் சொல்வது புதுமை.* பாயிரத்தை அடுத்து இவர்

* இதே நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்த கண்கட்டி மடம் மறைஞான சம்பந்தர் தம் நூல்கள் அனைத்திலும் திருமாளிகைத் தேவரைத் துதிப்பது இங்கு நினைவுகூரத்தக்கது.

பதிகம் பாடியிருப்பது பண்டைய இலக்கியங்களில் மட்டுமே காணப்படுவது. (சிலப்பதிகாரம், சிந்தாமணி பார்க்க.) பிற்கால நூல்களில் நம்பி திருவிளையாடலில் மட்டும் பதிகம் உள்ளது; தென்காசிப் பாண்டியர் புராணங்களில் பதிகம் அமைத்திருப்பது முன்னே சொல்லப்பட்டது.

நூலை மூன்று பகுதிகளாகக் குறிப்பிடலாம். முதலாவது புராணப் பகுதி. இரண்டாவது சிவ சின்னங்களின் பெருமை. மூன்றாவது தலங்களின் பெருமை. முதல் பகுதியில் பன்னிரண்டு அத்தியாயங்கள். இங்கு சொல்லப்பட்ட பொருள் புலிக்கால் முனிவருடைய புதல்வனான உபமன்னியு ஈசனை அர்ச்சித்துப் பாற்கடல் பெற்றது, பிட்சாடனர் தாருகாவனத்தில் பலியேற்றது. சுவேத முனிவர் காலன் பிடியிலிருந்து தப்பியது, சிவபெருமான் தாருகாவனத்து முனிவர்களுக்கு அருள் புரிந்தது, ததீசி முனிவர் தவம்புரிந்து வைர மேனி பெற்றது, நந்திகேசர் பெருமானை வணங்கி யாவர்க்கும் தலைமை பூண்டது, பிருகு முனிவர் விட்டுணுவுக்குச் சாபங் கொடுத்தது, விட்டுணு சிவார்ச்சனை செய்து மன்மதனைப் புதல்வனாகப் பெற்றது, அவன் சக்கரம் பெற்றது, வசுசுருதன் என்பவனுடைய பக்திச் சிறப்பு, பிருங்கி முனி சிவபெருமானை வலம் செய்து முத்தி பெற்றது, திருவாரூரில் ஒரு வேந்தன் வலம் செய்து முத்தி பெற்றது என்று வரலாறுகள் சொல்லப்பட்டன. இரண்டாம் பகுதியில் சிவ சின்னங்களாகிய பஞ்சாக்கரம் திருநீறு உருத்திராக்கம் ஆகியவற்றின் சிறப்பும் சோமவார விரதமான்மியமும் சொல்லப்பட்டன. மூன்றாம் பகுதி யில் திருவாரூர், காஞ்சிபுரம், திருக்காளத்தி, திருப்பருப்பதம், திருக்கழுக்குன்றம், கோதாவரி நதி ஆகியவற்றின் சிறப்புச் சொல் லப் பட்டது. நூல் முழுமையிலும் நாட்டு வருணனை நகர வருணனை தோத்திரப் பாடல்கள் என்பன மிகச் சிறப்பாய் உள்ளன. கோதம கங்கையே கோதாவரி என்பார். பிரமசரியம் இல்லறம் வானப் பிரத்தம் சந்நியாசம் ஆகிய நான்கு ஆசிரமங் களிலும் நின்றவர்கள் முறையே ததீசி, கௌதமன், குறுமுனிவன், துருவாசன் என்று சொல்லுகின்றார்.

நூலாசிரியர் சிதம்பர நாதர் என்ற பெயருக்கும் தில்லையில் பூந்தொடையல் தொண்டு செய்தார் என்பதற்கும் பொருத்த மாக, நூலெங்கும் பொன்னம்பலத்தில் நடிப்பவனுடைய பெயரையும் புகழையுமே சுவைபடப் பாடுகின்றார். உபமன்னியர் வரலாற்றில் தில்லைநகரத்தை 24 பாடல்களால் வருணிக்கிறார். இது நூலுக்கு ஒரு நகரப் படலம் போன்றது. தில்லையைத்

தில்லை மாநகரம் பெரும்பற்றப் புலியூர் சிதம்பர நகர் என்றெல்லாம் தனித்தனிப் பாடல்கள் பாடுகிறார். இப் பகுதியில் கோயிற் புராண வரலாறுகள் சிலவற்றைத் தெரிந்து அமைத்திருக்கிறார். ஆசிரியர் சிறந்த புலமையுடையவர் என்பதை நூலெங்கும் காணலாம். சுதரிசனன் மனைவியை வருணிக்கிறார்:

விண்டு நீலம் விளங்கிய வாவியோ
மண்டு சைவலம் வார்ந்து வளர்ந்ததோ
பண்டை மாரன் படுகொலை வேழமோ
கொண்ட லோ மென் கருநெடுங் கூந்தலே.

மின்னும் வெங்கணை யோஅயில் வேல்கொலோ
மன்னு கோப மறலிகைப் பாசமோ
பின்னு மூசற் குழையிற் பிறங்குசெம்
பொன்னி னோலை புறமிடுங் கண்களே.

கூறு கொண்டே இழை வகிர்க் கோலமோ
வேறு பைம்பொன் இணர்த்தரு வல்லியோ
வீறு பொங்கொளி வீசிய மின்னொடு
மாறு கொண்டு நுடங்கும் மருங்குலே.

காலம்

ஆசிரியர் வரலாற்றால் இது மிகவும் தெளிவாகத் தெரியும். இந்நூலின் இறுதியில் சேர்க்கப்பட்டுள்ள ஞானப் பிரகாசர் மாணாக்கர் அட்டவணையினால் ஞானப் பிரகாசர் காலம் 1525-75, அவர் மாணாக்கரான நிரம்ப அழகிய தேசிகர் காலம் 1550-75 என்ற விளக்கம் கிடைக்கும். வரதுங்கராம பாண்டியன் ஆட்சிக் காலம் 1588இன் பின். இவற்றால் சிதம்பரநாத பூபதியின் காலம் 1575-1600 என்று கொள்வது பொருந்தும்.

மேலும், நூலைப் பதிப்பித்த பழனியப்பப் பிள்ளை ஒரு கல்வெட்டைக் குறிப்பிட்டுப் பின்வருமாறு எழுதுகிறார். திருநெல்வேலி ஜில்லா தென்காசி நகருக்கு அருகில் உள்ள சாம்பூர் வடகரையிலுள்ள மூலஸ்தானேசுவரர் கோயில் மகா மண்டபத்தின் வடக்குச் சுவரிற் காணப்படும் கல்வெட்டு. அதனைத் திருவாங்கூர் பழங் கல்வெட்டிலாகா வெளியீடு, தொகுதி ஒன்று, பக்கம் 280இல் காணலாகும். அதன் பகுதி வருமாறு: “சோழ வள நாட்டு நடுவு மண்டலத்துப் பெரும்பற்றப் புலியூர் நயினார் திருவம்பலமுடைய நயினார் திருப்பூர் மண்டபத்தாரில் திருவண்ணாமலைப் புலவர் சிதம்பரநாதன் திருமூல நாத

முதலிக்கு பண்டுடை மனையும் பழம்பேரையுந் தவிர்த்துத் திருப்பாட்டுக் காணியாட்சையாகக் கற்பிக்கும்படிக்கு நம் குமாரன் அழகசொக்கனார் அபிராம பாண்டியன் ... ஓலையும் விடுகையில் ..."

இக்கல்வெட்டின் காலம் கி.பி. 1572. இதனாலும் ஆசிரியருக்கு மேலே குறித்த காலம் வலியுறுகின்றது.

## பதிப்பு

நூல், முதன் முதல் யாழ்ப்பாணத்தில் சி. இரத்தின சபாபதி ஐயர் என்பவரால் திருத்தமாய்ப் பதிப்பிக்கப் பெற்றது - 1937; தி.பொ. பழனியப்பப் பிள்ளை பதிப்பு, திருப்பதி ஆராய்ச்சிக் கழகம் 1950. இவர் முந்திய பதிப்பைக் குறிப்பிடவில்லை. யாழ்ப்பாணப் பதிப்பிலும் திருத்தமான முன்னுரை, பாடம், முதற் குறிப்பகராதி, தொடர்பை விளக்கும் தலைப்புக்கள் முதலியன உள்ளன.

# சீவல மாறன் கதை

## ஆசிரியர்

திருவான்மியூர் டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையத்தில் உள்ள ஒரு சுவடியிலிருந்து இந்நூற் செய்திகள் சில தெரிய வருகின்றன. இச்சுவடி, கிடைக்கின்ற அளவில் 1395 பாடல்கள் கொண்டது. பாடல்கள் நல்ல நடை; சீவலமாறன் என்ற பாண்டியனது சரித்திரத்தைக் காப்பியமாகப் பாடுவது. சீவல மாறன் என்பது அதிவீரராம பாண்டியன் பெயர். இந்நூலாசிரியர் பெயர் சிதம்பரநாத கவி; இவர் தந்தை மயிலேறும் பெருமாள் - என்ற செய்திகள் நூலின் சிறப்புப் பாயிரத்தால் தெரிய வருகின்றன:

மன்னவர்மன் னவர் வேந்தன் வழுதிபராந் தகநாதன்
வரக் குமாரன்
தென்னவர்தம் குலதீபன் சீவலமா றன்கதையைத்
திருந்தச் செய்தான் –
மன்னவர்தம் பெருவாழ்வு பெற விளங்கு மயிலேறும்
பெருமாள் பாலன்
கன்னவிலும் தடம்புயவேள் சிதம்பரநா தன் கவிதைக்
கருணை மாலே.

இவ்வரலாற்றின் 57 - 62 பக்கங்களில் அதிவீரராம பாண்டியர் ஆதரவு பெற்ற சிதம்பரநாத கவி சங்கர விலாசம் என்ற புராணம் பாடிய வரலாறு விரிவாகச் சொல்லப் பெற்றது. அவர் ஊர்

விசயநாரணம்; அவர் தந்தை பெயர் அங்கு சொல்லப் பெற வில்லை. அவரே இச் சிதம்பரநாத கவியாவார் என்று நன்கு தெரிகிறது மேலும், இவ்வேடு எழுதப்பெற்ற காலம் கொல்லம் 918; கி.பி.1743. ஏட்டில் சில பகுதிகள் இல்லை; இடம் விட்டு, 'இப்பகுதிகளை வேறு ஏடு பார்த்து நிரப்பிக் கொள்ளவும்' என்று எழுதப்பட்டிருக்கிறது. சிதம்பரநாத கவியின் காலம் 1575 - 1600 என்று அங்கு (பக்கம் 62) தெளிவாக்கியிருக்கிறோம். எனவே, இக்காலத்தில் தோன்றிய சீவலமாறன் கதை என்ற இந்நூல் 150 ஆண்டுக் காலத்தில் ஏட்டில் சிதைவு ஏற்பட்டுச் சிதைவுடன் பிரதி செய்யப்பட்டது என்பது ஏற்கக் கூடியதே. இருவரும் ஒருவரே என்பதை இக்கூற்று உறுதி செய்கிறது.

ஏட்டுப் பகுதியில் பாயிரப் பகுதி முழுமையுமே இல்லை ஆதலால் நூலாசிரியர் பற்றிய ஏனைய விவரங்களை அறிதற்கு இயலவில்லை.

மன்னன் ஏவலால் தென்திசை சென்று அங்கு ஆவன செய்து மீண்ட தூதுவர் இருவர் வேண்டியபடி அவர்கள் பெயரால் விசய நாரணம் என்ற ஊர் அமைக்கிறான்; தூதுவர் விசயன் நாராயணன் என்ற பெயருடையவர். விசய நாரணம் என்பது சிதம்பரநாத கவியின் ஊர். இவ்வூரையும் ஆசிரியர் இங்கு சிறப்பிக்கும் தன்மையால், இவர் இவ்வூரினர் என்பது வலியுறுகின்றது. இதனாலும் சங்கர விலாசம் செய்த சிதம்பரநாத கவியும் சீவல மாறன் கதை செய்த சிதம்பரநாத கவியும் ஒருவரே என்பது தெளிவு.

இதுகாறும் கூறிய கருத்துக்களோடு மற்றொரு கருத்தும் சிந்தித்தற்குரியது. நடராசப் பெருமான் நெல்லையில் ஆடிய தாண்டவத்தை இவ்வாசிரியர் மிகவும் சிறப்பித்துப் பாடுகிறார். நெல்லையே தாருகாவனம் என்று அகத்தியன் கூறியதாகக் கதை யமைக்கிறார். சோழ நாட்டில் மாயூரத்திலிருந்து திருவாரூர் செல்லும் பாதையில் சுமார் ஏழு மைல் தொலைவில் உள்ள பெருஞ்சேரி என்று இன்று வழங்கிவரும் ஊரே தாருகாவனம் என்பது ஐதிகம். தாருகாவனத்து முனிவர் விட்ட யானையைச் சிவபிரான் உரித்துப் போர்த்தது வழுவூர் என்ற அருகிலுள்ள விரட்டத்தலம். இது அட்ட வீரட்டத்துள் ஒன்று. 'பூமன் சிரம் கண்டி' என்னும் பாடலில் 'மாப் பழுவூர்' என்று சொல்லப்படும் வழுவூராகும். இங்குள்ள யானை உரித்த பெருமான் வடிவம் 'கஜசம்ஹார மூர்த்தி' மிக்க அழகு பொருந்தியது. இது ஒரு வைப்புத் தலம். இவ்விரு தலைங்களையும் இணைத்து இன்றும்

மார்கழித் திருவாதிரையில் சிறப்புடன் உற்சவம் நடைபெறு கிறது. கஜசம்ஹாரம் ஆனபின் பெருமான் ஆருத்ர தரிசனத் தினத்தில் இங்கு கஜசம்ஹார தாண்டவம் ஆடுகிறார்.

இவ்வாறிருக்க, சிதம்பரநாத கவி புதுநகரில் தாண்டவத்துக் காக நெல்லையே தாருகாவனம் என்று பாடுவதில் பொருள் இருக்கிறது. தாருகாவன நிகழ்ச்சிகளை மிகவும் விரிக்கிறார். இதற்கு மூலம் வரகுணராமர் பாடிய இலிங்க புராணத்தில் இப்பகுதி மிகவும் விரிவானது தாருகாவனத்தில் சிவன் பலி யேற்கச் சென்றது என்ற அத்தியாயத்தின் 50 செய்யுட்களில் முனிபன்னியர் நிலையை மட்டும் 30 பாடல்களில் வருணிக் கிறார். சிதம்பரநாத கவியும் இவ்வாறாக மிகவும் சிறப்பாக வரகுணராமர் பாடலைத் தழுவியே பாடியிருப்பது, இலிங்க புராணம் கூறும் தாருகாவன நிகழ்ச்சியில் ஈடுபட்டே பாடுகிறார் என்று நாம் கருத வேண்டும். எனவே, இவரும் பாண்டியர் சூழலில் வாழ்ந்த சிதம்பரநாத கவியும் ஒருவரே என்ற கருத்துக்கு இவ் வொற்றுமையும் ஆதரவு தருகிறது. சங்கரவிலாசத்தின் இரண் டாம் அத்தியாயம் 74 பாடல்கள் சிவன் தாருகாவனத்தில் பலி யிரந்த செய்தி கூறும். நாலாம் அத்தியாயம் 51 பாடல்கள் அந்த ரிஷிகள் பேறு பெற்ற செய்தி கூறும்: இந்த நிலைமையும் உடன் கருதத்தக்கது.

## நூற் பொருள்

ஆசிரியர் நூலை விரிவாகப் பாடியிருக்கிறார் என்று தெரி கிறது. நகரப்படலம் என ஒன்று இருப்பதால், பாயிரம் ஆற்றுப் படலம் நாட்டுப் படலம் பாடியிருப்பார் என்று கருதலாம்; இப்பகுதிகள் இல்லை. நகரப் படலத்திலிருந்துதான் ஏட்டில் உள்ளது. நகரப்படலம் முதல் திருக்கயிலாயப் படலம் வரை யில் உள்ள பகுதி 15 படலம்; பின்னால் செயத்தம்பப் படலம் என்ற படலத்தில் முதல் 72 பாடல் இல்லை. நகரம், அரசியல், திரு அவதாரம், திரு அபிடேகம், மந்திரி, செயத்தம்பம், கங்கா நதி, அழகிய மன்னார் பூசனை, வரம்பெறு படலம், செப்பேடு காண் படலம், நகர் புகுபடலம், சீவலன் மங்கலம், சீவலன் சபை, வரலாறு, நடன தரிசனை, திருக்கயிலாயப் படலம் என்பன படலத் தலைப்புக்கள்.

சீவல மாறன் கதையில் கூறப்பட்ட வரலாற்றைச் சுருக்கி இங்கே கூறுவோம். இக்கதை தமிழில் எங்கும் பயிலாதது. ஆகையால் இதை விளக்கமாய்க் கூறுவது பொருத்தமாகும்.

நெல்லை நகரில் அரசு புரிந்தவன் பராந்தக மாறன்; தேவி பாடகவல்லி. புதல்வன் இன்றி வருந்திய இவர்கள் தவத்துக்கு இரங்கிய திருமால். வரங்கொடுக்கிறார் - தேவி கருத்தரித்த வுடனே அரசன் இறப்பான், குழந்தை பிறந்தவுடனே தேவி இறப்பாள் என்று சொல்லித் தாமே கருவாய்த் தங்குகிறார். அரசன் இறந்து போகிறான். உயிர்விட எண்ணிய அரசியைத் தடுத்து, மரபு தொடரவேண்டும் என்று அமைச்சர் உய்யக் கொண்டார் சுட்டிக்காட்டி, தாமே ஆட்சியைக் கவனிக்கிறார். உரிய காலத்தில் மகன் பிறக்கவே, அரசியும் இறக்கிறாள். அமைச்சர் ஆதரவில் குழந்தை வளர்கிறான். பெயர் சீவல மாறன். செங்கீரை, தாலாட்டு, சப்பாணி, வருகை, முத்தம், அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறு தேர் என்ற பருவங்கள் நிகழ்கின்றன. பன்னிரண்டாண்டு நிரம்பவே அமைச்சர் விரும்பியபடி அகத்திய முனிவன் இவனுக்கு மோலி சூட்டுகிறான். அமைச்சன் மூலம் தன் பிறப்பு வரலாறுணர்ந்த குமரன், கங்கைக்கரையில் பெற் றோர்க்குப் பிதிர்க்கடன் செய்யத் துணிகிறான்.

இந்த இடத்தில், செயத்தம்பப்படலம் முதல் 72 பாடல்கள் ஏட்டில் இல்லை; பின் 73 என்று தொடர் எண்ணிட்டுப் பாடல் கள் தொடர்கின்றன.

வடக்கு நோக்கிப் புறப்பட்ட மாறன் முதலில் கருநாட அரசனோடு போரிடுகிறான். போர் வருணனை மிகவும் விரிவு. முடிவில் கருநாடக மன்னனான விநோதன் தோல்வி. இது அறிந்து ஒட்டியர் வேந்தன் வந்து பணிந்து திறையிடுகிறான். அடுத்துத் துலுக்க நாட்டிற் சென்றபோது அவன் பணியாமல் போரிடுகிறான். அவனுடைய தலைவரான மலுக்கன், முகம்மது, பீரு, மாயினா, காளன் முதலாயினோர் பொருது மடிகிறார்கள். மாறனுடைய தலைவனான நாதன் துலுக்கனோடு பொருது அவனை மாய்க்கிறான். பின் எல்லா அரசரும் மாறனைப் பணி கிறார்கள். எல்லோரும் வந்து திறையிட்டுப் பணிந்த காலத்து, கங்கை வடகரை விந்தை மாநகரின் அரசி பெதும்பை என்னும் கன்னி மட்டும் திறையிடவில்லை எனக் கேட்டு, அவள் பெண் ணானதனால் அவள் நாட்டையும் அவளுக்குத் தந்து வரிசை யும் நல்கி, பின் செயத்தம்பம் நாட்டிக் காசி யடைகிறான்.

பிருகு ஆசிரமம் அடைந்து அவரால் சகரன் பகீரதன் வரலாறு அறிகிறான். கங்கையில் மூழ்கித் தன் பிதிர்க்கடன்களை முடிக் கிறான். அங்கு ஓர் ஐந்தலை நாகம் ஓர் அழகிய மன்னர் பிம்பம்

கொண்டு வந்து, அதற்குப் பிருகு பூசனை முடிக்கவும் மீண்டும் கொண்டு சென்றது. அப்பிம்பம் இந்திரனால் அருச்சுனனுக்குத் தரப்பட்டதென்று அறிந்து, சீவலமாறன் அங்குத் தவம் செய்து, அப்பிம்பம் தன் கரத்தே வரப் பெற்றான். அந்த நிலையில், பாண்டி நாட்டிலிருந்து, 'உடனே திரும்பி வராவிட்டால் உயிர் துறப்பேன்' என்று அமைச்சர் சொல்லியனுப்பிய செய்தியைத் தூதுவர் உரைப்பக் கேட்டு, பிருகு முனிவருடன் இருந்த ஆயிரத் தெட்டு முனிவர், கணபதி முருகன் முதலான மூர்த்திகள் எல்லாம் பெற்று, உடனழைத்துக் கொண்டு மன்னன் காசியி லிருந்து புறப்பட்டான்.

கேதாரம், சோமநாதம், செகநாதம், பருப்பதம், காளத்தி வேங்கடம் பணிந்து, தன்னை வணங்கிய தொண்டைமானோடு கழுக்குன்று முதலான தொண்டை நாட்டுப் பதிகள் வணங்கி, தொண்டைமானை அனுப்பிவிட்டு, நடுநாடு அடைந்து இங்கு அண்ணாமலை முதலான தலங்கள் பணிந்து பின் கொங்கு நாடு எங்கென வினவி அங்குள்ள தலங்கள் பணிந்தபோது, சேர மன்னன் வந்து வணங்கினான். பின்பொன்னித் தென்கரைச் சிவாயமலை பணிந்து, வட கரைத்தலங்கள் யாவும் முறையாக வணங்குகிறான். இறுதியில் தில்லை. இங்கு ஏழு நாள் தங்கித் துதிக்கிறான். துதித்துத் தானும் சுந்தரமூர்த்தி மனுநீதிச் சோழன் போல இக்காயத்தோடே கயிலை போக அருள் புரிய வேண்டு மென்று வேண்டுகிறான். 'சித்திரசபைக்குக் கீழ்பால் பொருநை சூழ்ந்த தாருகாவனத்துள் அமைந்த மன்றத்துக்கு உத்தர திசை யில் ஆனைமா நகரமொன்றுண்டு. அங்கு நாம் முன் திரு நடம் செய்தோம். அதன் எல்லையை அகத்தியன் அறிவான். அம்மன்றத் தைப் பொன்னாக்க வேண்டித் தெய்வத்தச்சன் மூங்கையாய்ப் பிறந்திருக்கிறான். நீ போய் அதனைப் புதுக்கு, உன்னைக் காயத் தோடு கயிலைக்கு அனுப்புவோம் என்று நடராசப் பெருமான் அருளவும், மகிழ்ந்து அரசன் தில்லையை விட்டு நீங்கினான்.

பின் தென்கரைத் தலங்கள் பணிந்தான். கொள்ளிடம் கடந்து வந்து திருக்கோடிக் குழகர் முதல் பல தலங்கள் பணிந்து திருவாரூரடைந்து செம்பியன் விருந்து பெற்றான். மற்றைத் தலங்களும் வணங்கித் திருவரங்கம் அடைந்தான். இதனோடு தென்கரைத் தலங்கள் முடிவு. அரங்கம் பணிந்து சோழனோடு உறந்தையில் தங்கித் தான் வந்துள்ள செய்தி அமைச்சனுக்கு அனுப்புதலும், அவன் இங்கு வந்து மன்னனைக் கண்டான். பின் சோழனிடம் விடைபெற்றுப் பாண்டித் தலங்கள் வழிபட்டான்.

சில தலங்கள் வழிபட்டு இராமேச்சுர மடைந்து துலாபாரம் செய்தான். பெருமானுக்கென்று கொடுத்த செம்பொன் அனைத்தையும் அங்கிருந்த வேதியர் கைப்பற்றிச் செல்லவும், அரசன் வெகுள்கிறான்.

> 'அந்தமில்லதோர் பசும்பொன்நீர் கவர்வதென், அருள்கூர்
> எந்தை தன்பணிக் கியான்கொடுத் திடுவதும் எண்ணா
> மந்தி போற்றிரி ஆரியரே, மதி மறந்தீர்,
> தந்த பொன்னெலாம் தருக'என் றிறையவன் சலித்தான்.

அதன்மேல் அவர்கள், பெருமானுக்குரிய பொருள்கள் யாவும் தாங்கள் எடுத்துக் கொள்ளலாம் என்று இராகவன் செப்பேடு கொடுத்தது உண்டு என, காட்டும்படி அவன் கேட்கவும், அவர்கள் திகைத்தனர். கனவில் இறைவன் தோன்றி ஐந்தலை நாகம் அச்செப்பேடு கொணர்ந்து காட்டும், ஆனால் நாகத்தைக் கண்டவன் கண் தெறிக்கும் எனவும், அரசன் காணற்கே துணிந்தான். நாகம் அப்படியே வந்து காட்டும் போது, இவன் ஒரு கண் பொத்தி ஒரு கண்ணால் காணவும், கண் தெறித்து விழுந்தது. பின் இறைவனைப் போற்றிச் சேதுவில் மூழ்கிக் கண் பெற்றான். பின்னர் மதுரைக்குச் சென்றான்.

ஆலவாய்ப் பெருமானைப் போற்றி, அங்கிருந்து பின்னுள்ள எல்லாச் சிவ தலங்களையும் வழிபட்டு, திருமால் ஆலயங்கள் பிற சிவாலயங்கள் யாவும் ஒன்று விடாமல் வழிபட்டு இறுதியில் நெல்லைப்பதி வந்து அம்மையப்பரைப் பணிந்து தங்குகிறான். பல தலங்களில் தன் பெயராலும் தந்தை பெயராலும் ஆலயங்கள் அமைக்கிறான்.

காசியிலிருந்து கொண்டுவந்த அழகிய மன்னர் கனவில் வந்து தமக்குக் கோயில் அமைக்கத்தக்க இடம் உணர்த்தவும், அரசன் அவ்வண்ணமே எறும்புகள் காட்டிய வழியே சென்று செண்பகவனம் அடைந்து வேழ முகன் கோயில் கண்டு போற்றி, அவ்விடத்துப் புதிதாக அழகிய மன்னார் கோயில் எடுத்தான். நகரும் அமைத்து அங்கு, தன்னுடன் கங்கைக் கரையிலிருந்து வந்த அந்தணரையும் இருக்கச் செய்தான். பின் வடகீழ்த் திசையில் ஓர் இலிங்கம் கண்டு அதுமாயவன் பூசித்து வந்ததென்றறிந்து அதற்கும் கோயில் முதலியன செய்தான். பின் தென்மேல் பால் கரிய மாணிக்கம் என்ற சிவாலயம், தான் தோன்றி, நாதர் கோயில், வணிகர் புரம், கூத்தன் கோயில், ஆயிரத்தெட்டுப் பிள்ளையார் கோயில், வேறு பல கணபதி கோயில், வேலன் கோயில், ஊருடையான் என்ற சாத்தன் கோயில், ஆயிரத் தெட்டு

நங்கை என்ற காளி கோயில் திருவிருந்தாழ்வார் என்ற திருமால் கோயில் என்பன எண்ணற்றன செய்தான்; மலையைப் பிளந்து காலும், குளமும் கண்டான்.

மானை நகரில் அரசன் வந்திருந்தபோது, அகத்தியர் வந்தார். அவரிடம் அரசன் தான் பெருமானிடத்து உடலோடு கயிலாயம் புகவேண்டியபோது பெருமான், 'மானை நகரில் மறைந்த சபையைச் செய்தால், உன்னைப் புகவைப்போம்' என்று அளித்த வரத்தை உரைத்தான். அப்போது முனிவர், நெல்வேலியே தாருகாவனம் என்றும் இங்குப் பெருமான் பிக்ஷாடனர் வடிவம் தாங்கி முனிவர் தம் மனைவியர் கற்பைச் சோதித்தாரென்றும், திருமால் மோகினி வடிவுடன் முனிவரை மயக்கினாரென்றும், மனைவியர் நிலை கண்ட முனிவர் விட்ட மழு ஆனை நாகம் தீ முதலியவற்றைப் பெருமான் தாங்கினான், உடுத்தணிந்தான் என்றும், பின்னர் அங்கு நடம்புரிந்தான் என்றும் உணர்த்தினான். அறிவு வந்த முனிவர் பின் துதித்தார்கள். முனிவர் வேண்டியபடி பெருமான் அங்கு நடனக் கோலத்தோடு தங்கினான். ஆதிரை நாளில் சித்திர நடனம் செய்தான். அகத்தியன் இவ்வாறு வரலாறு கூறிக் காட்டிய இடத்தில் அரசன் சபை அமைத்தான் குளங்கள் அமைத்து அவற்றுள் பொருநை நீர் பாய வழி செய்தான். நீராட வந்த இடையர் மகளிர் அங்கு நீராட அஞ்சி, இந்நீர் மீண்டும் பொருநைக்கே போவதாக எனச் சாபங் கொடுக்கக் குளங்கள் நீர்வற்றின. அரசன் புடை மருதூர்ப் பெருமாளை வேண்டி, அவர் சொற்படி சித்திரா நதியிலிருந்து கால் வெட்டி மீண்டும் நீரால் நிரப்பினான்.

அரசன் நிறுவிய சபைக்கு நெல்லைநாதர் திருமால் பிரமன் முதலான எல்லாத் தேவர்களும் வருகிறார்கள். ஆவணி மூலத்தில் அம் மானை நகர் மன்றத்தில் பெருமான் நடம் செய்கிறான். இதை யாரும் பார்க்கவில்லை. ஓர் ஒற்றன் பார்க்கிறான். தேவர் முதலியோர் தில்லை வாழந்தணர் திரண்டு தரிசிக்கும் இத் தோற்றம் இங்கு வேற்றரசன் படையெடுப்பு என்ற நினைப்பை அவன் மனத்தில் உண்டாக்க, அவன் அவ்வண்ணமே அரசனிடம் சொல்ல, அவன் நீ பொய் சொன்னாய் என்று அவனைக் கை வேலால் எறிய, அவன் கயிலாயம் செல்கிறான். பின் அரசன், சந்தனப் பொதுவில் தம்பிரான் நடனம் ஆடுகிறார் என்று கோயில் அமைத்த தச்சன் கூறக் கேட்டுச் சென்று தரிசிக்கிறான்; துதிக்கிறான். உடலோடு கயிலாயம் செல்லும் விருப்பைத் தெரிவிக்கிறான்.

இறைவன் மறையவும், தானும் உடன் போகவில்லையே என்று கவன்ற அரசனுக்கு இந்திரன் தன் தேரை மாதலியோடு அனுப்பியழைக்க, அரசன் உடலோடு செல்கிறான். அமைச்சன், சந்தன மன்றம் செய்த தச்சன் ஆகியோரும் உடன் கயிலை செல்கின்றனர். வாயில் காவலரான ஆட்கொண்டார் உய்யக் கொண்டார் என்போரால் மன்னன் தன் வரவைப் பெருமானுக்கு அறிவித்துத் திருமுன் சென்று பணிந்து முன்னமே அங்கு சிவகணத் தலைவர்களாய் அமர்ந்துள்ள வளவனையும் சேரனையும் கண்டு மகிழ்ந்து தானும் தலைவனாகிச் சிவனருளில் திளைத்திருந்தான்.

**நூலாராய்ச்சி**

இந்நூலின் பல சிறப்புக்களில் மிகவும் முக்கியமானது, சீவலமாறன் காசி தொடங்கி முறையாகத் தலங்களை வழிபட்டு வருகிறான் என்ற செய்தி. பாடல் பெற்ற தலங்கள் அனைத்தை யும் முறையாகச் சொல்லி வருகிறார். சொல்லி வருவது, தல முறை அட்டவணை யொன்றைக் கையில் வைத்துக் கொண்டு பாடுவது போல் உள்ளது பாடிய தலங்கள் பற்றிய முக்கிய குறிப்புக்கள் சில கீழே தருவோம். காலம் 16ஆம் நூற்றாண்டு ஆதலால், அக்காலத்தே தலங்கள் பற்றிய கருத்து எவ்வாறு இருந்தது என்று அறிய இக்குறிப்புக்கள் பெருந்துணை புரியும்.

முதலாவது வட நாட்டுத் தலங்கள். சம்பிரதாயமாகவுள்ள கயிலை கேதாரம் பருப்பதத்தோடு, அனேகதங்காபதம் இந்திர நீலப் பருப்பதத்துக்குப் பதிலாக இவர் சோமநாதம் செகநாதம் என்று சொல்கிறார். உடன் திருவேங்கடத்தையும் கூறுகிறார். தலயாத்திரை சொல்லும் இவ்வாசிரியர் பின்னே பல திருமால் பதிகளையும் கூறக் காண்போம். ஆகவே இங்கும் திருவேங்கடம் கூறியது பொருத்தமே.

அடுத்த தொண்டைநாடு 32 தலங்கள். இங்கு, காரிகரை 32 உடன் அதிகமாகச் சொல்கிறார். இது வைப்புத் தலம்; சேக்கிழாராலும் சொல்லப்பட்டது.

பின்னர் நடுநாடு 22. இங்கு திருத்தினைநகருக்கும் எருக் கத்தம் புலியூருக்கும் இடையில் ஓமாம்புலியூரைச் சொல்கி றார். இது பிழை போலும்; பின்னர் சோழ நாட்டு வடகரைத் தலங்களில் இவ்வூரை இவர் மீண்டும் குறிப்பிடுகிறார்.

பின் கொங்கு நாட்டுத் தலங்கள் 7. இவற்றுள் திருச்செங் குன்றூரை விட்டுக் குரக்குத் தளி கூறுகிறார். சேர நாட்டில் திரு அஞ்சைக்களம் சொல்லவில்லை.

*அடுத்து, பொன்னியின் தென்கரை மருவிச் சிவாயமலை வணங்கி, வடகரை சார்ந்தான், வடகரைத் தலங்கள் 63, இங்கு திருத் தவத்துறை சொல்கிறார்; தவத்துறை வைப்புத்தலம். திருப்பாற்றுறையைப் பின்னே சொல்கிறார். பாற்றுறை பாடல் பெற்ற தலம். திருச்சிராப்பள்ளி யடுத்த மாந்துறை பாடல் பெற்ற தலம்; இவர் இதைச் சொல்லாமல் கோடிகாவை யடுத்த வேறு மாந்துறையைச் சொல்கிறார். அம்மாந்துறை பாடலுடைய தலமல்லாது, பாடலிழந்த தலம் என்பர். கடம்பூர் குருகூர் என்று சொல்லப்பட்டது போலும்; கண்ணார் கோயில் தென் திருமுல்லை வாயில் இல்லை; கிழக்கேயுள்ள கீழூராகிய கடை முடியே இவர் குறிப்பிடுவது, மேற்குக் கோயிலடியருகே உள்ள கடை முடியல்ல.*

*இறுதி வடகரைத் தலமாகத் தில்லையைக் குறிப்பிடுபவர் அரசன் இங்கு சென்று வழிபடுவதை மட்டும் 13 பாடல்களால் சொல்கிறார். பின் 7 பாடல்களால் துதிக்கிறான். ஒரு பாடல்:*

அரியயன் காணா வண்ணம் அழலுரு வானாய் போற்றி
விரிதிரை உததி யீன்ற விடம்அமு துண்டாய் போற்றி
பரிவொடு பாலன் வேண்டப் பாற்கடல் அளித்தாய் போற்றி
திரிபுரம் எரித்தாய் போற்றி திருச்சிற்றம் பலத்தாய் போற்றி.

*தில்லையில் மட்டும் தேவி பெயரைச் சிவகாமி என்று குறிப்பிடு கிறார்.*

ஆதிபரை சுந்தரி அசஞ்சலி புரக்கும்
தீதில் சிவ காமிசிவ சத்திசிவ கோணி
மாதுமக மாயிபதம் வந்துற வணங்கி
ஏதமற நின்றிறைவன் இன்ன பகர்வுற்றான்.

*பிறகு தென்கரைத் தலங்கள் 127 கூறும்போது சில சமயம், நள்ளாற்றின் பின் சம்பிரதாயம் வரிசை முறை பின்பற்றப்பட வில்லை. சில இடங்களில் பாடல் விடப்பட்டிருக்குமோ என்ற ஐயம். 12க்கு மேற்பட்ட தலங்கள் இல்லை. வைப்புத் தலமான வழுவூர் சொல்லப்பட்டுள்ளது. வட கரைத்தலமான பாற்றுறை, காவிரி நடுவில் இருப்பதால் இங்கு உள்ளது. குடந்தை, ஆரூர், மீயச்சூர், அம்பர் முதலியவற்றில் ஒன்றுக்கு மேற்பட்ட ஒரே ஊர்த்தலங்களை அடக்கியுள்ளார் போலும். தென் குடித்திட்டை யைத் தஞ்சையூர் என்கிறார். கோத்திட்டை என்பது, அட்ட வீரட்டங்களுள் சலந்தர வதம் நடந்த இடமாகக் கொள்ளப் படுவது. அப்பரால் வைப்புத் தலமாக வழங்கப்பட்டுள்ளது.*

ஆனால் வழக்கிலுள்ளது, திருவிற்குடியே சலந்தர வதத்தலம் என்பது. இவ்வாசிரியர் கோத்திட்டை விற்குடி என்று சேர்த்துச் சொல்வது இரு பெயர்களும் ஒரே தலத்தைக் குறிப்பிடுகின்றன என்று தெளிவாக்குகிறது.

கொள்ளிடம் கடந்து வந்த மன்னன் பல தலங்கள் வழி பட்டான் என்று ஆசிரியர் சொல்லுமிடத்து கோடிக் குழகர் என்று தொடங்குகிறார். அது சம்பிரதாயமாகச் சொல்லும் காவிரித் தென்கரைத் தலங்கள் 127இல் கடைசித் தலமாகும். கடைசியிலிருந்து ஆசிரியர் தொடங்குகிறார். இதனாலும், ஆசிரியர் ஒரு தல அட்டவணையைக் கையில் வைத்துக் கொண்டே பாடுகிறார் என்பது தெளிவாகிறது. எனினும் பல பிழைகள் உள்ளன. வலிவலம் உரிய வரிசையில் இராமல் பின்னர் திருவீழிமிழலைக்கு முன்னதாகச் சொல்லப்பட்டது.

திருவரங்கம் பணிந்ததை நான்கு பாடல்களால் கூறுகிறார். பாண்டி நாட்டில், சோலைமலை, புல்லாணி (திருமால் தலம்), உத்தர கோசமங்கை (பாடல் பெறாதது) போன்ற தலங்களும் கூறிப் பின் இராமேச்சுரம். இராமேச்சுர நிகழ்ச்சிகளே பெரிய வரலாறு. அங்கு, துலாபாரத்தோடு கோதானம் பூதானம் கோடி கன்னிகா தானம் முதலான தானங்கள் செய்கிறான்.

பின்னர்க் கூறுமிடங்களில் பல சமயத் தலத்தில் சுவாமி திருநாமம் அம்பிகை திருநாமம் கூறிச் செல்கிறார். சீவைகுண்டம் சொல்லும்போது அங்குள்ள கயிலாயமும் சொல்கிறார். பின் குருகூர். கொற்கையில் சங்கம நீராடுகிறான். காயல் பட்டினத்தில் வணிகர் குழாம் வளமனைத்தும் கொண்டு வந்து பணிகிறார்கள். கழுகுமலை, செந்தில் முதலான முருகன் தலங்களும் கூறுகிறார். திருநகரியைக் கூறும்போது, 'சந்தனமும் குங்குமமும் தலை மெழுக வருசேற்றைச் - செந்தமிழ் மாருதம் புலர்த்தும் திருநகரி' என்பார். விளக்கம் குறைவான பல சைவ வைணவத் தலங்களைக் குறிப்பிடும்போது வானமாமலையையும் கூறுகிறார்.

> மீனமாய்க் கச்சபமாய் வெண்கோட்டால் உலகெடுத்த
> ஏனமாய்ச் சிங்கமாய்க் குறளுருவாய் இராமராய்
> ஆனகோ பாலனாய் அச்சுவமாய் உலகளித்த
> வானமா மலை பாதம் வணங்கியே மகிழ்வுற்றார்.

இங்கும் ஒரு மயிலாடுதுறை இருக்கிறது. திருப்புடை மருதூரில் கருவூரருக்காகச் சிவலிங்கம் சாய்ந்த செய்தியையும் குறிப்பிடு கிறார்.

*திருக்குற்றாலத்தில் 'பத்திர மாகாளியுடன் பரமனார்க்கினி தாகும் சித்திர மாமணி மன்றில் திருநடமும் தெரிசித்தான்'; குறும்பலாவும் வணங்கினான். திருநெல்லை வணங்கியது 20 பாடல்களால் சொல்கிறார். துதி செய்த 'போற்றி' என்ற தோத்திரப் பாடல்களில் ஒன்று:*

பேத முரைத்து விரும்பிய மெய்ப்பொரு ளேபோற்றி
போத மிகுத்தெழு வோர்தொழு புண்ணிய னேபோற்றி
மாதொளிர் பச்சை மலைக்கொடி சேர்மலை யேபோற்றி
தீதக லத்தினம் வந்தெனையாள் சிவ னேபோற்றி.

*பின்னர் அவன் கண்ட நகரங்கள், செய்த கோயில்கள், தொட்ட குளங்கள் கால்கள் முதலியன எண்ணற்றன. அவற்றுள் ஒன்று சீவல மங்கை என்ற நகரம். நெல்வேலியே தாருகாவனம் என்று இங்குச் சொல்லப்பட்டுள்ளது புதுமையான கதை. திருமால் மோகினி வடிவங் கொள்ளுகிறார். அலங்கார வருணனை 10 பாடல், அவற்றுள் ஒன்று:*

ஆலமோ அயிலோ வாளோ அலைகடற் பரப்போ வெய்ய
காலனோ மானோ என்றும் கண்ணிடைக் களவு காட்டிக்
கோல அஞ்சனமும் தீட்டிக் கொடுமையுங் கூடக் கூட்டிச்
சீலமா தவத்தோ ருள்ளந் திகைத்திடத் திருந்த நோக்கி.

*பின்னும் ஆசிரியர் 'சுற்றிய தூசு வீழ்ந்து துடியிடை அல்குல் தோன்றச் ...... சென்றாள்' என்று பாடும்போது இருபதாம் நூற் றாண்டின் பிற்பாதியில் சென்னை நகரைப் பார்த்துத் தான் பாடினாரோ என்று நாம் ஐயுற வேண்டியிருக்கிறது. இதுமட்டு மல்ல; பிச்சை ஏற்றுச் சென்ற பெருமான் மீது மோகித்த முனி பன்னியர் நிலையும் மோகினியைக் கண்டு காமுற்ற முனிவர் நிலையும் மிகவும் சுவை படவும் விரிவாகவும் சொல்லியிருப்பது படித்துச் சுவைக்கத்தக்கது. இவை 50 பாடல்களில் விரிக்கப் பட்டுள்ளன. இங்கு மரபு வழி வந்த இலக்கியச் சுவை சிறப்பானது.*

*மன்றத்தை அமைக்கிற தச்சன் அமைத்தவை சத்திகள், கலைகள் 5, தசகாரியம், விடயம் 5, நாடி வாயு 10, ஏடணை 3, வினை 2, கருவி 60, பூதம் 5, தன்மாத்திரை 5, இந்திரியம் 10, கரணம் 4, கலாதி 7, சுத்தவத்தை யாதி 5, தத்துவம் 36 - என்று இவ்வாறு சைவ சித்தாந்தப் பொருள்களை யெல்லாம் எடுத் தமைக்கிறார். தச்சன் கட்டியது 1008 நாளில். பின்னர் நடனங் கண்ட மன்னன் துதிக்கிறான். 18 பாடல்களில் ஒன்று:*

ஒன்றாய்ப் பலவாய் உலையா நிலையாய்
அன்றாய் உளையாய் அருளாய் இருளாய்
குன்றாய் அலையாய்க் குலமாய் நலமாய்
மன்றாடியநின் வளமார் அறிவார்.

*இறுதியில் மன்னனை இந்திரன் கயிலைக்கு அழைத்துச் செல்கிறான்; 23 பாடல்கள் கயிலை வருணனை.*

கங்கை யே முதலாய கவின் பெறு
மங்க லந்திகழ் மாந்தி வாழ்வது
செங்கண் மால் முதற் றேவர் குழாமெலாம்
அங்கண் மேவி அணை தற் குரியது.

வேதம் நாலும் விளம்பற் கரியதாம்
ஆதி மாலய னால் அள வாதது
மாதி னோடிறை கூடி மகிழ்ந்தது
தீது தீர் கயிலைத் திரு மாமலை.

*வில்லிபுத்தூரைக் கூறியவிடத்து ஆசிரியர் ஆண்டாள் வரலாற்றைக் கூறுகிறார். ஆதியில் பூமாதேவி, திரௌபதியை 'நீ ஐவருக்கு நாயகி' என்று பழித்தாளாம். அதன் மேல் திரௌபதி, பூமிதேவியை நோக்கி 'நீ புவியில் பிறந்து ஐவர்க்கு நாயகியாவாயாக' என்று சாபம் கொடுத்தாளாம். அப்படியே பூமிதேவி ஆண்டாளாகப் பிறந்து சூடிக் கொடுத்த சுடர்க் கொடியாகி, திருவேங்கடமுடையான், சோலைமலையழகர், வடபெருங்கோயிலுடையான், திருவரங்கநாதன், அழகிய மன்னார் ஆகிய ஐவர்க்கும் நாயகியானாள் என்று சொல்கிறார். இது ஓர் அபூர்வமான கதை.*

அரிதாக வளர்ந்தருள அணியரங்கம் துயில்வானும்
விரிசோலை மலையானும் வேங்கடத்தில் உறைவானும்
வரிதாவும் பொழில்புடைசூழ் வடபெருங்கோ யிற்பரனும்
பிரியாத மன்னருடன் பெருமணஞ் செய்தினிது வந்தார்.

அந்நகரில் இனிதேகி அரசர்தொழும் அரசர்பிரான்
மன்னருடன் மாதினையும் வடநிழல்வாழ் பரமனையும்
பொன்னரங்க ரழகருடன் பொற்புறுவேங் கடவரையும்
இன்னல்கெடப் பணிந்தேத்தி அந்நகரில் இனிதிருந்தான்.

*இவருக்குச் சந்தப் பாடல்களில் விருப்பம் அதிகம். அதிகச் சந்தப் பாடல்களைப் பெய்திருக்கிறார். சில பாடல்கள்: அரசன் அம்பிகையைத் துதித்தல்:*

அன்னை யறம்புரி அம்பிகை யம்மை அருட்பாவை
கன்னி கனங்குழை சூலிகபாலி கழைக்காமன்
தன்னை யளித்தருள் சங்கரி கொங்கரி தாழ்கோதை
உன்னடி போற்றினன் நின்னருள் தந்தருள் என்றோதி.

*தாருகாவனத்து முனி பன்னியர்;*

நாணழிந்து வருந்துவார், மடம்
அச்ச மேக நடுங்குவார்,
பூணகன்று புலம்புவார் கலை
போக வந் தெதிர் புல்லுவார்,
வீணை கொண்டிசை பாடுவார், செய
மாதரென்ன விரும்புவார்,
ஊண் உறக்கமு மின்று நாமினி
உய்வ தெங்கென ஓடுவார்.

*சேனை கங்கைக் கரையை யடைதல்:*

தேர்ப ரந்தன வேழம் வந்தன
தீதில் வாசி செறிந்தன
வீரர் யாரும் விரைந்த டைந்தனர்
மேவு கங்கை மருங்கிலே
வாரி யேழும் எழுந்து வந்து
வளைந்து நின்றன மானுறச்
சார வந்து நெருங்கி வார் பொழி –
லூடி றுத்தது தானையே.

*போர் வருணனைப் பாடல்கள் நூறுக்கு மேல் சந்தமாகவே உள்ளன. இடமின்மை கருதி அவற்றை இங்கு காட்டவில்லை.*

*முடிவாக ஒரு செய்தி சொல்லலாம் நூலாசிரியர் பல தலங்களில் சிவாலயமும் திருமால் ஆலயமும் இருப்பதைக் குறிப்பிட்டு, சுவாமி பெயர்களையும் குறிப்பிட்டு, இரண்டிடங் களையும் மன்னன் பணிந்து சென்றான் என்று பாடுகிறார். ஒன்றல்ல, இரண்டல்ல, பல தலங்கள் இப்படி இதனால் நாம் பெறுவது, இம்மன்னனும் ஆசிரியரும் சைவ வைணவ வேறு பாடு கருதாதவர் என்பது ஒரு புறம், மறுபுறம், சங்கரன் கோயில் புராணமாகிய சங்கர விலாசம் என்ற நூல் இரு கடவுளரும் ஒன்று சேர்ந்த வடிவத்துக்குரிய புராணமாகும். எனவே அப்புராணம் பாடிய கவியே இவ்வகையாக இரு தெய்வங்களையும் வணங் கிய பாடல்களையும் பாடினார், இரு சிதம்பரநாத கவிகளும் ஒருவரே என்று முடிவு செய்வதும் பொருத்தமே.*

இனி, தலங்கள் தல யாத்திரை, வணக்கம், புதிய கோயில் கட்டியது, குளம் அமைத்தது, மானை நகரில் சபைகட்டி வழி பட்டு விழாச் செய்தது போன்றவை, இதுவும் ஒருதல புராணமே என்ற நினைவையும் ஒரு புறம் தருகின்றன.

இறுதியாக ஓர் எண்ணம். சிதம்பரநாத கவி பாடினார். உண்மையாகவே வரலாறறிந்த மன்னனாகிய அதிவீர ராமன் என்ற சீவலமாறனைத் தலைவனாக வைத்துப் பாடினார்; தடை யில்லை. ஆனால் கதை முழுவதும் வெறும் கற்பனைக் கதை என்று தான் தெரிகிறது. இதில் வரலாற்றுச் செய்தி எதுவும் இல்லை.

**காலம்**

சீவல மாறனே அதிவீர ராம பாண்டியன், இந்நூல் செய்த சிதம்பரநாத கவியே சங்கர விலாசம் பாடியவரும் பாண்டியர் ஆதரவு பெற்றவருமான சிதம்பரநாத கவி என்பது முன்னே சொல்லப்பட்டது. இதற்குரிய ஆதாரங்கள் அங்கு விளக்கமாய்க் குறிப்பிடப்பட்டன. பின்னும் ஒரு குறிப்பும் நூலில் கிடைக்கிறது. சீவலன் மங்கலப் படலம் என்ற 12ஆம் படலத்திறுதியில், விசயன் நாரணன் என்ற இவனுடைய தூதுவர் இருவர், குருங்கைச் செங்கண்ணனுக்கு அரசன் புதிதாய்க் கோயிலமைத்து நகருண் டாக்கிய போது, அந்நகருக்குத் தங்கள் பெயர் இடவேண்டு மென்று விண்ணப்பிக்க, இவனும் அப்படியே அவ்வூருக்கு விசயநாரணம் என்ற அவர்கள் பெயரையே இடுகிறான்(12 : 83).

> மேவிய தூதர் பேரால் விசயநா ரணமென் றோதும்
> தாவிலா நகரம் செய்து தம்பிரான் மன்னர்க் காங்கே
> மேவுபூங் கோயில் செய்து விழைவுடன் இருத்திப் பூசை
> தேவரும் மருளச் செய்து திருநகர் நம்பிக் கீந்தான்.

விசய நாரணம் என்பது சிதம்பரநாத கவியின் ஊர் என்பது முன்னே சொல்லப்பட்டது (பக்கம் 59). இந்நூலிலும், நன்கு வழங்காத அவ்வூரை இவ்வாசிரியர் குறிப்பிடுவதால், அவர் இவ்வூரினர் என்று கருதுவதில் இழுக்கில்லை. எனவே, பெயரும் ஒன்று, ஊரும் ஒன்று, காலமும் ஒன்று. பாண்டியர் பெயரும் ஒன்று எனத் தெரிவதால், முன்கூறியபடி இருவரும் ஒருவரே என்ற கருத்துக்கு இச்சான்றும் துணை செய்வதாகக் கருதலாம். காலம் 16 நூற்றாண்டு பிற்பகுதி.



## அத்தியாயம் - 2

## சைவ புராணம் - 2

# கமலை ஞானப்பிரகாசர் வழி

### முன்னுரை

ஒவ்வொரு காலத்தில் ஒவ்வோராசிரியர் பெருஞ் சிறப்புடையவராய் வாழ்கிறார். அவரிடம் பயின்ற மாணாக்கர் பலர் சிறந்த புலவராகி நூல் செய்கிறார்கள். இலக்கியத் துறையிலும் சமயத் துறையிலும் இதை நன்கு காணலாம். இவ்வாறு சிறப்பாய் 16ஆம் நூற்றாண்டில் எடுத்துக்காட்டத் தக்க ஒரு பேராசிரியர் கமலை ஞானப் பிரகாசர் என்பவர். இவர் திருக்கயிலாய பரம்பரையில் மெய்கண்ட சந்தானத்தில் வந்தவர். கயிலாயத்தில் பரமேசுவரன் நந்தியெம்பெருமானாக சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்ற நான்கு மாணாக்கருக்கு உறுதிப் பொருள் நான்கையும்* உபதேசம் செய்தார்; சனற்குமாரர் சத்திய ஞான தரிசனிகளுக்குச் சிவஞான உபதேசம் செய்தார்; அவர், பரஞ்சோதி முனிவருக்கு உபதேசம் செய்தார். அவர் ஆகாய வீதி வழியே வந்து திருவெண்ணெய் நல்லூரில் மூன்று வயதுக் குழந்தையாய் விளையாடிக் கொண்டிருந்த சுவேதவனப் பெருமாள் என்னும் குழந்தைக்கு உபதேசம் செய்து மெய்கண்டார் என்ற பெயரையும் சூட்டினார். அவரிடம் சிவஞான போத உபதேசம் பெற்ற மாணாக்கருள் முதல்வரானவர் சகலாகம பண்டிதராயிருந்த அருணந்தி சிவாசாரியர். மெய்கண்டாரிடம் உபதேசம் பெற்று வளர்ந்த சைவ ஞான ஆசாரிய பரம்பரை, மெய்கண்ட பரம்பரை என்று சொல்லப்பெறும்; கயிலாயத்தி

---

* 'அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம் பொருள் இன்பம் வீடு - மொழிந்த வாயான் முக்கணாதி மேயது முதுகுன்றே' என்பது சம்பந்தர் தேவாரம் (575).

லிருந்து இவ்வுபதேச பரம்பரை வந்தமையால் இது திருக்கயிலாய பரம்பரை என்றும் சொல்லப்பெறும்.

அருணந்தியிடம் மறைஞானசம்பந்தர் உபதேசம் பெற்றார். இவரிடம் உமாபதிசிவம் உபதேசம் பெற்றார். மெய்கண்டார், அருணந்தி, மறைஞான சம்பந்தர், உமாபதி சிவம் ஆகிய நால்வரும் சைவ சந்தான ஆசாரியர் என்று சொல்லப் பெறுவர். இவர்கள் செய்த நூல்கள் சித்தாந்த சாத்திரங்கள் என்று பெயர் பெறும். உமாபதிக்குப் பின் இச் சமய பரம்பரை உபதேசக்கிரமமாய்ப் பல பிரிவுகளாக வளர்ந்தது. அவரிடம் சீகாழி மச்சுச் செட்டியார் உபதேசம் பெற்று அருள் நமசிவாயர் என்ற ஆசாரியர் ஆனார். அவருடைய மாணாக்கர் பலர். அவருள் சித்தர் சிவப்பிரகாசர் என்பவர் வழியாக வளர்ந்த பரம்பரை, அடுத்த தலைமுறையின் பின் திருவாவடுதுறை யாதீனமாயிற்று. மற்றொரு மாணாக்கரான காழிக் கங்கை மெய்கண்டார் வழி வளர்ந்த ஞான பரம்பரையில் சில தலைமுறைகள் கழித்து வந்தவரே கமலை ஞானப்பிரகாசர். இவர் வழி வந்தது தருமபுர ஆதீனம்.

அருள் நமசிவாயர் ஞான பூசைத் திருவிருத்தம் முதலான ஐந்து நூல்கள் செய்தார். அவருடைய மாணாக்கர் கங்கை மெய் கண்டார் நூல் செய்யவில்லை. அவரிடம் உபதேசம் பெற்றவர் காழி - பழுதைகட்டிச் சிற்றம்பல நாடிகள். அவரிடம் உபதேசம் பெற்றவர் காழி - பழுதைகட்டிச் சம்பந்த முனிவர் முதலான எண்ணற்ற சீடர். சம்பந்த முனிவர் வழியாகத் தருமபுர ஆதீனமும் மற்றொரு சீடரான காஞ்சி ஞானப்பிரகாசர் மூலம் காஞ்சி ஞானப்பிரகாசர் மடமும் கிளைத்தன. சம்பந்த முனிவரின் மாணாக்கர் எண்ணற்றோர். அவர்களில் ஒரு சிறந்த மாணாக்கர் சிவபுரம் ஞானப்பிரகாசர்: இவருடைய மாணக்கர் சிவபுரம் தத்துவப்பிரகாசர்; இவருடைய மாணாக்கருள் ஒருவர் திருவாரூர் செட்டித் தெரு சிதம்பரநாத ஞானப்பிரகாசர். இவருடைய புதல்வராயும் மாணாக்கராயும் இருந்தவர் கமலை - ஞானப் பிரகாசர் என்பவர்.* இவர் இல்லறத்தார். இவர் மரபினர் இன்னும் திருவாரூரில் வாழ்கின்றனர்.

கமலை என்பது திருவாரூர். கமலை ஞானப்பிரகாசர் இலக்கண இலக்கியங்களிலும் சமய ஒழுக்கத்திலும் வல்ல பெரும் புலவராயும் ஆசாரியராயும் கமலையிலேயே வாழ்ந்து வந்தார்.

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 14ஆம் நூற்றாண்டு, சைவ இலக்கியம் என்ற அதிகாரங்கள், அட்டவணைகள் பார்க்க

இவருக்கு மாணாக்கர் பல்லோராவர். அவர்களுள் அனேகர் பெரும்புலவர்களாய்ப் புராணங்களும் சாத்திரங்களும் செய்த வர்கள். அக்காலம் சமய எழுச்சி மிக்க காலம். பல மாணாக்கர் வழியாகப் பல சைவாதீன பரம்பரைகள் தோன்றின. குருஞான சம்பந்தர் வழியாகத் தருமபுரம் ஆதீன பரம்பரை தோன்றிற்று. துழாவூர் நிரம்ப அழகிய தேசிகர் வழியாகத் துழாவூர் ஆதீனம் தோன்றிற்று. அவரே சரியை கிரியை யோக ஞானம் பற்றிய பல நூல்கள் செய்தார், புராணமும் செய்தார். அவருடைய மாணாக் கராக வாழ்ந்த பலரும் தல புராணங்கள் செய்திருக்கிறார்கள். சிறப்பாக, அவர் செய்த புராணமும் மாணாக்கருள் நிரம்ப அழகிய தேசிகர், திருவொற்றியூர் ஞானப்பிரகாசர், அளகைச் சம்பந்தர், ஞானக்கூத்தர், ஆனந்தக்கூத்தர் என்பவர் வரலாறு களும், அவர்கள் செய்த புராணங்களும் இங்கு ஆராயப் பெறும். ஞானப்பிரகாசரும், நிரம்ப அழகியரும், திருவொற்றியூர் ஞானப் பிரகாசரும், புராணங்கள் அன்றிச் சாத்திரங்களும் சாத்திர உரை களும் செய்துள்ளனர். இவை அவ்வவ் அத்தியாயத்தில் ஆராயப் பெறும். இங்குக் கூறப்பெற்ற ஆசிரியர் பின்னும் பல நூல்கள் செய்திருத்தலும் கூடும். இவர்களையன்றி, ஞானப்பிரகாசர் மாணாக்கரில் வேறு ஆசிரியர்களும் புராணம் பாடியிருத்தல் கூடும்: நமக்கு இன்று கிடைக்கவில்லை.

## கமலை ஞானப்பிரகாசர்

இவருடைய வரலாறு இங்கு சொல்லவில்லை. இவர் பல சைவ சாத்திரங்கள் செய்தார். அச்சாத்திரங்களை ஆராயுமிடத்து இவர் வரலாறு விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது.* இவர் செய்த புராணம் ஒன்றே. அதை மட்டும் இவ்விடத்து ஆராய்கிறோம்.

## திரு மழுவாடிப் புராணம்

கமலை ஞானப்பிரகாசர் செய்த புராணம். திருவையாற் றுக்கு வடக்கே கொள்ளிடத்தின் வடகரையில் உள்ள சிவஸ் தலம்; திருமழபாடி என வழங்குவது. ஞானப் பிரகாசர் இத் தலத்துக்கு வந்த போது இப்புராணம் பாடினார். தலம் மழுவை, மழுவாடி என்றும் சொல்லப்படும். மூவர் தேவாரமும் கொண்டது. மார்க்கண்டேயருக்காக இத்தலத்தில் சிவபெரு

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு, 16ஆம் நூற்றாண்டு, இரண்டாம் பாகம் பார்க்க.

*மான் மழுவைத் தாங்கி ஆடியமையால் தலம் மழுவாடி ஆயிற்று. நூலானது 8 சருக்கங்களும் 571 பாடல்களும் கொண்டது. பாயிரப் பகுதியில் நூற்பாடல்கள் 610 என்று சொல்லப்பட்டுள்ளது; 'விருத்தத் தொகை அறுநூற் றொருபதாக - மருளாத செந்தமிழின் செய்யுளாக மாமழுவைப் புராணத்தை வகுத்துரைத்தான்' என்பது பாயிரம் (34); எனினும் இன்று கிடைத்து அச்சிட்டது 571 பாடல்களே. பாடல் 36 ஆசிரியர் பெயர் கூறுகிறது.*

மாசிலா வயிரத் தூணர் மழுவையம் புராணந் தன்னை
ஆசில்செந் தமிழினாலே அணிபெற வகுத்தமைத்தான்
பேசரும் புகழ்சேர் ஞானப் பிரகாசன், கமலை வாழும்
தேசிகன், அறிஞர் போற்றும் செங்கமலப் பொற்பாதன்.

*(வயிரத்தூணர் - சுவாமி பெயர். வஜ்ரஸ்தம்பேசுவரர் என்பது வடமொழிப் பெயர். 'தயாமூல தன்மவழி எனக்கு நல்கி மனத் திருத்தும் மழபாடி வயிரத்தூணே' (6649) என்பது அப்பர் திருத்தாண்டகம்.) வயிரத்திரள் என்று அப்பரும் சம்பந்தரும் கூறுவர். பிரசித்தமான 'பொன்னார் மேனியனே' என்ற சுந்தரர் தேவாரம் இத்தலத்துக்குரியது; 'மலபாடியுள் மாணிக்கம்' என்பது பாட்டு. மாணிக்கக் குன்று என்று அப்பர் கூறுவார்.*

*ஆசிரியர் மாசி விழாக் கண்டு போற்றியபோது, அங்குள்ள மாதவக் குழுவிலுள்ளார், அவருள்ளும் சிறப்பாக உலகநாதர் என்பவர், வேண்ட இவர் புராணம் பாடினார். (பாயிரம் 33):*

அத்தலக் குழுவினுள்ளும் அறிவினால் தவத்தால் மிக்க
வித்தகன் உலக நாதன் விரிந்தநற் றமிழினாலே
இத்தல புராணந் தன்னை இயம்புதல் வேண்டும் என்னா
உத்தமம்என முன் நூல்கண் டுரைத்தனன் விருத்தப்பாவால்.

*பாயிரப் பகுதியில் கடவுள் வாழ்த்தும், நூல் வரலாறும், நாட்டு வளமும் சொல்லப்படுகின்றன. கடவுள் வாழ்த்துப் பகுதி வழக்கம் போல் அமைந்துள்ளது. நால்வரையும் துதித்து பின் சூத புராணிகரை வணங்குகிறார். சுந்தரர் துதி பாடும்போது, பரவை சங்கிலி துதிக்கை ஆகிய சொற்களைச் சிலேடையாக நயமுற அமைத்துப் பாடுகிறார்.*

பொங்கெழிற் பரவை தன்பாற் புகுந்துறப் படிதல் வேண்டிச்
சங்கிலித் துவக்கை நீக்கித் தனதருந் துதிக்கை யாலே
அங்குச பாகன் தன்னை அடைந்தேவல் கொண்டு வீறும்
துங்கமுத் தமிழ்மதச்சிந் துரத்தினைத் துதித்தல் செய்வாம்.

அடுத்த மாணிக்கவாசகர் துதியும் சூத புராணிகர் துதியும் இதுபோலவே அமைந்திருத்தல் படித்து இன்புறத்தக்கது. இத்தகைய நயமான தொடையை நூலெங்கும் காணலாம். மற்றுமொரு பாடல்:

மனத்திடைச் சிவனையன்றி மற்றொன்றை நினையார்; ஆவின்
தனத்தினை யன்றி மாதர் தனந்தொட லறியார்; பாசஞ்
சினத்தலே யன்றியார்க்குஞ் சினஞ்செயக் கருதார்; தக்கோர்
இனத்தினை யன்றிச் சுற்றம் இனமென வியந்திடாதார்.

அடுத்த தலச்சருக்கம், நகரப்படலம் ஒத்தது. ஒரு பாடலில், திருவம்பலம் காளத்தி குடந்தை காசி நான்கும், அறம், பொருள், இன்பம், வீடு அடைவினில் உதவும், ஆனால் இம்மழுவை நான்கையும் பெறத்தரும் என்கிறார்; இவர் புராணம் பாடிய காலத்தில் மழுவாடிச் சிவாலயத் திருப்பணி நடந்து கொண்டிருந்தது போலும்; திருப்பணிக்கு ஒரு செங்கல் கொடுப்பவர், சூளையில் கல்வேக மரம் கொடுப்பவர், மரம் இழுத்த வண்டி மாடு, சரீர வாக்குச் சகாயம் புரிந்தவர், கூலிக்குப் பணி செய்தவர் - எல்லோரும் நற்கதி பெறுவர் என்று இவர் கூறுவது இந்த எண்ணத்தைத் தருகிறது:

உறுதியாச் சிவாலயத்திற் கொரு செங்க லடுக்குதற்குச்
சிறிது தந்திடுவோர் தாமும் சிவலோகத் தடைவரென்றால்,
பெறுதிருப்பணி தனக்குப் பெரும்பொரு ளுதவும் பேற்றை
அறுதியிட் டிவள வென்றே அறைவதற் கெளிமை யன்றே.

தட்டிலா திப்பதி தனில்தி ருப்பணிக்
கிட்டிகை வேகுதற் கிடுவ தாகவே
வெட்டிய தருக்களும் மிக்க வண்டியிற்
கட்டிய கிடாக்களும் கதிபொ ருந்துமே.

இரும்புகழ் மழுவைவாழும் எம்பிரான் திருப் பணிக்குப்
பெரும் பொருள் மிளகுநல்கப் பெற்றில மென்பார் முற்றுந்
தரும் பல சரீர வாக்குச் சகாயங்கள் புரிவோர் கூலிக்
கரும் பணிமுயல் வோர்தாமும் கயிலையில் அமர்ந்து வாழ்வார்.

சூளைக்குப் பயன்பட்ட மரங்களுக்கும் வண்டி மாடுகளுக்கும் நற்கதி என்று சொல்வது. எருமைமாடு தன்னையறியாமல் மற்றவர்களால் கோயில் கற்களை ஏற்றி வரச் செய்த கைங்கரியத்தால், தான் நல்ல கதியடைந்ததோடு, மகா கருமியாக இருந்து தன்னை வளர்த்து இறந்து போன உழவனுக்கும் நற்கதி தந்தது பெரிய புராணத்துள் ஆண்பனைகள் பெண்பனையான செய்தி

கூறியவிடத்து, திருஞான சம்பந்தப் பிள்ளையாரின் திருவாக்குப் பிறந்தமையால், அப்பனைகளும், முன்புள்ள பாசம் விட்டு, சிவமே கூடின என்று கூறியதை நினைவூட்டுகிறது:

பிள்ளையார் தந்திருவாக்கிற் பிறத்தலால் அத்தாலமும் முன்
புள்ள பாசம் விட்டகல ஒழியாப் பிறவி தனையொழித்துக்
கொள்ளுநீர்மைக் காலங்கள் கழித்துச் சிவமே கூடினவால் –
வள்ளலார் மற்றவரருளின் வாய்மைகூறின் வரம்பென்னாம்.

பாயிரப் பகுதியில் சரியை கிரியைச் செய்திகள் பல சொல்லு கிறார். இது அவர் ஞானப்பிரகாச தேசிகர், பட்டாரகர் என்று வழங்கப் பெற்றதற்கும், சரியை கிரியா பாதநூல்கள் பல செய்த தற்கும் பொருந்தவே உள்ளது. பிரமன் பூசித்த வயிரத்தூண் (வஜ்ரஸ்தம்பம்) இங்கே ஒரு புருடா மிருகத்தின் பூசைக்கு மகிழ்ந்து, பூமியைப் பிளந்து வந்து காட்சி கொடுத்தது. பிரமனும் இங்கு வந்து வழிபட்டான்.

அருமையா யிருந்துமன்ப ரானவர்க் கெளியாய் போற்றி
பெருமையா லடியேன்செய்த பிழைபல பொறுப்பாய் போற்றி
உரிமையாய் உலகுக் கெல்லாம் உயிரென நின்றாய் போற்றி
தருமமா மழுவை வாழுந் தாணுவே போற்றி போற்றி.

மழுவாடிச் சருக்கத்தில் முனிவர் துதிக்கும் பாடல்:

சகலமும் படைப்பாய் போற்றி தருமுறை காப்பாய் போற்றி
இகலுற அழிப்பாய் போற்றி யாவையும் மறைப்பாய் போற்றி
திகழவே பரமா னந்தத் திருவருள் தருவாய் போற்றி
அகிலநா யகனே போற்றி அண்ணலே போற்றி போற்றி.

மார்க்கண்டேயனுக்காகச் சிவபிரான் ஊழிக் கூத்தினை நடனமாடுவதைக் கூறும் பாடலின் சந்தமே ஆடச் செய்யவல்லது:

தடவுறு மண்டத் துலகிய அம்பொற் சடையாடத்
தொடரொளி பம்பிச் சுழல்தரு கொன்றைத் தொடையாடக்
கடலமு தங்கக் கியசிறு திங்கட் கலையாடத்
திடமுறு வெங்கட் பரசுறு செங்கைச் சிவனாடும்.

என்ற இப்பாடலோடு பாரதியாரின் ஊழிக்கூத்து என்ற பாட லின் சந்தத்தை ஒப்பிடுக: ‘வெடிபடு மண்டத்திடி பல தாளம் போட’.

சிவன் நடித்தாகப் பத்துப் பாடல்கள் இங்கு உள்ளன:

இலகிய குணலை நடித்திடு மியல்கண மிரகைகள் கொட்டிட
அலகைகள் கரண மியற்றிட அடியவ ருயர்கதி பெற்றிட
உலகினில் உயிர்கள் களித்திட உறுமரு வினைகள் ஒளித்திட
மலகரி பௌளி இசைத்திட மழுவணி பரமன் நடித்தனன்.

*வைத்தியநாதச் சருக்கத்தில் நாட்டுச் சிறப்புச் சொல்கிறார். வைத்தியநாதர் என்பது இங்கு சுவாமிக்கு வழங்கிய சுவைமிக்க ஒரு பெயர்; மழபாடி மருந்து என்று சம்பந்தர் தேவாரத்தில் வருந் தொடர் இதற்குச் சான்று பகரும்.*

ஈட்டிய அறத்தினாலும் இயலிசைத் திறத்தினாலும்
காட்டிய வளத்தினாலும் கருணைசேர் உளத்தினாலும்
பூட்டிய வளத்தினாலும் பூண்டபொன் னணிகளாலும்
நாட்டினிற் புகழ்சேர் பொய்கை நாட்டியல் நவிலலுற்றாம்.

செய்கையான் மிக்கநாடு, திங்கண்மும் மாரி யென்றும்
பொய்கை குன்றாத நாடு, பெருவளம் படைத்த நாடு,
சைகை யான் மாரனாடு தனக்கிணை யான நாடு,
பொய்கை நன் னதிசூழ்நாடு, புகழ்நாடு பொய்கை நாடு.

*74 பாடல்கள் உள்ள இச்சருக்கத்தில் 53 பாடல்களை நாட்டுச் சிறப்புக் கூறுவனவாகவே பாடியிருக்கிறார். இங்கு வயிரத்தூணர் வைத்தியநாதராகித் தக்கன் சாபத்தால் சந்திரனுக்கு வந்த நோயைத் தீர்த்தார் என்பது சருக்கப் பொருள். தேவாதிச் சருக்கம் என்பது திருமாலின் மார்பில் என்றும் எழுந்தருளியிருக்கும் வரமும் திருமாலுக்குப் பாகமும் கொடுத்தமை கூறும். இன்னும் பல தேவர்கள் பூசித்ததும், வசிட்டச் சருக்கத்தில் வசிட்டர் பூசித்ததும் பிறவும் சொல்லும். அகத்தியச் சருக்கத்தில் கடலைக் குறித்த செய்திகள் மிகப்பல; வயிரத்தூணரை வழிபட்டு அகத் தியர் விந்தவரை யடக்கிய செய்தி சொல்லப்படுகிறது.*

*நூலில் போற்றி என்று முடிகின்ற பாடல்களும் சந்தப் பாடல்களும் சைவ சமய ஆசாரங்களும் அதிகம் சொல்லப் பட்டுள்ளன. நைமிசவனத்தின் வருணனையில் ஒரு பாடல் (43):*

பாடலின் புறுவன அகுணம்; பத்திசேர்ந்து
ஆடலின் புறுவன மயில்கள்; ஆரையிற்
கூடலின் புறுவன அன்றில்; கூர்மதுத்
தேடலின் புறுவன சிறைகொள் வண்டினம்.

*இச்சிறு நூலில் மடக்கும் பாடியிருக்கிறார் (4. 5).*

சுவாமிக்கு வைத்திய நாதர் என்று ஒரு பெயருண்டு; அப் பெயராலேயே உள்ள சருக்கத்தைக் குறிப்பிட்டோம். நூல் முழு வதும் அவ் வைத்தியநாதர் புகழையே பாடுகின்றார்.

ஞானப்பிரகாசர் சிறந்த இல்லறத்தார்; அவரிடம் பலர் உபதேசம் பெற்றுத் துறவியானார்கள்; குருஞான சம்பந்தரே சிறந்த எடுத்துக்காட்டு. அவர் ஒப்பற்ற சிவஞானி. சிறந்த புல மையும் அவரிடம் இருந்ததென்பதை மழுவாடிப் புராணம் நன்கு புலப்படுத்தும். புராணம் முழுமையுமே சிறந்த கவிதை என்று ஒப்புக் கொள்ளாவிடினும், ஆங்காங்கு நயம்மிக்க எளிய கற்பனைகளும், கவிதைச் சுவை ததும்பும் பாடல்களும் அமைந் துள்ளன என்பதை ஒப்புக்கொள்ளவே வேண்டும்.

### காலம்

இந்நூலுடையார் காலம் பாயிரப் பகுதியில் ஒரு பாடலில் தெளிவாய்ச் சொல்லப்பட்டுள்ளது:

> தழுவிய கலியுகஞ்சேர் சகாத்தமா யிரத்து நானூற்று
> உழிதரு மெண்பத்தேழாண் டொழிந்தபின் குரோதனாண்டின்
> மொழிதரு மாசித் திங்கள் முற்பக்க முதனாள் தன்னின்
> மழுவையம் புராணந் தன்னை வகுத்தனன் தமிழினாலே.

இங்கு குறிப்பிட்ட சகாப்தம் 1487; கி.பி. 1565. எனவே, 16ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் நூல் செய்யப்பட்டது என்பது தெரிகிறது. இதன் மூலம் ஞானப்பிரகாசர் காலமும் அவருக்குப் பின் வந்த பலர் காலமும்* தெளிவடைகின்றன.

### பதிப்பு

ஸ்ரீ கமலை ஞானப்பிரகாச தேசிகர் அவர்களால் இயற்றப் பட்ட திருமழுவாடிப் புராணம் - உலகநாதப் பிள்ளை பார்வை; திருமழபாடி சச்சிதானந்த சுவாமிகளால் பதிப்பிக்கப்பட்டது 1908

## *திருவானைக்காப் புராணம்*

கமலை ஞானப்பிரகாசர் இரண்டு புராணங்கள் செய்தார் என்று அவர் மாணாக்கர் அளகைச் சம்பந்த முனிவர் பாடிய திருவாரூர்ப் புராணப் பாயிரச் செய்யுளால் அறிகிறோம். செய்யுள் பின்வருவது;

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 14ஆம் நூற்றாண்டில் கமலை ஞானப்பிரகாசர் பற்றிய அட்டவணை பார்க்க.

இருந்தமிழ்ப் புலவருய்வான் இபவனம் மழுவை என்னும்
திருந்து சீர்த் தலபுராணத் தெள்ளமு தளித்த செல்வப்
பெரும்புகழ்க் கமலை ஞானப் பிரகாச னெனும்பேர் பெற்ற
அருங்கலைத் திரை யறாத அருட்கடற் கன்பு செய்வாம்.

*(இபவனம் - ஆனைக்கா; மழுவை - மழபாடி.) இப்பாடலால் கமலை ஞானப்பிரகாசர் திருவானைக்காப் புராணமும் திருமழபாடிப் புராணமும் செய்தார் என்பதைத் திட்டமாய் அவர் மாணாக்கர் வாக்கால் அறிகிறோம். மேலும் ஞானப் பிரகாசர் வரலாற்றைக் கூறுகிற ஞானப்பிரகாச மான்மியம் என்ற நூலும் இதைக் குறிப்பிடுகிறது:*

சென்று திரு வானைக்கா மழபாடிக்குந்
  திப்பியமாந் தலபுரா ணங்கள் செய்தே,
அன்றுகளிப் போடு திருக் கூட்டத் தோடும்
  அருந்தலங்கள் பலவுஞ்சென் றிறைஞ்சிப் போற்றி,
குன்றுடைய காளத்தி ஒற்றி யூரும்
  குறைவில்லாக் காஞ்சியெனுந் தலத்தின் மேவி,
என்று முத்தி தருந்தலமென் றோது கின்ற
  எழிற்சோலை சூழ்காசி இனிதிற் சென்றார்.

*எனவே, இவர் புராணங்கள் செய்தது இரண்டு என்பது தெளிவு. ஆனால் இப்போது கிடைத்து அச்சாகி உள்ள புராணம் மழபாடி ஒன்றே. இவர் பாடிய திருவானைக்காப் புராணம் அச்சாகவில்லை. வழக்கத்தில் உள்ளது கச்சியப்பமுனிவர் 18ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்தில் பாடிய திருவானைக்காப் புராணமே.*

*திருவான்மியூர் டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையத்தில் தந்திவனப் புராணம் என்ற பெயரில் ஒரு சுவடி இருப்பது தெரிந்தது (எண் 621). அச்சுவடி திருவானைக்காப் புராணமே. பின்வரும் குறிப்புக்கள் அதிலிருந்து தரப்படுகின்றன. (தந்தி - யானை; வனம் - கா; ஆனைக்கா.)*

*புராணம் 14 சருக்கங்களாய் 571 பாடல்கள் கொண்டது. மழுவாடிப்புராணம் பாடுவித்த உலகநாத முனிவரே இதையும் பாட ஊக்கம் தந்தார் என்று ஆசிரியர் கூறுகிறார்:*

அவனியோர் போற்றும் அந்த அருஞ்சபைதன்னின் மிக்க
தவமுனி உலக நாதன் தக்கஇப் புராணந் தன்னை
எவருமெண் தமிழ் நூலாக இசைத்திட வேண்டு மென்ன
உவமையில் தமிழால் யானும் உரைத்தனன் விருத்தப்பாவால்.

நூலின் இறுதி வாழ்த்துப் பாடலிலும் இவ்வுலகநாதரை வாழ்த்துகிறார்:

அறந்தரு காவை வாழி அகிலாண்ட அம்மை வாழி,
நிறைந்திடு மனைத்துக் கொற்றம் நிலமிசை வாழ்க, பாசம்
துறந்திடும் உலக நாதன் தொலைவில் மெய்ப் புகழே வாழி
திறந்திடு செம்புநாதன் திருவடி வாழி வாழி.

நூற் பாயிரம், ஆசிரியர் கமலை ஞானதேசிகர் என்னும் கமலை ஞானப் பிரகாசரே என்று குறிப்பிடுகிறது:

கற்பார் மகிழத் தந்திவனக்
 கடவுள் புராணக் கதைப் பொழிப்பின்
சொற்பான் மைபெறும்அவ் வடநூலைத்
 துலங்கு தமிழால் தொடுத்து வைத்தான்:
நற்பார் புகலும் தென்கமலை
 ஞானப் பிரகாசனாம்* அந்தப்
பொற்பார் ஞான தேசிகனாம்
 புகழ்செங் கமலப் பொற்பாதன்.

புராணத்தின் சுருக்கங்கள் பின்வருவன: பாயிரம், நைமி சாரணியச் சருக்கம், திருநாட்டுச் சருக்கம், திருநகர் வளமைச் சருக்கம், தல மகிமை, சம்பு முனி, ஞானோபதேசச் சருக்கம், ஆதி பிரம்மோற்சவம், கரிய மாலயன், இந்திரச் சருக்கம், அகத்தியன், நவ தீர்த்தம், ஆரம் பூண்டது, பின்னிரக்கம் செய்தது, சிலந்தி மூடின சருக்கம் என்பன.

பின்னிரக்கம் செய்யும் பெருமான் என்பது தலத்துப் பெருமானுக்கு ஒரு பெயர். இதைத் திருவானைக்காவுலாவில் காளமேகப் புலவரும் பலமுறை கூறுகிறார். இப்பெயர் அமைந்த வரலாற்றை இங்கு இப்பெயர் கொண்ட ஒரு சருக்கம் விளக்கு

---

* சாமிநாதையர் நூல் நிலையத்தில் தந்திவனப் புராணத்தின் ஓலை ஏடும் அதன் பழைய காகிதப் பிரதியும் உள்ளன. ஓலையில் இவ் வரியின் கடைசிச் சீர் இல்லை, காகிதப் பிரதியில் பிரகாசன் தந்த என்று காணப்படுகிறது. இதனுடைய பொருள், ஞானப்பிரகாச னுடைய புதல்வன் (அல்லது மாணாக்கன்) பொற்பார் ஞான தேசிகன் என்று பொருளாகும். இப்படியொரு மாணாக்கர் இருந்ததாக வரலாற்றில் காணப்படவில்லை. தவிர இங்கே சொல்லப்பட்டபடி கமலை ஞானப்பிரகாசரே 'செங்கமலப் பொற்பாதன்' என்று சொல்லப்படுகிறார். இதனாலும், உலகநாதர் தொடர்பாலும் முன் காட்டிய தொடர்புகளாலும், ஞானப்பிர காசரே இந்நூலாசிரியர் என்பது தெளிவு. இந்தக் கருத்துக்கியைய, பிரகாசனாமந்த என்ற பாடம் அமைக்கப் பெற்றுள்ளது.

*கிறது. பெருமானுடைய அனுமதிப்படி பராசர முனிவர் அரக்கர் களை அழிப்பதற்காக ஒரு யாகம் செய்தான். அப்படியிருந்தும், அரக்கருள் ஒருவனான நிருதி பெருமானைத் தொழுத காரணத் தால் அவனுக்குப் பெருமான் இரக்கம் காட்டினார். அவன் தென்மேற்குத் திசைக்குரிய திக்குப்பாலகனாக அமைந்திருக் கிறான். இப்பெயருடைய அத்தியாயத்தின் கடைசிப் பாடல் இதைச் சுட்டுகிறது (37):*

ஏர்பெற்ற பராசரன்தான் இராக்கதரைக் கொல்வேள்விக்
கிசைந்தி ருந்தும்
பேர்பெற்ற நிருதிதொழப் பின்னிரக்கம் செய்தருளும்
பெற்றி யாலே
வேர்பெற்ற வெண்ணாவல் விரிநிழலின் இனிதிருக்கும்
விமலனார்க்குச்
சீர்பெற்ற பின்னிரக்கம் செயும் பெருமான் எனும் நாமம்
சிறந்த தன்றே.

*இப்படியே அவையடக்கப் பாடலொன்றில், சிலந்தி நூலுக்கு அருள் செய்த பெருமான் எனது புன்னூலையும் ஏற்பார் என்று நயம்படக் கூறுகிறார் (6):*

எந்நூலும் தெரிந்து புகழ் சூதனரு மாமுனிவர்க்
கிளிது கூறும்
முன்னூலாம் புராணத்தின் முறைமைதனைச் செந்தமிழால்
மொழித லாலே
சின்னூலும் தெளியாத என் நூலும் இவ்வனத்திற்
சிலந்தி வாயிற்
புன்னூலுக் கினிதிரங்கிப் பொன்மகுஞ் சூட்டுகின்ற
புனிதற் காமே.

*நூற்பயன் கூறுகின்ற ஒரே பாடலைச் சருக்கந்தோறும் தொடக் கத்தில் அமைத்துப் பாடி வருகிறார்.*

விரும்புறு நைமிசவனத்து முனிவர் கேட்க
வேதநெறிச் சூதமுனி விளம்பு மார்க்கம்
தரும்பொருளும் சொல்லுமடை வினில்வ குத்துத்
தந்திவனப் புராணத்தைச் சாற்று வோரும்
அரும் பொருள் கேட்டுவப்போரும் செம்பு நாதன்
அருளினால் வல்வினைகள் அனைத்தும் நீங்கிப்
பெரும்புவியின் மிகும்புகழும் குன்றா வாழ்வும்
பெரும் பொருளும் பரகதியும் பெற்று வாழ்வார்.

## நிரம்ப அழகிய தேசிகர்

இவர் சிவபக்தி மிக்கவராய்ச் சில புராணங்களும் சாத்திர உரைகளும் செய்த காரணம் பற்றி, தமிழ் இலக்கிய வரலாற்றில் சிறப்பான இடம்பெற்றிருக்கிறார்.

### வரலாறு

இவர் வேதாரணியத்தில் அபிடேகத்தர் என்று சொல்லுகின்ற தேசிகர் மரபில் பிறந்தவர். இவர் செய்த நூல்களால் இவர் வடமொழியும் தென்மொழியும் பயின்று மிகுந்த புலமையுடையவராய் விளங்கினார் என்பது தெரிகிறது. நிரம்ப அழகியர் என்பது இவருக்கு இடப்பட்ட பிள்ளைத் திருநாமம்; இது சிவபெருமான் திருநாமம் என்பது அறியத்தக்கது. 'நித்த மணாளர் நிரம்ப அழகியர்' என்பது திருவாசகத் தொடர் (அன்னைப் பத்து 3). இவர் மதுரையில் சில காலம் தங்கியிருந்தார். இவர் உடம்பில் நுணாக்காய்க் கிரந்தி என்ற நோய் இருந்தது. அது பற்றி இவர் எப்போதும் தனித்தே ஒரு மரத்தினடியில் தங்கியிருத்தல் வழக்கம். ஒருநாள் அவ்வழியே இவருக்குத் தெரிந்திருந்த சிற்றரசன் ஒருவன், தூரத்திலிருந்து பார்த்து, யார் என்று விசாரித்தான். ஏவலர் இவரையும் இவர் நோயையும் குறிப்பிட்டனர். அரசன் இவருடைய கல்விப் பெருக்கை உணர்ந்தவனாதலால், நோய்க்காக ஏளனம் செய்யலாகாதென்று கருத்துக் கொண்டு 'நிரம்ப அழகியரோ' என்றான். இப்பெயரே இவருக்கு அதுமுதல் நிலைத்துவிட்டது என்பர். சிறிது காலம் சென்றபின் இவர் அங்கிருந்து புறப்பட்டு அக்காலத்தில் திருவாரூரில் மிகவும் சிறப்புடைய ஞானாசிரியராக விளங்கிய கமலை ஞானப்பிரகாசரையடைந்து அவரிடத்தில் தீக்கையும் உபதேசமும் பெற்று அங்கேயே நீண்ட காலம் இருந்தார். தமது குருவை இவர் தமது சித்தியார் உரைப்பாயிரத்தில் பின்வருமாறு துதிப்பது காணத்தக்கது;

> ஆரணமும் எக்கலையும் ஆகமமும் கற்றாலும்
> தேருமுதல் மூன்றும் தெரியாதே – பாரிற்
> கருணைபொழி ஞானப்ர காசன் கமலச்
> சரணமிரண் டில்லையேல் தான்.

ஞானப்பிரகாசர் காலமான பிறகு இவர் திருப்பரங்குன்றத்தில் சில காலம் வந்து தங்கியிருந்தார். அக்காலத்தே அவ்வூர்க்குத்

தலபுராணம் பாடினார், நெடு நாளைக்குப் பின்னர் தம் இனத்தாருடைய வேண்டுகோளுக்கிணங்கிப் பாண்டிய நாட்டில் குன்றக்குடியின் மேல் திசையில் உள்ள துழாவூருக்கு வந்தார். அங்கு ஒரு மடம் அமைத்துக் கொண்டு வாழ்ந்தார்.

இவருடைய கல்விப் பெருமையினாலும், தவச் சிறப்பினாலும், சீலத்தாலும் பல மாணாக்கர் இவரை வந்து அடைந்தார்கள். தென்பாண்டி நாட்டில் ஆட்சிசெய்த பாண்டியராலும் சேது நாட்டைப் பரிபாலித்த சேதுபதிகளாலும்* இவர் போற்றப் பெற்றார் என்று வரலாறுகள் கூறும். இராமேசுவரம் சிவாலயத்தை நிர்வகித்து வந்தோர் இவருக்குச் சீடராயினர். அது பற்றி எழுந்த தொடர்பால் இவர் இராமேசுவரத்துக்குச் சேது புராணம் என்ற தலபுராணம் பாடினர்.

நிரம்ப அழகிய தேசிகருக்கு மாணாக்கர் பலர் இருந்தனர் என்று தெரிகிறது. குறிப்பிடத்தக்கவர்கள் நூல் செய்த மூவர். திருவாரூர்ப் புராணம் பாடிய அளகைச் சம்பந்த முனிவரும், திருவையாற்றுக்குச் செப்பேச புராணம் என்ற அளவாற் சிறிய புராணம் பாடிய ஞானக்கூத்தரும், சங்கர நாராயணர் கோயிலைச் சார்ந்த சங்கர விலாசம் என்ற புராணம் பாடிய சிதம்பரநாத பூபதியும்❖ இவருடைய மாணாக்கர். இப்பூபதி தாம் பாடுகின்ற குருவணக்கப் பாடல்களில் முதல் பாடலில் கமலை ஞானப் பிரகாசரைச் சத்திய ஞானி என்று துதித்து, அடுத்த பாடலில் திருப்பரங்குன்ற மாமுனிவர் என்று துதிப்பது நிரம்ப அழகியாரையே என்று கருதத்தக்கது. இவர் துழாவூருக்கு வந்தபோது, திருப்பரங்குன்றத்திலிருந்தே வந்தாராதலால், வந்த இடத்தில் திருப்பரங்குன்ற முனிவர் என்றே பெயர் அமைதல் இயல்பு. ஆதலால், சிதம்பரநாத பூபதி இவரிடத்துத் திருப்பரங்குன்றத்திலேயே சீடராய் அமைந்திருந்தார் என்று கூடக் கருதமுடியும்.

துழாவூர் என்பது இராமநாதபுரம் ஜில்லாவில் குன்றக்குடியருகில் உள்ளது. இங்கு அறுநூறு✞ ஆண்டு காலமாக ஒரு சைவமடம் உள்ளது என்பர். இம்மடத்துத் தலைவர் இல்லறத்தார். தந்தையிடமிருந்து மகன் மடத்தின் தலைமைப்

---

* சேதுபதிகள் காலம் மிகவும் பிற்காலம்; ஒருகால் இவர்கள் நிரம்ப அழகிய தேசிகருக்குப் பின் அதே பரம்பரையில் வந்த மற்றொரு நிரம்ப அழகியரைப் போற்றி வந்திருக்கலாம்.

❖ பக்கம் 57

✞ நானூறு?

பதவி பெற்றபின் துறவு பூண்கிறார் என்று சொல்வர். இன்னும் இம்மடத்தில் நகரத்தார் குலப் பெண்டிருக்குச் சிவதீக்கை செய்து வைக்கிறார்கள்.*

நூல் வரலாற்றறிவு அதிகம் இல்லாத காலத்தில் பலர் பலவிதக் கருத்துக்களைக் கூறியுள்ளனர். ஒன்று இவர் ஒரு தமிழாசிரியர் என்பது; கருணை ஞானப்பிரகாசரிடம் தீட்சை பெற்றார்; இவர் உடம்பில் நுணாக்காய்க் கிரந்தி இருந்தது; திருவிளையாடல் பாடிய பரஞ்சோதியுடன் பயின்றவர்; மதுரை மாநகரில் வசித்தவர்: அதிவீர ராம பாண்டியருக்குக் கல்வி கற்பித்த ஆசிரியர் என்பன அக்கருத்துக்களிற் சில. அவற்றுள் உண்மையில்லை. கருணை ஞானப்பிரகாசர் என்பது கமலை ஞானப்பிரகாசர் என்று சொல்ல வந்தவிடத்து நேர்ந்த பிழை யாகும். இவர் பாடிய 'ஆரணமும்' என்ற பாடலில் வரும் கருணை பொழி ஞானப்ரகாசன் என்ற தொடரும் இப்பிழை நேர்வ தற்கு ஒரு காரணமாயிருக்கலாம். உடம்பில் நோய் இருந்தது என்பதற்குச் சான்றில்லை. பரஞ்சோதியுடன் பயின்றிருக்க முடி யாது. அவர் காலம் 18ஆம் நூற்றாண்டின் தொடக்கம்; இவர் காலம் 16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி. அதிவீர ராம பாண்டி யர் காலத்தே இவர் வாழ்ந்தார் என்பது உண்மையே. ஆனால் இருவருக்கும் தொடர்பிருந்ததென்பதற்குச் சான்றில்லை. அதி வீரராமர் தம் ஆசிரியராகக் குறிப்பிடும் குரு, சுவாமி தேவர் என்பவர்; இவர் வேறாவர்.

நிரம்ப அழகியர் மதுரையிலும் சென்று சிறப்பாக வாழ்ந்தார் என்று கொள்ள இடமுண்டு. இவருடைய சித்தியார் உரைச் சிறப்புப்பாயிரம்:

> திருவாய் அமலர் அருள் சேர் குரவன், ......
> தன்னுணர்ந் துலகம் மின்னெனக் கண்டோர்
> ஓத எழுந்த வேதச் சும்மையும் ......
> வள்ளுரம் தோய்ந்த மதுரைத் தலைவன் ......
> உரம்பதி ஞானத் தொளியோன்
> நிரம்ப அழகன் என் நெஞ்சத் தோனே.

என்று கூறுவதால் இதை அறியலாம். சேதுபுராணத்தால் இவர் சேதுவிலிருந்த இராமநாத முனிவரிடம் ஈடுபாடு மிக்கவர் என்றும், திருவையாற்றுப் புராண ஏட்டுப் பிரதியால், இவர்

---

* அன்பர் சோம.லெ. அவர்கள் அறிவித்தது.

தஞ்சையில் மிக்க வியாபகமாய் வாழ்ந்த கோவிந்த தீட்சிதரால் சிறப்பிக்கப் பெற்றவரென்றும் அறிகிறோம்.

*காலம்*

கமலை ஞானப்பிரகாசர் மழுவாடிப் புராணம் செய்த காலம் கி.பி. 1565. அவருடைய மாணாக்கர் நிரம்ப அழகியார். இவருடைய மாணாக்கர் அளகைச் சம்பந்தமுனிவர், திருவாரூர்ப் புராணம்.1592இல் செய்தார். ஆதலால் அழகியாருடைய காலம் இதே காலமென்றும் கி.பி. 1550-75 ஆகலாமென்றும் கருத லாம். பின்னால் திருவையாற்றுப் புராணம் பற்றி ஒரு குறிப்பு உள்ளது. அதன்படி அப்புராணம் அழகியார் செய்ததாயின், இவர் 17ஆம் நூற்றாண்டின் தொடக்க ஆண்டுகளிலும் வாழ்ந்த வராதல் வேண்டும்; அதன்படி காலம் 1550-1610 என்றும் கொள்ள இடமுண்டு.

**நூல்கள்**

திருப்பரங்கிரிப் புராணம், சேது புராணம், திருஜயாற்றுப் புராணம் என்ற மூன்று புராணங்கள் இவர் செய்தனவாகத் தெரி கின்றன. கமலை ஞானப்பிரகாசர் பல தலங்களுக்கு யாத்திரை சென்றார் என்று அவர் வரலாறு கூறுகிற ஞானப்பிரகாச மான் மியம் தெரிவிக்கிறது. திருவையாற்றுக்கருகே கொள்ளிடத்தின் வடகரையிலுள்ள திருமழபாடிக்கு அவர் ஒருபுராணம் பாடி னார். அத்தொடர்பே அவர் போன வழியிலுள்ள திருவையாற் றுக்கு, மாணாக்கரான இவர் புராணம் பாடிய காரணம் போலும். திருவாரூரில் இவர் வாழ்ந்த போது குருவாகிய கமலை ஞானப்பிரகாசர் இவருடைய சமயப்புலமையை நன்குணர்ந்து சாத்திரங்களுக்கு உரை எழுதத் தூண்டினார் என்று சொல்வ துண்டு. அதன்படி இவர் செய்த உரைகளே சிவஞான சித்தியார் உரையும், திருவருட் பயன் உரையும். இவர் குருஞான சம்பந்தர் மாலை என ஒன்று செய்ததாகச் சொல்வர். அது பொருந்தும் என்று கருதுவதற்கில்லை. குருஞான சம்பந்தர் நிரம்ப அழகி யருக்குப் பின் கமலை ஞானப்பிரகாசரிடம் இளைய மாணாக்க ராய் வந்து சேர்ந்தார் எனத் தோன்றுகிறது. அவர் வருமுன்னே தென்பாண்டி நாட்டை நோக்கிச் சென்றுவிட்ட நிரம்ப அழகி யார் சோழநாட்டின் வட பகுதியில் பிற்காலத்து ஆசாரியராய் அமர்ந்த குருஞான சம்பந்தரைப் புகழ்ந்து நூல் செய்தார் என்பது சாமானியமாய் இயல்வதொன்றன்று. மாலை இவர் பாடிய தென்பது உபசாரமேயாகும்.

திருநெல்வேலிக்குரிய வேணுவன புராணம் என்ற சிறு புராணமும் இவர் செய்திருக்கலாம் என்பது எமது கருத்து. அதுபற்றிய குறிப்பும் பின்னே உள்ளது.

## திருப்பரங்கிரிப் புராணம்

இதற்கு மூலம் வடமொழிக் காந்தத்துள் தல மான்மியம் கூறும் பகுதியில் உள்ளதென்பர். இத்தமிழ்ப் புராணம் பாயிரம் உள்பட 11 சருக்கங்களும் 526 பாடல்களும் உடையது. வழக்கம் போலுள்ள துதிப்பாடல்களோடு, தலத்துக்குப் பொருத்தமாக தெய்வயானை வள்ளியம்மை நவவீரர் திருமால் திருமகள் துதி களும் உள்ளன. முருகன் திருமணம் காணவந்த பவளவாய்ப் பெருமாளுக்கும் திருமகளுக்கும் தனி வணக்கங்கள் உள்ளன. அக்காலத்துப் புராணம் பாடுதலில் பதிகம் அமைத்தல் என்ற மரபுக்கேற்ப, பாயிரச் சருக்கத்திலேயே நான்கு பாடல்களில் பதிகம் சொல்லி, நைமிசாரணியப் பகுதியையும் பாயிரத்திலேயே அடக்கிவிடுகிறார். அடுத்த இரு சருக்கங்கள் குமரன் உபதேசம், தவம், அடுத்தது சிபி வேந்தன் பூதானம்; பிரமகூவம், தலவிசேடம்; அரிச்சந்திரச் சருக்கம், திருவிழாச் சருக்கம் - அரிச்சந்திரன் இங்கு வந்து வழிபட்டு ஆலயம் எடுத்துத் திரு விழாச் செய்ததைக் கூறும்.

அடுத்த நக்கீரச் சருக்கத்தின் கதை புதுமையானது. மதுரை சோமசுந்தரக் கடவுளுடைய அருளுக்குப் பாத்திரமானபின் நக்கீரர் முருகனைப் பாடவில்லை என்ற காரணத்தால் ஏதேனும் ஒரு காரணம் பற்றி அவரை ஒரு குகையில் அடைக்க என்று முருகன் உத்தரவிட்டான். அதன்படி இரண்டு பூதங்கள் சமயம் பார்த்திருந்தபோது, ஒரு நாள் அவர் பஞ்சாக்கரப் பாறையின் மேலிருந்து பூசை செய்ய, மரத்திலிருந்து ஒரு சருகு நீரிலும் நிலத்திலுமாக விழுந்து பாதி மீனாகவும் பாதி பறவையாகவும் மாறித் தவித்தது கண்டு, இவர் நகத்தால் இரண்டையும் கிள்ளி விட இரண்டும் தனியே பிரிந்து துடித்து உயிர்விட்டன. இதையே காரணமாய்க் கொண்டு அந்தப் பூதங்கள் இவரைக் குகையில் சிறைப்படுத்தின. இவர், தாம் முருகனைப் பாடாமையே இதற்குக் காரணம் என உணர்ந்து, திருமுருகாற்றுப்படை பாடி மலை கிழவோனே என்று முடித்தார். முருகன் தோன்றி, “நான் கிழவன் என்று நீ பாடியுள்ளமையால் வர நாளாகும்” என்று சொன் னான். பின்னர் இவர் ‘என்றும் இளையாய்’ என்ற வெண்பாப் பாடினார். அதன்மேல் முருகன் இவரை விடுவித்தான். இக்கதை, வழங்கும் வரலாற்றிலிருந்து சிறிது வேறுபட்டது.

*பின்வரும் பாடல்களும் காண்க:*

சுவையூறுந் தமிழ்மாலை உலகமென எடுத்தோதித்
  தொன்னூ லீற்றின்
நுவலியது கிழவானே யெனக்கூற நெடுங்கால
  நோன்பு கோடி
புவியிலினைத் தறிவரிய குமரவேள் அவன்கனவு
  பொருந்தத் தோன்றி
அவனிதனிற் கிழவனென வரச்சிறிது நாளாமென்
  றறைந்து போனான்.

அப்பொழுது நற்கீரன் தமிழ்மாலை இளையோ னென்
  றறைந்து சூட்டச்
செப்பரிய குடமுனிவர்க் குபதேசஞ் செலுத்துமொரு
  செஞ்சொ லாளி
இப்பொருப்பி லடையாளங் கலியுகத்தோர் கண்டிடவேல்
  எறியப் பாறை
யொப்பறநே ரேகிழித்தங் கிருபிளவாய்ப் பிளந்திடவே
  உவப்பின் வந்தான்.

*அடுத்த இரண்டு சருக்கங்கள் சூரசங்காரம், திருக்கல்யாணம். திருப்பரங்கிரிப் புராணத்திலுள்ள கற்பகவிநாயகர் வணக்கப் பாடல் மிகவும் பிரசித்தமானது. இதனுள் ஒன்று முதல் எட்டு வரையுள்ள எண்கள் தொனிக்கும்படி அமைத்திருக்கிறார்:*

வஞ்சகத்தி லொன்றானை, துதிக்கைமிகத் திரண்டானை,
  வணங்கா ருள்ளே
அஞ்சரண மூன்றானை, மறைசொலு நால் வாயானை,
  அத்த னாகித்
துஞ்சவுணர்க் கஞ்சானை, சென்னியணி, யாறானை,
  துகளெ ழானை,
செஞ்சொன்மறைக் கெட்டானை, பரங்கிரிவாழ் கற்பகத்தைச்
  சிந்தை செய்வாம்.

*சூரசங்காரச் சருக்கத்துள் முதற் பாடல்:*

அஞ்சொ லான்சைவ புராணத்து ளாறதி கத்தைச்
செஞ்சொ லூறிய தமிழ்ப்படுத் தினசெழுங் கீரன்
அஞ்சல் செய்தபின் செய்யுள்கண்டிடுங் கதை யுரைத்தாம்
விஞ்சு காந்தஞ்சொல் சூரசங் காரத்தை விரிப்பாம்.

*நக்கீரர் சைவ புராணத்துள் ஆறைத் தமிழ்ப் படுத்தினார் என்று இங்கு சொல்லப்பட்டது. அப்படியானால் இந்நூல்கள் இருந்தனவா என்பது விளங்கவில்லை.*

*இந்த நூற்பாடலுக்கு எடுத்துக்காட்டாக, நக்கீரர் துதிக்கின்ற பாடல்களில் ஒன்றைக் கீழே தருகின்றோம்:*

கருதரிய ஆறுமுகங் கொண்டருள நிறைந்தவருட்
கடலே போற்றி
திரைமருவு நிலவங்கச் சேரவுயிர்ச் சரக்கையிடுஞ்
செட்டி போற்றி
விரிதருவான் குஞ்சரத்தைக் கண்ணியிட்டுப் பிடித்தளழில்
வேடா போற்றி
குருதியெழும் வேலேந்தி வரங்குலவு பரங்கிரியிற்
குமரா போற்றி.

*திருக்கலியாணத்தின் போது, தெய்வயானை வரும் நேரம், சேடியர் கட்டியங் கூறுகிறார்கள்:*

உண்டிட உவட்டா தெழுந்தபுத் தமுதே,
ஊற்றெழப் பழுத்ததீங் கரும்பே
வண்டெழா தலர்ந்து வளர்ந்த பூங் கொடியே,
வடித்திடாத் தெளிந்தசெந் தேனே,
எண்டிசை விளக்க வருந்தனி விளக்கே,
இனித்தினித் தருந்துகற் கண்டே,
மண்டலம் புகழ வளர்ந்த பெண் ணரசே,
மறமெழா தெழுந்தபே ரொளியே.

மழலையங் கிளவி துளும்புவாய்க் கிளியே,
மரகதப் பசியமா மயிலே,
ஒழுகுதே னூறி உவட்டெழுங் கனியே,
ஒளி கிடந் திமைத்த பொற் கொடியே,
தழையிசை செழும் பாண் மிழற்றிய குயிலே,
தளிரெழுந் தசைந்த பூங் கொம்பே,
எழுமிருட் படலங் கிழித்தமா மணியே,
எழுதரி தானசித் திரமே.

*மணவறையைச் சூழ்ந்து செய்த அலங்காரங்களில் பதுமைகளும் இருக்கின்றன. அவற்றின் செய்கை:*

பரதநா டகத்தைத் தருஞ்சில பொம்மை,
பாண்மிழற் றிடுஞ்சில பொம்மை,
இருகையால் தாளம் புடைக்குமோர் பொம்மை,
இலகுபாய்ந் திடுஞ்சில பொம்மை,
சுருதியை இசையாச் சொலுஞ்சில பொம்மை,
துடையறைந் தசையுமோர் பொம்மை,
வரிசையாக் கதைசொல் வகுக்குமோர் பொம்மை,
வட்டமிட் டாடுமோர் பொம்மை.

கின்னர மெடுத்துத் தெரிக்குமோர் பதுமை,
கேடகஞ் சுழற்றுமோர் பதுமை,
மன்னிய கதிர்வாள் விதிர்க்குமோர் பதுமை,
வலியகட் டியஞ்சொலும் பதுமை,
தன்னிலே குகன்சீர் சாற்றுமோர் பதுமை,
தலையசைத் துலவுமோர் பதுமை,
பொன்னணி கவிரி யிரட்டுமோர் பதுமை,
புதுமையாய் விசிறுமோர் பதுமை.

*பதிப்பு*

*அ. நாராயண சரணர் பதிப்பு மூலம் 1882. முரா. அருணாசலக் கவிராயர், பொழிப்புரையுடன் இருமுறை; முதல் பதிப்பு அவர் எழுதிய பிள்ளைத் தமிழுடன்; இரண்டாம் பதிப்பு 1928.*

## *சேது புராணம்*

*அழகியார் செய்த நூல்களில் இதுவே அளவால் மிகவும் பெரியதும் சிறப்புப் பொருந்தியதும் ஆகும். இதை ஆசிரியர் வெறும் தலபுராணமாக மட்டுமல்ல, ஒரு காப்பியமாகக் கருதியே அமைத்திருக்கிறார். புராணத்தின் இறுதிப்பாடல், இவர் இராமநாத முனிவர் என்பவர்பால் ஈடுபாடுடையவர் என்றும் அவர் சேதுவில் வாழ்ந்து புராணம் பாடும்படி இவரை ஊக்கு வித்தார் என்றும் கருதும்படி உள்ளது.*

மாதுமலை வளர் காதல் வல்லி வாழ்க,
மாற்கருள்கூர் சிவராம நாதன் வாழ்க,
சேதுவுடன் தனுக்கோடி தீர்த்தம் வாழ்க,
திகழ்தீர்த்தம் அறுநான்கும் சிறந்து வாழ்க,
நாதன் இரா மேச்சுரனை அருச்சிப் போரும்
நற்றானம் தலமனைத்தும் நயந்து வாழ்க,
மாதவர்கள் மிக வாழ்க, இராமநாத
மாமுனிவன் நீடூழி வாழ்க மாதோ.

*தொடக்கத்தில் பாயிரம், திருநாட்டுப் சிறப்பு, கந்தமாதனச் சிறப்பு, நைமிசாரணியச் சிறப்பு என்று நான்கு பகுதிகளும், 45 சருக்கங்களும், 3438 பாடல்களும் கொண்டது. விநாயகர் சார் பாக இரண்டு செய்யுட்கள் உள்ளன. சபாபதி வணக்கத்தோடு கடவுள் வாழ்த்துப் பகுதி தொடங்குகிறது. சரசுவதிக்கும் மெய் கண்ட தேவருக்கும் இவர் வணக்கம் சொல்லியிருப்பது சிறப்பு. மெய்கண்டார் வணக்கப் பாடல் சைவ உலகில் பிரசித்தமானது:*

அல்லாத பரசமய அலகைத்தேர் விண்டகல
அகல்புனற் பெண்ணை அயல்சூழ் வெண்ணெய்ப்
பொல்லாத இபமுகத்துப் புத்தேள் தன்பாற்
புனிதசிவா கமப்பொருண்மை பொருந்த ஆய்ந்து
நில்லாத நிலையிது மற்றென்று மொன்றாய்
நிற்கும் நிலை இதுவெனமெய்ந் நெறிநேர்ந் தியாரும்
வெல்லாத சிவஞான போதம் சொன்ன
மெய்கண்டான் சரணமுடி மீது கொள்வாம்.

*இவர் சித்தியார் சுபபக்கவுரை செய்தவர் என்பதை நாம் நன்கறிவோம். இவருக்குச் சைவ மரபில் எவ்வளவு பற்றுதல் இருந்தது என்பதை இப்பாடல் அழகாகக் காட்டுகிறது.*

*அவையடக்கத்தில், அறிஞர் தம்மையழைத்துச் சேதுவில் இராகவன் இராமநாதனை நிறுவிய கதையைச் சொல்லெனத் தாம் பாடியதாகச் சொல்லுகிறார். இப்பகுதியின் இறுதிப் பாடல் ஆசிரியர் பெயர் சொல்லுகிறது.*

விரிதருபைங் கடலுலகம் புரந்ததனி வேந்தரெல்லாம்
வியந்து போற்ற
அரியமறை முனிவர் தமிழ்ப் பாவாணர் செவிநுகர்பே –
ரமுத மாகத்
தெரிதரமுத் தமிழ்வடிக்கும் முனிநிரம்ப அழகியதே –
சிகனாம் செம்மல்
வரிசைபெறு வடமொழியின் சேதுமாக் கதைதமிழால்
வகுத்திட் டானே.

*திருநாட்டுச் சிறப்புச் சருக்கத்தில் பாண்டித்தலம் பதினான் கையும் தனித்தனி ஒவ்வொரு பாடலால் சிறப்பிக்கிறார். இத்தலங் களைக் குறிப்பிடும்போது, ஒவ்வொன்றின் பெயரையும் நயமுற எதுகையில் வைத்துப் பாடுவது சிறப்பு; ஓர் எடுத்துக்காட்டு - திருவாடானை:*

வீடானைப் பிறவானை நினையானை மறவானை
 வேறொன் றோடும்
கூடானைப் பிரியானைக் குணங்குறி யொன் றில்லானைக்
 குகப்பி ரானை
நீடானை முகத்தானைப் பயந்தானைத் தொழுதமரர்
 நிரப்பு நீங்கும்
ஆடானை நகருமுடைத் தன்னதமிழ் நாடதன்சீர்
 அளவிற் றாமோ.

*சமய தத்துவங்களையும் இதனுட் கலந்து பாடுவது பின்னும் சிறப்பு; 'குற்றாலம் குறும்பல வென்றிரண்டும் ஒருங்குள வழுதி கொற்ற நாட்டில்' என்று புகழ்கிறார். நாட்டுச் சிறப்புப் பெருங் காப்பியம் போல் மிக விரிந்தது; 12 பாடல்.*

*இவர் தாம் சோழநாட்டினர் என்பதை, சோழ நாடும் பைந் தமிழ் நாடு, பொருநையும் பொன்னிபோல் வளங்கள் ஈனும் என்று கூறுவதால் தெரிவிக்கிறார்:*

பன்னுசீர்க் கிள்ளிநாடும் பைந்தமிழ் நாடதேனும்
இன்னிசைத் தமிழின் ஆசான் இருப்பது மலயவெற்பில்
பொன்னிபோற் பொருநை தானும் பூம்பணை வளங்கள் ஈனும்
கன்னிநாட் டிதுபோல் முத்தம் காவிரி கான்றிடாதே.

*எனினும் எடுத்த பொருளின் சிறப்பையொட்டி, அகத்தியரும் முத்தும் அங்கு இல்லை, பாண்டி நாட்டில்தான் உண்டு என்ப தையும் கூறுகிறார். திருநாட்டுச் சிறப்பின் இறுதியில் ஐந்து பாடல்கள் மடக்கு. போதிமங்கைச் சாக்கியர் வாதில் அழிந்து தமிழ் விரகர் தாள்பணிந்தமை போல் செந்நெற்கதிர் விளைந்தது என்கிறார்:*

உவந்தெதிர்ந்த மொழிப்போரில் உற்றபொருள் உரைசெய்யும்
தவந்திரிந்த போதிமங்கை சாக்கியர் போல் தலைநிறுவி
அவந்தரு சொல் லவர் வாதில் அழிந்ததற்பின் தமிழ்விரகர்
சிவந்தகழல் பணிந்தமைபோல் செந்நெல்விளை கதிர்வளைந்த.

*கவிதா சாமர்த்தியம் பலவும் இப்பகுதியில் காணலாம். முரண் தொடை கடைமடக்கு முதலான பாடல்கள் பல.*

*அடுத்த கந்தமாதனச்சிறப்பு என்ற சருக்கத்தின் தொடக் கத்தில் 12 பாடல்கள் கந்தமாதனம் என்றே முடிவன. இந்நூலுள் தீர்த்தம் உரைக்கும் சருக்கங்கள் இருபது. அவற்றுள் இராமன்,*

அனுமன், இலக்குமி, இலக்குவன், காயத்திரி, சரசுவதி ஆகியவை குறிப்பிடத்தக்கன. இராம குண்டம் சீதை குண்டம் பிரம குண்டம் என மூன்று குண்டச் சருக்கங்கள் உள்ளன. சேதுவோடு மருவியது கந்தமாதனமலை என்று அதன் சிறப்புச் சொல்லப் படுகிறது. முதலாவதான சேதுச் சருக்கம் சேதுவில் ஆடுவதன் புண்ணியம் கூறுகிறது. சேது வந்த சருக்கம், இராமன் சேதுக் கரையடைந்ததும், அங்கு நளனைக் கொண்டு அணை கட்டு மாறு சமுத்திரராசன் கூறியதும் சொல்லுகிறது.

நூல் முழுமையும் தோத்திரப் பாடல்களை அதிகம் செய் திருக்கிறார். பிற காப்பியங்களில், துதிப்பாடல்கள் ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வந்த வரிப் பாடல்கள் போல, மும்மூன்றாக அமைந்திருக்கும். இந்த அமைப்பைச் சிலப்பதிகாரம், சிந்தாமணி, சூளாமணி, நீலகேசி முதலியவற்றிலும், பிற்காலத்தில் மீனாட்சி சுந்தரம் பிள்ளை பாடிய திருநாகைப் புராணம் முதலியவற் றிலும் காணலாம். ஆனால் நிரம்ப அழகியார் இங்கு பத்துப் பாடல்களை, ஒரு பதிகம்போல அமைக்கிறார். சில எடுத்துக் காட்டலாம். அகத்தியன் பின்னவனாகிய மேலோன் துதி - 10 பாடல் (சருக்கம் 11); காயத்திரியும் சரசுவதியும் துதித்தல் 10 பாடல் (ச. 35); இராமநாதரைத் துதிக்கும் முறை 10 பாடல், போற்றி என்ற முடிபையுடையன (ச. 44); இராமனும் சீதையும் தனித் தனித் துதித்தல் 11 பாடல் (ச. 41); இவை யாவும் சிவபெருமான் துதி. முனிவர் இராமனைத் துதித்தல் - 13 பாடல்; வணங்குதும் யாமே என்பது போன்ற முடிபையுடையவை (ச. 39); அனுமன் இராமனைத் துதித்தல் - 12 பாடல் (ச. 39), அனுமன் சீதையைத் துதித்தல் - 10 பாடல் (ச. 39), நூலெங்கும், தேவார திருவாசகச் சந்தமும் தொடர்களும், கருத்துக்களும் கம்பராமாயணத் தொடர் களும் யாப்பும் பொருளும் நிரம்பி இருக்கக் காணலாம்.

'பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனே' என்று இறைவனை மாணிக்கவாசகர் பாடினார். நாம் புதுமை என்று நினைப்பதையெல்லாம் நம் மூதாதையர் ஆழ்ந்து பார்த்துச் செய்திருக்கிறார்கள். ஓர் உதாரணம் சென்ற தலைமுறையினர் ஒருவரையொருவர் கண்டபோது நமஸ்காரம் என்று சொல்லிக் கைகூப்பி வணங்கினார்கள். இந்தத் தலைமுறையினர் வணக்கம் என்று சொல்லிக் கையைக் கூப்புவது முன்னேற்றம் என்று எண்ணு கிறார்கள். இருக்கட்டும். இராமன் சேதுவில் தன்பெயரால் இலிங்கம் தயாரித்தபோது, மாருதி இராமனை வணங்குகிறான்:

மாறேதுமில் இன்ப அகண்டித வாழ்வு சேர்வார்
பேறே பிரியாதமர் பூரணப் பெற்றியானே.

வேறே உடனே இவை இன்றமர் மிக்க விண்ணோர்
ஏதே துணைநீ எனக்கு, உன்பொருட்டு வணக்கம்.

இவ்வாறு மூன்று பாடல்கள் உள்ளன. போற்றி என்றும் நம என்றும் ஆசிரியர் பல பாடியிருப்பினும், காலப் போக்கையொட்டிக் கருதும்போது இவருடைய பாடல் சிறப்பானது. சருக்கந்தோறும் இறுதியில் ஒரு பல சுருதிப் பாடல் அமைக்கிறார். அப்பாடல் தவறாது சந்தப் பாடலாக உள்ளது. அன்றியும் நூலகத்தில் எடுத்த இடமெல்லாம் நல்ல சந்தப் பாடல்களே நிரம்பியுள்ளன. பெருங்காப்பியத் தன்மையொட்டியே இவற்றை அமைக்கிறார்.

இவருடைய சந்தப் பாடலுக்கு ஓர் எடுத்துக்காட்டு,

மங்கையுமைபங்குறைய பங்கவரவங்கூர்
கங்கையொடு திங்கள் புனை துங்க கனறங்குஞ்
செங்கையணி கங்கண புயங்க சிரகங்கொ
ளங்கை விதிகங்குல வலங்களங்கா. (சர்வதீர்த்தம் 20)

தீமை வாரிதிடற்பட வீட்டிடுஞ் தேவரூரில் வளத்தொடு கூட்டிடுங்
காமமோடு மயக்கற வோட்டிடுங் காணொயாத கதிப்பொருள் காட்டிடுந்
தாமநீடு தனக்குவையீட்டிடுந் தாவில் காதை படித்தவர் கேட்டவ
ரேமமேவு மனத்திடை வேட்டவை யாவு மீயுமிலக்குமி தீர்த்தமே.
(இலக்குமி தீர்த்தம் 14)

நூல் இறுதிச் சருக்கம் சேது பலச் சருக்கம் என்ற பெயருடையது. இங்கு சேதுவில் நீராடி வழிபட்டோர் நற்கதியடை வாரென்பதையும் இப்புராணம் படித்தவரும் சிறப்படைவர் என்பதையும் 180 பாடல்களால் சொல்கிறார்; தம் புராணத்தை உலகமெல்லாம் என்ற சொல்லோடு இவர் முடிப்பதும் கருதத்தக்கது. மேலும் ஒரு சிறப்பை இங்குக் காண்கிறோம். ஆசிரியர் சைவத்துறவி; பாடுவது சிவபிரான் புகழ், இராமர் தாபித்து வழிபட்ட தலத்தின் பெருமை. ஆயினும் இவர் இங்கு வைணவம் என்றும் சைவம் என்றும் பாகுபடுத்தாமல், யாரை வழிபட்டாலும் எப்பெயரைக் கூறினாலும் முத்தியடைவர் என்று சிறப்பாய்க் கூறுகிறார். மதுரை, மயிலாடுதுறை, வெண்காடு, பழமலை, வேங்கடம், சேஷாத்திரி, நைமிசம், கருணை, அருச்சுன வனம் (இடைமருது), மறைவனம், தில்லை, காழி, தென்கயிலை (காளத்தி) அரங்கம்,

*இபக்கா (ஆனைக்கா), வைத்தியபுரம் (புள்ளிருக்கு வேளூர்), குடந்தை, காசி, பருப்பதம், கமலாலயம் காஞ்சி ஆகிய,*

இப்பெரும்பதி முதலிய ஈசன்மால் பொருந்தும்
ஒப்பரும்பதி யாவினும் ஓரியாண் டுறைந்த
அப்பெரும் பல னடையும் என்றால் அகன்துறைநீர்
மெய்ப்பெ ருந்தனுக் கோடியின் பெருமையார் விரிப்பார்.

*இங்கு ஈசன்பதி மால்பதி ஆகிய எதில் உறைந்தாலும் பெரும் பலன் அடையும் என்பதைக் குறிப்பிடுகிறார். இதே போல இங்கு, நமசிவாய என்று ஓதாதார் பிறவியும் நமோ நாராயணா என்று. எட்டெழுத்தை உருவேற்றாதார் பிறவியும் சேது ஸ்நானத்தால் தாவியோடும் என்கிறார்.*

ஆவி கட்கித மாமஞ் செழுத்தையும்
ஓவிலா நமசி வாயஎன் றோதி டார்
பாவி யாருளங் கேளார் பவங்களும்
தாவி யோடுமிச் சேதுவி னானத்தால்.

முந்தை யா மெழுத் தோடு நமோவென
நந்தி லங்குகை நாராய ணாயவென்று
இந்த எட்டெழுத் தாலுரு வேற்றலார்
சிந்தி யார் பவஞ் சேதுவிற் சிந்திடும்.

*பின்னும் மற்றப் பாடல்களில், சிவலிங்கத்தையும் சாளக் கிரா மத்தையும் துவாரகா சக்கரத்தையும் பூசியாதவர் பாவமும், உருத்திராக்கம் அணியாதவர் பாவமும், கோபி சந்தனம் அணி யாதவர் பாவமும், சேதுவில் மூழ்க நீங்கும் என்று சொல்கிறார். செய்யவேண்டிய நற்கருமங்களைச் செய்யாது விட்டவர்களுடைய எத்தகைய பாவங்களும் சேதுவிற்கெடும் என்று 30 பாடல்களால் சொல்லுகிறார். இங்கு சிவ கருமம், விஷ்ணு கருமம் இரண்டையும் சேர்த்தே சொல்லுகிறார். அவற்றுள் ஒன்று, மார்கழித் திங்கள் வைகறையில் மாபெரும் சீரியர் பூசை செய்யாத தீமை:*

ஆரணப் பரியிணா னாதியோர் தமை
மார்கழித் திங்கள் வைகறையின் மாபெரும்
சீரியற் பூசைசெய் யாத தீமையும்
நீரலைச் சேதுவில் நீங்கு மாலரோ.

*திருமால் வழிபாட்டைக் கூறும்போது, கோபி சந்தனத்தை நெற்றி நெஞ்சு புயத்தினில் அணியாத தீமை என்கிறார்; திருமண் என்று சொல்லவில்லை. ஒரு பாடலில் உருத்திராக்கமும் அடுத்ததில்*

துழாய்மணியும் குறிப்பிடுகிறார். இரவு முடிகின்ற பிராமிய முகூர்த்தத்தில் எழுந்து சுத்தனாய் அரியரன் நாமம் துதித்தல், காயத்திரி சந்திசெய்தல், சித்திரை மதியில் சித்திர குத்தருக்கு வழிபாடு செய்தல் - முதலாயின இவரால் இங்கு குறிப்பிடப் பட்டுள்ளன.

சேது புராணம் படிப்போருக்குப் பலன் சொல்லுமிடத்து, ஒரு சருக்கம் கூறினார் கேட்டவர், இரண்டு சருக்கம், 10, 20, 30, 40, 50 சருக்கம் படித்தவருக்கும் - என்று பலன் விரிவாகச் சொல்கிறார். பின்னர் அனைத்தையும் ஒருமுறை கேட்டவர் இயம்பினோர், இருமுறை, மும்முறை, நான்முறை என்று பின்னும் விரிக்கிறார். இதற்கு மேலும் ஒரு பாடல்;

**ஒருகவியே தானாதல் இதிற் பாதி யாதல் இந்த**
**உயர்பு ராணத்து**
**ஒருபதமே தானாதால் ஒருமொழியே தானாதல்**
**உண்மை சான்ற**
**ஒருபுனித எழுத்தாதல் ஒற்றாதல் ஒருமுறைகேட்டு**
**உரைத்தால் அந்த**
**ஒருவிசையில் அன்றன்றங் குஞற்றுபா வம்அனைத்தும்**
**ஒழிக்கும் மாதோ.**

என்று கூறுவது காண்க. 'ஆசேது ஹிமாசலம்' என்பது நம் நாட்டுப் பழமொழி; சேது முதல் இமயம் வரை என்பது பொருள். வடநாட்டிலிருந்து பருவமென்றில்லாமல் தினந்தோறும் எண்ணற்ற மக்கள் குடும்பம் குடும்பமாக சேது ஸ்நானத்துக்கும் சேது மகாதேவரைத் தரிசிக்கவும் வந்த வண்ணமிருக்கிறார்கள். மேற்குறிப்பிட்ட பாடல்களின் கருத்தே இவ்வளவுக்கும் அடிப் படை என்று நிச்சயம் கருத முடியும்.

சேது புராணத்தில் இராமநாத முனிவர் பற்றிய குறிப்பு: இவர் இராமநாத பண்டாரம் என்றும் வழங்கப் பெற்றார். இவர் தளவாய் சேதுபதி காத்த தேவர், அவர் குமாரர் கூத்தன் சேதுபதி ஆகிய இருவர் காலங்களிலும், அவர்களிடமிருந்து ஊர்களும் பொருளும் ஏவலரும் காரியத் தலைவரும் பெற்று, தேவை இராமீச்சுரத் திருக்கோயிலைத் திருப்பணிகளாலும் நித்திய நைமித்திக பூசை விழாக்களாலும் திருவாபரணங்களாலும் வாகனாதிகளாலும் அனைத்துலகும் கொண்டாடச் செய்தார் என்று சாசனங்கள் குறிப்பிடுகின்றன

"சகாப்தம் 1530 (கி.பி. 1608) ஜெயதுங்கராய வங்கி சாதிபரான துகவூர்க் கூற்றத்தில் சாத்தூரான குலோத்துங்க சோழ நல்லூர்க் கீழ்பால் விரையாத கண்டனிலிருக்கும் ராஜஸ்ரீ தளவாய் சேதுபதி காத்த தேவரவர்கள் ராமநாத சுவாமி பர்வத வர்த்தனியம்மன், உடையவர் கட்டளைப் பூசைக்கு இராமநாத பண்டாரமவர்கள் பாரிசம் சேது தனுக்கோடியில் ஆப்பனூர் நாட்டிற் கருக்குளம், கள்ளி குளம், கரிசைக் குளம், வேலங் குளம், பொட்டற் குளம், வெடந்தை, கண்ணன் பொதுவன், முத்தான் சிறுகுளம் ஆக எட்டு ஏந்தல்களும்" தானஞ் செய்யப்பட்டன என்றுள்ளது.

"சகாப்தம் 1545 மேற் செல்லாநின்ற ருதிரோற்காரி வருஷம் மாசி மாதம் புதவாரமும் சத்தமியும் உத்திரமும் பெற்ற நாளில் உடையநாயனான சேதுபதி காத்த தேவர் புத்திரன் கூத்தனான சேதுபதி காத்த தேவர் உபயமாக ராமநாத சுவாமி முதற் பிர காரம் திருநட மாளிகைப் பத்தி, ஆரூட மண்டபமும் கட்டி முடிப்பித்தான்."

சேல்கண்ட வாரி யிலங்கேசன் வெம்பழி தீரமுன்னாள்
மால்கண்ட கோயி லிராமீச ராடல்செய் மண்டபத்தை
நூல்கண்ட நற்சக னாயிரத் தோடைந்து நூற்றிருபான்
மேல்கண்ட நாளின் முனிராம நாதன் விதித்தனனே.

திருமா லரனுக் கபிடேகஞ் செய்யச் சிலையதனால்
வருமாறு கண்டவன் கோடிப் புனற்கண் மகாலயத்தைத்
தருமா யிரத்தைந்து நூற்று முப்பான்செல் சகவருடத்
தருமா தவஞ்செய் முனிராம நாதன் அமைத்தனனே.

பற்றுஞ் சகனிற் பதினைந்து நூற்றிரு பான்மருவ
நற்றும் புவியினை யாள் வீர பூபதி நாளிற்றொண்டர்
குற்றங் கடிந்தவர் சீராம நாயகர் கோயிலன்பான்
முற்றுந் தவங்கள் புரிராம நாதன் முடித்தனனே.

## திருவையாற்றுப் புராணம்

திருவையாற்றுப் புராணமொன்று இவர் செய்ததென்று பலராலும் குறிப்பிடப்பட்டுள்ளது. திருப்பரங்கிரிப் புராணத் துக்கு முகவுரை எழுதிய திருநாராயணையங்கார், மதுரைத் தமிழ்ச் சங்கத்துள்ள ஏட்டுச் சுவடியொன்றில் நிரம்ப அழகிய தேசிகர் செய்த புராணங்களில் திருவையாற்றுப் புராணமும் ஒன்று என்று குறிப்பிட்டிருக்கிறார். இதையே சோமசுந்தர

*தேசிகரும் குறிப்பிடுகிறார். ஆனால் அப்படி ஒருபுராணம் அச்சாகவில்லை. தஞ்சை சரசுவதிமகால் நூல் நிலையத்தில் ஒரு திருவையாற்றுப் புராணம் இருப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. (அபூர்த்தியான மூன்று சுவடிகள்). அது கோவிந்த தீக்ஷிதர் கேட்க ஆசிரியரால் செய்யப்பட்டதாகச் சொல்லுகிறது; காலம் கி.பி. 1604. பின்வரும் பாடல் காண்க:*

மலிபுனல் சோழநாடு தஞ்சையிற் காத்திடும் அரசர்
மதிய அமைச்சர்
ஒலிமறைதேர் கோவிந்ததீக் கிதரையன் திருவாக்
குடைமை யாலே
கலியுகத்துச் சகனாண்டு மூவைஞ்ஞூற் றிருபதின்மேற்
காணு மேழாய்ப்
பொலிவருடத் தையாற்றுப் புராணவட மொழிதமிழாற்
புகல லுற்றேன்.

*(சகம் மூவைஞ்ஞூற்றிருபதின் மேல் ஏழ் - சகம் - 1527 - கி.பி. 1604). இப்புராணத்தின் வாக்கு நன்றாயுள்ளது.*

### *முருகன் துதி*

கொன்றை வாசமும் நறுந்துழாய் வாசமும் குளிர்பூ
மன்றல் வாசமும் கற்பக வாசமும் மணவாத்
தென்றல் வாசனுந் தொழப்பெறுங் குமரவேள் திருத்தாள்
நின்றை வாசமென் கருந்தலை வாசமா யிருக்கும்.

### *நாவுக்கரசர் துதி*

அளக்கர் நீர்த் தகளிநெய் யருக ரிட்டகல்
வளக்கருந் திரியென அமண மாசிருள்
துளக்கஅஞ் செழுத்தெனுந் தூண்டு கோலினால்
விளக்கென விளங்குநா வேந்தைப் போற்றுவாம்.

### *வாதவூரடிகள் துதி*

தேசிகன் ஞான போத மந்திரச் சிறையிற்பட்டுப்
பாசவன் தோலுரித்துப் பவுத்தரா மாலங் கான்று
வாசக மாணிக் கங்கள் உமிழ்ந்துமண் டலத்தினாடி
ஆசில்மன் றகத் தடங்குஞ் சேடனுக் கன்பு செய்வாம்.

*இப்பாடலில் ஆசிரியர் வாதவூரடிகளை ஆதிசேடனாக முற்றுருவகமாகப் பாடியிருப்பது அறிந்து மகிழத்தக்கது. சேடன் (ஆதிசேடன், பெரியோனாகிய வாதவூரடிகள்) போத*

மாகிய மந்திரச் சிறையிற் பட்டான்; பாசவன் தோலுரித்தான்; பௌத்தரால் ஆலம் (விடம்) கான்றான்; வாசகமாணிக்கங்கள் உமிழ்ந்தான்; மண்டலத்தினாடினான்; மன்றகத்து அடங்கினான் என்பது காண்க.

இந்நூல் வடமொழிப் பிரமகைவர்த்த புராணத்தினின்றும் எடுக்கப்பட்டதென்று ஒரு பாடல் கூறுகிறது. இந்நூல் செய்தார் நிரம்ப அழகியார் என்று திட்டமாய்க் கருதலாம்.* ஆனால் விளக்கமில்லை. இது இவர் செய்ததாயின் இவர் 17ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் வாழ்ந்தவராகிறார். அங்ஙன மாயின், இவர் நீண்ட ஆயுளோடு வாழ்ந்திருக்க வேண்டும்.

இப்புராணம் இரண்டு காண்டமாய் முதல் காண்டத்தில் 35 அத்தியாயமும் 1534 பாடல்களும், இரண்டாம் காண்டத்தில் 13 அத்தியாயமும், 673 பாடல்களும் ஆக 48 அத்தியாயம் 2207 பாடல்களைக் கொண்டதாயுள்ளது. நூலில் பல வகைச் சந்தப் பாடல்கள் மிகுதி. இறைவன் பெயரான செப்பேசர் பிராண தார்த்திகரர் முதலான பெயர்கள் போற்றி உரைக்கப்படுகின்றன. அன்னதான மகிமை முதலிய பல சிறப்புக்கள் உரைக்கப்படு கின்றன. பாயிரப்பகுதியில் செம்பொற் சோதி, ஒப்பிலா நாயகர், அஞ்சலென்ற பெருமான், பஞ்சநதம், அறம் வளர்த்த நாயகி, அழகிய பொன்னனையாள் தொண்டர்க்கினியான், சைவராயர் மூவர் என்ற துதிகள் குறிப்பிடத்தக்கன. காப்புச் செய்யுளில் ஆனந்தப் புதுத் தேனை நாவிற் கொள்வான் என்று நயம்பட உரைக்கிறார். பஞ்சநத வணக்கப் பாடல் பஞ்சநதம் என்ற சொல் லுக்கேற்ற சந்தத்தில் அமைந்து, இதுபோல திருச்சிற்றம்பலம், பொன்னம்பலம் முதலான தொடர்களின் சந்தத்தில் நம்பி திரு விளையாடலில் அமைந்துள்ள பாடல்களை நினைவூட்டுகிறது:

பிறப்பும் பிணியும் பிழைக்கும் பகையும்
  பிழைக்கும் கவியும் பிரித்தம் புவிநின்
றிறக்கும் துய்ருண் டிருக்கும் பிவிழுந்
  திளைக்குந் தலநின் றெடுக்குந் தவனுந்
துறக்கும் கமலங் கட்குன் றிவைமுன்
  சுரக்கும் சுகமுண் டிருக்கும் திருவும்
சிறப்பும் பயனும் கொடுக்கும் பதியும்
  திருப்பஞ்ச நதம் திருப்பஞ்ச நதம்.

---

* தஞ்சை சரசுவதி மகால் நூல்நிலைய விளக்க அட்டவணை முதல் தொகுதி 1925, பக்கம் 430 - 433

அறம் வளர்த்த நாயகியையே அழகிய பொன்னையாளாகப் பாடுகிறார். சிவகணத்தொருவனான திருவம்பலவன் மொழிய அன்னோன் அடிதொழுது பஞ்சநதிப் புராணத்தை அறையலுற் றேன் என்று புராண வரலாற்றில் சொல்லுகிறார். அவையடக் கத்தில் பின்வரும் பாடல் சுவையுடையது:

அந்தண்ஐயா றுடையான் எவ் வுருக்கொள்ளும்
அவ்வுருவு மாங்கே கொண்டு
வந்தணையும் அறம்வளர்த்த நாயகியை
வடிவுடைய மங்கை தன்னை
சந்தணையு முலைவண்டார் குழலாளைத்
தேனுற்ற சொல்லி தன்னைப்
பந்தணைமெல் விரலாளை அழகியபொன் னனையாளைப்
பணிதல் செய்வாம்.

பத்துப் பாடல்களில் காவிய மான்மியம் சொல்லுகிறார். நூற் பிரிவுகளின் பெயரில் அத்தியாயம், சருக்கம் என்ற இரண்டு பெயர்களும் காணப்படுகின்றன. நான்கு பாடல்களில் 44 தலப் பெயர்களைச் செறித்துச் சொல்லுகிறார். கௌதமன் துதிக்கின்ற இடத்தில் 'புண்ணியாநின் பொன்னடி பணிந்தேன்' என்ற முடிவை யுடைய 3 பாடல்கள் காணப்படுகின்றன. ஒன்று பின்வருவது:

காரண முதற்றுணைகள் கற்பனை கடந்தாய்
ஏரணவு மாறுசுவை இன்பநிகழ் வித்தாய்
ஆரணம் உரைக்கரு சுகத்துருவ மானாய்
பூரண வரத்தநின் பொன்னடி பணிந்தேன்.

## தசமணி மாலை

மதுரைவாசி நிரம்ப அழகிய தேசிகர் அருளிய ஞான சம்பந்த குரு தசமணி மாலை என்ற பெயருடைய ஒரு சிறு தோத்திர நூல் ப.அ. முத்துத் தாண்டவராய பிள்ளையால் 1930இல் அச்சிடப்பெற்றது. இது பத்து பதினான்கு சீர் விருத்தங்களை யுடையது. 'நாதாந்த குருவே திகாந்த குருவே கமலை ஞான சம்பந்த குருவே' என்ற மகுடமுடையது. இதை நிரம்ப அழகிய தேசிகர் பாடியிருத்தல் இயலாது. அழகியாரும் குருஞான சம்பந்தரும் கமலை ஞானப்பிரகாசரின் சீடர். இவருள் அழகியரே முற்பட்ட சீடர். அவர் குருஞான சம்பந்தரைப் பாடினாரென்றால் இயல்வதொன்றன்று. பின்வரும் பாடலில் ஞானப்பிரகாச குரு குறிப்பிட்டுள்ளார்; அப்படியானால் இப்பாடல் கமலை ஞானப் பிரகாசரைத் துதிப்பதாகக் கொள்ளலாமோ எனின், 'ஞானப்

பிரகாச குருவெனக் கூறி நாத்தழும் பேற்று குருவே' என்று பாடல் கூறுவதால், இது ஞானசம்பந்தரையே குறித்தல் தெளிவு:

> வானத்தில் அமுதுளது மதுரிக்கும் அதுபருகின்
> மரணம் அணுகாது என்றுபூ
> மண்டலத் தவரறிவு மாறுபோல் ஓலையில்
> வரைந்துபதி பசுபாசமென்று
> ஊனத்தி லறிவதல அனுபவித் தறிதலுக்
> கொன்றுமே யென்று சொல்லி
> உலகெலாம் குருவெனத் திரிவர்காண் போதனைக்
> குனையொத்த குருஆவரோ?

> தானப்ர காசந் தவப்ரகா சம்பரம
> சைவசித் தாந்த நிலையிற்
> சகலாக மப்ரகா சம்ப்ரௌட கவிதைவித்
> தாரப்ர காசமுறலான்
> ஞானப்ர காசகுரு குருவே யெனக்கூறி
> நாத்தழும் பேற்றுகுருவே
> நாதாந்த குருவே திகாந்தகுருவே கமலை
> ஞானசம் பந்த குருவே.

ஒரு பாடலில் 'ஆனந்த பரவசம் அளிப்பதும் உனது பதமே' என்று வருகிறது. இது குருஞானசம்பந்தர் தமக்குப் பின் அபிடேகம் செய்துவைத்த ஆனந்தபரவசம் உடனே முத்தியடைந்த செய்தியை நினைந்து பாடியதாகக் கருதத்தக்கது. அழகியார் தெற்கே சென்று தங்கிவிட்டாராதலால், இவரைத் தெரிந்து குறிப்பிட நியாயம் இல்லை; தெரிந்தாலும் குறிப்பிடும் மரபும் இல்லை. மேலும் மற்றப் பாடல்களில் பரசைவ தவராசரும், மடமும் மடவரியும் மடப்புறக் காணியும் என்றெல்லாம் சொல்லப்பட்டுள்ளது. இவையெல்லாம் குருஞானசம்பந்தர் காலத்தில் இல்லை. பிற்காலத்தில்தான் ஏற்பட்டன. ஏற்பட்ட பின்னரே பாடல் எழுந்திருக்க முடியும். மேலும், பாட்டுக்களின் நடையும் பிற்கால நடையே. ஆகவே இம்மாலை பிற்காலத்தில் (18ஆம் நூற்றாண்டு) ஒருவர் செய்திருக்கலாம். இவர் பெயரும் ஒருகால் நிரம்ப அழகியார் என இருந்திருக்கலாம் என்றே கருதவேண்டும். இவர் ஞானப்பிரகாசர் மாணாக்கரினும் வேறாவர்.

## வேணுவன புராணம்

வேணுவனம் என்பது திருநெல்வேலி. இத்தலத்துக்கு 19ஆம் நூற்றாண்டில் கவிராச நெல்லையப்பன் கவிராயர், 6892 செய்யுட்

களுடைய மிக நீண்ட புராணமாகத் தலபுராணம் பாடி 1869 இல் வெளியிட்டார். ஆனால் இதற்கு முன்னரும் இத்தலத்துக்குச் சிறிய அளவில் ஒரு புராணம் செய்யப் பெற்றிருந்தது. பாடினோர் பெயர் இல்லாமல் இது வேணுவனப் புராணம் என்ற பெயரில் 1914இல் அச்சிடப்பெற்றது. இப் புராணத்தின் காலம் 16ஆம் நூற்றாண்டு என்றும், இதைச் செய்தவர் நிரம்ப அழகிய தேசிகரே ஆகலாம் என்றும் கருதுகிறோம்.

இப்புராணம் பாயிரமும் 9 சருக்கங்களும் கொண்டது. பாடல் தொகை 454. பெரிதும் வருணனையே நிரம்பியது. எளிய சொற்களால் ஆகியது. அழகியார் ஒருகால் இதனைச் சேதுபுராணம் பாடுமுன் பாடியிருக்கலாம் என்று தெரிகிறது. போற்றி, சரணம் என்ற முடிபுகளையுடைய துதிப் பாடல்கள் மிகப் பல. எடுத்துக் காட்டுக்கள்:

பரபோக நாதா பரானந்த ரூபா
நரகாப காரா நடேசா மகேசா
சரசாவ தாரா சபாநாத னே சங் –
கரபோத கரபால கங்காள சரணம்.

ஏலக்குழல் நீள்வரை மாதுடனே
  என்கண்கள் கனிந்திட இன்பமணக்
கோலத்துடனே யுடன்மேவு மணக்
  கோலத்தவனே சரணம் சரணம்
ஞாலத்தின் மயக்க மொழித்தனையே
  நாடிப் பரவித் தேடித்திரியும்
சீலத்தவர்கட்கு வெளிப்படுமெய்ச்
  சீலத்தவனே சரணம் சரணம்.

நிரம்ப அழகிய தேசிகர் வரலாற்றை உரைத்த இடத்து, அவர் அதிவீர ராம பாண்டியனால் போற்றப் பெற்றார் என்று ஒரு வரலாறுண்டு அதற்கு ஆதாரம் விளங்கவில்லை என்று குறிப்பிட்டோம். அவ்வரலாற்றை ஏற்றுக் கொண்டால், இப்புராணம் அவரே பாடியது என்று கொள்வதில் தடையிருக்காது. ஆதிசைவருக்கு வணக்கம் என்று தனியே ஒரு பாடல் பாடுகிறார்:

மூண்டபெருந் திருவருளால் அளப்பரிய சிவாகமங்கள்
  முழுது மோர்ந்து
பூண்டபெருந் தொண்டினுடன் தமிழ்த்தெய்வப் பாண்டியனார்
  புகழ்ந்து நின்று

வேண்டவளர்ந் தருள்நெல்லை நாதர்திரு மேனிதனை
வியந்து நாளும்
தீண்டியருச் சனைபுரியும் சிவமறையோர் சரணமலர்
சிந்தை செய்வாம்.

ஆதி சைவருக்கு இவர் வணக்கம் சொல்வதில் நேர்முகமான ஒரு பொருத்தம் உண்டு. வரகுண ராமன், வரதுங்க ராமன், அதிவீர ராமன் ஆகிய பாண்டியர் மூவருக்கும் அகோர சிவம், ஈசான சிவம், சுவாமி தேவர் ஆகிய சிவாசாரியர் குருவாயிருந் தனர் என்று அவர்கள் வரலாற்றில் கூறினோம். எனவே, நிரம்ப அழகியார், பாண்டியர் ஆதரவு பெற்றிருந்தால் அவர்களுக்குக் குருவாயிருந்த சிவாசாரிய மரபை இவரும் சைவராயிருந்தமை பற்றிப் போற்றுதல் இயல்பே. தமிழ்த் தெய்வப் பாண்டியனார் புகழ்ந்தார் என்பதும் கூட, தம் காலப் பாண்டியரைச் சுட்டியது என்று கொள்வதில் இழுக்கில்லை.* மேலும், நூலிறுதி வாழ்த்துச் செய்யுளில், 'நீதி வேந்தன் நிலைபெற்று வாழ்கவே' என்று முடிக் கிறார். நிலைபெற்று வாழ்க என்று வாழ்த்துவதால் அக்காலத்து வேந்தன் ஆட்சி செய்தமை உண்மை என்று தெரிகிறது. தென் காசிப் பாண்டியரன்றி அக்காலத்தில் நெல்லையில் ஆட்சி யுடைய அரசர் வேறெவருமிலர். ஆகவே இக்குறிப்பும் பாண்டி யரைக் குறிப்பதென்று கருதலாம்.❖

பின்னும் சில ஒற்றுமைகளும் குறிப்பிடத்தக்கன. நிரம்ப அழகியார் சேதுபுராணத்தில் சருக்கந்தோறும் இறுதிப் பாடலில் பலசுருதி கூறுகிறார். பிறர் யாரும் இவ்வாறு தவறாது சொல்லும் வழக்கமில்லை. வேணுவனப் புராணமும், இதன்கண் உள்ள ஒன்பது சருக்கங்களில் ஏழின் இறுதியில் பலசுருதி கூறுகிறது. திருப்பரங்கிரிப் புராணத்தில் கற்பக விநாயகர் துதியாகவுள்ள 'வஞ்சகத்தி லொன்றானை' என்ற பாடலைக் காட்டினோம்; அது ஆனை ஆனை என்ற முடிபையுடைய சொற்களை அடுக்கிப் பாடப்பெற்ற பாடல்; இங்கு அதுபோல் மாணிக்கவாசகர் துதி பாடுகிறார்:

---

* திருப்பரங்கிரிப் புராணத்திலும் அழகியார் சிவமறையோர் வணக்கம் சொல்வதும் காணத்தக்கது.

❖ இதனோடு, இவரே பாடிய திருப்பரங்கிரிப் புராணத்தின் இறுதி வாழ்த்துச் செய்யுளும் ஒப்பு நோக்கத்தக்கது

அரித்தானை அடியர்பவம் அழித்தானை
உரித்தானை அடர்ந்த வேளை
எரித்தானைப் புரமெரியச் சிரித்தானை
நரித்தானை எவையும் ஆன
பரித்தானைத் தனியுலகம் பரித்தாளும்
பாண்டியற்குப் பாலித்தானைக்
தரித்தானை மனத்தினராம் மாணிக்க
வாசகர்தன் தலைமேற் கொள்வாம்.'

இச்சிறு புராணத்திலும் சேதுபுராணம் போலப் பல சந்தப் பாடல்களை ஆசிரியர் அமைத்திருக்கிறார். வேய்வன மொன் றுண்டு என்று சொல்ல வந்து, அது திகழ்வது, தருவது, வளர்ப்பது, இருப்பது, அளிப்பது என்று ஐந்து பாடல்கள் பாடியிருப்பது, விரிந்த புராணத்தின் அமைப்பையொட்டியே யாகும். அப்படியே, அகத்தியன் தென்புவி விளங்க வரலுற்றான்; எப்படி? உலோபா முத்திரையும் வந்துடன் முயங்கி வரல் செய்ய, வெண்துகில் நுடங்க மேனியொளி எண்திசை விளங்க, வதனம் பொலிவதற் கொளி தயங்க, முத்தமிழ் மணங்கமழ வீச - என்று தனித்தனிப் பாடல் களில். இது பொதுவாகப் பெருநூல் பாடுபவர் யாரும் மேற் கொள்ளும் பாடல் முறையாயினும், நிரம்ப அழகியாரிடம் சிறப் பாக உள்ளது. குறு முனிநெல்வேலி நாதர் மணக்கோலங் கூறுதல் குளுகமாக 14 பாடல்; பெருமான் கங்காள வேடமாக வருதல் 11 பாடல்; நிருத்தம் 5 பாடல் - என்பனவும் காண்க. நிருத்தத்தைப் பாடும்போது எல்லாப் பாடல்களும் சந்தமாகவே பாடுகிறார்.

பின்னும், அகத்தியன் வரும்போது தலங்களைத் தரிசித்துக் கொண்டு வருகிறான் - விந்தமலை, கவுடேசுரம், கௌதமக்கரை, பருப்பதம், காளத்தி, கச்சி, சோணகிரி, முதுகுன்று, புலியூராகிய தில்லை, காவிரிக்கரை, இடைமருது, குடந்தை, பஞ்சநதி, ஆரூர், வேதவனம், தென்மதுரை, பின் சண்பகவனமாகிய குற்றாலம், மலயகிரி இப்படி சொல்லிவரும்போது, ஆரூர் என்று சொல்ல வில்லை; எங்கள் கமலாலயம் என்று சொல்லுகிறார். கமலால யம் ஆரூரில் பெருஞ்சிறப்புடையது; அங்கு கொஞ்ச நாளேனும் வாழ்ந்தவரே இதை உணர்ந்து பாட முடியும். கமலை ஞானப் பிரகாசர் என்று புகழ்பெற்றிருந்த ஆசாரியரின் சீடரான நிரம்ப அழகியார் கமலாலயத்தை நன்குணர்ந்தவர்; அவரே இவ்வாறு பாடினார் என்று கருதுதல் பொருத்தம்.

*நூலிலுள்ள வாக்கின் எளிமையே இப்புராணம் நிரம்ப அழகிய தேசிகர் வாக்காகவே இருக்கும் என்றெண்ணச் செய் கிறது. இது யூகம்தான்.*

### பதிப்பு

*வேணுவனப் புராணம், காந்திமதியம்மை பிள்ளைத் தமிழ் நெல்லை வருக்கக் கோவை ஆகியவற்றோடு, குறிப்புரையுடன்: மு.ரா. அருணாசலக் கவிராயர்- 1914.*

## அளகைச் சம்பந்த முனிவர்

### வரலாறு

*சம்பந்தர் என்பவர் அளகை என்ற ஊரில் சைவ வைசியர் குலத்தில் பிறந்து உரிய காலத்தில் கல்வியில் வல்லவராகி, குன்றக்குடியை யடுத்த துழாவூர் மடத்தில் தலைவராயிருந்த நிரம்ப அழகிய தேசிகரிடம் சமய தீக்கை முதலியனவும் சந்நியாச மும் பெற்றார். நிரம்ப அழகிய தேசிகர் துதி பின்வருவது:*

உருநிரம்பு பவப்பிணிதீர் கடற்சேது புராணமருந்
துதவி யோவாத்
திருநிரம்பு ஞானமணி மருவிநெடும் சேண்விளங்கித்
தெய்வக் கல்வித்
தருநிரம்பி அளவொடசை வின்றியருள் அருவிதழீஇத்
தயங்கும் எங்கள்
குருநிரம்ப அழகன்எனும் குணக்குன்றைத் துதித்திறைஞ்சிக்
குறித்து வாழ்வாம்.

*இங்கு இவர், அழகியார் சேதுபுராணம் செய்தார் என்றும் குறிப் பிட்டார். அவரே சித்தாந்த சாத்திரங்களான சிவஞான சித்தியார், திருவருட் பயன் என்ற இரண்டுக்கும் உரை எழுதியவர். அவரு டைய குருவாகிய கமலை ஞானப்பிரகாசருடைய ஊர் திருவா ரூர். சம்பந்தர் அவ்வூரடைந்து ஞானப்பிரகாசரிடத்தும் சீடரா யிருந்தார் என்பதை இவர் பாடிய 'இருந்தமிழ்ப் புலவருய்வான்' என்ற குரு வணக்கப் பாடலால் அறியலாம். (இப்பாடல் முன்னே கமலை ஞானப்பிரகாசர் வரலாற்றில், திருவானைக்காப் புரா ணம் என்ற தலைப்பில் காட்டப்பட்டது.) இவர் அங்கேயே சிவ வழிபாடு செய்து வாழ்ந்து வந்த காலத்தில், அங்கிருந்த சைவப் பெருமக்கள் இவரது புலமையையும் பக்தியையும் கண்டு, திரு வாரூர்ப் புராணத்தைத் தமிழில் பாடித் தருமாறு இவரை வேண் டினர். அவ்வாறே இவர் திருவாரூர்ப் புராணம் பாடலானார்.*

*இதற்கு முதனூல் காந்த புராணத்தில் நாகர கண்டம் என்னும் பகுதி; கமலாலய மான்மியம் என்று சொல்லப்பெறும். நூல் அரங்கேற்றம் கூறும் பாடல் காலத்தைத் தெரிவிக்கிறது;*

பார்புகழ் சகாத்தம் ஆயிரத் தைஞ்ஞூற்றுப்
பதினான் காகிய பிங்களப்பே ராண்டிற்
சீர்பரவு பங்குனி யுத்தரத்துத் தேவா
சிரயனெனும் காவணத்தில் தேவர் போற்றும்
கார்பரவி கண்டார் ஆரூர்ப் புராண காதை
நாகர காண்டம் கலைவல்லோர் முன்
ஏர்பரவு பேரளகை வணிகர் கோமான்
இசைவளர்சம் பந்தன் அரங் கேற்றி னானே.

*சகம் 1514 எனவே கி.பி. 1592 ஆகும். பங்குனி உத்தரத்தில் தேவாசிரய மண்டபத்தில் அரங்கேற்றினார் என்று பாடல் சொல்லுகிறது.*

*திருவாரூர்ப் புராணத்துக் காணும் இரு குறிப்புக்கள் சிறிது ஆராய்ச்சிக்கு இடங்கொடுக்கும். ஒன்று 109 ஆம் சருக்கமாகிய கலியுகச் சருக்கம் என்பது. இது 75 பாடல் கொண்டது. சனற் குமாரன் முதலான முனிவர் கலியின் வலி தனக்கஞ்சிப் பிரமன் சொல்லியபடி திருவாரூரில் வந்து பூசித்துத் தவம் புரிந்தார்கள் என்பது இங்கு சொல்லப்படுகிறது. முதல் மூன்று யுகங்களிலும் வாழ்ந்த மக்களின் சிறப்பையும் தருமத்தின் சிறப்பையும் சொல் லிய பிறகு, கலியுகத்தில் மக்களும் இறக்கிறார்கள், தருமங்களும் அழிகின்றன என்று நூல் விரித்துச் சொல்லுகிறது. மக்களுக்கு வயது பல ஆயிரம் என்று இருந்த நிலை மாறி, நூறு வருடமா கக் குறையும். அவர்களும் எப்படி எப்படி இறப்பார்கள்?*

உருவுறுமுன் னிறப்பர், உருத் திரண்டிறப்பர், கண்வாய்
கரமுத லுறுப்பு முற்றிக் கருவினு ளிறப்பர், தோற்றம்
வருபொழு திறப்பர், தோன்றி வந்துட னிறப்பர், வந்தாங்
கருநிலத் தொருநா ளாகிச் சில நாளேய்ந் திறப்பர் யாரும்.

பாலராய் மாய்வர், பைய நடைபயி லாது மாய்வர்,
வாலராய் மாய்வர், காளைப் பருவத்தின் மாய்வர், கூனுங்
கோலராய்க் கையிற் பற்றுங் கோலராய்க் குந்திச் செல்லுங்
காலராய்ப் பிணிய ராகிக் கருத்தறி வழிந்து மாய்வர்.

*பின்னும் கலியின் இயற்கை எப்படியெல்லாம் இருக்கும் என்பதைப் பல பாடல்களில் கூறுகிறார். சிலவற்றை மட்டும் கீழே தருகிறோம்:*

இந்தவெங் கலியுகத் தியற்கையை யிசைப்பதென்னே?
தந்தைதாய் மாற்றங் கேளார், அன்னவர் தாளி றாழார்,
மைந்தர் தாம் மூத்தோர் தம்மை வணங்கிடார் இளையர், வாட்கட்
பைந்தொடி மகளிர் கேள்வர் பணிந்தவ ருரையின் நில்லார்.

தேசிகர்ப் போற்றல் செய்யார், சிவபிரான் செம்பொற்றாள்கள்
பூசனைபுரிதல் செய்யார், கண்டிகை புனைதல் செய்யார்,
ஆசில் நீறணிதல் செய்யார் அஞ்செழுத்தியம்பல் செய்யார்,
ஈசனாலயம் வலம்கொண் டிறைஞ்சுதல் செய்யார் என்றும்.

யாணர் மங்கலஞ் செயாமு னிளஞ் சிறு மகளிர் காம
வேணவா வுற்று மாழ்கி மெலிவர், பன் னிரண்டி யாண்டிற்
பூணிழை மங்கை மாதர் புதல்வரைப் பெறுவர், பொய்தீர்
நாணமே யாதி நான்கினன் கொரீஇ நவையினிற் பார்.

*நீதி குன்றாது வாழ்பவரே துன்பமடைவார்கள் என்றும், வீதி யெல்லாம் கள்ளும் ஊனும் அடகு காய் கனிபோல விற்கும் என்றும் ஆசிரியர் கூறுகிறார்:*

தருமமே பொருளென்றெண்ணிச் சத்தியந் தவறாதோம்பி
விரதமே பயின்று நித்த நியமங்கள் விதியிற் பேணி
அருள்புரிந் துதவி யாற்றி யனைவர்க்கு மிதமே செய்யும்
பெரியவர் தமக்கே துன்பம் பெரிதுவந் தடையு மன்றே.

பூதலமெங்கும் நோயுங் காப்புமே பொருந்திக் கள்ளூண்
வீதிதோ றடகுகாய்தீங் கனியென விற்கு மன்றே.

*(இக்கருத்துக்கள் இன்று இந்த 1971ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம்) தமிழ்நாட்டின் நிலையை நேரே கண்ணால் கண்டு பாடியதுபோல் அமைந்துள்ளது இவர் பாடிய காலம் 1592. 380 ஆண்டுகளுக்கு முன் என்பது நம்பவொண்ணாததாயிருக்கிறது.*

*ஆனால் நாம் கூறவந்த பொருள் இதுவல்ல. சம்பந்தமுனிவர் கலியுகச் சருக்கம் என்று அமைத்ததற்கு, வரகுணராமர் மூலமாவார் என்று தெரிகிறது. அவர் பாடிய இலிங்க புராணத்தில் 13 பாடல்களில் கலியுகத்தில் மனித தருமம் எவ்வாறு மாசடைந்து தலைகீழாக மாறிவிடும் என்று சொல்லிவைத்தார். காலம் சுமார் 1560 இருக்கலாம். அதையே இவர் எடுத்து விரித்துச் சொல்வதால், இவரும் அந்தப் பாண்டியர் சூழலில் பிறந்து வளர்ந்தவர் என்று சொல்லத் தோன்றுகிறது. விரித்தது மட்டுமல்ல, இலிங்க புராணத்தை நன்றாகப் படித்தே இந்நூலில் இவ்வாறு*

அமைத்தார் என்று கருத வேண்டும். பெரும்பான்மையான கருத்துக்கள் இலிங்கபுராணத்தில் காணப்படுகின்றன.

இனி மற்றொரு குறிப்பு. நளச்சருக்கம் என்ற பகுதியில், சூதினால் வந்த வினை காரணமாக நளன் தமயந்தியைக் கானகத்தில் கைவிட்டுப் பிரிந்து சென்று திருவாரூர் எல்லையையடைந்தபோது நற்காலம் வந்த படியால் அங்கு தன் பெயரால் ஒரு சிவலிங்கம் தாபித்து வழிபட்டான் என்பது புராணச் செய்தி இதை மிகவும் சுருக்கி 12 பாடல்கள் சொல்லுகின்ற புராணக்காரர், தன்னை நளன் யாமத்தில் விட்டுப் பிரிந்து சென்றமையுணர்ந்து தமயந்தி வருந்திப் புலம்புகிறாள் என்று நான்கு பாடல் பாடுகிறார். சுருங்கிய கதையில் இவ்வளவு விரிவுக்கு இடமிருக்க முடியாது. ஆனால் இவர் இவ்வாறு பாடுவது, நைடதத்தில் அதிவீர ராமன் இதேநிலையில் ஆறு பாடல் பாடியிருப்பதைக் கருத்தில் வைத்து என்றே சொல்ல வேண்டும். இவர் பாடல்களும் கொச்சகக் கலிப்பா; புராணப் பாடல்கள் நான்கையும் பின்னே காண்க:

புல்வாய் புலியுறவு கூரப் புலிபுரந்த
நெல்வாய் மருத நிடதத் திருநாடா
செல்வாய் வனத்திற் றெரிவையரைக் கைவிட்டே
அல்வா யகல்வதறனோ அரசர்க்கே.

மேவார் கடம்மை விடுக்கின்ற வெங்கானல்
தீவாய் வனத்திற் சிறியேனைக் கைவிட்டே
யோவா வருளும் ஒழிந்தாய் உரவோனே
ஆவா இதுவுந் தகுமோ அரசர்க்கே.

உன்னன்புறு துணையாய் உற்ற தமியேணைத்
தன்னத் தனியே தழல்வாய் வனத்திடையிற்
கன்னங் கரிய் இருளூடு கைவிட்டாய்
இன்னஞ் செயத்தக்க துண்டோ இறையோனே.

பேயுமுறங்கும் பிறங்கிருள் யாமத்திடையே
காயும் விலங்குமிடை கானினிடைக் கைவிட்டாய்
தீய சிறுதமியேன் செய்த குறையாதோ
தாயி லுலகனைத்துங் காத்த தனிவேந்தே.

அதிவீரராமருடைய நைடதத்தைப் படித்த இச் சம்பந்தர் இந்த இடத்தில் தேவையில்லாது இப்படியொரு புலம்பலைச் சேர்த்தாரென்று கருதவேண்டும்.

இவையனைத்தையும் ஒரு தொகுப்பாய் நோக்கும் போது, இச்சம்பந்தர், தென்பாண்டி நாட்டு அளகையில் வாழ்ந்தவர், இப்பாண்டியர் சூழலில் வாழ்ந்திருக்கலாம்; இவர்களுடைய ஆதரவில் காசிக்கலியன் கவிராயர், ஐயம் பெருமாள் கவிராசர், சிதம்பரநாத பூபதி என்போர் வாழ்ந்திருந்தனர் என்பது நன்கு அறியப்பட்ட செய்தி; இவரும் இளமையில் இங்கு வாழ்ந்து இவர்கள் நூலெல்லாம் நன்கு பயின்று, பின்னர் நிரம்ப அழகியர் ஞானப் பிரகாசர் ஆகியோர் தொடர்பு கொண்டவராய் வடக்கு நோக்கிச் சென்று திருவாரூரில் தங்கி அவ்வூருக்குப் பெரியதும் அரியதும் ஆகிய இப்புராணம் பாடினார் என்று கொள்வது பொருந்தும்.

## திருவாரூர்ப் புராணம்

சம்பந்த முனிவர் செய்தது இப்பெரு நூல். இது பாயிர முள்பட 111 சருக்கங்களும் 2929 பாடல்களும் கொண்டது. பாயிரப்பகுதி மிக்க விரிவானது. 35 பாடல் வாதாவி விநாயகர், மாற்றுரைத்த விநாயகர் ஆகிய இரு விநாயகர், சுவாமி வன்மீக நாதர் அம்பிகை அல்லியங்கோதை ஆகியோர் துதி. 'வான்புலவர் நினைந்தன யாவையும் நல்கிச் சிறப்பின் வைகும், வார்புனல்சூழ் வயற் கமலைத் தேவர்கள் சிந்தாமணி' என்று தியாகராசரைத் துதிக்கிறார். இப்பெருமானுடைய தேவியாகக் கமலாம்பிகை யைக் குறிப்பிடுகிறார். இலக்குமி, சரசுவதி, நந்திதேவர், சண்டேசர், காரைக்காலம்மை, சேரமான் ஆகியோருக்கு வணக்கம் சொல் லுகிறார். மெய்கண்ட குரவர் முதற் குரவர் பொற்றாள் என்று சந்தான குரவரையும் தம் குருவான நிரம்ப அழகியரையும் அவர் குருவான கமலை ஞானப்பிரகாசரையும் வணங்குகிறார். ஞானப்பிரகாசர் மழுவாடித் தலபுராணம் செய்தார் என்பதை யும் சொல்கிறார். அவையடக்கம், நூல் செய்த காரணம், நூற் பெயர், வழி, பயன், வாழ்த்து, ஆக்கியோன் பெயர், காலம் முதலி யனவும் கூறுகிறார். பிற்காலப் புராணங்களிலேயே இவ்வளவு விரிவு காணப்படும். பாண்டியர் புராணங்களில் இவை காணப் படவில்லை என்று முன் குறிப்பிட்டோம்.

நாதனார் கம லாலய நாகர காண்டம்
சூத மாமுனி சொற்றுள தொன்முறை வழாது
தீதுதீர்ந் தமரரின் செந்தமிழ்ப் பனுவலிற் செய்தான்
மூது சால்புகழ் அளகைவாழ் சம்பந்த முனிவன்.

*என்பது ஆசிரியர் பெயர்கூறும் பாடல். கலியுகச் சருக்கம் (57) மக்கள் "வலியும் குன்றித் - தரைபடு வங்குபுக்குச் சார்ந்து புள் விலங்கு பாம்பங்கு - இரையெனக் கவரமாழ்கி இன்னுயிரிழப்பர் யாரும்" என்று ஒரு பாடல் கூறுகிறது. இருபதாம் நூற்றாண்டில் விஞ்ஞான அறிவின் முதிர்ச்சியினால் பேரரசுகள் அணுகுண்டும் பிறவும் செய்து மக்களை லட்சக்கணக்கில் அழிக்கத் துணியவும், குண்டுக்குப் பயந்து நிலவறையிலுள்ள 'வங்கு' களில் ஒளிந்து உயிர்வாழவும் நேர்ந்துள்ள நிலையை எண்ணிப் பார்க்கும்போது, புராணகாரர் தீர்க்க திருட்டியோடு பதினாறாம் நூற்றாண்டில் இவ்விதம் சொன்னாரோ என்று வியக்க வேண்டியுள்ளது.*

*புராணத்தில் அமைந்த 111 சருக்கங்களையும் தொகுத்துப் பார்க்கும்போது, அவை பின்வரும் பொருள்கள் பற்றி அமைவன வாகத் தெரிகின்றன. பாயிரப் பகுதி 5 சருக்கம்; மூர்த்தங்கள் அல்லது ஈச்சுரம் 9 சருக்கம்; தீர்த்தம் 26; தலம் 2 (உருத்திர கோடி ஆகிய கழுக்குன்று, கோகன்னம்); பீடம் 2; கோட்டம் 5; லிங்கம் அமைந்தது 28; பேறு பெற்றோர் 28; பிறவகை 6 - விழா, பிரமயாகம், திருமணம், கலியுகத்தியற்கை, பிரதக்கிணமகிமை, புராணம் கேட்டல் என்ற பொருள்களைப் பேசுகின்றன. தீர்த்த மகிமை சிவலிங்கப் பிரதிட்டை ஆகியவை இந்நூலிலுள்ள அளவு அதிகமாக வேறு எந்தப் புராணத்திலும் காணப்படவில்லை.*

*இனி இவ்வாசிரியர் அனேகமாய்ச் சருக்கந்தோறும் தோத்திரப்பாடல் அதிகம் பாடியிருக்கிறார். இவற்றின் தொகை 112; இவற்றைக் கொண்டே ஒரு தனி தோத்திர நூலாக்கலாம் போலும். எடுத்துக்காட்டாக இரு பாடல்களை மட்டும் இங்கு தருகின்றோம்.*

தெய்வப் பொருளே திருவாழ நீழல்
மெய்வைத்த அறம்பகர் வேதியனே
மைவைத் தொளிரும் மணிகந்தரனே
சைவச் சுடரே சரணம் சரணம்.

காலத் தொடுயர் வொப்பு நன்றோடு தீதின்ப
    துன்பங்கள் கருவி தொழில்பேர்
மூலத்தொ டிடையந்த மிகல்பற்று வடிவாகி
    முழுதுங் கடந்த முதலே
வேலைத் தனைப் பொங்கி விசைகொண்ட விட முண்டு
    விண்ணாடர் மகளிர்க் கெலாம்
தாலித் தனிப்பிச்சை தந்தாய் விரிஞ்சன்
    தலைப்பிச்சை கொண்ட தலைவா.

*இது மகாலக்ஷ்மி செய்த துதிகளில் ஒன்று. பொதுவாக இவர் துதிப்பாடல்களில் போற்றி என்ற முடிபே மிகவும் அதிகம். அம்பிகை தோத்திரமாக இந்நூலில் 10 பாடல் வருவது, மிகவும் அருமையான செய்தி. தன்மநிட்டை என்ற பெண் உமாதேவி தன்முன் பிரத்தியட்சமானது கண்டு பத்துப் பாடல்களால் துதிக்கிறாள்:*

நந்தா விளக்கொளியே ஞாலத் துயிரனைத்தும்
தந்தா ரருள் புரியும் தாயென் றினிதெடுத்து
முந்தா ரணமுழுதும் ஏத்தும் முழுமுதலே
சிந்தா மணியே தெவிட்டாத தீங்கரும்பே.

கோவாத தெய்வக் குலமா மணிமுத்தே
நாவா லெடுத்தேத்தி நைந்துருகிப் போற்றுகின்ற
பாவாணர் யாரும் படைத்த செழுநிதியே
தூவாத வீட்டின்ப மாகுந் தனிப்பொருளே.

*நகரச் சிறப்பு என்ற சருக்கம் 155 பாடலுடையது: கம்பராமா யணமே 74 பாடல் சொல்லுகிறது என்பதை நினைவு கூர்க. நாட்டுச் சிறப்பில் காவேரியைச் சிறப்பிக்கும் பாடல்கள் 10. இவர் நூலில் எங்கும் கம்பராமாயணம் குறள் ஆகிய நூல்களின் சாயல் தெரியும்:*

ஐயமில் நூல்வரம்பின் அமையலங் கார மேய்ந்து
துய்யமா மணிபொன் னாதி மங்கலப் பொருள்துதைந்து
மையில்சீர் வனப்புமல்கி வண்தொடை மலிந்து மேலோர்
செய்யுள்போற் கிடந்த வீதிச் சிறப்பினைச் சிறிதுசொல்வாம்.

*என்ற பாடல் கம்பரின் கோதாவரி வருணனையை நினைவூட்டும். வேளாளர் வீதி, நீரால் வற்றுறா வைகை போன்றது; சொற்றமிழ் நலந்தெரிக்கும்:*

வேதஓதை, நூல் ஆகம ஓதை, மெய்ப்புராண
ஓதை, மூவர் பாவோதை, நாம் சேரமா னுரைத்த
ஆதியாந் திருவுலா முதலருந் தமிழோதை,
தீது தீர்திரு வாசகந் திருந்திசை யோதை.

*கொண்டது. தவமகிமைச் சருக்கத்தில் பாடல்தோறும் தலத்தின் பல பெயர்களையும் விளக்குகிறார். கோகருணச் சருக்கத்தில் சிவ பூசையைச் சிறப்பித்துக் கூறுகிறார்:*

ஈசனைப்பூசை செய்யில் இறந்திடாப் பவமொன்றில்லை,
ஈசனைப்பூசை செய்யில் எய்திடாப் பதமொன்றில்லை,
ஈசனைப்பூசை செய்யில் எய்திடாச் சித்தியில்லை,
ஈசனைப்பூசை செய்யார் எய்திடா நிரயமில்லை.

*இராமச் சருக்கத்தில் இராமன் பூசித்துத் துதித்தல் சொல்லப் படுகிறது. 8 பாடல்களில் முதல் நான்கு பாடல்கள் சிவபிரானது பராக்கிரமச் செயல்களும், பிறவற்றில் அருட் செயல்களும் கூறப் படும். காப்பியத் தன்மை பொருந்தப் போர் வருணனை முதலா யின விரித்துச் சொல்லப்படும். கயிலை வருணனை சிவசின்னங் களின் சிறப்பு என்பன சிறப்புடைய பிற பகுதிகள். எளிய சந்தப் பாடல்களும், வஞ்சிவிருத்தப் பாடல்களும் பல. இங்கு பூசித்துப் பேறு பெற்றோர், இலிங்கம் தீர்த்தம் தாபித்து வழிபட்டோர் பட்டியல் மிக நீளும். சேக்கிழார் கூறும் திரு நகரச் சிறப்பு திரு வாரூர்க்கே என்றால், இதற்கு வேறு பெருமை கூறுதல் மிகை.*

## காலம்

*சம்பந்த முனிவர் நிரம்ப அழகிய தேசிகர் மாணாக்கர் என்றும், அரங்கேற்றிய காலம் கி.பி. 1592 என்றும் முன்னமே குறிப்பிட்டோம். வரகுண ராமர் அதிவீர ராமர் பற்றி இவர் தொடர்பை விளக்கியதாலும், இக்காலம் உறுதி பெறுகிறது: அதாவது 16ஆம் நூற்றாண்டின் இறுதி.*

## பதிப்பு

*வடக்குப்பட்டு த. சுப்பிரமணியப் பிள்ளை திருத்தருப் பூண்டியில் முனிசிபாக இருந்தபோது அவர் வேண்டுகோளின் படி திருவாரூர் சுவாமிநாத தேசிகர் பார்வையிட்டு வடபாதி மங்கலம் சோமசுந்தர முதலியாரால் சென்னை கலா ரத்நாகரம் அச்சகத்தில் அச்சிடப்பட்டது (ஜய பங்குனி, 1895). சீர் பிரிக்காத போதிலும் கூட, மிகவும் அழகான அச்சு.*

*திருவாரூர்ப் புராணத்தில் பின்வரும் நூல்கள் அச்சிட்டு வெளிப்படுத்தப்படும் என்று ஒரு விளம்பரம் காணப்படுகிறது; முந்நூற்றறுபத்துநான்கு லீலை. கமலாலய மான்மியம், தேவா சிரய மான்மியம், கந்தபுராணமான்மியம், சமற்கார புரமான் மியம், ஆடகேச்சுர மான்மியம், க்ஷேத்திர வரலாறு, தேவயாக புரமான்மியம், கலி செல்லா நரகமான்மியம், முசுகுந்தபுரமான் மியம், தியாகராசமான்மியம், இராமகயா மான்மியம், புலிவல மான்மியம், ஸ்ரீபுரமான்மியம், அஜபா ரகசியம் என்பன.*

இவற்றுள் லீலை என்பதில் சிவலீலைகள் மட்டும் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளையால் செய்யுளாக மொழி பெயர்க்கப்பட்டு ஐயரவர்களால் தியாகராசர் லீலை என்ற பெயரில் வெளியிடப்பட்டுள்ளது. பின்னர் உரை நடையாக மூன்று பாகங்கள் வெளிவந்துள்ளன. இந்நூல்கள் யாவும் வட மொழி நூல்களென்றே கருதவேண்டியிருக்கிறது. புலிவலம் என்பது திருவாரூருக்குத் தெற்கே சில மைல் தூரத்திலுள்ள ஒரு சிற்றூர், சிறு சிவாலயமுடையது.

## திருவொற்றியூர் ஞானப்பிரகாசர்

திருஒற்றியூர்ப்புராணம் பாடியவர் திருவொற்றியூர் ஞானப் பிரகாசர் என்ற ஆசிரியர்; இவர் சித்தியார் பரபக்கவுரை சங்கற்ப நிராகரணவுரை ஆகியன செய்தார்; இவருடைய வரலாறு, சைவ சாத்திர உரைகள் என்ற அத்தியாயத்து இவ்வுரைகளை ஆராய்ந்த இடத்துச் சொல்லப்பட்டது.* புராணம் இவர் பாடியதென்பதை 'ஒற்றிமாநகர் நற்றவர் தலைவன், பாடியாடும் படம்பக்க நாதனை ஓதிய, போதத் துரைபுராணந் தன்னைச் செந்தமிழ்ப் படுத்தித் திருநாமத்தால் தந்துரைத்த ஆசிரியன், நற்றவர் அடி பணி ஞானப்பிரகாசன்' என்ற பரபக்கவுரை அவை யடக்கப் பாடலால்❖ அறியலாம். இப்புராணத்தை இவர் வட மொழிப் பதுமம் பிரமாண்டம் ஆகிய புராணங்களிலிருந்து, தமது ஆரூர்க் குருநாதரிடம் கற்று அவர் சொற்படி தமிழால் சொல்வதாகச் சொல்கிறார்:

> பேதமிலாப் பதுமத்தும் பிரமாண்டம் தன்னிலுமே
> ஆதிபுரிப் பெருமைமிக அறையுமதை நுமக்கியான்
> தீதகல உரைத்திடுவோர் என்றிசைத்த மொழிதமிழால்
> ஓதென்றான் தென்னாரூர் உவந்தகுரு நாதன்தான்.

(ஆதிபுரி - திருஒற்றியூர்). தமது குருநாதரை இங்கு மட்டுமின்றிக் குருவணக்கத்திலும், நூலிறுதி வாழ்த்துச் செய்யுளிலும் குறிப் பிடுகிறார்:

> அகழ்ந்து தீமையை எங்களை யாண்டு
> மகிழ்ந்து தென்கம லாலய மன்னித்
> திகழ்ந்த சைவ சிகாமணி பாதம்
> புகழ்ந்து சென்னியின் மேற் புனைகின்றாம்.

---

* 16ஆம் நூற்றாண்டு வரலாறு இரண்டாம் பாகம் பார்க்க.

❖ முழுப்பாடலையும் உரிய அத்தியாயத்தில் காண்க.

ஆரூரில் எனையாண்ட சைவசிகாமணி வாழ்க,
அடியார் வாழ்க,
பேரூராம் ஒற்றியூர் தனிலிருக்கும் அனைவோரும்
பெரிதும் வாழ்க,
சீரூர் தீண் டற்கரியார் திருப்பணிகள் மேன்மேலும்
செழித்து வாழ்க,
தேரூரிவ் வூர்க்கேற்ற பணிவிடைகள் செய்வோரும்
சிறப்பின் வாழ்க.

ஆரூர்க் குருநாதன், தென்கமலாலயச் சைவ சிகாமணி, ஆரூர்ச் சைவசிகாமணி என்பவர் கமலை ஞானப்பிரகாசர் எனக் கருதப் படுகின்றார். கமலை ஞானப்பிரகாசர் காலம் 16ஆம் நூற்றாண் டின் இடைப்பகுதி எனவே, இவர் காலம் இதே நூற்றாண்டின் பிற்பகுதி என்று இவர் உரைகளை ஆராய்ந்த இடத்துச் சொல் லப்பட்டது.

இப்புராணம், பாயிரமுட்பட 116 சருக்கங்களும் 599 விருத் தங்களும் உடையது. பாயிரப் பகுதியில், தலத்து விநாயகர், படம்பக்க நாதர், நடேசர், தியாகர் நால்வருக்கும் பிறருக்கும் வணக்கம் கூறி, அவையடக்கம் புராண வரலாறு கூறி, இரண்டு பாடல்களால் பதிகம் உரைக்கிறார். தலச்சருக்கம் 80 பாடல்; ‘எந்தையார் ஒற்றியூரின் இரவென்பதில்லை யார்க்கும்’ என்ற வரி, கண்ணப்பர் புராணத்துள் ‘எந்தையார் திருக்காளத்தி மலையினில் இரவொன்றில்லை’ என்ற சேக்கிழார் வாக்கை நினைவூட்டுகிறது. இலிங்கோற்பத்திச் சருக்கத்தில் 8 பாடல் பிரமன் துதி; பிரளயத்தை ஒற்றிய காரணத்தால் ஊர் ஒற்றியூர். சித்திரப் பலகை ஆதாரமானதால் சுவாமி பலக (பலகை ) நாதர். நந்தி, பிரமன், விட்டுணு, உரோமசர் ஆகிய நால்வரும் காணப் பெருமான் நடித்தருளிய நடனத்தை அடுத்த சருக்கம் கூறும். உமைகேள்விச் சருக்கம், உயிர்களுக்கு முத்தி தரத்தக்க தலம் யாதென்று உமை கேட்க, ஐயன் 68 தலங்களுள்ளும்* ஒற்றியூர் நினைக்க முத்தி தருவது, இதுவே சிறப்புடையது என்று சொல் கிறார். பலவகை விரதங்கள் சொல்லப்படுகின்றன. இங்கு வேதங்கள் வந்து பூசித்துச் சுத்தியடைந்தன - இது வேத சுத்திச் சருக்கம். பாணினி இங்கு பூசித்து வியாகரணம் செய்யத்தக்க பெருமையடைந்தார். வால்மீகி நித்தியத்துவம் பெற்றார். இங்கு 34 தலங்கள் சொல்லப்படுகின்றன. பின் வாசுகி முத்தி பெற்றது,

* காமிகாகமமும் 68 தலங்கள் என்றே சொல்லுகிறது.

ஆதிசேடனும் வழிபட்டு வரம் பெற்றது, கற்பகத் தருக்கள் ஐந்தும் இங்கு வந்து மகிழ மரமாயிருப்பது, அகத்தியனுக்குத் திருமணக் கோலம் காட்டியது, தொண்டைமான் இங்கு வந்து திருப்பணி செய்தது, சீவலன் என்னும் அரசன் இராசசூய யாகம் செய்தது ஆகியவை சொல்லப்படுகின்றன. பின்னர் மாந்தாதா தீர்த்தத்தில் நீராடி இளமை பெற்றது, இரண்டு பிராமணர் பாடித் தியாகம் பெற்றது ஆகிய வரலாறுகள் சொல்லப்படுகின்றன; கடைசி வரலாற்றில் ஏலேல சிங்கர் என்ற ஒரு செட்டியார் இரத்தினத்தைத் தியாகமாக வழங்குகிறார். இப்புராணத் தினுடைய நடையும் பொருளும் சாதாரணம் என்றே கருதத் தக்கன. எடுத்துக் காட்டாக ஒரு பாடல்:

> கண்ணுறு தத்துவங்கள் கடந்த அன்புருவாய் போற்றி
> எண்ணுறு வேள்விக்கெல்லாம் இறையுமா யிருந்தாய் போற்றி
> உண்ணிறை உயிர்க்கெல்லாம் உயிருமா யுறைவாய் போற்றி
> நண்ணியே போற்றித் தொண்டர் இதயத்தில் நடிப்பாய் போற்றி.

## பதிப்பு

இந்நூலின் வரலாறு விளங்காமையால், 'தருமபுர ஆதீனத் தம்பிரான் சுவாமி ஒருவர் செய்தருளிய மூலமும் காஞ்சிபுரம் சபாபதி முதலியார் இயற்றிய பொழிப்புரையும், புரசை அஷ்டாவதானம் சபாபதி முதலியார் பார்வையிட்டு உபாத்தி யாயர் கிருஷ்ணப்பிள்ளையால் ஏஷியாடிக் அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. விபவ வருடம் மாசி மாதம் 1869' என்று முகப்பேடு கூறும். நூல் செய்தவர் கமலை ஞானப்பிரகாசரின் மாணாக்கர்; அச்சிட்ட காலத்தில் பரம்பரை விளக்கமின்மை யால், எல்லோருமே தருமபுர ஆதினத்தின் சீடர் எனக் கருதி விட்டார்கள். புராணம் அச்சிட்ட காலத்து ஆசிரியர் பெயர் தெரிய வில்லை. புராணம் பாடிய காலத்தில் ஆதினம் உதிக்கவில்லை.

இப்புராணத்தை உரை நடையாக எழுதி (வாசகமாக மொழிபெயர்த்து) ரெ சின்னப்பாவு முதலியாரென்பவர் 1881இல் அச்சிட்டார். சருக்கங்களின் இறுதியில் சங்கிலி நாச்சியார் இங்கு அவதாரம் செய்து சுந்தரரைத் திருமணம் செய்து முத்தி பெற்ற வரலாறும் பட்டினத்தடிகள் திருவருள் பெற்ற வரலாறும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

ஞானப்பிரகாசர் செய்த திரு ஒற்றியூர்ப் புராணம் அல்லாது மற்றொரு புராணம் திருவான்மியூர் நூல் நிலையத்தில் உள்ளது. இது காலத்தால் பிற்பட்டதென்று தெரிகிறது.

# ஆனந்தக் கூத்தர்

## வரலாறு

திருக்காளத்திப் புராண நூலாசிரியரான ஆனந்தக் கூத்தர் என்பவர் பாண்டி நாட்டில் பொருநை நதிக்கரையிலுள்ள வீரவ நல்லூர் என்ற ஊரில் பிறந்தவர். நல்ல தமிழாசிரியரிடம் எழுத்து, சொல், பொருள், கவிதை முதலியன கற்றார். சத்திய ஞானி என்பவர் இவருடைய ஞானாசிரியர். அவர் கூத்தருக்குச் சிவ பூசை எழுந்தருளச் செய்வித்தவர்:

ஈசனைநீ பூசனைசெய் யென் றுமையோ டினிதளித்து
மாசிலா அருள்பொழிந்து வளர்ஞானசிகா மணியைப்
பாசமுதன் மூன்றுணர்த்திப் பிறப்பொழித்த பரஞான
தேசிகனாஞ் சத்தியஞா னியைப்பணிந்து சிந்தைசெய்வாம்.

இச்சத்திய ஞானி என்பவரே பின்னால் கமலை ஞானப்பிரகாசர் என்ற பெயருடையவராகித் திருவாரூரில் வாழ்ந்த ஆசாரியர்; அவருடைய மாணாக்கர் அனேகர். அவருடைய வரலாறு தனியே சொல்லப்பட்டுள்ளது.*

ஆனந்தக் கூத்தர் தம்மூரிலிருந்து வந்து திருவாரூரில் சத்திய ஞானியிடம் பூசையும் ஞானோபதேசமும் பெற்ற பின் தல யாத்திரை செய்து கொண்டு காளத்தியை யடைந்து அங்கு பல நாள் தங்கியிருந்தார். அப்போது அங்கிருந்த பெரியோர் இத் தல புராணத்தைத் தமிழ்ச் செய்யுளாகச் சொல்க என்று அன்போடு சொல்லவும், இவர் அச்சொல்லை மறுக்காது நூல் செய்தார்:

பொன் கொழிக்கும் வெண்தரங்கப் பொன்முகலி சூழ்போந்த
தென்கயிலை மால்வரையாய்த் திகழ்திருக்கா ளத்திநகர்
நன் கதையை நூன்முறையே தென்மொழியில் நடாத்துகென
அன்பொடு சொற்றனர் என்னைச் சந்நிதிக்கண் அமர் பெரியோர்.

இந்த நூலுக்கு மூலம் காந்த புராணத்திலும் சூதசங்கிதையிலும் வாசிட்டலைங்கத்திலும் உள்ளதாகச் சொல்கிறார். அவை யடக்கத்தில் எச்சில் என்ற சொல்லை நயமாகப் பயன்படுத்தி ஒரு பாடல் செய்திருக்கிறார்:

---

* கமலை ஞானப்பிரகாசர் வரலாறு 16ஆம் நூற்றாண்டு தமிழ் இலக்கிய வரலாறு இரண்டாம் பாகத்தில் விளங்கக் காணலாம்.

நானினையுஞ் சொன்முழுதும் நாவாணர் சொல்லாகும்
யானினியிங் கென்செய்கேன் எச்சிலாய்ப் போனவெலாம்:
ஆனதால் எச்சிலுமிவ் வண்ணலார்க் கமிர் தன்றோ?
கானவன்தன் எச்சிலையுங் கனியமிர் தாக் கொளலாலே.

என்று தம் நூல் கண்ணப்பருடைய எச்சிற்போலாகும் என்று கூறுமுகமாக, இறைவனுக்கு உகந்தது என்றும் தெரிவிக்கிறார்.

இவர் செய்யுளின் சிறப்பையறிந்த பெரியோர் இவரைப் பரிமள கவிராசன் என்று புகழ்ந்தார்கள். பின்னர் இவர் அங்கிருந்து காசியையடைந்து, காசியில் இறந்தால் முத்தி என்ற சைவ சமய நம்பிக்கையைக் கருத்தில் கொண்டு அங்கேயே வழிபட்டிருந்து முத்தியடைந்தார். சிறப்புப் பாயிரம் இச்செய்திகளைத் தெரிவிக்கிறது:

பொருனை நதி உவட்டெறியும் தமிழ்நாட்டில் அளகைநகர்
பொருவும் வீரைக்
குரிசில்பரி மள கவிரா சன் தமிழ்தேர் ஆனந்தக்
கூத்தன் விண்ணோர்
பரவுமியற் காசிதனில் வாசமாய் அகிலேசன்
பாதம் பெற்றோன்
சுருதிபுகழ் காளத்திப் புராணத்தைச் செந்தமிழால்
சொன்னான் அன்றே.

அவையடக்கத்துள், வேதமுனி, சூதமுனி, மூவர், வாதவூர் மாணிக்கவாசகனார், நக்கீரராகிய சான்றோர் புகழ்ந்த தலம் என்றார். மாணிக்கவாசகர் காளத்தியைப் பெயர் சுட்டவில்லை; ‘கண்ணப்பனொப்பதோரன்பு’ என்றமையால் காளத்தியைச் சுட்டினார் என்று கொள்ளலாம்.

### காலம்

இவர் கமலை ஞானப்பிரகாசரின் (சத்திய ஞானி) சீடர் என்று முன்னமே சொல்லப்பட்டது. ஞானப்பிரகாசர் காலம் 16ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி. எனவே இவர் காலமும் அதே காலமும் சற்றுப் பின்னரும் ஆகலாம்.

## திருக்காளத்திப் புராணம்

திருக்காளத்தி என்ற சிறப்புப் பொருந்திய பாடல் பெற்ற தலத்திற்கு இரண்டு பழைய புராணங்கள் உள்ளன. ஒன்று வீரை ஆனந்தக் கூத்தர் செய்த திருக்காளத்திப் புராணம். மற்றது

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமியும் அவர் தம்பியர் இருவரும் சேர்ந்து செய்த சீகாளத்திப் புராணம், 17ஆம் நூற்றாண்டு. நாம் இங்கு கருதுவது முதலாம் நூலாகிய திருக்காளத்திப் புராணமே.

**நூல்**

இது மிகவும் விரிவான புராணம். பாயிரமும் 33 அத்தியாயங்களும் கொண்டது. வடமொழிப் புராணங்களில் காளத்தியின் புகழைச் சொல்லாத நூல் இல்லை. இங்கு சுவாமி காளத்தி நாதர், அம்பிகை ஞானப் பூங்கோதை (இப்பெயர் அப்பர் திருத்தாண்டகத்தில் 'ஞானப் பூங்கோதையோர் பாகத்தான் காண்' என்று பயில்வது). அகண்ட வில்வம், கல்லால் என்ற இரு தல விருட்சங்கள் உள்ளன. ஊர் அருகே பொன்முகரியாறு ஓடுகிறது. இந்தத் தமிழ்ப் புராணமானது வடமொழியில் கண்ட மூன்று நூல்களில் உள்ள 33 அத்தியாயங்களையும் மொழி பெயர்ப்பது என்று நூல் சொல்லும்.

நூலின் பாயிரப் பகுதி, அவையடக்கம் வரலாறு உள்பட 33 பாடல். வழக்கமாய்ச் சொல்லுகின்ற வணக்கப் பாடல்கள் உள்ளன. தேவாரம் பாடிய மூவருக்கு ஒரு பாடலும் வாதவூரடிகளுக்குத் தனி ஒரு பாடலும் அமைத்திருக்கிறார். தமது குருவாகிய சத்திய ஞானியையும் திருப்பணி செய்த யாதவ வேந்தனையும் தமக்குத் தமிழ் உணர்த்திய ஆசிரியரையும் வடநூலை மொழி பெயர்த்துணர்த்திய சங்கர நாராயணன் என்ற வீரைவாழ் புராணிகரையும் வாழ்த்துகிறார். வழக்கம் போல் பதிகம் என்ற பகுதியில் நூலின் பகுதிகள் முறையாகச் சொல்லப்பெறுகின்றன.

இரண்டாம் அத்தியாயமாகிய பாரத்துவாச தரிசனம் என்பதில் ஐந்திணை வளங்களையும் விரிக்கிறார். நகரையும் தனியே வருணித்திருப்பதைப் பார்க்கும்போது இப்பகுதிகளை நாட்டுப்படலம் நகரப்படலம் என்று அமைத்தார் எனத் தோன்றுகிறது. காளன் அத்திமுத்தியடைந்த அத்தியாயத்தில் அவர்கள் துதிப்பதாக சயசய என்று முடியும் 16 பாடல் அமைத்திருக்கிறார்:

> உயர்வுறு முழுதுல குடையாய் சயசய,
> மயிலியன் மடமொழி மதிநுத லுமையவள்
> கயல்விழி மலைமகள் கணவா சயசய,
> தயவுடை யடியவர் தாயே சயசய.

நீயே வினைமுதல், நீயே கரணமும்,
நீயே காரணம், நீயே காரியம்,
நீயே தருபவன், நீயே சான்றொரு
நீயே இவையினுள் நீங்கினை, சயசய.

*சிவமான்மியம் என்ற அத்தியாயத்தில் சமய தத்துவங்களையும் சம்பிரதாயக் கருத்துக்களையும் விளக்குகிறார். ஒரு பாடலில் (27) பவாதி எட்டு நாமங்களை அட்டமூர்த்தங்களுக்குப் பொருத்திச் சொல்லுகிறார்:*

உன்னரும் பவனேசருவனே ஒப்பில்
　　உருத்திரன் உக்கிரன் வீமன்
மன்னிய சிறப்பிற் பசுபதி ஈசன்
　　மாதேவன் எனும் பெயர்முறையே
துன்னுமைம் பூதம் பரிதி வெண்திங்கள்
　　சுடரிய மான எண்வடிவா
மன்னினர் இதனை மதித்தருச்சிக்க
　　வல்லவன் மற்றவன் தானே.

*சில அத்தியாயங்களில் பஞ்சாக்கிர மகிமை, தான மகிமை, திருநீற்றின் மகிமை, உருத்திராக்க மகிமை, பிரணவ மகிமை ஆகியவை கூறப்படுகின்றன. சில அத்தியாயங்கள் தல விசேடம் தீர்த்த விசேடம் முதலியன கூறும். பின்னும் சில, வருணாசிரம தருமங்கள் ஒழுக்கம் என்பன கூறும். இரண்டு அத்தியாயங்களில் தீவுகளின் இயல்பு கூறி உலகின் தோற்றம் கூறுகிறார். யுக தருமம் கூறியவிடத்து கலியுக தருமத்தைப் பிற ஆசிரியர்கள் போலவே தாமும் பழித்துச் சொல்லுகிறார். வருணங்கள் மேல் கீழ் என்ற நிலை மாறும், சிலர் தெய்வத்தை விற்றிடுவர் என்றெல்லாம் கூறிச் செல்கிறார். 13ஆம் அத்தியாயத்தில், அம்மை கேட்கச் சிவபெருமான் பொதுவொழுக்கங் கூறுகிறார். இதனுள் 32 பாடல்கள், வாழ்க்கைக்குரிய நல்லொழுக்கங்களைக் கூறுவன. தனியே ஓர் நல்லாசார நூல்போல் அமைதற்குரியன.*

ஓதனத்துக் குரிய தொருபொருள்
யாதுண் டன்னதை இத்துணை நாளைக்கும்
போதும் ஈதென் றுவந்து பொறுத்துத்
தீதில் தானியம் ஓம்புக சீர்பெற.

*என்று பாடியிருப்பது, இவர் சிறந்த வேளாள வாழ்க்கையுடையவர் என்பதைப் புலப்படுத்துகிறது.*

க்ஷேத்திர மகிமையுரைத்தது என்ற இடத்தில், பன்னிரு மாதங்களிலும், பொன்முகரியில் படிந்து சிறப்பாய்க் காளத்தி நாதரை வழிபடுவதற்குரிய நாள்களைக் கூறுகிறார்: சித்திரைச் சித்திரை, வைகாசி விசாகம், ஆனி மூலம், ஆடி உத்திரம், ஆவணி ஓணம், புரட்டை (புரட்டாசி), ஐப்பசி அச்சுவதி, கார்த்திகைக் கார்த்திகை, மார்கழித் திருவாதிரை, தைப்பூசம், மாசி மகம், பங்குனி உத்திரம்: இவற்றில் சில வழக்கில் இல்லாதன.

ஞானயோகம் என்ற அத்தியாயத்தில் ஆசனம் முதலான ஆறும் யோகத்தின் அம்சம் என்று அவற்றை விரிவாக விரிக்கிறார். தலத்துக்குரிய வரலாற்றுக் கதைகளும் பல உள்ளன. நல்வினை தீவினை இரண்டும் தத்தம் பயனைத்தரும் ஓர் அத்தியாயத்தில், யோகத்தையும் ஞானத்தையும் விரித்துச் சொல்லுகிறார். ஓர் அத்தியாயத்தில் சிறப்புடைய பல தலங்களையும் குறிப்பிடுகிறார். கயிலை, காசி, தில்லை, ஆரூர், காஞ்சி, பருப்பதம், கழுமலம், வெண்காடு, இடைமருது, குடந்தை, ஐயாறு, சேது, சோமநாதம், கேதாரம், வீமேசம், பழமலை, காளத்தி என்ற தலச் சிறப்புக்கள் சொல்லப்படுகின்றன. வழக்கம்போல் வாழ்த்தோடு நூல்முடிகிறது. இது காறும் பார்த்த புராணத்தில் கண்ணப்பர் வரலாறு இல்லை. பின்னால் கண்ணப்பர் சிவ கோசாரியர் முத்தியடைந்தார் என்ற தலைப்போடு 88 பாடல்கள் ஐயர் அவர்களால் அனுபந்தமாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளன. இது பற்றி அவர்கள் கூறுவது காண்க. "இந்த அத்தியாயம், கிடைத்த கையெழுத்துப் பிரதிகளுள் ஒரே பிரதியில் மட்டும் இருந்தமையாலும், இந்த நூலின் முதனூலாகிய வடமொழிப் புராணத்தில் இந்தச் சரித்திரம் காணப்படாமையாலும், இந்த அத்தியாயச் செய்யுள் நடை இந்நூலாசிரியருடைய செய்யுள் நடையைச் சிறிதும் ஒவ்வாமை யாலும், பத்திமானாகிய யாரோ ஒருவர் இடையே இயற்றிச் சேர்த்திருக்கலாம் என்று எண்ணுதற்கிடமாக இருந்தமையாலும், இது தனியே பதிப்பிக்கும்படி நேர்ந்தது."

இதுகாறும் கூறியவற்றால், திருக்காளத்திப் புராணம் சிறந்த சமயக் கருத்துக்கள் பொதிந்த விரிவான புராணம், சிவ தருமங் களும் சாத்திரப் பொருளும் கூறுவதற்கென்றே எழுந்த புராணம் என்பதும், பண்டைய மரபையொட்டிச் சிறப்பாகக் காவிய அமைதிகள் பொருந்த ஆசிரியர் இதைப் பாடியிருக்கிறார் என்ப தும் நன்கு விளங்கும். இவ்வாறு புது அத்தியாயம் ஐந்தாவதாகச் சேர்த்தற்குப் பொருந்த, முன் இரு அத்தியாயங்களை ஒன்றாகச்

சேர்த்தும் இடையில் சில பாடல்களின் சொற்களை மாற்றியும் ஏடுகள் காணப்படுகின்றன என்பது ஐயர் அவர்கள் குறிப்பு.

### பதிப்பு

ஐயரவர்கள் பதிப்பு 1912. மிகவும் அழகாகப் பதிப்பிக்கப் பட்ட பெருநூல். இதனுள் திருக்காளத்திநாதர் கட்டளைக் கலிப்பாவும் பதிகமும், தலம் பற்றிய பல்வேறு நூற்பாடல்களும் விரிவாய்ச் சேர்க்கப்பட்டுள்ளன.

## ஞானக்கூத்தர் - திருவையாற்றுப் புராணம்

திருவையாற்றுக்குரிய புராணங்கள் இரண்டில் இது அளவாற் சிறிய புராணம்.

### ஆசிரியர்

இதன் ஆசிரியர் ஞானக் கூத்தர் என்பதும் அவர் நிரம்ப அழகிய தேசிகரின் மாணாக்கரென்பதும், நூலிறுதியில் காணப் படும் சிறப்புப் பாயிரப் பாடலால் அறியலாகும்.

> திருநி ரம்பிய அழகன் தன் சேவடி
> மருவுசீர் ஞானக் கூத்தன் வழுத்திய
> கருணை ஐயன்ஐ யாறன் தன் காவியப்
> பெருமை கூறுவர் பெற்றனர் முத்தியே.

இதனுள் ஞானக்கூத்தர் நிரம்ப அழகிய தேசிகர் மாணாக்கர் என்பதொன்றே தெரிவது; இவரைக் குறித்த வேறு எவ்வரலாறும் புலப்பட்டிலது. புராணத்தை ஆராயும்போது இவர் சிவ பக்தி மிக்கவர் என்பதும், தமிழில் சிறந்த புலமை பெற்றவர் என்பதும், சிவதலங்களிடத்தும் சிவபுண்ணியக் கதைகளிடத்தும் ஈடுபாடு மிக்கவர் என்பதும் நன்கு புலப்படுகின்றன. இவர் ஆசாரிய பரம் பரையால் சைவ வேளாள மரபினர்; சமயாசாரியார் நால்வருள் வேளாளரான திருநாவுக்கரசு தோத்திரத்தில் வேளாண்மைத் தொழிலை ஏற்றம் மிக்கு நயம்படக் கூறுதல் போற்றத்தக்கது.

> செஞ்சடையார் புகழ்விதைத்துத் திருஞான நீர்தேக்கி
> அஞ்சுகளை யறுத்துடனே சமணர்களை வேரறுத்துப்
> பஞ்ச நதிக் கயிலையினிற் பயிர்விளைத்துப் புகலூரில்
> தஞ்ச முதல் கண்டபிரான் சரணகமலம் போற்றி.

விதைத்து, நீர் தேக்கி, களையறுத்து (சமணர்களை வேரறுத்து), பஞ்சநதிப் பயிர்விளைத்து, முதல் கண்டபிரான் என்ற தொடர்

களை நோக்குக. மாணிக்க வாசகரைக் கூறும்போது, 'வெருவாத ஆனந்தம் விளைநிலத்தைக் கைக்கொண்ட திருவாதவூராளி' என்று கூறுவதையும் காண்க. இவருடைய வாக்கில் மிகவும் சிறப்பானது, சிலாத முனிவர் சிவபெருமானிடத்தில் வேண்டும் வரமாகவுள்ள நான்கு பாடல்கள்:

'பயமுற அடியேனுக்குப் பதினாறு யாண்டு தானே
நியமமென் றன்னைஐயர் நின்றழுதார்கள் ஐயா;
வயமலி நித்த காயம் வரம்பதி னாறுஈ' என்றான்;
அயன் அரி காணா அண்ணல் 'அவ்வரம் யாவை?' என்ன.

மறைகள் நிந்தனை சைவநிந் தனைபொறா மனமும்,
தறுக ணைம்புல னேதனக் கேவல்செய் சதிரும்,
பிறவி தீதெனப் பேதையர் தம்மொடு பிணக்கும்
உறுதி நல்லறம் செய்பவர் தங்களோ டுறவும்;

மனமும் வாக்கும்நின் அன்பர்பால் ஒருப்படு மகிழ்வும்,
கனவி லுஞ்சிவ னன்பருக் கடிமையாம் கருத்தும்,
நினைவில் வேறொரு கடவுளை வழிபடா நெறியும்,
புனித நற்சிவ கீர்த்தியே உரைத்திடும் பொலிவும்;

யாது கேட்பினும் அன்பருக் கீவதே யியல்பும்,
மாத வத்தினோர் ஒறுக்கினும் வணங்கிடு மகிழ்வும்,
ஓது நல்லுப தேசநல் லுறுதியும், அன்பர்
தீது செய்யினும் சிவலீலை யெனக்கொளுந் தெளிவும்;

தீமை யாம்பர சமயங்கள் ஒழித்திடுந் திறமும்
ஏமு றும்பர மாதரைப் பரிசியா இயல்பும்
வாய்மை யாகவே பிறர்தனம் விரும்பிடா வளமும்,
தூய்மை நெஞ்சினிற் பிறர்மனை நோக்குறாத் துறவும்;

துறக்கமீ துறையினும், நரகில் தோய்கினும்,
இறக்கினும் பிறக்கினும், இன்பந் துய்க்கினும்,
பிறைக்கொழுந் தணிசடைப் பெரும! இவ்வரம்
மறுத்திடா தெனக்கு நீ வழங்கல் வேண்டுமால்.'

இப்பாடல்களைச் சைவ உலகில் எல்லோரும் அறிவார்கள். ஆனால் இவை இந்த ஞானக் கூத்தர் பாடிய திருவையாற்றுப் புராணத்திலுள்ளன என்பதை அறிந்தோர் மிக மிக அரியர். இவருடைய பக்திக் கசிவுக்கு இவைகளே சிறந்த சான்று.

## திருவையாற்றுப் புராணம்

இது செப்பேசப் புராணம் (ஜப்பியேசுவரம்), பஞ்ச நதிப் புராணம் என்றும் வழங்கும். தவம் செய்த சிலாத முனிவருக்கு இறைவன் அருளால் மண்ணிலிருந்து பெற்ற ஒரு பெட்டகத்திலிருந்து கிடைத்த செப்பேசன் என்று பெயரிட்ட குழந்தையாகிய நந்திதேவரின் பெருமையைக் கூறுவதால் நூல் செப்பேசப் புராணமாயிற்று. பாயிரமும் 12 சருக்கங்களும் 437 பாடல்களும் கொண்டது. நூலிலுள்ள சில சிறப்புக்கள் முன்னமே சொல்லப் பட்டன. பாயிரப்பகுதியில், நடேசர் செம்பொற் சோதியார் என்று இருவருக்கும் வணக்கம் கூறியிருப்பது அதிகம். விநாயகர், முருகர், சம்பந்தர் துதிகள் ஒரே சந்தத்தில் அமைந்த பாடல் களாய் உள்ளன. சம்பந்தர் துதி:

வீதி கண்டவர் சீசீ சீயெனும்
  வேத வஞ்சகர் பாழ்வாய் வீணர்கள்
வாதி டுஞ்சமண் வேரோ டேயற
  வாழ்க அந்தணர் வானோர் ஆனென
ஓது பண்டித ஞானா சாரியன்
  யோக சிந்தையர் ஓதா தோதிய
வாதி வெங்குரு நாடாள் வேதிய
  னாய புங்கவன் மேல்மேல் வாழிய.

பதஞ்சலி முதலியோர், கோயில் காரியம் செய்வோர் ஆகியோருக்கு வணக்கமும் தலத்திற்கே வணக்கமும் சொல்லியுள்ளார். தல வணக்கம், மடக்கு:

கனிகிழியக் காவேரி கரைபுரளும் காவேரி
புனித சலந் தனினாடிப் பொருவிலாத் தனிநாடிப்
பனிமதிய னையாறு பாலிக்கும் ஐயாறு
நனிவணங்கும் இருந்தவரே நன்மைபெற இருந்தவரே.

பாயிர இறுதிப் பாடல், பதிகம் போலச் சருக்கப் பெயர்களைச் சொல்கிறது. முதல் சருக்கம் பதிகச் சருக்கம் என்பது. கேனோபநிடதக் கதை - அக்கினி, வாயு, இந்திரன் மூவரும் சோதி வடிவை ஆராய முற்பட்டார்கள் என்ற கதை - விரிவாகச் சொல்லப்படுகிறது. குறுமுனிச் சருக்கம் - அகத்தியர் தவம் செய்து உடல் குறுகப் பெற்றது சொல்லப்படும். கயிலாயச் சருக்கம் - அகத்தியர் கயிலை சென்று பெருமானிட்ட கட்டளையால் தென்திசை சமநிலை பெறவேண்டித் தெற்கே செல்கிறார். அவர் இசைக்கு

உருகிய குறும்பலாத் திருமாலைத் திரட்டிச் சிவலிங்கம் ஆக்கினார் அதுவே திருக்குற்றாலம், உலோபா முத்திரையாகிய காவிரியை மணந்து அதன் நீரால் உலகம் உய்யச் செய்தார். காவேரிச் சருக்கம் - காவிரியின் புகழ். ஐயாறு - பஞ்ச நதி, ஐந்து தீர்த்தம்; அதன் பெருமை. சிலாதமுனி - பதினாறு வயதே பிள்ளைக்கு என அறிய, பிள்ளை தவத்தினால் சிவாலயத் தலைமை பெற்றது. சந்திரன் பூசித்த சருக்கம். பின், நந்திகேசுவரச் சருக்கம் - நந்தி பூசை. நியமேசச் சருக்கம் - கரிகாற் சோழன் திருப்பணி செய்தது. சைவச் சருக்கம் - காசி சென்ற ஒரு சிவாசாரியருடைய இடத்தில் தாமே வந்து தம்மைச் சிவபிரான் பூசித்தது.

சைவச் சருக்கத்துக்கு முந்திய மூன்று சருக்கங்கள் வாகீசர், சம்பந்தர், வன்தொண்டர் ஆகிய மூவர் வரலாற்றுச் செய்திகளைக் கூறுகின்றன. வரலாற்றுச் செய்திகளில் புதியன சில உள்ளன. வாகீசச் சருக்கத்தில் அவர் திருவாமூரில் பிறந்தது முதல் முறையாக எல்லாச் செய்திகளையும் சொல்லி, கயிலாயம் செல்ல எண்ணியபோது ஐயாற்றில் பெருமான் திருஅருளால் அம்மையும் அப்பனும் ஆகிய கயிலைக் காட்சியைக் கண்ட செய்தியைச் சொல்லி, தென்கயிலை ஆகிய கயிலைக் காட்சியைக் கண்டதைப் பணிந்து பூந்துருத்தி வணங்கியிருந்தார் என்று சருக்கம் சொல்கிறது. வாகீசர் கண்ட காட்சி:

> நடப்பன பறப்பனவும் நாரமுறை வனவும்
> கிடப்பனவும் நிற்பனவும் ஊர்வனவும் கேடில்
> தடுப்பரு சராசரங்கள் தாங்களு மடங்கக்
> கடப்பரிய சத்திசிவ மானநிலை கண்டார்.

அடுத்து சம்பந்தச் சருக்கம்

அவர் சீகாழியில் அவதரித்துப் பல தலங்கள் வழிபட்டுப் பல அற்புதங்கள் நிகழ்த்திப் பின் திருப்பூந்துருத்தி வந்தார். அவரை அப்பர் கண்டு, 'மேல் பால் அந்நகரில் திருமால் பூசை கொள்வதே போதும் என்று சொல்லிச் சிவபூசையை அங்கிருந்த வைணவர்கள் தடைசெய்துவிட்டார்கள். இச்செய்தியும் கேட்கலாவதே!' என்று சொல்ல, சம்பந்தர் பூந்துருத்தி நாதர் சந்நிதியில் பாட, பெருமான் அருளால் வருணன் குடக்குத் திக்கில் பெருமழை பெய்யச் செய்தான். வைணவர் இல்லங்கள் வெள்ளத்தில் அழிந்தன.

அறப்பயன் தீர்ந்த காலை அமுதமும் நஞ்சமாமே
மறப்பயன் தீர்ந்த காலை வன்னஞ்சம் அமுதமாமே
துறக்கமீ திருப்பா னெண்ணித் தொண்டர்கள் மாயனார்க்குச்
சிறப்பினாற்செய்த நன்மை தீமையாய் விளைந்த தன்றே.

பின்னர் சம்பந்தர் திருமாலைச் சிவனாகப் பாட அவர் குழைந்து சிவலிங்கமானார். ஐந்து குண்டங்களில் தப்பி இருந்து ஐந்து வைணவரைச் சைவராக்கிப் பூசைக்கு அமர்த்தினார். அவர்கள் குறையிரந்தபடி வெள்ளத்தில் அமிழ்ந்துபோன ஏனையோரையும் வரவழைத்துச் சைவராக்கி இருக்கச் செய்தார்.

**வன்றொண்டச் சருக்கம்**

சுந்தரரும் சேரமானும் திருப்பனந்தாள் வணங்கி வந்த போது திருவையாறு கோபுரம் கண்டு வழிபாட்டுக்குக் காவிரி வெள்ளம் இடையூறாக இருந்தமை உணர்ந்து, சுந்தரர் விண்ணப்பஞ் செய்தார். காவிரி வழிவிடவே இருவரும் காவிரி கடந்து ஐயாற்றடிகளைத் தொழுதார்கள்.

இவ்வரலாறுகள், சம்பந்தர் திருப்பூந்துருத்தியுள் செய்த அற்புதம் பெரிய புராணத்தில் இல்லை. மேலும் அக்காலத்தில் இந்நாயன்மார் வரலாற்றில் சமணர் பூசல் தலையிட்டதே அன்றி, வைணவப் பூசல்கள் இருந்ததாக எங்குமே செய்தியில்லை. நூலாசிரியர் ஒருகால் தம் காலத்தில் தமக்குத் தெரிந்திருந்த ஏதேனுமொரு வைணவப் பூசலை இவ்வாறு புராணத்தில் ஏற்றிச் சொல்கிறாரென்று கருதவேண்டும்.

பாயிரப் பகுதிப் பாடல்கள் யாவும் சிறந்த சொற்சுவையுடையன. சுந்தரர் துதியில் தொனியால் விலங்குகளைக் குறிப்பிடுகிறார்:

அத்தியுரித் தருளுமெனை யாளியை என் னம்மானைச்
சித்திரமா தங்கனைச் செந்தீப் புலியைப் போரேற்றைப்
பத்திவலை யால்வளைத்துப் பணியுந் தொண்டாற்பிடித்த
நத்திலகும் வயல்நாவல் நம்பி திருப்பதம்போற்றி.

தலத்தின் பெயர் ஐயாறு என்பதற்குப் பொருந்த, ஐயாறப்பர் துதியில் ஆறு என்ற சொல் பலமுறை வருமாறு பாடுகிறார்.

மெய்யாறு புடைபுரளத் திங்க ளோட
மேலோடப் பெரும்பாம்பு கிடந்து சீறக்
கையாறு காலேறிக் கீதம் பாடுங்
கடிகமழுந் திருமுடிமேற் கன்ன லாறு

நெய்யாறும் பாலாறும் பசுந்தே னாறும்
நிறைபசுவின் தயிராறும் நிறைய ஆட்டி
ஐயாறர் ஐயாறர் என்பார்க் கன்றோ
அவனியெலாம் ஒருகுடைக்கீ ழாள லாமே.

*சந்தப் பாடல்களுள் ஒன்று,*

கோடாத புகழாளர் மாதேவர் குடிகொண்ட பதிஎங்கணும்
வாடாத தமிழ் பாடும் வாகீசர் என்னுமோர் மதிமாதவர்
வீடாத வடபூமி பணியும் விருப்பிற் பருப்பதத்தின்
நாடாமல் நாடும் பிரானைத் தமிழ்ப்பா நயந் தோதினார்.

*இந்நூல் மிகவும் நயமான பாடல்களைக் கொண்டது. அக்காலத்தில் பாடிய புலவர்கள் அனைவருமே தங்கள் பக்தியினாலும் பரம்பரைத் தொடர்பாலும் சொற்சுவை பொருந்தப் பாடும் திறன் பெற்றிருந்தார்கள். இவ்வாசிரியர் பல பாடல்கள் மிக்க சுவை பொருந்தப் பாடியிருக்கிறார். கடவுள் வாழ்த்துப் பகுதியில் சில சந்தப் பாடல்கள், ஒன்று சம்பந்தர் துதி முன் காட்டியது. மடக்கு அணிகளும் பல உள்ளன. ஒரு பாடல்.*

உறவளங்கள் தரும்பதுமை யூருறவாய் நிற்பதுமை
நறவொழுகும் புவனங்கள் நளினமெலாம் புவனங்கள்
அறமளக்கும் சிவனடியார் அனவரத மனமடியார்
திறன் மடவார் அம்மனைகள் திகழ்விளை யாட்டம்மனைகள்.

## காலம்

*நிரம்ப அழகிய தேசிகருடைய மாணாக்கருள் ஒருவராகிய அளகைச் சம்பந்தர் திருவாரூர்ப் புராணம் கி.பி. 1592இல் பாடினார் என்று சொல்லப்பட்டுள்ளது. ஞானக் கூத்தரும் தேசிகருடைய மாணாக்கராதலால், இவர் காலமும் அதுவே; 16ஆம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி.*

## பதிப்பு

*திருவையாற்றுப் புராணம், அருணாசல கவிராயர் முத்துத் தாண்டவராயப் பிள்ளை பார்வை, 1930. ஏட்டில் மிகைப் பாடல்கள் சில காணப்படுகின்றன.*



## அத்தியாயம் 3

## சைவ புராணம் - 3

# சைவ எல்லப்ப நாவலர்

**வரலாறு ஆராய்ந்தோர்**

சைவ எல்லப்ப நாவலர் என்ற பிரசித்தமான ஒரு புலவர் 16ஆம் நூற்றாண்டின் பாதியில் வாழ்ந்து, ஆறு புராணங்களும் ஏழு பிரபந்தங்களும் சௌந்தரிய லகரி உரையும் செய்தார் என்பது சமீபகாலம் வரையில் தமிழ் நாடெங்கும் வழங்கிய பொதுக்கருத்து. இதை மாற்ற வேண்டிய அவசியமில்லை, மாற்று தற்குப் போதிய ஆதாரமுமில்லை. ஆனால், 1936இல் பதினாறாம் நூற்றாண்டுத் தமிழ்ப் புலவர் வரலாறு எழுதி வெளியிட்ட இலக்கண விளக்க பரம்பரை திருவாரூர் சோமசுந்தர தேசிகர் இக்கருத்தை ஆராய்ந்து தாழை எல்லாப்ப நயினார் என்ற புலவரே இவற்றுள் சில பிரபந்தங்களும் புராணங்களும் பாடினார், சைவ எல்லப்ப நாவலர் இவரினும் வேறானவர் என்று விரிவாக 15 பக்கம் கொண்ட ஓர் ஆராய்ச்சியுரை எழுதியிருக் கிறார்.* ஆனால் அங்கு எல்லப்ப நயினார் என்ற பெயரை ஆராய்ந்திருக்கிறாரேயன்றி, எல்லப்ப நாவலர் என்ற பெயருக் குரியனவாகத் தாம் கருதிய நூல்களை ஆராயவில்லை. தமிழ்ப் புராணங்களின் மூலத்தை ஆராய்ந்த அனவரத விநாயகப் பிள்ளையவர்கள்,❖ தேசிகர் கருத்தை எடுத்துச் சொல்லி அதை ஒப்புக் கொண்டதாகச் சொல்லாமல், பின்னும் ஆராயத் தக்க தென்றே சொன்னார். கலைக் களஞ்சியம் வெளியிட்டோர், இப்புலவர்கள் இருவரென்றே கொண்டு, வெவ்வேறாகக் குறிப் பெழுதியுள்ளனர். அவர்கள் கருத்து, எல்லப்ப நயினார் 16ஆம்

---

* சோமசுந்தர தேசிகர், தமிழ்ப் புலவர்கள் வரலாறு, பதினாறாம் நூற்றாண்டு, 1936, பக்கம் 154 - 198.

❖ கலைமகள் இதழில் வெளிவந்த கட்டுரைகள்.

நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தார் என்பதும் எல்லப்ப நாவலர் பிற்பகுதியில் வாழ்ந்தார் என்பதும் ஆகும். இக்கருத்துக் களை இங்கு ஆராய்ந்து முடிவு காண்போம்.

## வரலாறு

பழைய நூல்களில் சம்பிரதாயமாகச் சொல்லப்பட்ட எல்லப்ப நாவலர் வரலாறு பின்வருவது. 'சைவ எல்லப்ப நாவலர் என்ற புலவர் சோழ நாட்டில் திருவெண்காட்டுக்கு ஒரு கடிகை தூரத்திலுள்ள இராதா நல்லூர் (இராகவ நல்லூர் என்று இன்று வழங்குவது) என்ற ஊரில் கார்காத்த வேளாள குலத்தில் பிறந்து எல்லப்பன் என்று பெயரிடப்பட்டு வளர்ந்து கல்விகற்று, தரும புர ஆதீனத்துச் சைவ சித்தாந்த நூல்களையும் கற்றுப் பெரும் புலவராய் விளங்கினார். அதே ஆதினத்தில் தீட்சைகள் பெற்றுத் தமது சைவப்புலமை காரணமாக அவ்வாதீன கர்த்தரால் திவ்விய கவி சைவ எல்லப்ப நாவலர் என்று பட்டம் சூட்டப் பெற்றுப் புகழோடு வாழ்ந்தார். பல புராணங்களும் பிரபந்தங்களும் செய்தார் செளந்தரியலகரி உரை செய்தார். இவர் காலத்தில் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் வாழ்ந்தார் என்றும், ஒரு நாள் ஆதீனத்துப் புலவர் சபையில் ஒரு வைணவர், ஐயங்கார் செய்த திருவரங்கக் கலம்பகத்துக் கவிதை நயத்தைப் பாராட்டிச் சொல்லிய போது, இவர் தாம் அப்போதே திருவருணைத்தல விஷயமாய்ப் புனைந்த பாடல் ஒன்றைச் சொல்லி, இரவே திருவருணைக் கலம்பகம் என்று அந்நூலை முடித்து மறுநாள் எல்லோரிடமும் நூலைக் காட்டினார் என்றும் சொல்வர். இவ ருடைய மனைவியும் மிக்க புலமை உடையவர். சிவ தூஷணை மிகுந்த 'வாடியோட' என்ற திருவரங்கக் கலம்பகப் பாடலைச் செவியுற்றபோது அவ்வம்மையார் வருந்தி, 'கருடனோட' என்ற ஒரு பாடலை உடனே செய்து அவரை அடக்கிப் பின்னர் நாவலர் கலம்பகம் பாடியபோது இதையும் அருணைக் கலம் பகத்தில் சேர்த்துக் கொள்ளும்படி நாவலருக்குக் கூறினார்; ஆயினும் எக்காரணத்தாலோ அது அந்நூலுள் சேர்க்கப்பட வில்லை என்றும் கர்ண பரம்பரைக் கதை வழங்கும்.

இது பற்றிய இரண்டொரு செய்திகளை இங்கு கூறி மற்ற செய்திகளை அடுத்து ஆராய்வோம். இவர் ஊர் தாழை நகர் என்றும் சொல்லப்படும். இது திருவெண் காட்டுக்கும் திருக்கடை யூருக்கும் இடையில் இன்று பூந்தாழை என்று வழங்குகிற ஊராகும். இவரது தாய் ஊர் தாழை நகர் என்றும் தந்தை ஊர்

இராதா நல்லூர் என்றும் சொல்வர். இவரது கோத்திரமாகிய காலிங்கராய கோத்திரத்தார் மாயூரம் பகுதியில் பெரும் தொகையினராக இன்னும் வாழ்கிறார்கள். மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளைக்கும் இளமையில் சாமிநாதையர் அவர்களுக்கும் பேராதரவு தந்து ஆதரித்த கலியாண சோழபுரம் வகையார் இக்காலிங்கராய கோத்திரத்தாரே. காலிங்கராய கோத்திரம் என்பது, கார்காத்தார் வாழும் இடங்களெங்கும், தஞ்சை, தென் ஆர்க்காடு, திருச்சிராப்பள்ளி, திருநெல்வேலி ஜில்லாக்களில் காணப்படுகிறது. நாவலர் பரம்பரையினர் இன்னும் இராதா நல்லூரில் வாழ்கிறார்கள்.*

**சாசனக் கருத்துக்கள்**

தஞ்சாவூரை ஆண்ட செவ்வப்ப (சேவப்ப) நாயக்கர் கோவிந்த தீட்சிதருடைய அன்புக்குப் பாத்திரமாகி, அவரால், விசய நகரத்தை யாண்ட அச்சுதராயரிடம் கீழ்நிலையில் ஒரு பணியாளராக அமர்ந்து தம் திறமையால் மேல்நிலைக்கு வந்து தஞ்சையை ஆளும் பொறுப்பைப் பெற்றார். அவர் சகம் 1494 இல் (கி.பி. 1572) திருவண்ணாமலை ஈசருக்குத் திருக்குளமும் கோபுரமும் கட்டினார். திருவண்ணாமலைக் கோயிலிலுள்ள சாசனமொன்று, செவ்வப்ப நாயகர் ஆட்சியில்❖ சிவநேசன், லோகநாதன் என்ற பெயருடைய இரு சகோதரர் திருவண்ணாமலைக் கோபுர மொன்றைக் கட்டி முடித்தார்கள். இச் செயலைப் பாராட்டிக் காலிங்கராயன் உண்ணாமுலை எல்லப்ப நயினார் என்ற புலவர் மூன்று பாடல் பாடியதாகப் பாடல்கள் பொறிக்கப்பட்டுள்ளன. பாடல்கள் பின்வருவன:

தானேற்ற மாகச் சகாத்தங்கள் ஆயிரத்து
நானூற்றுத் தொண்ணூற்று நாலின்மேல் – மானேற்ற
தென்னருனை நாதருக்குச் செல்வமகி பன்கயிலை
அன்னதொரு கோபுரம் கண் டான்.

மருவுசிவ நேசன் மகிழ்உலக நாதன்
இருவரும்பே ரன்பால் இயற்ற – அருணையிலே
மானபரன் செல்வ மகிபாலன் அப்பதினொான்
றானநிலைக் கோபுரங்கண் டான்.

---

* இவர்கள் வீட்டில் சென்று சில ஆண்டுகளுக்கு முன் யாம் ஏட்டுச் சுவடிகள் பார்த்ததுண்டு.

❖ தஞ்சை ஜில்லா கெஜட்டியார்.

இருபுறமும் மீனம் எழுது புலியிட்டு
அருவரையிற் பேரெழுத வையத் – தொருவரையை
வைத்த தெனச் செல்வ மகிபாலன் தென்னருணை
அத்தருக்குக் கோபுரங் கண் டான்.

*(கோபுரமானது பதினொரு நிலைக் கோபுரம்.) முதல் இரு பாடல்களும் எல்லப்ப நயினார் சொன்னவை என்றும், மூன்றாம் பாடல் காலிங்கராயன் உண்ணாமுலை எல்லப்ப நயினார் சொன்னது என்றும் காணப்படுகிறது. இரு பெயர்களும் ஒருவரையே குறிப்பிடும். உண்ணாமுலை எல்லப்பன் என்றமையால், இவர் தந்தை பெயர் உண்ணாமுலைப் பிள்ளை என அறியலாம். தந்தை பெயரைச் சேர்த்து வழங்கும் வழக்கம் சங்க இலக்கியங்களில் மிகவும் அதிகமாய்க் காணலாம். மருதன் இளநாகனார், கதப் பிள்ளைச் சாத்தனார், பூதன் தேவனார் என்பன போன்ற பெயர்களைக் காண்க. சாசனம் கூறும் செய்தியால், காலிங்கராய கோத்திரத்தினரான எல்லப்பர் உண்ணாமுலைப் பிள்ளையின் புதல்வர், திருவண்ணாமலையில் இருந்து அங்கு கோபுரம் கட்டியவரைப் பாராட்டிப் பாடல் பாடினார் என்பது அறிகிறோம். நயினார் என்பது இயற்பெயரின் பின்வரும் ஓர் அடை; சாதி பற்றி வருவதாகக் கொள்ளலாம். வெவ்வேறு பிரதேசத்தில் இப்பெயர் வெவ்வேறு விதமாய் வழங்குவதுண்டு. தஞ்சையில் சிறப்புடைய 'பிள்ளை'யா யிருந்தாலும், அரை நூற்றாண்டுக்கு முன்னெல்லாம் சென்னைக்குச் சென்றால் 'முதலியார்' என்றால்தான் பெருமை, மரியாதை. அது போன்றே நயினார் என்ற பெயரும். வட ஆர்க்காட்டுப் பகுதி (திருவண்ணாமலை) தெலுங்கு நாட்டுத் தொடர்புடைய இடம். அங்கு தெலுங்குச் சொல்லாகிய நாயனார் (தந்தையைக் குறிப்பது) மரியாதைப் பெயராக நயினார் என்று இடப்பட்டதாகக் கொள்ள வேண்டும். திருக்கோளூர் வைத்த மாநிதி திருப்பணி மாலை என்ற நூலில், அங்கு மிகவும் சிறப்பாகத் திருப்பணி செய்த காவை - வடமலையப்பர் பெயரோடு, அவர் மரபாகிய காரைக்காட்டார் (கார்காத்தார்) மரபில் வந்து அதே கோயிலில் திருப்பணி செய்தவராய், அக்காலத்தில் வள்ளலாயும், சிறந்த போர்வீரராயும் படைத்தலைவராயும் இருந்த எல்லார்க்கு நயினான் என்ற ஒரு பெயரும் சொல்லப்பட்டுள்ளது (காலம் கி.பி. 1700ஐ அடுத்த காலப் பகுதி):*

சதுரவித ரணசுமுகன் காரைக்காட் –
டார்மரபில் தழைத்த மேகம்

விதுரன் மலர் மகள்கொழுநன் எல்லார்க்கு
நயினான் போர்வேந்தர் வேந்து (12).

ஆதலால், எல்லப்ப நயினார் எல்லப்ப நாவலராக இருத்தலில் முரண் எதுவும் இல்லை.

அதே திருவண்ணாமலையில் தாண்டவ வாணன் செய்த திருப்பணிகளைப் புகழ்ந்து இவர் ஒரு பாடல் பாடியிருக்கிறார்:

அண்ணல்அரு ணாசலருக்கு ஆவணிமூ லத்திருநாள்
பண்ணிமணி மண்டபமும் பண்ணுவித்தான் – மணணினிசை
தீட்டினான் காவும் திருவீதி யுங்குளமும்
நாட்டினான் தாண்டவவா ணன்.

இவர் திருவண்ணாமலையில் வாழ்ந்திருந்த காலத்து அங்கு பரமேசுவரப் புலவர் என்பவர் மிக்க சிறப்போடு வாழ்ந்தார் என்றும், சேறைக் கவிராச பிள்ளை அவ்வூரில் வண்ணம் பாடிச் சிறப்புப் பெற்றபோது, அங்கிருந்த உண்ணாமுலை எல்லன் (எல்லப்பன்), வீட்டில் தங்கி வெளியே வராது இருந்து விட்டார் என்றும், அதுபற்றி அப்புலவர் இவரை இழித்துப் பின்வரும் பாடல் பாடினார் என்றும் தமிழ் நாவலர் சரிதை கூறும்:

கண்ணார் மதிக்கும் கவிராச சிங்கம் கடந்து திரு
அண்ணாமலையப்பர் மேல்வண்ணம் பாடிமுத்தாலத்திகொண்டு
எண்ணா யிரமா ணவர்சூழப் பல்லக்கில் ஏறிவந்தான்
உண்ணாமுலை எல்லன் மூலைகள் தோறும் ஒதுங்கினனே.

இப்பாடல் எல்லப்பரை இழித்ததாகக் கருத வேண்டியதில்லை. சேறையார் சிறந்த கவிஞர் என்பதில் ஆட்சேபமில்லை; ஆனால் அவர் ஆடம்பரப் பிரியர். எல்லப்பர் சிவ பக்தியில் திளைத்தவர், ஒதுங்கியிருப்பவர் என்று மட்டுமே இப்பாட்டுக்குப் பொருள் கொள்வது பொருந்தும். இதைத் தவறாக எண்ணிக் கோபித்து, எல்லப்பர் பரமேசுவரப் புலவரைப் பழித்துப் பின்வரும் பாடல் பாடினார் என்பது அச்சரிதையின்,* குறிப்பு:

பாழ்ப்பா மடத்துப் பரமா, உன் பாழ்ங்கவிதை
கேட்பாரெல் லாம்புத்தி கெட்டபேர் – தோட்பாவும்
ஒணான் விழுந்தாலும் உண்டுபரி காரமிது
வாணா ளளவே வரு.

---

* அச்சரிதை ஆதார நூலன்று; எமது தமிழ் இலக்கிய வரலாறு 10ஆம் நூற்றாண்டு பார்க்க.

*இங்கு நாம் குறிப்பிட விரும்புவது உண்ணாமுலை என்றதனா லும், நயினான் என்றதனாலும், அப்புலவர் சைவ எல்லப்ப நாவலர் அல்லாது மற்றொருவர் என்று கருதுவதற்கு எந்த நியாயமும் இல்லை என்பதாகும்.*

*சௌந்தரியலகரி உரையானது, இவரைத் தாழை மாநகரின் எல்லான் என்றும், திருவாரூர்க்கோவைச் சிறப்புப் பாயிரங்கள் இவரை எல்லான் என்றும், திருவண்ணாமலை எல்லபூபதி என் றும் குறிப்பிடுகின்றன. இவ்விரு வகைப் பெயர்களும் குறிப்பிடு வது எல்லப்பர் என்பவரையே. பெயர்களால் எந்த மாறாட்ட மும் விளைவதாக நாம் கருத வேண்டியதில்லை. அன்றியும், இவரைப் பற்றிப் பந்தணை நல்லூர்ப் பசுபதிசுவரர் கோயிற் கோபுர வாயிலில் காணப்படும் சில சாசனப் பாடல்கள் இங்கு கருதத்தக்கன:*

நன்காவி வாடுவள நாட்டமெனுங் காவியினி
யன்காவி கண்டா லுறங்காதோ – தென்கலையா
ராட்டியமூ தண்டமெலாம் அன்னைமுன்னே வாய்திறந்து
காட்டியவெல் லாகாலிங் கா.

நாலங்க வாளிபெற்றார் நாரியரே பாரியிலும்
மேலங்க மானகொடை வேளாளன் – காலிங்கன்
எல்லன்கைக் கேபெறுமோ இந்திரநீலங் கருப்பு
வில்லன்கைக் கேபெறுமோ மின்.

எம்பார காலிங்க னெல்லனைக் காப்பவ ரெண்ணிலொற்றைக்
கொம்பாருந் தம்பி குகனாரு மிக்குக னாரைப்பெற்ற
வம்பார் சடையரண் ணாமலை யாருமண் ணாமலையார்
தம்பாகத் தம்மையும் அம்மையைச் சூழ்பஞ்ச சத்தியுமே.

*திருவண்ணாமலைக் கோயிலில் காணப்படும் ஒரு கல்வெட்டும் இவரை எல்லன் காலிங்கன் என்று குறிப்பிட்டு இவருடைய பக்தியைப் பாராட்டும்:*

காணரிய தில்லை கடவூர்ஐ யாறுகச்சி
சோணகிரி வேளூர் துவாரசத்தி – சோணகிரி
தண்டாத கச்சித் தலத்துவிடை பஞ்சசத்தி
கண்டானெல் லன்காலிங் கன்.

*திவ்விய கவி - சைவ - எல்லப்ப நாவலர் என்ற பெரும் புலவர் இவ்வாறு எளிதாகக் காலிங்கன் எல்லப்பன் என்று சொல்லப்*

பெறுவாரா என்று ஐயுற வேண்டுவதில்லை. காலம் செல்லச் செல்ல, நாவலர், சைவ, திவ்விய கவி என்று அடைகள் ஏறிக் கொண்டே போகும். உடன் காலத்தில் வெறும் பெயர்தான் நிற்கும். (இன்று திருக்கயிலாய பரம்பரை மெய்கண்டார் சந்தா னம் தருமபுரத்து ஆதிகுரு குருஞான சம்பந்த பரமாசாரிய சுவா மிகள் என்று கூறுகிறோம்; அக்காலத்தில் அவர் பெயர் ஞான சம்பந்த பண்டாரம் என்பது மட்டுமே. இதனால் எக்குறையும் அக்காலத்தார் கருதியது இல்லை என்று உணரவேண்டும்.)

## முடிவான கருத்து

குமாரசாமிப் பிள்ளை எழுதிய தமிழ்ப்புலவர் சரித்திரம், அனவரத விநாயகம் பிள்ளை எழுதிய செளந்தரிய லகரி முகவுரை, தமிழ் நாவலர் சரிதை, கா. சுப்பிரமணிய பிள்ளை எழுதிய தமிழ் இலக்கிய வரலாறு, திருவாரூர்க்கோவை, சாசனக் குறிப்புக்கள் ஆகிய எல்லாவற்றையும் சோமசுந்தர தேசிகர் ஆராய்ந்து, முடிவாக சைவ எல்லப்ப நாவலர் இராதா நல்லூரி னர், செய்த நூல்கள் திருவெண்காட்டுப் புராணம், திருச்செங் காட்டங்குடிப் புராணம் முதலாயின; தாழை நகர் எல்லப்ப நயினான் என்பவர் இவரினும் வேறானவர், செளந்தரிய லகரி உரை, திருவாரூர்க் கோவை, அருணையந்தாதி, அருணாசலப் புராணம், திருவிரிஞ்சைப் புராணம் முதலியன இவர் செய்த நூல்கள்; இவர் அருணையை வாசத்தலமாய்க் கொண்டவர்; அங்கு இவர் தந்தை பெயரால் காலிங்கராயன் மடம் என ஒரு மடம் உள்ளது; மேலும் 'உற்ற செய்யுளால்' என்ற அவையடக்கப் பாடலால் இவ் எல்லப்பர் (தாழை) அருணைப் புராணமும், விரிஞ்சைப் புராணமும் மட்டுமே செய்தார் என்று கொள்ள வேண்டும் என்று தம் கருத்தைத் தெளிவுபடுத்தி எழுதியிருக் கிறார். இக்கருத்துக்கள் கொள்ளத் தக்கனவல்ல என்று மேலே நாம் கூறியவற்றால் நன்கு விளங்கும். (காலிங்கராயன், கோத்திரப் பெயரே அன்றித் தந்தை பெயரன்று). இவர் குறிப்பிடுகின்ற 'உற்ற செய்யுளால்' என்ற அவையடக்கப் பாடல் விரிஞ்சைப் புராணத்தில் மட்டுமன்றி வெண்காட்டுப்புராணத்திலும் தீர்த்த கிரிப் புராணத்திலும் உள்ளது. தேசிகர் கருத்தின்படி இம்மூன்றை யுமே எல்லப்ப நயினாருக்குரியனவாய்க் கொள்ளவேண்டும். தாழை நகர் எல்லப்ப நயினார் பற்றி விரிவாகச் சொன்னவர், எல்லப்ப நாவலர் என்று தாம் கருதுபவருடைய நூல்களை ஆராய்ந்து ஒன்றும் சொல்லவில்லை. எமது கருத்து, எல்லப்ப நயினான் - எல்லப்ப நாவலர் என்று இருவர் இல்லை; ஒரே

புலவர் வாழ்ந்திருந்தார் என்பதாகும். இது தொடக்கத்தில் நன்கு விளக்கப்பட்டது. தாய் வீட்டில் வளர்ந்தமையால் தாழை எல்லப்பர்; நாவன்மை மிக்கவராதலால் நாவலர்; காலிங்கராய கோத்திரமாதலால் எல்லன் காலிங்கன்; உண்ணாமுலைப் பிள்ளை புதல்வரானமையால், உண்ணாமுலை எல்லன்; சைவ நூல் (புராணமும், பிரபந்தமும்) செய்வதிலும் சைவப் பிரசங்கம் செய் வதிலும் வல்லவராயிருந்தமையால் சைவ என்ற சிறப்பான அடை கொடுத்துச் சைவ எல்லப்ப நாவலர் என்று வழங்கப் பெற்றார்.

## சைவ என்ற அடைமொழி

இலக்கிய உலகில் சைவ என்ற சிறப்பான அடை பெற்றவர் எல்லப்ப நாவலர் ஒருவரே. திருமலை நாதர் என்ற புலவருக்குப் புராண என்ற அடைமொழி தரப் பெற்றிருப்பதும் இங்கு காணத்தக்கது. (அடுத்த அத்தியாயம் பார்க்க). சைவ மரபில் உதித்ததால் மட்டும் இப்பெயர் வந்ததென்று சொல்ல முடியாது. சைவப் புராணங்கள் ஆறு இவர் பாடியிருக்கிறார் இவர் பாட்டிலுள்ள சில குறிப்புக்கள் இப்பட்டத்துக்கு மூலமா யிருக்கலாமோ என்று தோன்றுகிறது. 'சைவத்தின் மேற்சமயம் வேறில்லை' என்று இவர் பாடினார்:

> சைவத்தின் மேற்சம யம்வே றிலை; அதிற் சார்சிவமாம்
> தெய்வத்தின் மேல்தெய்வம் இல்; எனும் நான்மறைச் செம்பொருள்வாய்
> மைவைத்த சீர்த்திருத் தேவார மும்திரு வாசகமும்
> உய்வைத் தரச்செய்த நால்வர் பொற்றாள்எம்உயிர்த் துணையே.

என்பது இவருடைய திருவருணைக் கலம்பகப் பாடல். 'செய்யும் இயற்றமிழ்களெல்லாம் அரியயனே முதலாய தேவர்க்கோதி ஒப்புவிக்க அறியாமல் அரனிடத்தே வளைத்து வளைத்து உரையா நின்றேன்' என்று எதைப் பாடினாலும் சிவன் புகழே பாடுவதாக முடிகிறது* என்ற தன்மையைச் சொல்கிறார். இனி, காளத்தியில் சிவாசாரியரான சிவகோசரியின் மலரையும் கண் ணப்பரின் செருப்படியையும் உகந்த சிவலிங்கத் திருமேனி

---

* ஆரே யெனும் ஒன்று சொல்லத் தொடங்கினும், அவ்விடத்துன்
பேரே வரும் என்ன பேறுபெற்றேன் பெருநான்மறையின்
வேரே, மிதிலையின் மின்னுடனே வெய்ய கானடைந்த
காரே, கடல் கொளுந்தச் சிலைவாங்கிய காகுத்தனே.

என்று ஒட்டக்கூத்தர் பாடியதாக வழங்கும் தமிழ் நாவலர் சரிதைப் பாடலைக் காண்க. (136, கனககுந்தரம் பிள்ளை பதிப்பு). எமது தமிழ் இலக்கிய வரலாறு 12ஆம் நூற்றாண்டு

யுடைய பெருமான், மலையாகவும் (நெடுந்தொலைவிலிருந்தும் தெரியும்படி) விளங்குவது, பத்மாவதியோடு கூடிய திருவேங் கடவன் வடமலை மேலிருந்து தரிசிக்கும் பொருட்டேயாகும் என்று அருணர்சலபுராணத் திருநகரப் படலத்தில் சொல்லுகிறார்.

விருப்படியார் சொரிந்த அறுகலருடனே விழியிடந்த
வேடர் காலிற்
செருப்படியும் உகந்தபிரான் காளத்தி நகரமெனுந்
தெய்வ பூமி
பருப்பதமா கியும்விளங்கும் தண்ணறாக் கொழிக்குமலர்ப்
பதுமை யோடு
மரப்படியும்துழாய் மார்பன் வடமலைமேல் இருந்து கண்டு
வணங்க மாதோ.

சென்ற நூற்றாண்டின் இடைப் பகுதியில் இவரது புராணங் களை உரை எழுதிப் பதிப்பித்த காஞ்சிபுரம் சபாபதி முதலியார் போன்றார் இவருடைய வரலாறு குறித்து ஒன்றும் சொல்ல வில்லை. ஆனால் 1905இல் திருவெண்காட்டுப் புராணம் பதிப் பித்த பெருந்தோட்டம் துரைசாமிப்பிள்ளை, இவர் தருமபுர ஆதினத்தில் அக்காலத்திலிருந்த மகாசந்நிதான மூர்த்திகளால் சைவ எல்லப்ப நாவலர் என்று பெயர் கொடுக்கப் பெற்றார் என்று எழுதியுள்ளார். இது இக்காலத்தில் துரைசாமிப் பிள்ளைக்கு ஆதீனத்திடம் இருந்த பக்தியால் விளைந்த சொல்லேயன்றி, உண்மையாயிருக்க முடியாது. குருஞான சம்பந்தர் காலம் சுமார் 1575 என்று குறிப்பிட்டோம்.* அவருக்குப் பின் தருமபுர ஆதினம் நிலை பெற்றுப் பெயர் பெற்றது 1600க்குப் பிறகே ஆக முடியும். எல்லப்ப நாவலர் காலமும் 1575ஐ ஒட்டியே ஆதலால், இவருக்கு அவரால் சிறப்பு வந்தது என்பது பொருந்தாது. இவ ருடைய பாடல்களின் சிறப்பையுணர்ந்த மக்களே இவரை நாவலர் என்றும், சைவ எல்லப்பர்❖ என்றும் திவ்விய கவி என்றும் சொல்லத் தலைப்பட்டார்கள் என்றே கருதவேண்டும். எந்த இடத்திலும் சிறந்த சைவநியதிகளையும் ஒழுக்க ஆசாரங் களையும் தத்துவங்களையும் சைவஉயர்வையுமே பற்றிப் பேசிய படியால், அதிகமாய்ப் பாடியவர் இன்னும் பலர் இருந்த போதிலும், சைவ என்ற அடை இவருக்கே உரியதாகிச் சிறப்பாய்

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 16ஆம் நூற்றாண்டு இரண்டாம் பாகம் பார்க்க

❖ வைணவத்தில் இவரைப் போலப் பிள்ளைப் பெருமாளையங் காருக்கும் திவ்விய கவி என்ற பட்டமுண்டு.

அமைந்தது. எல்லாப் புராணங்களிலும் இவர் பாடியுள்ள நால்வராதியோர் தோத்திரங்கள் சிறப்பாய்க் குறிப்பிடத்தக்கன. சைவ ஆசாரம் பற்றி இவர் சொல்வதற்கு ஓர் உதாரணம் மட்டும் இங்குச் சொல்வோம். ஆலய வழிபாட்டில் இன்னவை ஐந்தும் பிழை என்று காட்டுகிறார் (திருவிரிஞ்சைப் புராணம், சரபுரி, 16):

> காலமன்றிய பொழுதினிற் பணிதல், ஓர்கரத்தால்
> பாலலோசனற் பணிகுதல், இடத்தினிற் பணிதல்,
> மேலினிற்கலை தன்னுடன் பணிதல், விடைமுன்
> ஆலயந்தனிற் பணிகுதல் – பழுதிவை ஐந்தும்.

இடத்தினிற் பணிதல் பழுது என்று சொல்லப்பட்டது. கிழக்கு நோக்கிய சந்நிதியில் வலப்புறம் நின்று வடக்கு நோக்கிப் பணிதல், வலப்புறமாகும். ஆனால் மேற்கு நோக்கிய சந்நிதியிலும் வடக்கு நோக்கியே பணிதல் வேண்டும். ஆகவே இங்கு இடப்புறமே நிற்க வேண்டியிருக்கும். ஆதலால் இப்பாடல் சொல்லும் ஆசாரம் பொதுவானது, கிழக்கு நோக்கிய சந்நிதிக்குரியது; மேற்கு நோக்கிய சந்நிதிக்கு வேறு.

திவ்விய கவி என்ற பெயர், தருமபுர ஆதினத்தொடர்பு, சமயப் பிள்ளைப் பெருமாளையங்காரோடு சமயப் போர் என்ற கதைகள் எல்லாம் கால உணர்வு இன்றிப் பிற்காலத்தார் தங்கள் அபிமானத்தால் படைத்துக் கொண்ட கற்பனைகள்.

### முருக பக்தி

சிவபக்தி மிகுதியால் இவருக்கு சைவ என்ற அடைமொழி பொருந்திற்று என்பதை மேலே விளக்கினோம். இவர் முருகனிடத்தும் சிறப்பான உளம் நெகிழ்ந்த ஈடுபாடுடையவர் என்பதைப் பல குறிப்புக்களால் நாம் உணர்தல் கூடும். பந்தணை நல்லூர்க் கல்வெட்டுப் பாடல் ஒன்று, அகத்துறையில் அமைந்து, காலிங்கன் எல்லான் என்ற நம்புலவரை பாட்டுடைத் தலைவனாக ஆக்கி உரைக்கிறது. இதனுள் இப்புலவர் ‘செங்கைவேலர் பொற்றாள் இதையாரவிந்தத்து இருத்திய காலிங்கன் எல்லன்’ என்று சொல்வது ஒரு சான்று:

> கதையா யிதுசொல்லப் போதுநங் காவிற் களிறுபுக்கால்
> சிதையா தனதழை கண்டறியேம், செங்கை வேலர்பொற்றாள்
> இதையார விந்தத் திருத்திய காலிங்க னெல்லன் வெற்பில்
> மதயானை யைத்தழை வேயச்செற்ற தாமிவர் வல்லபமே.

இதுபோலவே இவர் தமது புராணங்கள் தோறும் அமைத்துள்ள முருகன் துதிப்பாடல்களும் சிறந்த பக்திச்சுவை கொண்டு பொலிவன. உதாரணமாக செவ்வந்திப் புராணத்தில் வரும் 'வெற்றி - வாகையே சுமக்கும் வேலை வணங்குவதெமக்கு வேலை' என்ற பாடலையும் திருவிரிஞ்சைப் புராணத்தில் வரும் 'அவன் கமலத்தாளும் தோளும் சிந்திப்போமாதலினால் நமது பழ வினைகளெல்லாம் சிந்திப்போமே' என்ற பாடலையும் கருதுக. இப்பாடல்கள் முழுமையும் பின்னே அவ்வப்புராண ஆராய்ச் சிப் பகுதியில் தரப்பட்டுள்ளன

திருவாரூர்க்கோவையின் காப்புச் செய்யுளில் வழக்கமாய்க் கூறும் விநாயகரோடு வானவரைக் காக்கும் மயில் வாகனனையும் சேர்த்துக் கூறுகிறார். பின்னும் ஓர் இடத்தில் இவர் முருகனைப் போற்றும் பாடல் கந்தர் அலங்காரத்தை நினைவூட்டுகிறது (361):

> பாந்தளைச் சூடுந்தென் னாரூர்த் தியாகர் பணிவரைமேல்
> மாந்தரிற் றூய கிளையிலுள் ளீர், மயில் வாகனனை
> வேந்தனைச் சேந்தனை வேலாயுதனைச் செவ்வேளை வள்ளி
> காந்தனைப் போலு மிறையோற்கு நல்குநங் கன்னியையே.

காலம்

முன்னமே தெளிவாக்கியபடி இவருடைய பாடல்களிற் சில பந்தணை நல்லூர், திருவண்ணாமலை முதலிய கோயில் களில் உடன் காலத்தில் பொறிக்கப்பட்டிருந்தன. ஆண்டு 1572 ஆதலால் இவர் 16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தார் என்பது தெளிவாகத் தெரிகிறது. மேலும் ஒரு குறிப்புச் சொல்லத் தகும். கவிராசபண்டிதருடைய சௌந்தரியலகரிக்கு உரை எழுதி யிருப்பதாலும், அவ்வுரையுள் இலிங்க புராணத்து விநாயகர் காப்புச் செய்யுளை எடுத்தெழுதுவதாலும், இவர் கவிராச பண்டி தருக்கும் புராணம் பாடிய வரகுணராம பாண்டியருக்கும் பிற் பட்டவராகிறார். பண்டிதர் காலம் 1525-50, பாண்டியர் காலம் 1550-75; எனவே நாவலர் காலம் 1550-1600 ஆகலாம். மூவரும் சம காலத்தவராய், முதியவர் இளையவர் என்ற முறையில் வாழ்ந் திருப்பார்கள். கமலை ஞானப்பிரகாசர் காலம் 1525-75 என்றும் அவர் மாணாக்கராய், தருமபுரமடம் நிறுவிய குருஞான சம்பந்தர் காலம் 1550-1600 என்றும் வேறிடத்தில் சொல்லப் பட்டது. இதனால் நாவலர் தருமபுரத் தொடர்பு (குரு சீடர் முறையில்) பெற்றிருத்தல் இயலாது.

## சைவ எல்லப்ப நாவலர் புராணங்கள்

நாவலர் பாடிய புராணங்கள் ஆறு. அருணாசல புராணம், திருவிரிஞ்சைப் புராணம், தீர்த்தகிரிப் புராணம், திருவெண் காட்டுப் புராணம், செங்காட்டங்குடிப் புராணம், செவ்வந்திப் புராணம் (சிராமலை). இவற்றுள் மூன்று மலை சார்ந்த தலம்; மூன்று பிற முதல் மூன்று தொண்டை நாடு, பிற மூன்று சோழநாடு.

புராணங்கள் அனைத்திலும் வழக்கமாகச் சொல்லும் துதிகள் அன்றி, திருத்தொண்டர், தலத்தில் வழிபட்ட முனிவர் முதலியோருக்கு வணக்கம் சொல்லுகிறார். தீர்த்தச் சிறப்பு தனியே எல்லாப் புராணங்களிலும் சொல்லுகிறார். அவை யடக்கம் எல்லாவற்றிலும் நயமாக உள்ளது. எல்லா நூல்களிலும் இறுதியில் வேதம், ஆகமம், ஈசன் அடியார் ஆகியோரை வாழ்த்தி முடிக்கிறார்.

புராணங்களில் கதைகளைச் சொல்வதோடு, சிவபக்தி, அடியார் பக்தி, சிவ புண்ணியச் செயல்கள், சிவ சின்னங்களின் பெருமை ஆகியவற்றைத் தவறாது சொல்கிறார். புராணங்கள் யாவுமே அளவால் சிறியவை; விரிஞ்சை, சிறியது 370 பாடல்; வெண்காடு பெரியது 614 பாடல். நூற்பொருளாகிய பதிகம், ஒரு பாடலிலோ (விரிஞ்சை) பல பாடல்களிலோ தவறாது சொல்லுகிறார். மடக்கு, முரண், தொடை, சந்தம் முதலான அமைப்புக்கள் எல்லா நூல்களிலுமே சிறப்பாகக் காணலாம்.

### அகச்சான்று

இவ் ஆறு புராணங்களையும் சைவ எல்லப்ப நாவலர் ஒருவரே செய்தார் என்று கருதுவதற்கு ஆதாரமாய் உள்ள அகச் சான்றுகள் சிலவற்றை இங்கு குறிப்பிட எண்ணுகிறோம்.

1. அவையடக்கம் கூறுமிடத்து, முன்னமே அருணை மாநகர்ச் சிறப்பு உரைத்தேன், இப்போது இந்தத் தல புராணமும் கூறுகிறேன் என்ற ஒரு பாடல் கூறக் காண்கிறோம்.

> உற்ற செய்யுளால் அருணைமா நகர்ச்சிறப் புரைத்தேன்;
> குற்றமா னவைகுணத் தவர்பொறுத்துளங் கொண்டார்;
> இற்றை நாளுமச் செருக்கினால் இதனையும் இசைத்தேன்;
> கற்ற மாந்தருக் கனைத்தையும் பொறுப்பது கடனால்.

இப்பாடல் வெவ்வேறு சூழ்நிலையில் உரை எழுதிப் பதிப்பிக்கப் பட்ட திருவெண்காட்டுப் புராணம், திருவிரிஞ்சைப் புராணம்

(1863) தீர்த்தகிரிப் புராணம் (1870) ஆகியவற்றுள் காணப்படு கிறது. பதிப்பித்தோர் மூவரும் இப்பாடலை நூலோடு கூட ஏட்டிலிருந்து பார்த்தே பதிப்பித்திருக்கிறார்கள். ஒருவர் செய்த ஒரு பாடல் இம் மூன்று புராண ஏடுகளிலும் காணப்படுகிறது. இம்மூன்றையும் எல்லப்ப நாவலர் செய்தார் என்பதே வழக்கு. ஒருவர் தாம் செய்த பாடலைத் தம் நூல்களில் எடுத்து வைத்துக் கொள்வது உலக இயல்பு. ஆகவே இம்மூன்று புராணங்களை யும் ஒருவரே செய்தார் என்பது தெளிவு.

2. அதுபோல, திருவெண்காட்டுப் புராணத்தின் அவையடக்கப் பாடல்களில் மற்றொன்று முன்காட்டப்பட்டது:

> செப்புமியற் றமிழ்களெல்லாம் அரியயனே முதலாய
> தேவர்க் கோதி
> ஒப்புவிக்க அறியாமல் அரனிடத்தே வளைத்து வளைத்து
> உரையா நின்றேன்:
> மைப்பரவை தருவிடமும் நீறுமென்பும் ஆடரவும்
> வனப்பாக் கொண்டான்
> அப்பொறுமை யுடையவனென் புன்கவியும் பொறுப்பனென
> அறிந்து தானே.

இப்பாடல் தீர்த்தகிரிப் புராணத்தின் அவையடக்கமாகவும் காணப்படுகிறது. மேற்சொன்ன கருத்துக்கள் இதற்கும் பொருந் தும். இப்பாடலில் 'நான் எதைச் சொன்னாலும் வேறு தேவர்க்குச் சொல்ல அறியாமல் அரனிடத்தே வளைத்து வளைத்து உரையா நின்றேன்' என்று கூறுவது கருதத் தக்கது.

3. இதில் உள்ள பின்னும் பல பாடல்கள் அப்படியே தீர்த்த கிரிப் புராணத்தில் எடுத்து வைக்கப் பெற்றுள்ளன - சம் பந்தர், அப்பர், சுந்தரர் தோத்திரங்கள். மாணிக்கவாசகர் தோத்திரம் மட்டும் வேறு. அப்படியே திருத்தொண்டர் தோத்திரங்களான குற்றமற்ற திருத்தொண்டர் கூட்டமும், தெய்வமாக ஓர் தேவரையும் இலோம் என்ற இரண்டு பாடல்களும்.

4. பிற்காலப் புராணத்தார்கள் அனுக்கிரமணி அல்லது பதிகம் என்ற ஒரு தனிச் சருக்கம் அமைத்து அதில் நூலில் சொல் லப்பட்ட சருக்கங்களை ஒருசேரச் சொல்லுகிறார்கள். ஆனால் எல்லப்ப நாவலர் தம் புராணங்களில் பாயிரத்தின் இறுதியில் நூல் வரலாறு கூறிய இடத்தில் அல்லது நைமி

சாரணியச் சருக்கம் அல்லது திருமலைச் சருக்கம் என்ற பகுதியில் தொடக்கத்தில் அல்லது இறுதியில் இதைக் கூறுகிறார். இந்த இயல்பு திருவெண்காடு, தீர்த்தகிரி, திரு விரிஞ்சை, செவ்வந்தி, அருணாசலம், செங்காட்டங்குடி ஆகிய எல்லாப் புராணங்களிலும் காணப்படுகிறது.

மூவருக்குத் தனித் துதிகள் சொல்லிய பிறகு மாணிக்க வாசகருக்குத் தனியாகச் சொல்லாமல் பிறரோடு சேர்த்தே ஒரு பாடலில் சொல்லுகிறார். இந்த இயல்பை தீர்த்தகிரி விரிஞ்சை என்ற இரண்டிலும் நந்தியோடும் சண்டேசரோடும் சேர்த்துச் சொல்வதில் காண்கிறோம். வெண்காட்டிலும் செவ்வந்தி யிலும் செங்காட்டங்குடியிலும் நால்வருக்கும் நான்கு தனிப் பாடல்கள். அருணாசலத்தில் மட்டும் மூவருக்கு ஒருபாடலும் (விரிஞ்சைபோல) மாணிக்கவாசகருக்குத் தனிப் பாடலும்.

சுவேதகேது வரலாறு வெண்காட்டிலும் தீர்த்தகிரியிலும் காணப்படுகிறது.

5. வெண்காட்டில் சுவேதவனச் சருக்கத்தில் இரண்டு பாடல் களில் தலப் பெயர்களைக் கூறத் தொடங்கி தீர்த்தகிரி என்று தொடங்கி விரிஞ்சிபுரம் என்றும் குறிப்பிடுகிறார். இரண்டும் பாடல் பெறாத தலங்கள்; இவரே புராணம் பாடியவை.

6. வெண்காட்டில் நைமிசச் சிறப்புக் கூறுமிடம் சந்தனாடவி என்று தொடங்குகிறார். தீர்த்தகிரி நூலோ சந்தனாசலத்து அண்ணல் (பொதிகைமலைக்கு உரியவரான அகத்தியர்) என்று தொடங்குகிறது.

7. நூல்களின் பாடல்கள் பெரும்பான்மையும் 370-620 என்ற குறுகிய எல்லைக்குள் உள்ளன.

8. எல்லப்ப நாவலருக்குத் தொடர்களை மடக்கி மடக்கிச் சொல்வதில் விருப்பம் அதிகம். இதை எல்லாப் புராணங் களிலும் தொட்ட இடமெங்கும் காணலாம். ஆதலால் இங்கு தனியே எடுத்துக் காட்டவில்லை.

## எல்லப்ப நாவலர் மனைவி

நாவலருடைய மனைவியும் கல்வி கேள்விகளிலும் சைவ ஒழுக்கத்திலும் சிவபக்தியிலும் சிறந்து விளங்கியவர் என்பது வரலாறு. அக்காலத்தில், இவர் தோன்றிய குலமாகிய வேளாளர்

குடும்பங்களில் பெண்கள், இல்லறம் நடத்துவதற்குத் தங்கள் கணவன்மாருக்குத் தக்க துணையாகவும், தமிழ்ப் புலமை பெற்றவர்களாகவும் இருந்தார்கள். வெள்ளியார் என்ற பெயர் பற்றி, எமது 12ஆம் நூற்றாண்டு வரலாற்றில் சேக்கிழார் ஆராய்ச்சி யில் கூறியுள்ளவை* இங்கு நினைவு கூரத்தக்கன. நின்றசீர் நெடு மாறனும், மங்கையர்க்கரசியாரும் இருவருமே சைவ நாயன் மார் என்பதை நாம் அறிவோம். இளையான்குடி மாறர் முதலி யோர் வரலாற்றால் பெண்கள் அக்காலத்தில் கல்வியிலும் சமய உணர்விலும் சிறந்து விளங்கியமை நாம் அறிகிறோம். ஏறக்குறைய இதேகாலத்தில் (16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி) தென் பாண்டி நாட்டில் வரதுங்க ராமபாண்டியருடைய மனைவியும் புலமை யுடையவர் என்பது வரலாறு.❖ இவரும் அதே மரபில் வந்த புலமை பெற்ற பெண்பாலார். இவர்களெல்லாம், சைவத்தில் காரைக்காலம்மையார் வரிசையிலும் வைணவத்தில் ஆண்டாள் வரிசையிலும் வைத்து எண்ணத்தக்கோராவர்.

நாவலர் மனைவி புலவராயிருந்து பாடிய பாடல் நமக்குக் கிடைத்த போதிலும், அவரைக் குறித்த வரலாறு பெரிதும் ஐயத்திற்கிடமானது. ஏனெனில் அது சொல்லப்பட்ட மணவாள தாசர் 17ஆம் நூற்றாண்டுக்குரியவர். மணவாளதாசர் பாடிய பாடலாகிய 'வாடியோட வனச மன்ன' என்ற பாடலைக் கேட்டுச் சினந்த இந்த அம்மையார் அவர் கருத்தைப் பழித்து ஒரு செய் யுள் பாடினார் என்று கதை சொல்லுகிறது என்று முன்னமே குறிப்பிட்டோம். ஒருகால் இவ்விரண்டு பாடல்களும் தனிப் பாடல்களாயிருந்து பிற்காலத்தில் இரண்டையும் பிணைத்துப் புதிய கதை ஏற்பட்டிருக்கலாம். அல்லது இவ்வம்மையார் நீண்ட ஆயுளுடையவராயிருந்து, மணவாளதாசர் காலத்திலும் வாழ்ந் திருத்தல் கூடும். அப்படியிருந்தால், அருணைக் கலம்பகத்தில் சேர்த்துக் கொள்ளுமாறு சொன்ன கதை பொருந்தாது. இவர் பாடிய பாடல் பின்வருவது (கதைத் தொடர்பு வெறுங் கற்பனை):

கருடனோட மச்சமாமை கமலமோட முற்கரம்
    காட்டிலோட மூன்றிராமர் கண்டமட்டி லோடவே
மருளிவந்த சிங்கமோட வாமனென்பு பாறவே
    வஞ்சமுள்ள கண்ணனோட மாரனீறச் சேனனும்

---

* எமது தமிழ் இலக்கிய வரலாறு 12ஆம் நூற்றாண்டு

❖ பக்கம் 33 பார்க்க,

இருளினோட முண்டகத்தன் ஏங்கியோட வென்றவர்க்கு
ஈறுறாதங் குயிரளித்த ஏந்தல்யாவன் வேதமே
அருளுமந்த முதல்வன்யாவன் அருணைகண்டு வாழ்மினோ
ஆர்அநாதி மூலமென்ப தறிகிலாத மக்களே.

## அருணாசல புராணம்

*திருவண்ணாமலைக்கு அருணாசலம் (நெருப்பின் செந்நிறம் பொருந்திய மலை) என்ற பெயர் உண்டு. (பிற பெயர்கள் அருண கிரி, சோணகிரி, சோணாசலம் என்பன.) இந்த நூல் இத்தலத் திற்கு உரிய புராணமாகும். இந்தப் புராணம் பாடியவர் என்பதே எல்லப்ப நாவலருக்குரிய புகழில் பெரும் பகுதி. அருணாசல புராணம் இரு பகுதிகளாக அமைந்துள்ளது. முதற்பகுதி பாயி ரம், திருநகரச் சருக்கம், திருமலைச் சருக்கம், திரு அவதாரச் சருக்கம், திருக்கண் புதைத்த சருக்கம், பார்வதி இடப்பாகம் பெற்ற சருக்கம், வச்சிராங்கத பாண்டியச் சருக்கம் என்ற ஆறு சருக்கங்களையும் 451 பாடல்களையும் உடையது. இப்பகுதியை ஆசிரியர் வடமொழிச் சிவபுராணத்திலுள்ள ருத்திர சங்கிதை யிலிருந்தும், பின்பாகத்தை இலிங்க புராணத்திலிருந்தும் பாடி யதாகச் சொல்லுகிறார்.*

தேங்கு மன்பிற் சிவபுரா ணந்தனில்
ஓங்கு ருத்திர சங்கிதை ஓதினன்
பாங்கி லிங்க புராணப் பரப்பினும்
ஈங்க றிந்த படியும் இயம்புவேன்.

*இரண்டாம் பகுதி தீர்த்தச் சருக்கம், திருமலை வலம்புரி சருக்கம், ஆதித்தச் சருக்கம், பிரதத்தராசன் சருக்கம் பாவம் தீர்த்த சருக்கம், புளகாதிபச் சருக்கம் என ஆறு சருக்கங்களையும் 137 பாடல்களையும் உடையது. மொத்தச் சருக்கம் 12, பாடல்கள் 586. இரண்டாம் பாகத்துக்கும் தனியான ஒரு கடவுள் வணக்கப் பாடலைத் தொடக்கத்தில் சேர்த்திருப்பது காணத்தக்கது.*

*பாயிரத்தில் நூல் வரலாறு கூறிய இடத்தில் இரண்டு பாடல் களால் (21-22) நூற்பொருள் (பதிகம் போல) கூறுகிறார். அப்படியே இரண்டாம் பாகத்தின் முதற் சருக்கம் (தீர்த்தச் சருக்கம்) 5-6 பாடல்களில் அதற்கான நூற்பொருள் (பதிகம்) கூறுகிறார். (பின்னால் வல்லாள மகாராசன் சரிதம் பாடிச் சேர்த்தவர் இந்த நிலையை யுணராது, பாயிரத்தில் மூன்றாம் பாடலொன்று சேர்த்து அதில் அக்கினி குல வல்லாள ராசன்*

*கதை என்று குறிப்பிட்டு, பிற்பாகத்தில் சொல்லிய சருக்கங்களின் பொருளையும் தொகுத்துச் சொல்லுகிறார். ஆசிரியருக்குப் பிற் பாகத்துக்குரிய வடமொழி மூல நூல் கிடைத்து இதைப் பாடிய போது இதற்கு உரிய இடத்தில் தனிப் பதிகம் சேர்த்திருக்கிறார். ஆகவே முதலில் இதைச் சேர்த்தது கூறியது கூறல் என்னும் குற்றமாகும்.)*

*இந்நூல் வியாசர் கூறிய புராணம் என்று கூறும் காப்புச் செய்யுளோடு தொடங்குகிறது. பாயிரத்தில் நடேசர், தவமகிமை (3 பாடல்), பரமசிவம், அருணாசலேசர் (2 பாடல்), உண்ணாமுலை யம்மை, விநாயகர், முருகர், மூவர் முதலிகள், வாதவூரடிகள், தொண்டர் (2 பாடல்) என்ற பகுதிகள் உள்ளன. பல, சந்தப் பாடல்கள். நடேசர் துதி சிறப்பானது:*

முதிருஞ்சுவை மதுரம்பெற மொழியுந்தமிழ் விரகன்புகழ்
பதிகம்புனை பவனம்பினர் பவபஞ்சன னமலன் கதிர்
உதிரும்படி பகிரண்டமு முடையும்படி இலகும்படி
அதிரும்படி நடனம்புரி அதிருங்கழல் அதிருங்கழல்.

*இவர் பாடும் பரசிவத் தோத்திரம் 'உயர்வற உயர்நல முடை யவன் யவனவன்' என்ற நம்மாழ்வார் திருவாய் மொழி முதற் பாடலைத் தழுவியது:*

உறவொடு பகையகல் ஒருமுத லவனெவன்
இறுதியி லுலகருள் இறையவ னவனெவன்
மறைமுடி வினில்நடம் வளர்பவ னவனெவன்
அறிவினி லறிபவன் அடியினை தொழுதனம்.

*அருணாசலேசர் துதியாகிய 'ஒரு மானைக் கரத்தினில் வைத்து' என்ற பாடல் எல்லோரும் அறிந்தது. உண்ணாமுலையம்மை துதியில் ஒழுகுதல் என்ற சொல்லும் கருத்தும் பாட்டு முழுமை யிலும் ஒழுகி வரும்படி பாடுகிறார்.*

காரொழுகுங் குழலாளைக் கருணை வழிந் தொழுகுமிரு
    கடைக்கண் ணாளை
மூரலிள நிலவொழுகப் புழுகொழுக அழகொழுகும்
    முகத்தி னாளை
வாரொழுகுந் தனத்தாளை வடிவொழுகித் தெரியாத
    மருங்கு லாளைச்
சீரொழுகும் பதத்தாளை அருணையுண்ணா முலையாளைச்
    சிந்தை சேர்ப்பாம்.

திருநகரச் சருக்கத்தில் 15 நதிகளை ஒரு பாடலிலும், காசி, ஆரூர், சிதம்பரம், முதுகுன்று, கேதாரம், பருப்பதம், காளத்தி, கச்சி, விரிஞ்சை ஆகிய தலங்களைத் தனித்தனிப் பாடல்களிலும் கூறுகிறார். பூந்தராய், ஐயாறு, இடைமருது, குடந்தை, ஆனைக்கா, சிராமலை, வாட் போக்கி ஒரு பாடலிலும், மதுரை, இராமேச்சுரம் ஒரு பாடலிலும் சொல்லப்படுகின்றன. இங்கு, பாடல் பெற்ற தலங்களோடு விரிஞ்சையையும் ஒரு பாடலால் சொல்லியிருப் பது தாம் அத்தலத்துக்குத் தலபுராணம் பாட எண்ணியிருந் தமையால் போலும். ஒரு பாடலில் இலிங்கவகை ஆரிடம் முதலான ஆறு என்றும், அருணையில் மலையே இலிங்கம் என்றும் கூறுகிறார். இது தென் கயிலை. பெண்ணை செய்யாறு மலைநதி மூன்றும் இடை பிங்கலை சுழுனை நாடிகள்.

தில்லையைக் காணக் காசியில் இறக்கச்
சிறக்கும் ஆரூர்தனிற் பிறக்க
எல்லையில் பெருமை அருணையை நினைக்க
எய்தலாம் முத்தி என்றுரைத்தீர்.

எவ்வாறு அருணை அதிகம் என்று ஒரு பாடலில் கேட்கிறார். இதே கேள்வி வெண்காட்டுப் புராணத்திலும் அத்தலம் எவ்வாறு சிறப்புடையது என்று கேட்கப்படுகிறது. திருமலைச் சருக்கம் பிரமனும் திருமாலும் அடிமுடி தேடிய வரலாறு. எங்கும் சந்தத் தொடர்களும் முரண் தொடைகளும் காணப்படும். ஓரிடத்தில் சில பாடல்கள் முழுமையும் அடிமடக்காகவே வரக் காண் கிறோம். ஏழு நாளும் வலம் வரும் பலனைத் தனித்தனியே உரைக் கிறார். அணியண்ணாமலை என்ற தலம் சொல்லப்படுகிறது.

இவ்வாசிரியரே நூலின் இரண்டாம் பாகம் புதிதாய்ச் சேர்த்தாரென்று, இப்பாகத்துக்குத் தனியே ஒரு கடவுள் வாழ்த்துப் பாடிச் சேர்த்திருப்பதால் அறியலாம். இப்பாடல் விநாயகர், முருகன், அருணாசலேசர், அம்மை ஆகியோரைத் துதிப்பது; எல்லப்ப நாவலருக்குரிய நடையும் இதில் காணப்படுகிறது:

செருமலையும் களிற்றுமுகப் பிள்ளை பதம் போற்றி, திரு
வாயால் முத்தம்
தருமலையும் ஒருமலையும் தொலைத்தமலைக் கிழவன்இரு
சரணம் போற்றி,
பொருமலையும் இரங்கலையும் அடியாருக்கு ஒழிக்கஅழற்
பொருப்பாய் நின்றென்
கருமலையும் செம்மலையும் பச்சைமலை மடந்தையையும்
கருத்துள் சேர்ப்பாம்.

இந்நூலில் தொட்ட இடமெல்லாம் சைவப் பயிர், தெய்வத் தமிழ் என்று போற்றிக் கொண்டே போவதைக் காணலாம். சில ஏடுகளில் அருணாசல புராணமும் அருணகிரிப் புராணம் என்றே காணப்படுகிறது. உரையோடு கூடவே புராணம் உள்ளது. அச்சிடப்பட்டுள்ள உரை புதிய உரை; ஏட்டில் உள்ள உரை அச்சிடப்படவில்லை என்று தெரிகிறது.

மறைஞான சம்பந்தர் செய்த அருணகிரிப் புராணம் என்று வேறு புராணமும் இத்தலத்துக்குரியது. அது அடுத்த அத்தியாயத்தில் கூறப்பெறும்.

### பதிப்பு

இந்நூல் முதன்முதல் 1855இல் மழவை மகாலிங்க ஐயர் தாம் எழுதிய உரையோடு பதிப்பித்தார். பின்னர் எண்ணற்ற பதிப்புக்கள் இந்நூலுக்கு வெளியாகி இருக்கின்றன. பொதுவாக அதிகம் வழங்குகின்ற பதிப்பு பி.வே. நமசிவாய முதலியார் நிரஞ்சன விலாச அச்சகப்பதிப்பு, 1912 முதலான பல ஆண்டுகள். இதனுள் நூலாசிரியர் சரித்திரமும் சருக்கம் தோறும் ஐதிகப் படங்களும் உள்ளன. மேலும் அண்ணாமலை சம்பந்தமாக வழங்குகின்ற 27 தனிப் பிரபந்தங்களும்* சைவ சம்பந்தமான பல செய்திகளும், தீபதரிசனம், படலம்தோறும் புராணத்தின் சுருக்கம் முதலிய பகுதிகளும் சேர்த்து 870 பக்கம் கொண்ட பெரிய புத்தகமாக இது அச்சிடப்பட்டுள்ளது.

### வல்லாள மகாராசன் கதை

இப்பதிப்பில்தான் வல்லாள மகாராசச் சருக்கம் இடையில் புதிதாகச் செருகப்பட்டுள்ளது. இங்கு ஆசிரியரே 'வச்சிராங்க பாண்டியன் சரிதம் நவின்றோம், இனி வல்லாள மகாராசனுக்கு ஈசனே மகவாக வந்த செய்தியைச் சொல்லுகின்றோம்' என்று தொடங்குவதாக ஒரு பாடல் வந்துள்ளது. வல்லாளன் சரித்திரம் 61 பாடல் கொண்டது. இது எம்மிடமுள்ள உரையோடு கூடிய புராணம் ஏட்டுப் பிரதிகள் ஆறினுள் ஒன்றிலும் காணப்படவில்லை. மகாலிங்க ஐயர் அருணாசல புராணம் பதிப்பித்த பிறகு இப்பகுதி புதிதாக எழுதி இடையில் செருகப்பட்டது என்று தெரிகிறது. இவ்வாறு இடைச்செருகல் ஏற்படக் காரண

---

* திருவண்ணாமலைக்கு அளவற்ற பிரபந்தங்களும் தனிப் பாடல்களும் எழுந்துள்ளன. அவற்றின் பெயரை மட்டும் குறிப்பிடுவதற்குக் கூட இங்கு இடம் போதாது.

மாயிருந்தது இன உணர்ச்சி என்று தோன்றுகிறது. வல்லாள ராசன் அக்கினி குலம் என்று அந்தச் சருக்கம் கூறுகிறது' அது பற்றியே அக்கினி குலத்தார் இந்நூலை மிகவும் சிறப்பாய்க் கொண்டாடுகின்றனர் என்று தெரிந்தோர் கூறுவர் ஆனால் தமிழ்நாட்டில் சோழநாட்டுப் பகுதியில் நெடுநாளாகச் சைவ வேளாளர் அனைவர் வீடுகளிலும் காணப்பட்ட புராண ஏடு களின் வரிசையில் அருணாசல புராணம் மிகவும் முக்கியமான தாகும்; ஏனைய புராணங்கள் பெரிய புராணம், பிரமோத்தர காண்டம், திருவிளையாடற் புராணம் என்பன.

வல்லாள மகாராசன் சரித்திரம் பின்வருவது. வல்லாளன் அருணையில் ஆட்சி செய்தான். புத்திரப் பேறில்லாதிருந்த போது, யாருக்கும் எதையும் தருவதாக முரசறைவித்தான். அவனுக்கு அருள் செய்யும் நோக்கத்தோடு சிவபெருமான் ஒரு சங்கமர் வடிவில் அரசனையடைந்து தாம் சிற்றின்பம் நுகர் வதற்கு ஒரு பெண் வேண்டுமென்றார். அரசர் கணிகையரை யழைப்பிக்க, அப்போது கணிகையர் எல்லோர் வீடுகளிலும் ஒரு சங்கமர் இருக்கக் கண்டான். அரசன் வருந்தியிருந்த நிலையில், எல்லமாதேவி என்ற அவனது இளைய மனைவி தான் சங்கமர் கருத்துக்கு இசைவதாய்க் கூறி, அவரை நெருங்கித் தொட்ட வுடன், அவர் ஓர் இளம் குழந்தையாக மாறினார். குழந்தையின் பொலிவைக் கண்டு அரசனும் அரசியும் மகிழ்ந்திருக்க, குழந்தை மறைந்து ரிஷபாரூடராய்ப் பெருமான் காட்சியளித்து, வல்லாளன் முடிவுக் காலத்தில் புத்திரனாக வந்து செய்யத்தக்க கிரியைகளெல்லாம் செய்து, முத்தியளித்தார்.

இக்கதையோடு பெரிய புராணத்தில் கூறுகின்ற இயற்பகை நாயனார் வரலாறும் ஒப்புநோக்கத்தக்கது. நாயனார் தமது மனைவியைப் போலி அடியவருக்குக் கொடுத்து விட்டார். இக்கதை பல மொழிகளில் பரவியிருக்கிறது. கன்னட நாட்டில் இவருக்குச் சிந்துபல்லாளன் என்று பெயரிடப்பட்டுள்ளது. இங்கு சிவபெருமான் ஒரு சங்கமர் வடிவம் தாங்கி ஒரு விடனாக வருகிறார். கூர்ஜர நாட்டில் சிந்து கடகம் என்ற பகுதியில் பல்லண்ணன் என்ற அரசன் ஆட்சி புரிகிறான். கேட்டதை யெல்லாம் பெறலாம் என்று அரசனிடத்தில் அனுமதி பெற்றுக் கொண்டு, அவர் அவனுடைய மனைவியையே கேட்டுப் பெறு கிறார். பெற்றவுடனே, அவள் தீண்டவும் அவரே ஒரு குழந்தை யாக மாறிவிடுகிறார்.

இவ்வரலாறே அருணாசல புராணத்தில் சொல்லப்பட்ட கதை. வல்லாளன் என்பது போசள மன்னர் பலருக்கு இருந்த பெயர். இம்மன்னர் திருவண்ணாமலையில் மிக்க ஈடுபாடு உடையவர். பிற்காலத்தில் போசளவமிசம் அழிந்து போயிற்று. அதன் மேல் சந்ததியில்லாமல் இறந்த அரசனுக்காக, நன்றியுடைய திருவண்ணாமலைச் சமுதாயம் அவனுக்கு ஒரு சிராத்தத்தைக் கற்பித்து, அண்ணாமலையாரே பிள்ளையாக வந்து சிராத்தம் செய்தார் என்ற கதையையும் தோற்றுவித்திருக்கிறது.

சத்தியவான் என்ற முனிவரைப் புடைத்த இரத்தநாயகி என்ற அரக்கியைச் சிவபெருமான் வயிரவ வேடத்தோடு அழிக்க அவள் உதிரம் பரந்த காரணத்தால் தலம் செங்காடு என்று பெயர்பெற்றது. முடி காணாது பொய் சொன்ன பாவத்தைப் பிரமன் இத்தலத்தில் தவம் செய்து போக்கினான். தாழையும் இங்கு தவம் செய்து, தான் சிவபிரானால் சூடப்பெறாவிடினும், ஆத்திமரமாகித் தன் நிழலில் சிவபிரான் வதியப்பெற்றது. இத் தலவிருட்சமாகிய திருவாத்தி வேறெங்குமில்லாத அளவு பெரிய படர் ஆத்தியாக இருப்பதை இன்றும் காணலாம்.

சங்கமர், எல்லமாதேவி என்பன வீர சைவப் பெயர்கள். வல்லாள மகாராசன் சருக்கம் ஏடுகளிற் காணப்படவில்லை என்பது மட்டுமல்ல; சிறந்த சைவராகிய நாவலர் இவ் வீர சைவச் சார்பாகக் கதையைப் பாடியிருக்கவும் முடியாது.

மற்றொரு செய்தியும் இங்கு சொல்லத்தகும். சகம் 1722 இல் (கி.பி. 1800) காஞ்சிமாநகரம் வீரணப் புலவர் என்ற சிறந்த புலவர் அருணாசல புராணத்தையொட்டி விரிவான அருணாசல கீர்த்தனை பாடினார்; இதில் இவர் பாடியிருக்கும் 208 சந்த விருத்தங்களையும் பார்த்தால் இவர் எத்துணைச் சிறந்த புலவர் என்பது புலப்படும். இவர் புராணத்திலுள்ளவாறு தம் சருக்கங்களை அமைத்திருக்கிறார்; பாயிரத்தில் தொடங்கிப் புளகாதிபச் சருக்கத்தில் கீர்த்தனை முடிகிறது; கீர்த்தனை உருப்படிகள் மொத்தம் 190. இங்கு வல்லாள மகாராசன் சரித்திரம் இல்லை. இந்நூல் 1856இல் அச்சிடப்பெற்றது. எனவே, 1800 வரையில் வல்லாள ராசன் சரித்திரம் புராணத்தில் ஏறவில்லை; 1856க்குப் பிறகே ஏறியிருக்கக்கூடும். பிற்காலத்தில் வல்லாள மகாராசன் நாடகம், கும்மி முதலான பல்வகை நூல்கள் எழுந்துள்ளன.

## திருவெண்காட்டுப் புராணம்

சைவ சித்தாந்த முதல் சந்தானாசாரியராகிய மெய்கண்டார் அவதாரச் சிறப்புக்குக் காரணமான தலம். எல்லா வகையாலும் பெருஞ் சிறப்புடையது. ஆசிரியரான எல்லப்ப நாவலர் பிறந்த இராதா நல்லூர் என்பது இத்தலத்திலிருந்து நான்கு மைல் தூரமே உள்ளது. புராணம், பாயிரமும் 18 சருக்கங்களும் 614 பாடல்களும் உடையது. பாயிரப் பகுதி 35 பாடல்; முதல் 25 பாடல் கடவுள் வாழ்த்து; அவையடக்கம் நூல் வரலாறு; அடுத்த இரண்டு பாடல் பதிகம்; பின் எட்டுப் பாடல் நைமிசாரணியச் சிறப்பு. பிறகு நூல் தொடங்குகிறது. கடவுள் வாழ்த்துப் பகுதியில் இத்தலத்துக்குச் சிறப்பாயுள்ள அகோர மூர்த்திக்கும், தக்ஷிணா மூர்த்திக்கும் வணக்கம் சொல்கிறார். தனியாக மூவர் பாடிய திருமுறைகளேழையும் தனிப் பாடலால் துதிப்பது சிறப்பானது. (திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத் தமிழ் பாடியவர் இவ்வாறு திருமுறை வணக்கம் கூறியிருப்பது இங்கு அறியத்தக்கது.) பின்னர் நால்வர், திருநந்திதேவர், பட்டினத்தார் - வணக்கம் சொல்கிறார். நந்தியைக் குறித்த பாடலில் இவர் நூல்களில் காணப்படுவது போல பிறருக்கும் - நந்தி, அப்பாலு மடிச் சார்ந்தார், அகத்தியர், ஆகியோருக்கும் - வணக்கம் சொல்கிறார். மெய்கண்டார் வணக்கம் இரண்டு பாடல்களில். இறுதியில் இரு பாடல்களில் தொண்டர் வணக்கமும் நான்கு பாடல்களில் அவையடக்கமும்.

அம்பிகையாகிய பெரியநாயகியம்மைக்கு வணக்கம் சொல்வதில், ஆசிரியர் திவ்விய கவி என்று சிறப்புப் பெறுதற்குரிய சொற்சிறப்பைக் காண்கிறோம்:

அடையார் தம் புரமூன்றும் அடர்ந்த பிரான்
    புவனமுய்ய ஆடா நிற்பான்
பெடை தழுவும் சுவேதவனம் புடைசூழும்
    சுவேதனப் பெருமா னார் தம்
தொடைதிகழும் மணிப்புயமும் திருமார்பும்
    குழைத்த கொங்கைத் துணையி னாளை
இடைசிறிய நாயகியை அருட்பெரிய
    நாயகியை இறைஞ்சு வாமே.

உமாபதி சிவம் திருத்தொண்டர் அனைவருடைய வரலாற்றையும் சுருக்கி ஒவ்வொரு பாடல் வீதம் திருத்தொண்டர் புராண

சாரம் என்றொரு நூல் பாடியிருக்கிறார். (அதனுள் சம்பந்தர், அப்பர் போன்றார் சிலருக்கு மட்டும் இரு பாடல்கள்.) அதை எண்ணி இவர் இங்கு மெய்கண்டார் துதி சொல்லுமிடத்துப் புராணசாரமாக இரு பாடல்கள் பாடியிருக்கிறார்.

மெய்க்கடந்தை யச்சுதனாம் களப்பா ளன்தான்
விருப்ப மிகுஞ் சிறுவருக்கா வெண்கா டெய்தி
முக்குளத்திற் படிந்துதவம் புரியும் போது
மோனியெனும் ஒருபுதல்வன் முதல்வன் ஈந்தான்
தக்கபுகழ்ச் சுவேதவனப் பெருமாளென்றே
தனயனுக்குத் திருநாமம் தரிப்பித் தைந்து
கைக்களிறு வரங் கொடுக்கும் வெண்ணெய் நல்லூர்க்
காங்கெயபூ பதிமனையிற் கலப்பித்தானே.

பன்னுசிவ சமயநெறி வளர வேண்டிப்
பரஞ்சோதி யடிகளந்தப் பதியின் மேவி
மன்னுபுகழ்ச் சுவேதனப் பெருமா ளிங்கே
வருகவென விளம்புதலும் மவுன நீங்கித்
தன்னிகரில் அவனதருள் பெற்றுச் சைவ
சந்தான நெறிதழைக்கத் தமிழ்நூல் செய்தோன்
அன்னையிலன் புடையவன் மெய் கண்டதேவன்
அடியவருக் கடியவர்தாள் அகத்திற் சேர்ப்பாம்.

மெய்கண்டார் மூன்று வயதாகி, அதுவரையில் மௌனமாக இருந்து பின் பரஞ்சோதி முனிவர் உபதேசம் பெற்றுத் தம் தாய்மாமன் திருவெண்ணெய் நல்லூர்க் காங்கேய பூபதியால் வளர்க்கப் பெற்றார் என்பதற்கு ஆதாரம் இப்புராணம் கூறும் வரலாறொன்றே. இந்நூலில் வரும் நால்வர் துதி அவையடக்கம் முதலியன, ஆசிரியர் மற்றைப் புராணங்களிலும் அமைத்துக் கொண்டிருப்பது முன்னமே சொல்லப்பட்டது.

நூலுள் பல பொருள்கள் சிறப்பானவை. சிவபிரானின் கண்கள் மூன்றும் முக்குளங்கள். சுவேதவனச் சருக்கத்தில் நதிகள், மலைகள் ஒவ்வொரு பாட்டினாலும், தலங்கள் (47) இரண்டு பாடல்களாலும் சொல்லுகிறார். எமதூதர் பிணித்தபோது வேதராசி என்பவன் சிவபெருமானை முறையோ என்று ஓலமிட்டு அழைக்கின்றான்.

துனியா மடியார் துணையே முறையோ,
கனியே எளியார் கதியே முறையோ,

இனியா ரினியார் இலைகாண் முறையோ
முனிவோ ரரசே முறையோ முறையோ.

*சுவேதச் சருக்கத்தில், வாழ்நாள் முடிந்ததாயின் முள் கிழித்தாலும் உயிர்போகும்; வச்சிரம் உருவினாலும் உறுதி நாள் உள்ளவர்கள் வாழ்வார்கள் என்று சொன்னார். இது இந்த இருபதாம் நூற்றாண்டில், நீர் ரோகம் உள்ளவர்களுக்கு ஒரு முள் குத்தினால் கூட அதற்குச் சிகிச்சை செய்ய இயலாமல் உயிர் பிரிகின்றதைப் பார்க்கிற நமக்குச் சிறிதும் வியப்பாயிராது.*

இறுதி நாள்வரின் முட்கிழிக்கினும்
 எவரும் ஆவி இழப்பர் காண்
உறுதிநாள் உளதாயின் வச்சிரம்
 உருவினார்களும் உய்வர்காண்.

*அடுத்து, சுவேதன் தன்னைப் பற்றவந்த எமனை வெருட்டுவதாக ஏழு பாடல்கள் பாடியிருக்கிறார்.*

பாரெடாவரு பன்றி தேடிய பாதமென் துணை பாசமாம்
நாரெடா தினியோடு நின்வழி நான்வராமல் இருக்கவும்
வேரெடா கெடவந்ததென்ன விசாரமென்னை வெருட்டநீ
ஆரடாகடி தோடடா, கொலை அந்தகா கொலை அந்தகா.

*என்பது முதற்பாட்டு. பெருமான் எழுந்தருளி வந்ததைச் சொல்லி பின்வருமாறு துதிக்கிறான்:*

ஆழி கடைந்தோனும் அயனும் மகபதியும்
வாழியுனது மணிவாயில் காத்திருக்கப்
பூழிபடு நாயிற் புழுவிற் கடையான
ஏழை அடியேற்குஏன் இரங்கி எதிர் வந்தாயே?

*மருத்துவச் சருக்கத்தில் மருத்துவனது படையை அழிக்கின்ற இடபத்தின் செயல் பல பாடல்களால் விரிவாகச் சொல்லப்படுகிறது. ஒரு பாடல் இங்கே கருதலாம்:*

பெருகு கிம்புரி மருவுகொம்பிரு பிறையெனும்படி கிளரவே
கிரண சங்கிலி சாமரம்பல கிண்கிணித் தொகை புரளவே
சரண நூபுரம் அணிசதங்கைகள் சலசலஞ்சலசலெனவே
பெருகளம்புடை படநடந்தது புனிதரேவிய இடபமே.

*இங்குச் சொல்லப்பட்ட செய்திகள் போர் வருணனை போல் அமைந்துள்ளன. சத்திய நல்விரதச் சருக்கத்தில் கள்குடியின்*

இழிவு பற்றி விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. இலிங்கச் சருக்கத்தில் திருவெண்காட்டைச் சுற்றியுள்ள பல தலங்களும் அங்குள்ள சிவ மூர்த்தங்களும் சொல்லப்பட்டன. இத்தலத்துக்குரிய தாண்டவம், கௌரி தாண்டவம் என்று பெயர்பெறும். வெண்காட்டு ஈசர் ஆனந்தக் கூத்து ஆடியதை இவர் கூறும் பாடல்கள், திரு மந்திரத்தை நினைவூட்டுகின்றன.

தேவ ராடினர் சித்தரு மாடினர்
தாவ ராதிகள் சங்கம மாடின
மூவ ராடினர் முச்சுட ராடின
ஆவி லேறினான் ஆனந்த மாடவே.

சுத்தவேதச் சுருதிக ளாடின
பத்த ராடப் பதஞ்சலி யாடினன்
நித்த னேகன் நிமலன் அசஞ்சலன்
சத்த னானந்தத் தாண்டவ மாடவே.

இம்ப ராட இருடிய ராடினர்
தும்பி யாரிரு தோளவ ராடினர்
கம்பை நாயகி கைத்தலங் கொட்டிடச்
சம்பு வானந்தத் தாண்டவ மாடவே.

ஒவ்வொரு தல வரலாறும், அத்தலமே எல்லாவற்றுக்கும் மேலானது என்று கூறுவது ஒரு புராண மரபு. இதை அருணாசல புராணத்திலும் கண்டோம்; இங்கும் சொல்லுகிறார்: 'பொற்பொது, அருணை, ஆரூர், காசி, தெரிசிக்கச் சிந்திக்கச் செனிக்க மாய - ஒப்பறு வீடுதவும்; அவை யுதவும் பேற்றை ஒருங்காவே கணப் போதில் உதவும் இவ்வூர் (திருவெண்காடு).'

பாயிரத்துள் நடராசர், அகோர மூர்த்தி, தட்சிணா மூர்த்திக்குரிய துதிப்பாடல்களும், அவையடக்க நாலாம் பாடலாகிய 'அலர்மதியுமென் கவியும்' என்ற பாடலும் ஏடுகளில் காணப்படவில்லை. இவர் பாடிய திருவாதவூரர் துதி எல்லோரும் நன்கறிந்தது:

சிற்றம்பலக் கோவைத் தேன்சொரியும் செம்முகிலை
மற்றொப்பி லாததிரு வாசகத்தின் வாரிதியைக்
கற்றைச் சடையான் கருத்துருக்கும் காதலனைக்
கொற்றத் திருவாத வூரனைக்கை கூப்புதுமே.

திருவெண்காடராகிய பட்டினத்தார் துதி இவர் பாடுவது இயல்பு. அவரைப் பற்றிய இரு புதுக் கருத்துக்களைக் கூறுகிறார். ஒன்று

அவர் திருவாரூர் மும்மணிக்கோவை பாடினார், இரண்டு திரு வெண்காட்டுத் திருவிசைப்பா பாடினார் என்பது:

தம்மகத்திற் செல்வமெல்லாம் பொய்யென் றெண்ணிச்
சத்தியமெய்ப் பொருளுணர்ந்து தவத்தோர் போற்றச்
செம்மலுக்குத் திருவிசைப்பா இசைத்துத் தெய்வ
சிகாமணியாந் திருவாரூர் செல்வ னார்க்கு
மும்மணிக் கோவையும் பகர்ந்து திருவெண் காட்டின்
முதல்வருக்கு மகபூசை முடித்தோர் நாகப்
பைம்மணித்தார் காவிரிப்பூம் பட்டினத்துப்
பட்டினத்துப் பிள்ளைபதம் பரவு வாமே.

இன்றுள்ள திருவாரூர் மும்மணிக்கோவை, பதினொராந் திரு முறையில் உள்ளது; சேரமான் பெருமாள் பாடியது. ஆனால் பட்டினத்தார் வேறொன்று பாடினார் என்பதற்கோ பாடவில்லை என்பதற்கோ ஆதாரமில்லை.* ஆனால் திருவிசைப்பாக்கள் யாவை என்பதற்குத் திட்டமான ஆதாரங்கள் உள்ளன. இவற்றில், பண் தலம் ஆசிரியர் பதிகம் பாடல் தொகை கூறும் பழம் பாடல் கள் பட்டினத்தாரைக் குறிப்பிடவில்லை. எனினும், எல்லப்ப நாவலர் கூற்றை ஆதரவாக வைத்து மூன்று பாடல்கள் பட்டினத் தார் திருவிசைப்பா என்று சொல்லப்பட்டுள்ளன.

ஞானத்தின் சிறப்பைக் கூறுகின்ற ஒரு பாடல்:

அரச னுக்கிணை யாகுமோ பரிசன மனைத்தும்
தெரியின் ஞானநே ராகுமோ கிரியையின் திரளும்
பரிசனங்கள் பற்பல பெறில் அரசனோர் படைக்கும்
கிரியை பற்பல புரிந்திடின் ஞானமுங் கிடைக்கும்.

நதிகள், மலைகள், தலங்கள் என்பன கூறும் பாடல்களில், இராமகிரி என்றொரு மலைத்தலத்தைக் கூறுகிறார். இது இந் நாளில் இப்பெயரோடு வழங்குகிறது; இது தேவாரத்தில் வரும் திருக்காரிக்கரை என்ற வைப்புத்தலமாகும். நகரச் சருக்கத்தில் ஒரு பாடல் இத்தலத்துக்குரிய 14 திருப்பெயர்களையும் கூறுகிறது. சத்திய நல்விரதன் என்ற சோழனைக் குறிப்பிடும்போது, 'நீ புறாவின் துயர் துடைத்த சோழ மரபினன், முதுமக்கட்சாடி பல வைத்த குலதீபகன்' என்கிறார். புறாக்களுக்காகத் துலைபுக்க சிபி வரலாறு எல்லோரும் அறிந்தது. பின்கூறிய முதுமக்கட் சாடி வைத்த செய்தி ஒட்டக்கூத்தர் உலாக்களில் குறிப்பிடப்பட்டது.

---

* பதினோராந் திருமுறை பற்றி யாம் எழுதியுள்ள குறிப்பைக் காண்க. எமது தமிழ் இலக்கிய வரலாறு பத்தாம் நூற்றாண்டு.

திருமுறைகளிடத்து ஆசிரியருக்கு மிக்க ஈடுபாடு தேவாரத் திருமுறை ஏழுக்கும் தனி வணக்கமே பாடியிருக்கிறார்:

காழிதனிற் பெருமானைக் காட்டியகைத் தமிழ்விரகன்
 கழற்றாள் போற்றி
ஆழியிலே குண்டரிடுங் கல்மிதப்ப வந்தபிரா
 னடியை யேத்திச்
சூழியிப மன்றுரித்தார் துணையான தோழனடித்
 துணையை வாழ்த்தி
வாழியவர் திருமுறைக ளேழையும் நம் மனதார
 வழுத்து வாமே.

அன்றியும், நூலின் இறுதி வாழ்த்துப் பாடலில், 'திருமுறைக ளேழும் வாழியே' என்றும் தனியே வாழ்த்துவதும் காணத்தக்கது.

## பதிப்பு

இப்புராணம் 1905இல் நூலாசிரியர் மரபில் வந்தோர்களால் பெருந்தோட்டம் பிரபல ஆசிரியர் துரைசாமிப் பிள்ளை பார்வையில் சென்னை ஈக்காடு இரத்தினவேலு முதலியாருடைய பண்டித மித்திர அச்சு இயந்திர சாலையில் பதிப்பிக்கப்பட்டது. ஆசிரியர் வரலாறும் சருக்கந்தோறும் வசனத்தில் கதைச் சுருக்கமும் எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளன. திருவெண்காட்டுத் திருவிசைப்பா என்று இரண்டு பாடல்கள் இங்கு உள்ளன. பதிப்புக்குச் சாற்றுக் கவி கொடுத்த பு.வே. கலியாணசுந்தர முதலி யார், ஈக்காடு முதலியார் போன்றவர்கள், எல்லப்ப நாவலர் காலிங்கராய கோத்திரம், பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் தோல்வியுறும் வகையில் பாடியவர், சைவ - திவ்விய கவி என்ற பட்டங்கள் பெற்றவர் என்ற செய்திகளைக் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

## திருவெண்காட்டுப் புராணசாரம்

சைவ வேளாள மக்கள் திரளாக வாழ்ந்திருந்த திருவெண்காட்டுப் பகுதியில், நாவலர் பாடிய திருவெண்காட்டுப் புராணத்துக்குப் பெருமதிப்பும் ஆட்சியும் இருந்தது. அதன் கதைகளைச் சுருக்கி, 20 விருத்தப் பாடல் கொண்ட திருவெண்காட்டுப் புராண சாரம் என்றொரு நூலைப் பிற்காலத்தில் பக்தரொருவர் பாடிவைத்தார். திருவெண்காட்டுப் புராணம் கேட்ட சிவனார் செவிக்கு வேறு புராணம் ஏறாது; அதன் கதையைத் தொகுத்துச் சண்டேசனார் செவிக்கேறுமாறு கூறுகிறேன் என்று இவர் பாடுகிறார். 16 பாடல்களே கிடைக்கின்றன. இருபாடல்கள் பின்வருவன:

சோதிவெண் காடொன் றாறுநூற் றாறு
    தொடையினால் விரித்தனர் புராணம்,
தொடையினால் விரித்த புராணமத்தனையும்
    தொடையலாய்ப் புனைந்தனர் சிவனார்.

ஏதினி யொருவர் பாடுவ தெல்லாம்
    திருச்செவிக் கேறுவ தன்றே
இப்புரா ணத்தின் சாரமே றுவதென்
    றிருப்பகு தாய்க்கவி தொகுத்தேன்.

ஆதிநாட் சாத்தி அருந்தவர்க் களித்தால்
    அடியர் சண்டேசனார்க் கேறும்
அவரடி யாருக் கடிமை நானல்லால்
    அமலனார்க் கடிமைநான் போதா.

மாதவ ராறு பத்துமூ வரையும்
    வணங்குவான் வணங்குவான் முடிக்கு
மதிமுடித் தவரை மதிமுடித் தவரை
    வலஞ்செய்த ஞானவா ரணமே.

துவாபர யுகத்தில் சுவேதனாம் அரசன்
    சூழ்வலம் பூதலம் வந்தான்
தோகையை இழந்தான் மரித்திடா திருக்கச்
    சோதியே இத்தலம் புகுந்தான்.

தவாது முக்குளமும் படிந்துசே வித்துத்
    தவத்துடன் அருச்சனை செய்தான்
சண்டனைக் கண்டே இலிங்கமெய் யாரத்
    தழுவினான் கயிறுகொண் டிழுத்தான்.

குவாலுடை வீர பத்திரச் சேனை
    கோட்டினை தோற்றினை எதிரே
கொடுத்தனை நுதற்கண் முதலசா ரூபம்
    குணக்கட லமுதமே இருகாற்

கவான்மிசைக் கிடத்தி வலச்செவி மேலாய்க்
    காத்தருள் இத்தவந் தருவாய்
கரிய மெய் யகோர பெரியநாயகி வெண்
    காடனே கயிலைநா யகனே.*

---

* *திருவான்மியூர் டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையம், சுவடி விளக்கம் தொகுதி 2, பக்கம் 170, 1961.*

## செவ்வந்திப் புராணம்

செவ்வந்திப் புராணம் திருச்சிராப்பள்ளி என்ற பாடல் பெற்ற தலத்துக்குரியது. இப்புராணம் தலப்பெயரால் பெயர் சூட்டப்பெறாமல் ஒரு மலர்ப்பெயரால் சூட்டப்பெறுவது இதற்குரிய தனிச்சிறப்பு. புராணம் 14 சருக்கங்களும் 550 பாடல் களும் உடையது.

சாரமா முனிவர் என்பவர் சிராமலைப் பெருமானுக்குச் செவ்வந்தி மலர் நந்தவனம் ஏற்படுத்தி அம்மலரால் இறைவனைப் பூசித்தார். பூ விற்பவன் அப்பூக்களை அங்கு ஆட்சிபுரிந்த சோழ மன்னனுடைய மனைவியிடம் கொடுத்து வந்ததை முனிவர் மன்னனிடம் முறையிட்டும் அவன் கேட்காமையால், இறைவன் கட்டளைப்படி மண்மாரி பெய்து உறையூர் அழிந்தது. அரச குடும்பத்தில் தப்பிய குழந்தையே பிற்காலத்தில் கரிகாலச் சோழனானான். செவ்வந்திமலர் காரணமாகப் புராணம் செவ் வந்திப் புராணம் ஆயிற்று.

திருமலைச் சருக்கத்தின் இறுதியில் மூன்று பாடல்களில் நூலின் பதிகம் அமைக்கிறார். இறைவன், ஆற்றுவெள்ளத்தால் தாய்வர முடியாதபோது தாமே தாய்போல் வந்து மகளின் பிள்ளைப்பேற்றுக்கு மருத்துவம் பார்த்த வரலாற்றால் தாயு மானவன் என்ற பெயர் பெற்றான். இறைனுடைய பெயர்களை நயமாக இருபாடல்களில் சொல்லுகிறார்.

சங்கரன் சிவன் சதாசிவன் ஈசன் ஈசானன்
புங்க வன்திரி புராந்தகன் புராதனன் புராணன்
கங்கை நாயகன் கறைமிடற் றிறைநுதற் கண்ணான்
எங்க ணாயகன் நிராமயன் சிராமலை யிறைவன்.

பூரணன்பரன் பராசரன் வெள்ளியம் பொருப்பன்
கார ணன்மத னாந்தகன் காலனைக் கடிந்தோள்
வார ணந்தனை யுரித்தவன் மறைபொருள் வகுத்தோன்
நாரணன்தனக் கரியவன் சிராமலை நாதன்.

இப்புராணத்தில் உள்ள முருகக்கடவுள் வணக்கம் மிகவும் சிறப்பானது. அதனோடு, இது நாவலருக்குச் சொற்களை மடக்கிச் சொல்வதில் உள்ள ஆர்வத்தையும் முருகனிடத்தில் உள்ள சிறப் பான ஈடுபாட்டையும் காட்டுகிறது.

ஓகையால் திரைமுன் னாளில் உழக்குமா வினையும் வாட்டும்
ஏகவெவ் வரையி னெல்லை இடித்திடும் இமையோர் போற்றத்
தோகைமே லுலவுங் கந்தன் சுடர்க்கரத் திருக்கும் வெற்றி
வாகையே சுமக்கும் வேலை வணங்குவ தெமக்கு வேலை.*

*மாணிக்கவாசகர் துதி சிறப்பு மிகுந்த பாட்டு. இங்கு ஆசிரியர், மாணிக்கவாசகர் திருவாசகம் திருக்கோவை இரண்டுமே செய்தார் என்று திட்டமாய்க் கூறுகிறார்.*

தேனூறும் வாசகங்கள் அறுநூறுந் திருக்கோவை
நானூறும் அமுதூற மொழிந்தருளும் நாயகனை
வானூறுங் கங்கைநிகர் மாணிக்க வாசகனை
யானூறு படாதவகை இருபோதும் இறைஞ்சிடுவேன்.

*பிரமதேவன் பெருமான் முடியைக் கண்டதாகச் சொல்லிய பாவம் நீங்க இங்கு வழிபட்டான் என்பதைச் சொல்லும்போது, சிராமலையை இரும்பு செம்பு சொர்ணம் (பொன்) என்ற சொல் நயம் பொருந்தப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:*

எந்தை யார்க்கு அனுதினம் இருப்பு மாமலை
சிந்தைநைந் தமரர்கள் செப்பு மாமலை
சுந்தரன் தூதன்முன் சொன்ன மாமலை
கந்தமா மலருறை கஞ்சன் போற்றினான்:

*மடக்கு முரண் முதலான இவர் கவிதையின் இயல்புகளையும் நயங்களையும் நூலெங்கும் காணலாம். அம்மை துதி; இனிய பதமாம் இருபோதும் தலைமேற்றுதிப்பாம் இருபோதும். முருகன் துதி: வாகையே சுமக்கும் வேலை வணங்குவதெமக்கு வேலை. சம்பந்தர் துதி: கவுணியன் தன், முண்டகத்தாள் மலர் தலைமேல் முடித்தேன் இந்நூல் முடித்தேனே. அப்பர்துதி; கற்றூணால், அத்தியைக் கடந்த நாவுக்கரசினை வணங்கு வோமே. (அத்தி அரசு மரப்பெயர்கள்) சண்டேசர் துதி: தாதை இணைத்தாளைத் தடிந்திறைவர் துணைத்தாளை அடைந்தவர்*

---

* *இப்பாடலின் பின் இரு வரிகளைப் பாரதியார் தமது கட்டுரை ஒன்றில் மேற்கோளாக எடுத்துத் தந்தார். இந்தியா சுதந்திரம் அடைந்தபின் அரசாங்கம் பாரதி பாடல்களை எடுத்துப் பதிப்பிக்க முன்வந்த போது, பதிப்பை ஓர் அறிஞர் குழுவின் பொறுப்பில் விட்டது. அக்குழு, இவ்வரிகள் பாரதியார் தரும் மேற்கோள் பாடல்கள் என்றும் அறியாது பாரதி பாட்டென்றே இதையும் தொகுத்துள்ளது. இன்றும் பலர் பதிப்புக்கள் அப்படியே அச்சிட்டு வருவதைக் காணலாம்.*

*தாள் இறைஞ்சுவோமே. சுந்தரர் பெருமாள் என்று சொல்லித் துதிக்கும் பாடல் மிக்க சுவையுடையது:*

தீங்கும் பெருமா நிலத்திடருந்
　　தீரத் தீரத் திரைக்கடலில்
தூங்கும் பெருமா ளுடன் வேதன்
　　துதிக்கும் படிக்குச் சுடர்க்கிரியாய்
ஓங்கும் பெருமாள் புகழ்பரவி
　　ஓரா யிரம்பொன் ஒருமொழிக்கு
வாங்கும் பெருமாள் சவுந்தரியப்
　　பெருமாள் பதத்தை வணங்கிடுவாம்.

*சுந்தரர் என்ற சொல்லை இங்கு சுவையாகச் சவுந்தரியப் பெருமாள் என்று சொல்கிறார். திருமலை சருக்கத்தில் ஒரு சந்தப் பாடல், மடக்கு:*

சோதி மதியின் பாதி யரவஞ் சூடு சடையன் தோடு கமழும்
காதி லமிர்தம் போல அரசுங் காழி யிறையுங் கூறு தமிழின்
பாத கமலம் பாடு மவர்தம் பாத கமலம் பாறி யகலும்
போது செறியும் போது விரியும் பூவை மருவும் பூவை மருவும்.

*நூலின் சருக்கத்தொகை பாடல் தொகையை ஆசிரியரே சொல்கிறார்: சிராமலையின் புராணந்தன்னை,*

ஏதமற வடநூலைத் தமிழ்நூ லாக்கி
　　இனிய சருக் கங்களொடு பதினொான் றாகப்
போதமறத் திருவிருத்தம் ஐந்நூற் றைம்பான்
　　பொருந்திடஇக் கதைவிரித்துப் பரவலுற் றேன்.

*சிராமலையை ஆசிரியர் திருமலைக் கொழுந்தென்றே எங்கும் சொல்கிறார்.*

*நூலின் நீண்ட சருக்கம் சூரவாதித்த சோழன் வரலாறு. சங்ககாலத்தில் உறையூர் சிறப்புடைய நகரமாயிருந்தது. தேவார காலத்தில் உறையூர் பெருமை குன்றி, எல்லாப் பெருமைகளும் சிராமலைக்குரியனவாயின. உறையூர் மண்மாரியால் அழிந்ததென்பது வழக்கு. இதையும் புராணத்தின் பகுதியாக ஆசிரியர் பாடியிருக்கிறார். சூரவாதித்த சோழன் காலத்தில் நாகலோகத்திலிருந்து செவ்வந்திமலர் பூலோகத்துக்குக் கொண்டு வந்து, அதைச் சாரமாமுனிவர் நந்தவனத்தில் பயிரிட்டுச் சிராமலைப் பெருமானுக்குச் சாத்திவந்தார். இம்மலர் அணிந்த காரணத்தால்*

சுவாமி செவ்வந்திநாதர்; இதுபற்றியே புராணமும் செவ்வந்திப் புராணம். 49 தலைமுறை கழித்து அரசாண்டவன் பராந்தக சோழன். இச்செவ்வந்தி மலர்களைக் கொண்டுவரச் செய்து தானும் தன் தேவியுமாக அணிந்தான். இது தகாதென்று சாரமா முனிவர் 27 செய்யுட்களால் அவனுக்கு அறிவுரை கூறுகிறார். அவன் கேட்கவில்லை. அவருடைய சாபத்தால் மண்மாரி பெய்து நகர் அழிந்தது. அரசனும் அழிந்தான். கருவுற்றிருந்த அரசி ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டுத் தப்பிப் பிழைத்தாள். அவள் வயிற்றிற் பிறந்த மகனே கரிகாலச் சோழன்; பட்டத்து யானை அவனை முடி புனையத் தூக்கிக்கொண்டு சென்ற போது தாய் அவன் காலில் கரிக்கோடிட்டு அனுப்பியமையால் கரிகாலன் எனப்பட்டான் - என்பது இங்குள்ள கதை.

சிவபெருமான் ஒரு பெண்ணின் பிள்ளைப் பேற்றிற்காகத் தாயாக எழுந்தருளி வந்தமையால் தாயுமானவர் என்று சொல்லப் பெற்றார் என்ற வரலாறு இறுதிச் சருக்கமான தாயான சருக் கத்தில் சொல்லப்பெற்றது.

### பதிப்பு

பலரால் பலமுறை பதிப்பிக்கப் பெற்றது.

## தீர்த்தகிரிப் புராணம்

இவ்வூர் சேலம் மாவட்டத்தைச் சேர்ந்த ஊற்றங்கரைத் தாலுக்காவில் உள்ளது என்று சொல்லப்படும். நாவலர் பாடிய இப்புராணமும் பாயிரமும் 14 சருக்கங்களும் 445 பாடல்களும் கொண்டது. தண்டக வனம், பருப்பதம், திருநாமம், சுவேதகேது என்ற நான்கையும் தவிர ஏனைய 10 சருக்கங்களும் தீர்த்தப் பெயர் கொண்டவையே: வசிட்ட தீர்த்தம், அகத்தியம், உமை, தீர்த்தம், இந்திரம், யமம், வருணம், கந்தம், அக்கினி, இராமம் என்பன இவற்றின் பெயர்கள். ஊர் பெண்ணையாற்றின் வட கரையில் உள்ளது; 'அருணையும் தானும் பொருள் வேறுறாதது' என்று சொல்வர்.

சமயாசாரியர் முதல் மூவரை மூன்று பாடலால் துதித்து, ஆசிரியர் அடுத்த பாடலில் வாதவூரர், வான்மீகர், பரத்துவாசர், அகத்தியர், சூதர், வியாசர், சண்டேசர் ஆகியோர் அனைவ ருக்கும் வணக்கம் சொல்வது காணத்தக்கது. இராகவன் சரிதம் பாடிய வான்மீகி இப்புராணத்தைப் பரத்துவாசருக்குச் சொன்ன

தாக வரலாறு. முதல் சருக்கமாகிய தண்டகவனச் சருக்கத்தின் தொடக்கத்தில் இருபாடல்கள் நூலுக்குப் பதிகம் போல் அமைந் துள்ளன. சைவ எல்லப்ப நாவலர் என்றபடி சைவருக்கு அடிப் படையான சைவ இயல்பு இங்கும் சைவ சமயத் தொண்டர் துதி யில் வெளிப்படுகிறது:

> தெய்வ மாக ஓர் தேவரையுஞ் சொலோம்,
> சைவ வைணவர் தாளிணை போற்றுவோம்;
> வைய மீதினில் வன்தொண்ட னுக்குமுன்
> ஐயன் ஏவல் புரிந்தனன் ஆதலால்.

தண்டக வனத்தை வருணிக்கும்போது, தமது தமிழ் இலக்கண அறிவைப் புலப்படுத்துகிறார்:

> அங்குறிஞ்சி யகப்புறப் பாட்டினால்
> சங்கமுத் தமிழுக்குத் தலைமையால்
> துங்கமானசெய் யுட்டளை தோய்தலால்
> பொங்கு வாணி புலவரை யொத்ததே.

இவருடைய வருணனைக்கு எடுத்துக்காட்டாகப் பின்வரும் பாடலைத் தருகிறோம்:

> தீரமெங்கும் நிறைந்தன செங்கர
> வீரமுங்கனி காரமும் வேழமும்
> நாரமுஞ் சுர நாகமும் பூகமும்
> ஆரமுங் குயி லாலும் அசோகுமே.

தீர்த்தகிரிக்கு 13 பெயர்கள் உண்டு என்று ஒரு பாடலில் குறிப் பிடுகிறார். நூலில் சந்தப் பாடல்கள் வழக்கம்போல் பல நிரம்ப அழகாக உள்ளன. உமாதேவியார், இராமன் முதலியோர் துதிக்கு மிடத்து துதிப் பாடல்களாகப் பல அமைத்திருக்கிறார். ஒரு பாடல் பின்வருவது:

> உயிரி னூடொ ளித்திருப்பைப் புரியப்பாலில் வெண்ணெய்போல்
> தயிரி னூடு காணநின்ற தன்மை தாப தற்குநீ
> வெயிலி னூடு புனல்பரந்து வெயிலினூடு புலர்தல்போல்
> மயல றாத சகலமுன் னிடத்தில் வந்து மாயுமே.

இராமன் தீர்த்தம் அருளுமாறு அருள்க தீர்த்தமே என்று ஆறு பாடல்களில் துதிப்பது சொல்லப்படுகிறது. இத்தலத்தின் பெயர் தீர்த்தகிரி என்று இருப்பதற்குப் பொருத்தமாக இங்கு தீர்த்தங் களின் சிறப்பே அதிகமாகச் சொல்லப்பட்டுள்ளது.

இறுதிப் பாட்டு வழக்கம்போல் சிவபூசையும் அடியார் களும் தழைக்க என்று முடிகிறது.

## பதிப்பு

இந்நூல் புதுவை க. சுப்பராய முதலியார் செய்த பொழிப் புரையோடு புரசை சபாபதி முதலியார் பார்வையில் 1870இல் அச்சிடப்பட்டது. தலப்பெருமையையும் சைவ எல்லப்ப நாவலர் பெருமையையும் நன்கு விளக்குகின்ற நீண்ட ஆசிரியப்பாவா லான சிறப்புப் பாயிரம் சபாபதி முதலியாரால் எழுதிச் சேர்க்கப் பட்டு உள்ளது.

## திருவிரிஞ்சைப் புராணம்

வட ஆர்க்காடு மாவட்டத்தில் விரிஞ்சிபுரம் என்று வழங் கும் இத் தலத்திற்கு ஆசிரியர் பாடின புராணமானது 370 பாடல்கள் உடையது. பாயிரம், நைமிசாரணியம், கௌரிபுரி, விண்டுபுரி, விரிஞ்சபுரி, வழித்துணை, பரலோகம், பாலனுக்குத் திருமுடி வளைத்தது என்ற எட்டுச் சருக்கங்கள் உடையது. அம்மை பூசித்தமையால் கௌரிபுரி; திருமால் பூசித்துச் சக்கரம் பெற்றார்; கரன் என்ற கழுதை முக அசுரன் பூசித்தமையால் கரபுரி; விரிஞ்சன் பிரமன்; மிளகு வாணிகனுக்கு வழித்துணை சென்றமையால் வழித்துணை நாதர், மார்க்கசகாயர் என்ற பெயர்கள். இளம் பிள்ளையாகிய ஒரு சிவவேதியக் குழந்தை பூசை செய்யும் பொருட்டுப் பெருமான் இத்தலத்தில் அவனுக்கு எட்டத்தக்கவாறு முடிவளைத்த பெருமையுடையது. இத்தலத் தைக் காரணாகாமமும் காமிகாமமும் புகழ்ந்துள்ளன என்கி றார். செந்தமிழ் குலவும் அத்தலம் என்று ஒரு பாடலில் குறிப் பிடுகிறார். இது வைப்புத்தலம், ஆகவே பதிகம் பெற்ற தலம் என்பது உரைக் குறிப்பு.

எல்லப்ப நாவலர் நூலுக்குடைய கவியழகு முழுமையும் இந்தச் சிறு நூலிலும் காணலாம். முருகன் துதி இங்கு குறிப் பிடத்தக்கது.

அந்திப்போ தழகுறவே நடித்தருளும் வழித்துணைவர்
அருளுங் கோவை
வந்திப்போர் நினைத்தபடி மயிலேறி அயிலெடுத்து
வருஞ்செவ் வேளைச்
சந்திப்போம், மலர்சொரிவோம், புகழ்ந்திடுவோம், அவன்
கமலத் தாளுந் தோளும்

சிந்திப்போம்; ஆதலினால் நமதுபழ வினைகளெல்லாம்
சிந்திப் போமே.

*பாயிரம் இறுதிப் பாடலில் நூற்சருக்கங்களைத் தொகுத்துக் கூறுகிறார். 'இளைதாக முள்மரம் கொல்க' என்ற குறட் கருத்தை வைத்து, ஞாதியரையும் அவ்வாறு அழிக்கவேண்டும் என்று சொல்லும் பாடல் இங்கே கருதத்தக்கது:*

ஞாதியரை முட்செடியை நஞ்சையழல் தன்னை
ஏதமொழிப்பதுரம் எய்துவதன் முன்னே,
ஆதலி னவற்குரிமை யானபொரு ளெல்லாம்
நீதியிலர் கைக்கொள நினைத்திவை யுரைப்பார்.

*இதையடுத்து வேதியச் சிறுவன் தனக்குக் கோயிலில் கிடைக்க வேண்டிய முதல் தாம்பூலம் வேண்டுமென்று இறைவனை வழித் துணை மருந்து என்று விளித்துக் கேட்கும் பாடல்கள் குறிப் பிடத்தக்கன. இறைவன் முடிவளைத்த கதை உருக்கமாய் இவர் குறிப்பிடுகிறார்:*

என்புநெக்கு நெக்குருக என்னிதயத்தி லிருப்பான்,
மன்பதைக்கெலா முயிருமா யுணர்வுமாய் வளர்ப்பான்,
அன்பருக்கெலாம் நினைத்திடும் வரத்தையும் அளிப்பான்,
வன்பருக்கெலாங் கொடியவன் திருமுடி வளைத்தான்.

*இவருக்குச் சொற்களை அடுக்கிச் சொல்வதிலேயே விருப்பம் அதிகம்:*

அஞ்சுமுகி நாலுமுகி ஆறுமுகி மாறா
மஞ்சுமுகி நேரெனும் வராகமுகி வானாள்
நெஞ்சுமுகி கார்முகி சிலீமுகிய ராகி
விஞ்சுமுகில் நாணொலி விளைத்தமர் விளைத்தார்.

பிரியாவிடை பிரியாவிடை பிரியாவிடை யுடையாய்
கரியானதி னுரியாகிய கலைமேலிடு தலைவா,
அரியார் தொழ அரியாய் என ஆராமை யுரைத்தே
பரிவான் மனை சென்றேகிளை பலரோடு மகிழ்ந்தான்.

*அஞ்சுமுகி மகேசுவரி; நாலுமுகி அபிராமி; ஆறுமுகி கௌமாரி; வராகமுகி வராகி; மஞ்சுமுகி நாராயணி; நெஞ்சுமுகி இந்தி ராணி; கார்முகி சிலீமுகி வில்லும் அம்பும் உடையவர். நூலில் அழகான சந்தப் பாடல் அமைத்துள்ளார்.*

இவரது பாயிரப் பகுதியில் உள்ள ஓர் அமைப்பு கருதற் குரியது. தேவார மூவருக்கும் ஒரு பாடலில் வணக்கம் சொல்லி, அங்கு மாணிக்கவாசகருக்கு வணக்கம் சொல்லாமல், அடுத்த பாடலில் நந்திதேவர் மாணிக்கவாசகர் சண்டேசர் ஆகிய மூவருக்கும் வணக்கம் கூறுகிறார். அவையடக்கப் பாடலில் தாம் அருணைமாநகர் சிறப்புரைத்தமை கூறுவதால், இரண்டு புராணங்களும் இவர் உரைத்தமை புலனாகிறது.

இத்தலத்திற்கு மார்க்கசகாய தேவர் பாடிய திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் பிரசித்தி பெற்றது.

### பதிப்பு

இப்புராணம் சிறப்புடையது என்பதை இதற்குக் காஞ்சி புரம் சபாபதி முதலியார் உரை எழுதி, 1863இல் அச்சிட்டமை யால் காணலாம். சபாபதி முதலியார் உரையானது பழைய உரை யைச் சிறுபான்மை தழுவிச் செய்யப்பட்ட பொழிப்புரை என்று முகப்பேட்டில் சொல்லப்பட்டுள்ளது; எனவே முன்னரும் ஓர் உரை இருந்தது போலும். இதன் பின்னர்ப் பல பதிப்புக்கள் வெளிவந்துள்ளன.

## திருச்செங்காட்டங்குடிப் புராணம்

எல்லப்ப நாவலர் செய்த இப்புராணம் அச்சானதாகத் தெரியவில்லை. ஓர் ஏட்டுச் சுவடியை ஆராய்ந்து இக்குறிப்புக்கள் எழுதப் பெறுகின்றன.*

சிறுத்தொண்டர் வரலாற்றினால் பிரசித்தியடைந்த தலம் திருச்செங்காட்டங்குடி. நரசிம்மவர்ம பல்லவனுடைய படைத் தலைவராய்ப் பரஞ்சோதியார் படையெடுத்துச் சென்று சளுக்க மன்னனை முறியடித்து அவனுடைய 'வாதாபித் தொன்னகரம் துகளாக்கி' அங்கிருந்த கணபதியைத் தாம் வழிபட்ட திருச் செங்காட்டங்குடியில் கொண்டு வந்து பிரதிட்டை செய்தார்.

---

* இவ்வேட்டுச் சுவடியைப் பாதுகாத்து வைத்திருந்தவர் இவ்வூர்த் தியாகராய தேசிகர். தருமபுரம் ஸ்ரீ மகாசந்நிதானத்தின் அருளால் இவ்வேடு எமக்குப் பார்வையிடக் கிடைத்தது. இதன் முகப்பேட்டில் பின்வரும் குறிப்புக் காணப்படுகிறது: இதை அச்சிட திருச்சிராப் பள்ளி புத்தகக்கடை தி. சபாபதிப் பிள்ளையிடமும் அவர் தம்பி வேங்கடாசலம் பிள்ளையிடமும் இதைப் போடப் பேசிக் கொண் டபடியால் சென்னைப்பட்டணம் சிந்தாதிரிப்பேட்டை சாமி நாய்க்கன் தெரு, 93 ந. வீட்டில் அச்சாபீஸ் தி. சபாபதிப் பிள்ளை.

இவரோ பிற்கால வாழ்வில் சிறந்த சிவபக்தராகிச் சிறுத்தொண்ட நாயனாராகிறார். இவர் பிரதிட்டை செய்த கணபதி வாதாபி கணபதி.*

இப்புராணமானது 11 சருக்கங்களும் 393 பாடல்களும் உடையது. பாயிரம், தலமகிமைச் சருக்கம், பஞ்சாக்கரச் சருக்கம், செங்காட்டங்குடிச் சருக்கம், ஆத்திவனச் சருக்கம், பாற்கரச் சருக்கம், திருவிழாச் சருக்கம், வசுச் சருக்கம், வருணச் சருக்கம், கணபதீச் சுரச் சருக்கம், தீர்த்தச் சருக்கம் என்பன சருக்கப் பெயர்கள். தலவிருட்சம் ஆத்தி; ஆதலால் தலம் ஆத்திவனம், தாதகிவனம் (தாதகி - ஆத்தி) என்றும் பெயர். கணபதி பூசித் தமையால் ஊர் கணபதீச்சுரம்; கணபதீச்சுரம் என்றே சம்பந்தர் இத்தலத்தைப் பாடுகிறார். புராணத்துக்குக் கணபதீச்சுரப் புரா ணம் என்று ஒரு பெயரும் உண்டு.

பாயிரப் பகுதியில், விநாயகர், கணபதீச்சுரத்தான், உமை, வாதாபிப் பிள்ளையார், முருகன், நந்தி, நால்வர், சிறுத் தொண் டர், சீராளர், வெண்காட்டு நங்கை, சந்தன நங்கை, சண்டீசர் முதலான நாயன்மார், நூல்மரபு - நூல்வழி, பயன், அவையடக் கம், சருக்கப் பெயர்கள் என்பன சொல்லப்படுகின்றன. மாணிக்க வாசகர் துதியில் அவர் திருக்கோவை பாடினார் என்ற பரம் பரைச் செய்தியை முன் திருவெண்காட்டுப் புராணத்தில் பாடிய வாறு (பக்கம் 156 பார்க்க) குறிப்பிடுகிறார்:

> வருகோவை யஞ்சலென்ன வரையெடுத்த கடல்வண்ணன்
> மலரா மென்னத்
> தருகோவை யணிந்த இரு தாளானைத் தோள்களாற்
> றகைமை சால்நால்

---

* இங்கு ஒரு குறிப்பு மனத்தில் கொள்ளத்தக்கது. வெற்றி பெற்ற பரஞ்சோதி வாதாபி நகரைத் துகளாக்கினார்; ஆனால் வரதாபி கணபதியைக் கொண்டு வந்து தம்மூரில் பிரதிட்டை செய்தார். செய்த காரணம் அவர் முன்னமே கணபதி வழிபாடுடையவர்; ஆகவே கணபதியைக் கண்டவுடன் தூக்கிக்கொண்டு வந்துவிட்டார். துகளாக்கவில்லை. கணபதி வழிபாட்டை அறியாதவராயிருந்தால் துகளாக்கியிருப்பார். வெற்றி பெற்றோர் தமக்குச் சிறப்புடைய பொருளைக் கவர்வதும் ஏனையவற்றை அழிப்பதும் போர் வீரர் இயல்பு. தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் போன்ற அறிஞர், பரஞ்சோதி காலத்துக்குப் பிறகே கணபதி வழிபாடு தமிழ்நாட்டில் பரவியது என்று கருதுவது பொருந்தாமை அறிக. அக்கருத்தை விரிக்க இது இடமன்று.

இருகோவை யுடையானை எம்மறைக்கும் எப்பொருட்கும்
ஏயா ஞானத்
தொகுகோவை எழுதுகென ஒருகோவை இசைத்தானை
உள்ளங் கொள்வாம்.

*நூல்வழி கூறுமிடத்து இப்புராணம் வடமொழிப் பவுடிய புராணத்து உள்ளது என்கிறார். தல மகிமைச் சருக்கத்தில் பத்துப் பாடல்களால் (10-19) காவேரியைச் சிறப்பித்து, இவரை யொத்தது காவேரி என்று பாடுகிறார்: இந்திரன், தேவர், சேய், வீரபத்திரன், அம்பிகை, செந்திரு, வாளரி, வெள்ளை யானை.*

*இரண்டொரு பாடல்களைக் கீழே தருகிறோம்:*

தஞ்சமாய நல்லாரினம் சேர்ந்து பொய்தவிர்ந்து
வஞ்சமின்றி உள்தெளிந்து அலங்காரங்கள் மருவி
எஞ்சிலா நெறி ஒழுகியே பலகலை எய்தி
விஞ்சை யாளரை நிகர்த்தது பெருகு காவேரி.

வளங்கொள் பூவினைத் தாங்கி எக்காலமும் மருவி
துளங்கு சீர்வனத் துலவைவாய் மடுத்தரி சுமந்தே
அளந்திலா நெடும் பெருமையாய்க் கோடுகள் அடக்கி
விளங்கு சேயினை யொத்தது பெருகு காவேரி.

மையில் குன்றினில் பிறத்தலால், அறம் வளர்த்தலினால்,
கையிற் சங்கினைத் தரித்தலால், மரகதக் கதிரால்,
பையிற் பரப்பினால், கயமுனி தருதலால் – பரமன்
மெய்யிற் பாதி கொண்டாளொக்கும் பெருகு காவேரி.

*இத்தலத்தின் பெயர்களைச் சொல்லுகின்ற ஒரு பாடல்.*

மந்திரப்புரி செங்காடு சத்தியபுரி மலரோன்
தந்திரப்புரி ஆத்தியின் வனம் தடமதங்கார்
முந்து பாற்கரபுரி சமுத்திரபுரி முடிசேயர்
இந்திரன்மகிழ் கணபதீச்சுரம் பேர் என்பாம்.

*வசுச்சருக்கத்தில் திருச்செங்காட்டின் பெருமையைத் திருச்செங்காடு என்றே முடிகின்ற ஆறு பாடல்களால் சொல்கிறார். வசு செங்காட்டு இறைவனைத் துதிக்குமிடத்து ஐந்து பாடல்கள் போற்றி என்றே முடிகின்ற துதிப்பாடல்கள்.*

*கணபதீச்சுரச் சருக்கத்தில் போர் வருணனை சிறப்பாக உள்ளது. நால்வகைப் படைகளும் எவ்வாறு அழிந்தன என்பதை இடையே நான்கு பாடல்களால் விரித்துச் சொல்கிறார்.*

யானை, தேர், குதிரை, காலாள் என்ற முறையில், பாடல்களைக் கீழே காண்க.

மொய்யற்றன மதமற்றன முழக்கற்றன, முரணும்
கையற்றன செவியற்றன காலற்றன, மருப்பின்
வையற்றன தலையற்றன மணியற்றன, மதியா
மெய்யற்றன குடலற்றன மதமோ மதவேழம்.

பட்டற்றன கொடியற்றன பரியற்றன, பரிசேய்
கட்டற்றன நுகமற்றன பாகற்றன, நதிசேர்
பொட்டற்றன காலற்றன அச்சற்றன, முடியார்
தட்டற்றன ஆசற்றன சரிந்தற்றன, இரதம்.

சிரமற்றன, கலின்வாயிடை நுரையற்றன, திரியும்
குரமற்றன, காதற்றன கோள் செய்தமை கலனைப்
பரமற்றன, வாளற்றன வரலற்றன பனைக்கும்
உரமற்றன, விசையற்றன உளையற்றன தூரம்.

வாளற்றனர், அயிலற்றனர், சிலையற்றனர், வாகைத்
தோளற்றனர், மார்பற்றனர், தொடையற்றனர், போரின்
கோளற்றனர், குடலற்றனர், இடையற்றனர், கோடாத்
தாளற்றனர், கையற்றனர் தறுகண் வயவீரர்.

வசுச்சருக்கத்தில் சென்னிவள நாட்டினுக்கோர் சென்னியென வளம் படைத்த திருச்செங்காடு என்று ஐந்து பாடல்களால் தலவளத்தைப் புகழ்கிறார். எவை வலஞ்செய்து, எவை இடம் செல்வது நற்சகுனமாகும் என்று இரு பாடல்கள் கூறுகின்றன. வசு செங்காடடைந்தான் என்று கூறுமிடத்துப் பல தலங்களை யுரைக்கிறார். வருணன் துதியாக, போற்றி என்று முடியும் நான்கு பாடல்கள். இங்குள்ள தீர்த்தங்களில் மூழ்க என்னென்ன பாவங்கள் தீரும் என்று பதினொரு பாடல்களால் ஒரு நீண்ட பட்டியல் தருகிறார். அபிடேகப் பொருள்கள், வஸ்திரம், மலர்கள், கந்தம், நிவேதனம், காய்கனி வகை முதலியவற்றால் வரும் சிவ புண்ணியம் முதலிய செய்திகளை மிகவும் விரிவாகக் கூறுகிறார். நாவலர் என்ற பெயரில் சைவ அடைப் பொருத்தம் இதனாலும் நன்கு விளங்கும்.



## அத்தியாயம் 4

## சைவ புராணம் - 4

# பிற புராண ஆசிரியர்

**முன்னுரை**

சென்ற மூன்று அத்தியாயங்களிலும் இந்நூற்றாண்டில் புராணம் செய்த பெரும்புலவர் பரம்பரைகளைத் தொகுதியாக ஆராய்ந்தோம். முதல் அத்தியாயம் தென்பாண்டி நாட்டில் ஆட்சி புரிந்த பாண்டியர்களும் அவர்களுடைய ஆதரவு பெற்றோரும். இரண்டாவது அத்தியாயம் கமலை ஞானப்பிரகாசரும் அவர் வழி வந்தோரும். மூன்றாவது அத்தியாயம் - சைவ எல்லப்ப நாவலர் மட்டும். நான்காவது அத்தியாயமாகிய இது, இந்த மூன்றிலும் சொல்லப்படாமல் தனியே புராணம் செய்த பெரும் புலவர்களை ஆராய்கிறது. இங்கு முக்கியமாய்க் கருதத் தக்கது, இதுகாறும் கூறிய ஆசிரியர், இங்கு கூறப் பெறுவோரும்கூட, அனைவரும் சைவப் புலவர்கள்; இவர்கள் தொகை 15.

ஐந்தாம் அத்தியாயத்தில் புராணம் செய்த வைணவர்களான ஐந்து ஆசிரியர்களுடைய கவிதையை ஆராய்கிறோம்.

இந்த நான்காம் அத்தியாயத்தில் நாம் கருதுகின்ற சிறப்பான ஆசிரியர் நால்வர். இவர்கள் புராணத் திருமலைநாதர், மறைஞான சம்பந்தர், அனதாரியப்பப் புலவர், ரேவண சித்தர் என்போர். இவர்கள் நால்வருமே மிகப்பெரும் புலவர்கள். இவர்களுள் அனதாரியைத் தவிர ஏனைய மூவரும் வேறு துறைகளில் சிறப்பான நூல் செய்தவர்கள். இனி, இவ்வாசிரியர் வரலாற்றையும் நூலையும் ஆராய்வோம். கிடைத்த அளவில்தான் செய்திகளை ஆய்வு செய்கிறோமேயன்றி, எல்லா ஆசிரியர்களையும் எல்லா நூல்களையும் ஆய்ந்து முடிவு செய்ததாகச் சொல்ல வியலாது.

## புராணத் திருமலைநாதர்

### புராணம்

தமிழ் இலக்கியத்தில் புராணம் என்பது மிகவும் சிறப்பான ஒரு பகுதி. வெறும் புனைந்துரை என்று அவ்வளவையும் தள்ளி விடுதல் அறிவுடைமையாகாது. திருக்குறள் போன்ற நூல்கள் மக்களை நல்வழிப்படுத்தியது போலவே, புராணங்களும் ஆங்காங்குள்ள மக்களுக்குத் தெய்வ பக்தியை ஊட்டித் தமிழ்ச் சுவை மூலமாகவும், தலக் கதைகள் மூலமாகவும் மக்களை நல்வழிப்படுத்தி வந்திருக்கின்றன. பெரிய புராணமும், கந்த புராணமும் பிற்காலத்தில் பரஞ்சோதி செய்த திருவிளையாடற் புராணமும் சிறந்த தமிழ் இலக்கியங்கள் என்பதை அனைவரும் ஒப்புக்கொள்வர். இவற்றால் தமிழ் மக்கள் வாழ்க்கையும் பண்பாடும் வளம் பெற்றிருக்கின்றன.

பெரும் புராணங்கள் செய்தோர் மிகப் பலர். கந்த புராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியர், உபதேச காண்டங்கள் பாடிய இருவர், அதிவீர ராம பாண்டியன், பரஞ்சோதி முனிவர், சிவ ஞான முனிவர் கச்சியப்ப முனிவர், சென்ற நூற்றாண்டில் மீனாட்சிசுந்தரம் பிள்ளை முதலானோர் குறிப்பிடத்தக்கவர்கள். இச்சிறப்பு வரிசையில் புராணத் திருமலைநாதர் என்பவரும் ஒருவர். ஏனையோர் போல அவ்வளவு சிறப்பாக இவர் பெயர் வழங்கவில்லை. பின்வரும் குறிப்புக்களால் இவருடைய வரலாறும் சிறப்பும் சிறிது விளக்கம் பெறலாம்.

### ஆசிரியர்

இவருடைய பெயர் புராணத் திருமலைநாதர் என்றே எல்லா இடங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ளது. இவர் புதல்வரான பரஞ்சோதி என்பவர் சிதம்பரப் பாட்டியல் என்ற ஒரு பாட்டியல் இலக்கணநூல் பாடினார். அதன் சிறப்புப் பாயிரங்கள் பின்னே வருவன:

பூமன்னு பொழில்வெண்ணெய் மெய்கண்டான் கச்சிப்
    புகழ்புனைதத் துவஞான ப்ரகாசமாய் வந்து
பாமன்ன வுரையென்ன அவனருளால் அவன் தன்
    பதம்பரவிச் சிதம்பரப்பாட் டியலெனப்பேர் வகுத்தான்

மாமன்னு சிதம்பரபு ராணமுத னூலும்
　　மதுரையுலா வும்பகர்ந்தோன் மருவுகுல மைந்தன்
தேமன்னு புராணகலை பலதெரி புராணத்
　　திருமலைநா யகனருளின் தேசுபூண் டோனே.

சிதம்பரப் பாட்டியலைச் செய்தான் தமிழாற்
சிதம்பர புராணமுதற் செய்து – விதம்பெறுசீர்
சேர்ந்த புராணத் திருமலைநா தன் தவத்தாற்
சார்ந்தபரஞ் சோதியென்பான் தான்

இங்குங் கூடப் பரஞ்சோதியின் தந்தை பெயரைக் குறிப்பிடும் போது புராணத் திருமலைநாதன் (நாயகன்) என்றே குறிப் பிட்டிருக்கக் காண்கிறோம். இங்ஙனம் சிறப்புப் பாயிரங்கள் அனைத்திலும் இவர் பெயர் புராணத் திருமலைநாதர் என்றே குறிப்பிடப்பட்டுள்ளமை சிந்திக்கத்தக்கது. புராணம் என்ற அடைமொழி இவர் பெயரின்முன் சேர்க்கப் பெற்றிருந்தமைக் குக் காரணம் ஆராயத்தகுந்தது. சிறப்பான பல புராணங்கள் பாடியிருக்கவேண்டும் என்று நாம் யூகிக்கலாம்.

16ஆம் நூற்றாண்டுப் புலவர் வரலாறு எழுதிய சோம சுந்தர தேசிகர், 'இவர் புராணப் பிரசங்கம் செய்தலில் வன்மையுடைமை யாற் போலும், புராணத் திருமலைநாதர் என்று அழைக்கப் பட்டார்' என்று குறிப்பிடுகிறார். இது பொருத்தமுடையதாய்த் தோன்றவில்லை. பிரசங்கம் செய்தவர்கள் புராணிகர் என்று சொல்லப்பெற்று வாழ்ந்தார்கள். மெய்ப்பாத புராணிகர், புரா ணிகர் சோணாசல பாரதி என்ற இலக்கிய ஆசிரியர்களைக் காண்க. அங்ஙனமின்றி இவர் புராணத் திருமலைநாதர் என்று சொல்லப் பெற்றமையால் இவர் புராணிகரல்ல வென்றும், மகா புராணம் பாடிய பெருமை கருதியே புகழ் மிகுந்த இப்பெயர் பெற்றார் என்றும் நாம் கருதவேண்டும்.

திருமலைநாதர் திருமுறைகளிலும் பழைய தமிழ் நூல் களிலும் தல புராணங்களிலும் சைவ சாத்திரங்களிலும் பயிற்சி யுள்ளவர். இவருடைய பக்தியையும் செய்யுள் செய்யும் நயத் தையும் அறிந்த தில்லை மூவாயிரவரும் யதிகளும் மற்றைப் பெரியோர்களும் சைவபுராணத்தின் ஒரு பகுதியாகிய சிதம்பர புராணத்தைத் தமிழ்ச்செய்யுள் நடையாக மொழிபெயர்க்கும் படி சொன்னமையால் அங்ஙனமே செய்ய உடன்பட்டார். மலை நாட்டிலிருந்து வடமொழிப் பிரதியொன்றை வருவித்து அதனைக்

கொண்டு அவர்கள் கூறியவண்ணம் மொழிபெயர்த்தனரென்றும், அப்பிரதியில் அப்புராணத்தின் பிற்பகுதி இல்லையென்றும், பின்பு அகப்படாமையால் அப்பகுதி இவராற் செய்யப்படவில்லை யென்றும், அது கிடைக்கவில்லையேயென்ற வருத்தம் இவருக்கு இருந்ததென்றும் தெரிகின்றது. இதை இவர் இயற்றிய சிதம்பர புராணத்தின் இறுதிப் பாடலால் நன்கு அறியலாம்:

இந்த எல்லை மலைநாட் டிடத்திலும்
வந்த தெய்வ வடமொழி யெப்படி
செந்தமிழ்த் தொடை யப்பால் தெரித்தனம்
முந்து மற்றதும் வந்தால் மொழிதுமால்.

சிதம்பர புராணத்தைக் கேட்டு அதன் சொற்சுவை பொருட் சுவைகளை நன்றாய் உணர்ந்த அக்காலப் பெரியோரான தில்லை மூவாயிரவர் போன்றோர் இன்புற்று இவரைப் புராணத் திருமலை நாதர் என்றே வழங்குவராயினர். சிவமகாபுராணமாகிய பெரிய நூலைத் தமிழில் செய்தமையால் இவருக்கு புராணத் திருமலை நாதர் என்ற சிறப்பு அடைமொழி பொருத்தமேயாகும்: இதைச் சிறிது விளக்கி உரைப்போம்.

சைவ புராணத்துள் ஒரு பகுதியே சிதம்பர புராணம். சைவ புராணம் என்பது வடமொழிச் சிவமகா புராணம். இதை வட மொழியிலிருந்து தமிழில் வசனமாக மொழி பெயர்த்து ஈக்காடு இரத்தினவேலு முதலியார் 1900இல் வெளியிட்டார். வடமொழி வாயு சங்கிதையில் நான்காவதாகிய சைவபுராணத்தில் 12 சங்கி தைகள் உள்ளன என்றும், அவற்றின் அளவு இலட்சங் கிரந்தம் என்றும் சொல்லப்பட்டுள்ளது. பம்பாய் வடமொழிப் பதிப் பில் ஏழு சங்கிதைகள் உள்ளன. ஆனால் தமிழ்நாட்டில் வழங் கும் சைவ புராணத்தில் 6 சங்கிதைகளே உள்ளன. தமிழ் மொழி பெயர்ப்பிலும் 6 சங்கிதைகள் காணப்படுகின்றன. பொருத்த மில்லாதன என்று சில பகுதிகளை இரத்தினவேலு முதலியார் விலக்கி விட்டார் போலும்.

இம் மகாபுராணத்தைத் தமிழ் வசனத்தின் துணை கொண்டு கோயமுத்தூர் வேலாயுத பண்டிதர் என்பவர் செய்யுள் வடிவாக்கி இரண்டு சங்கிதை, 21 அத்தியாயங்கள், 1909இல் வெளியிட்டார்; ஞான சங்கிதை 1857 செய்யுள், தரும சங்கிதை 1174 செய்யுள்.

சிவ மகா புராணத்தில் மற்றொரு பகுதியாகிய வாயு சங்கிதையை 1319 செய்யுட்களாகக் குலசேகர வரகுண ராம

பாண்டியர் 16ஆம் நூற்றாண்டில் மொழி பெயர்த்திருந்தார்.* இந்நூல் 1889இல் அச்சிடப்பட்டது. வடமொழி புராணம் எவ்வளவு விரிந்தது என்பதைக் காட்டவே இவற்றைக் குறிப் பிட்டோம்.

இவ்வளவு பெரிதாகிய சிவ மகாபுராணத்தில் ஒரு பகுதி மட்டுமின்றி, நூல் முழுமையுமே நம் திருமலை நாதர் மொழி பெயர்த்துப் பாடினார் என்றும் அப்பாடற் பெருமை காரண மாகவே புராணத் திருமலைநாதர் என்று வழங்கப் பெற்றார் என்றும் நாம் கருத இடமுண்டு. தஞ்சை அரண்மனைச் சரசுவதி மகால் புத்தகசாலையில் 279 என்ற எண்ணுள்ள புராண ஏடா னது இவ்வாறு நாம் கருதுவதற்கு இடங்கொடுக்கிறது. இவ் வேட்டில் சரப புராணம், ததீசிப் புராணம், வினாவிடைப் புராணம் என்ற மூன்று பகுதிகள் ஒருசேர உள்ளன (279 a, b, c,). முதற்பகுதியான சரப புராணமானது சிவபெருமான் சரபாவ தாரம் எடுத்து நரசிங்கத்தை அடக்கிய வரலாறு கூறுகிறது. இரண்டாம் பகுதி ததீசிமுனிவர் இந்திரன் வச்சிராயுதம் செய் வதற்காகத் தமது முதுகெலும்பைக் கொடுத்த வரலாற்றைக் கூறுகிறது. மூன்றாம் பகுதி அகத்திய முனிவர் வினாவிய வினாக் களுக்கு முருகப் பெருமான் கூறிய விடையாக உள்ளது.

ஏட்டின் இறுதியில் 'சிதம்பர புராணம் அருளிச் செய்த திருமலை நாயனார் அருளிச் செய்த சிவபுராணத்தில் வினா விடைப் புராணம் முற்றும்' என்று எழுதப் பெற்றுள்ளது; இத்திருமலை நாயனார் ஆவார் திருமலை நாதரே. இக்குறிப் பினால் நாம் அறிவது, இம்மூன்று புராணங்களையும் பாடி யவர் திருமலை நாதர். இவரே சிதம்பர புராணமும் பாடினார், இம்மூன்று புராணங்களும் சிவபுராணத்தின் பகுதிகள் என்ற செய்திகளாகும். எனவே, இத்திருமலைநாதர் சிதம்பர புராணம் உட்படச் சிவமகாபுராணத்திலிருந்து நான்கு பகுதிகளைத் தமிழில் பாடியிருக்கிற செய்தி அறிகிறோம். சிதம்பர புராணம் நீங்கலாக மற்ற மூன்று பகுதிகளும் இதுவரை அச்சாகவில்லை.❖

இவற்றை நாம் கருதும்போது, திருமலைநாதர் இந்த நான்கு பகுதிகளையும் உள்ளடக்கிய சிவமகாபுராணம் முழுமையும்

---

* இந்நூல் அத்தியாயம் 1, பக்கம் 17 பார்க்க.

❖ இம்மூன்று பகுதிகளில் சரபபுராணம் என்ற பகுதிமட்டும் நீ. கந்த சாமிப்பிள்ளையவர்கள் சரசுவதிமகால் காரியதரிசியாக இருந்த காலத்தில் யாம் தூண்டி அச்சிடப்பட்டது. விவரம் பின்னே காண்க.

அன்று கிடைத்த அளவு தமிழில் மொழி பெயர்த்திருந்தார் என்றும், சிவமகாபுராணத்தை மொழி பெயர்த்தமை காரண மாகப் புராணத் திருமலைநாதர் என்று அடை கொடுத்து வழங்கப் பெற்றார் என்றும் கருத இடமுண்டு. பிற பகுதிகள் இன்று கிடைக்கவில்லை.

இனி, புராணத் திருமலைநாதர் தம்மை 'உமாபதி திருவடி யின் வழிவந்தோர்க் கடியன்' என்று கூறிக் கொள்கிறார்.* உமாபதியின் பரம்பரையில் வந்தவர் கச்சி ஞானப்பிரகாசர். அவர் துறவி: அவரிடம் துறவியான ஒரு ஞானப் பிரகாசரும், இல்லறத்தாரான இத்திருமலை நாதரும் சீடராயிருந்தார்கள்.❖ திருமலைநாதர் புராணங்களும் சொக்கநாதர் உலாவும் பாடி னார். இவருடைய புதல்வரான பரஞ்சோதி என்பவர், பிந்திய ஞானப்பிரகாசரின் மாணாக்கர், சிதம்பரப் பாட்டியல் செய் தார்; இவ்வரலாறுகள் முன் காட்டிய 'பூமன்னு பொழில் வெண் ணெய் மெய்கண்டான்' என்ற பாடலின் அடிப்படையில் சிதம் பரம் பாட்டியலை ஆராயுமிடத்து விளக்கியுரைக்கப் பெறும். இதுகாறும் நாம் கூறியவற்றால். திருமலைநாதர் மெய்கண்ட பரம்பரையில் காஞ்சி ஞானப்பிரகாசர் ஆதீனத்தில் மாணாக் கராய் இருந்த பெரும் புலவர் என்பதும், மதுரை சொக்கநாதர் உலாப் பாடினார் என்பதும், சிவமகா புராணம் என்ற பெரு நூலைத் தமிழில் பாடிய சிறப்பினால் இவருக்குப் புராணத் திருமலைநாதர் என்ற சிறப்பான பெயர் வழங்கலாயிற்று என்பதும், பல பகுதிகளான அப்புராணத்தில் சிதம்பர புராணம் என்ற ஒரு பகுதிமட்டுமே முன்னமே அச்சாகி இருக்கிறது என்பதும், மூன்று பகுதிகள் அச்சாகாமல் இன்று கிடைக் கின்றன என்பதும் தெளிவாகும்.

### காலம்

சிதம்பர புராணத்தில் இவர் தாம் அந்நூல் பாடிய காலம் 'சகற்கு ஈரேழு நூறுடன் முப்பஃதினையந்த ஆண்டு' - அதாவது சகம் 1430 (அல்லது கி.பி. 1508) என்று கூறுகிறார். ஆகவே காலம் மிகவும் திட்டமாய்த் தெரிகிறது.

---

* பின்னே சிதம்பரப் புராணம் பற்றிய குறிப்பில் 'முற்று முணர் மெய்கண்டான் துதி' என்ற பாடல் பார்க்க.

❖ இதுபற்றிய விளக்கமான ஒரு பரம்பரை அட்டவணையை எமது தமிழ் இலக்கிய வரலாறு 14ஆம் நூற்றாண்டு நூலில் காண்க.

*அடுத்துச் சொக்கநாதர் உலாவில் காணும் சிலசெய்திகள் இங்கு சிந்திக்கத்தக்கன. பின்வரும் சிறப்புப் பாயிரங்கள் இரண்டும் ஆசிரியர் பெயரையும், ஆதரித்த அரசனையும் குறிப்பிடும்:*

சீரார் புராணத் திருமலைநா தன்கருணைப்
பாராளன் மெய்ஞ்ஞானப் பால் விளங்க – ஆராய்ந்த
வேதக் குலாவால் விரித்தால வாய்ச்சொக்க
நாதர்க் குலாப்பாடி னான்.

வேதநூற் றென்முழைசை வீரமா றன் கடல்சூழ்
பூதலங்க ளன்பாய்ப் புரக்குநாள் – ஆதிநெறித்
தெய்வ மதுரைத் திருவால வாயுறைந்த
ஐயருலாக் கொண்டருளி னார்.

*வீரமாறன் என்ற பாண்டியன் ஆட்சிக் காலத்தில் புராணத் திருமலைநாதர் சொக்கநாதர் உலாப் பாடினார் என்று அறிகிறோம். இப்பாண்டியனை இவர் உலாவில் குறிப்பிட்டுக் கூறியுள்ளார்:*

மதுரா புரேசற்கு வைதிக சைவ
விதியாரப் பூசை விளக்கிப் – பதியுறையும்
மன்னன் குடைவீர மாறன் குலதிலகன்
தென்னன் செழியன் செகதீரன் – முன்னை
ஒருநாள் மறைவிதியா லுற்றருளாற் கண்ட
திருநாளி லங்கோர் தினத்தில்.

*இங்கு குறிப்பிட்ட வீரமாறன் 1473 முதல் அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்தின் பின்னும் தென்பாண்டி நாட்டை ஆண்ட சடிலவர்மன் பராக்கிரம பாண்டியன் ஆவான். அன்றியும் உலாவில், நாயகன் என்னும் மண்டபத்தையும் முத்தளக்கும் திருவாயில் என்ற வாயிலையும் அவர் குறிப்பிட்டிருக்கிறார். (கண்ணிகள் 46, 144). இவை இரண்டும் குத்தியூர் சின்னப்ப நாயக்கர் கட்டியவை என்று திருவாலவாயுடையார் கோயில் திருப்பணி மாலை 37ஆம் செய்யுள் தெரிவிக்கிறது.*

திருமிகு தென்னவனடத் தாவணிமூ லத்தின்
    திருநாட்டுத் தேர் புதிதா வீதி யூர்கள்
மருவிய சொக் கருக்கினிதாம் பூசை சந்தி
    மண்டபங்க ணாயகனா யகத்துப் பத்தி
இருண்மிகுசின் னீர்ச்சுரமுத் தளக்கும் வாயில்
    அகவணைகள் புறவணைக ளன்பாற் செய்தான்

ஒருமைதிகழ் மல்லையசின் னப்ப பூபன்
ஒங்குபுகழ் சேர்க்குத்தி யூரன் தானே.

இத்திருப்பணியின் காலம் சகம் 1448 (கி.பி. 1526) எனவே இதற்குப் பின்னரே திருமலை நாதர் இவ்வுலாப் பாடியிருக்கிறார் என்பது தெளிவு. இவற்றால் நாம் அறிவது இந்நூல்கள் செய்த புராணத் திருமலை நாதர் 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்திருந்தார் என்பதாகும்.

## சிவ மகா புராணம்

சிவமகாபுராணத்தைக் கிடைத்தவரை, தமிழில் மொழி பெயர்த்துப் பாடிய பெருஞ்சிறப்பால் திருமலைநாதர், புராணத் திருமலை நாதர் என்ற அடை பெற்றார் என்று குறிப்பிட்டோம். மூலம் சிவமகா புராணமாதலால் இவருக்கு அச்சிறப்பு வந்தது. தமிழில் இவர் நூல் முழுமையும் மொழிபெயர்க்கவில்லை. தம் காலத்தில் கிடைத்த அளவு மொழிபெயர்த்தார். மொழி பெயர்க்கத் தூண்டியவர்கள் தில்லை மூவாயிரவர். இதைச் சிதம்பர புராணப் பாயிரத்தில் கூறுகிறார்:

ஆற்றல் சான்ற மூவாயிரம் மறையவர் அரனுக்கு
ஏற்ற தொண்டர்கள் மறைநெறி எதிகளாயுள்ளோர்
போற்றரும் சிதம்பரத்திடைப் புகழினைத் திகழச்
சாற்றுவாய் வடமொழி வழி தமிழினால் என்றார்.

அப்பெரும் புராணத்தில் இன்று கிடைப்பன மூன்று துண்டுப் பகுதிகளும் தனி நூலாக வழங்கும் சிதம்பர புராணமுமேயாகும். நூலில் பெரும் பகுதி இவரால் மொழிபெயர்க்கப் பெற்றிருந்து இன்று கிடைக்காமற் போயிற்றா என்பது தெரியவில்லை. கிடைத்த மூன்று பகுதிகளும் சிறு பகுதிகள்: இவை தஞ்சைச் சரசுவதி மகால் நூல் நிலையத்தில் 279 a, b, c, என்ற எண்ணுடைய ஏடுகளில் பாதுகாக்கப் பெற்று வைக்கப்பட்டுள்ளன. பின்வரும் குறிப்புக்கள் அந்நூல் நிலைய விவரப் பட்டியலிலிருந்தும் ஏட்டிலிருந்தும் எடுத்தவையாகும்.

### சரப புராணம் *

கிடைக்கும் மூன்று பகுதிகளுள் இதுவே அளவால் பெரியதாகும். சரபம் என்பது இதிகாசங்களால் மட்டும் அறியப்படும்

* இது 1972இல் அச்சாகியிருக்கிறது, அரசாங்க நூல் நிலைய வெளியீடுகளின் தலையெழுத்தின்படி இதுவும் நிரம்பப் பிழைகளுடையது.

ஒரு பிராணி; கோயில் வடிவங்களில், நாலுகாலும் இறக்கையும் உடையதாய்ப் பறக்கும் வலிமையுடைய பிராணி போலக் காட்சி தரும். திருமால் எடுத்த அவதாரங்களில் ஒவ்வொன்றையுமே பரமேசுவரன் ஆட்கொண்டதாகச் சிவபுராணங்கள் கூறும். அந்த முறையில் நரசிங்கத்தை ஆட்கொண்ட வரலாறு கூறுவது சரப புராணம். பிரகலாதனுக்காக நரசிங்க வடிவு கொண்ட திருமால் இரணியன் ஆகம் பிளந்து உதிரம் குடித்த வெறியால் மிகவும் தருக்கி உலகையே அழிக்கத் தலைப்பட்டார். அப்போது தேவர் களின் துதிக்கிரங்கிச் சிவ பெருமான் சரப மூர்த்தியாகத் தோன்றி நரசிங்கத்தின் செருக்கடக்கினார் என்பது ஐதிகம்.

திரிபுவனச் சக்கரவர்த்தி என்று சிறப்புப் பெற்றிருந்த மூன்றாம் குலோத்துங்கச் சோழன் செய்த பெருஞ்சிறப்புடைய செயல்களில் முதன்மையானது, அவன்கட்டிய திரிபுவனம் கம்பகரேசுவரர் கோயில். (கம்பக ரேசுவரர் - தேவர்களின் நடுக்கந் தீர்த்த பெருமான்.) இக்கோயில் இவனுடைய பெருமையினாலே திரிபுவனம் என்றே புதிதாய் அமைக்கப்பட்டது. இவ்வரசன் சிறந்த சிவ பக்தன், பெரும் பண்டிதன், வடமொழிப் புராணங் களை நன்குணர்ந்து, எல்லாப் பெருமைகளையும் உடைய சரப மூர்த்திக்குப் பெருஞ்சிறப்புச் செய்திருக்கிறான். இக்கோயிலில் பிரதான மூர்த்தி சரபமூர்த்தியே. இக்கோயில் அன்றி துர்க்காச்சி முதலான வேறு சில கோயில்களிலும் இவன் சரப மூர்த்திக்குச் சிலை வடிவங்கள் அமைத்து வழிபாடு நடத்தியிருக்கிறான். தில்லையில் இவன் நிருத்த சபை அமைத்தபோது அங்கும் சரப மூர்த்தியை நிறுவினான். இராசராசன் தேவி கட்டிய திரை லோக்கிய சுந்தரக் கோயிலிலும் ஒரு சரப மூர்த்தியை அமைத் தான். வடமொழியில் சரப மூர்த்தி தோத்திரங்களும் அருச்சனை களும் பல ஏற்பட்டிருந்தன. இது ஏற்பட்ட காலம் 13ஆம் நூற் றாண்டின் தொடக்க காலங்கள். இந்தச் சிறப்பை நன்குணர்ந்து நம் திருமலை நாதர் இச் சரப புராணம் பாடினார் என்று நாம் கொள்ள இடமுண்டு.

சரப புராணம் 431 பாடல்கள் உடையது. பாயிரம், நர சிங்கவுற்பத்திச் சருக்கம், கடவுளர் முறையிடு சருக்கம், வீர பத்திரனெழுச்சி, அறிவுறுத்திய சருக்கம், சலந்தரன் வதைச் சருக்கம், சக்கரம் பெற்ற சருக்கம், நரசிங்கர் வதைச் சருக்கம் என ஏழு சருக்கங்களையுடையது. தொடக்கத்தில் கற்பக விநாயகரை வழிபடும் பாடல் பின் வருவது:

தற்ப ரத் தொளிர் தற்சிவ சிற்பரத்
தற்புதத்தை யறிந்தடைந் தின்புற
முற்பவக் கடல் சாடிய மும்மத
கற்ப கத்தைக் கருத்துள் இருத்துவாம்.

*இச்சிறு நூலுக்குப் பாயிரப்பகுதி விரிவானது. அர்த்த நாரீசுவர மூர்த்தியாகிய பரம்பொருள் வணக்கம் கூறியபின், மதுரையில் ஈசன் பிராட்டி இருவரையும் வணங்குகிறார்:*

வையமெலாம் மகிழ்ந்து போற்றி
அருள்விளையாட் டெனவியப்ப அருந்தமிழ் நாட்டு
அணிமதுரை அதனுள் எண்ணெண்
திருவிளையாட் டுடையபிரான் செங்கமலப்
பொற்பாதம் சென்னி வைப்பாம்.

*என்கிறார். பின் அங்கயற்கண்ணம்மை துதி. வீரபத்திரரே சரப மூர்த்தியாக வருகிறார் என்பது புராணமாதலால், அடுத்து வீர பத்திரர் துதி:*

கரமிழப்பத் தழற்கடவுள் கண்ணிழப்ப
விண்ணிரவிக் கருதாத் தக்கன்
சிரமிழப்ப எழுதேவர் உயிரிழப்பத்
தேவர்பிரான் திண்டோள் கொண்ட
உரமிழப்பத் திருமாலுந் திசைமுகனும்
முனிவரரும் உடைந்து தங்கள்
வரமிழப்ப வந்தெழுந்த வயவீர
பத்திரன் தாள் வணக்கஞ் செய்வாம்.

*பின்னர் முறையே சரபர், விநாயகர், குமரன்; அடுத்து நால்வருக்கும் ஒரே பாடலில் வணக்கம் சொல்கிறார்:*

அமுதுலகை வாழ்வித்த திருஞான சம்பந்தர்
அமணர் கொண்ட
பழுதுடைய நெறிகடந்து பார்புகழ்ந்த வாகீசர்
பகிரண் டங்கள்
முழுதுடையான் தொடர்ந்தாண்ட முதன்மைபெறும் ஆருரர்,
முதல்வன் தாளைப்
பொழுது தொறும் போற்றுதிரு வாதவூ ரண்ணல்பதம்
போற்றி செய்வாம்.

*பின்னர் சண்டேசர், அடியார் துதிகள், வாழ்த்து, புராண வரலாறு; பின்னர் மதுரையிலிருந்து சைவத் தொண்டர் வேண்டத் தாம் சரப புராணத்தைத் தமிழில் பாடியதாகச் சொல்கிறார்.*

முத்தனதி வினையமலை முத்தமிழுஞ் சந்தனமும்
 விளைந்து வீசப்
பத்தியுயிர் தொறும்விளையும் பாண்டிய நாட்டியல்மதுரைப்
 பதியிற் சைவச்
சத்தியமெய்த் திருத்தொண்டர் சரபபுராணந்தன்னைச்
 சாற்றென் றோதும்
அத்தகையா யறிந்தபடி வடமொழி தென்மொழியால்
 அறைந்த தன்றே.

*முதல் சருக்கம் நரசிங்க வுற்பத்தி; இரணியன், 'இத்தூணில் உன்திருமால் உளனா?' என்று தூணைப்புடைக்க நரசிங்க மூர்த்தி வெளிப்பட்டு இரணியனோடு போர் செய்கிறார். போர் மிக்க விரிவாய்ச் சொல்லப்பட்டுள்ளது. நரசிங்கமூர்த்தி இறுதியில், இரணியன் பெற்ற வரங்களுக்கு இழுக்கில்லாத வண்ணம் அவனை மாய்க்கிறார். மாய்த்தும் அவர் சினம் தணியாமல் கொடுமை செய்யவே, தேவர் கண்டு அஞ்சி, கயிலையிறைவனிடம் முறையிடுகிறார்கள். இரண்டாவது கடவுளர் முறையிடு சருக்கம்: நரசிங்கத்தின் கொடுமையும், கயிலையின் சிறப்பும்:*

முத்தி நாயகன் உறைதலால் மொழிந்த வேதாந்த
சித்தி முத்தியே அனையதத் திருக்கயி லாயம்.

*தேவர்கள் துதிப்பது சரணம் என்ற முடிபுடைய பத்துப் பாடல்கள். வீரபத்திரர் எழுச்சி; மிகவும் விரிவாகச் சொல்லு கிறார்: 'எழுந்தனன் தீவினைப் பகைஞன்'. வீரபத்திரருடைய வருணனையும் வருகையும் மிகவும் விரிவாகச் சொல்லப்படு கின்றன.*

இடிபடு தமரகத் துடிபட அதிர்த்தங்கு
 எழுமொலி மணியொலி விளைக்கக்
கொடிபடு கடிதிற் பொலிவினைச் சுழற்றும்
 கூரயிற் சூலமுன் கொள்ள
மடிவரும் நாகே சரித்தழல் அவிப்பான்
 வருகரு முகிலென வந்தான்
படிமுழு தளிக்கும் கருணைகூர் வீர
 பத்திரன், மித்திரன் எவர்க்கும்.

அவரை நோக்கிச் சிவபெருமான், "நீ சென்று அகிலம்யாவையும் அழிக்கின்ற நரசிங்கத்தை நயங்கூர் சொல்லால் மாற்றுவாயாக. அவ்வாறு செய்ய இயலாவிட்டால், நம்முருவும் சக்திகளும் பெற்று நரமடங்கலை அடக்குவாயாக" என்று சொல்லியனுப்பினார். அறிவுறுத்திய சருக்கம்: அவ்வுரைப்படியே சென்று வீர பத்திரர் தந்தை தன் மைந்தர்க்குக் கூறல்போல் நரசிங்கத்தைப் புகழ்ந்து இனிய சொற்கள் கூறுகிறார்.

> சாற்றொ ணாத உலகத் தலைவ, நீ
> ஆற் றொணாத துயர்வந் தணைந்திடின்
> மாற்றிஇப் புவனங் கட்கு மாமகிழ்
> வேற்றிக் காக்கும் இறைவனும் நீ யன்றே!

என்றெல்லாம் சொல்லி, "உன் உக்கிர வடிவை ஒடுக்குதி" என்று கூறுகிறார். நரசிங்கம், கோபமும் நகையும் மேற்கொண்டு, "நீ உன் இடம் செல். என் உரம் அடக்கவோர் தலைவனுண்டோ?"

> கால னுக்குமோர் காலனான கடவுளர் பலரும்
> மேலை வானுல கங்களின் வீற்றிருப் பதுமென்
> பாலருள் துணிவென உணர்க எனப்பகர்ந் ததுவால்
> மால டைந்தறி விழந்துழல் மாணிட மடங்கல்.

பின்னும் வீரபத்திரர், சிவபராக்கிரமங்களைக் கூறி, "திருமாலாகிய நீயே முன் உன் சக்கராயுதம் ததீசியால் விழுங்கப்பட்ட போது, சிவபிரானை வேண்டி, கண்மலர் இட்டு வழிபட்டுச் சக்கராயுதம் பெற்றாய்" என்று சொல்ல வந்தவர், "சலந்தரனைப் பிளந்த சக்கரம் பெருமான் உனக்கருளினார்" என்று சொல்லுமுகமாக, சலந்தரன் கதையை ஒரு சருக்கத்தால் உரைக்கிறார்.

சருக்கத்தின் தொடக்கத்தில் நடராசப் பெருமானுக்கு ஒரு துதி சொல்கிறார் ஆசிரியர்:

> வேத நூற்பொருள் விண்ணவர் விண்முதல்
> பூத மாத்திசை யாவையும் பூத்திடு
> மாது நோக்கிட மன்றினுள் ஆடிய
> ஆதி மூர்த்தி அடியிணை போற்றுவாம்.

நடராசருக்குச் சிதம்பர புராணமும் மதுரைக்குச் சொக்கநாத ருலாவும் பாடிய நம்மாசிரியர் எங்குமே இவ்விரு தலங்களை

வணங்குவது கருதற்பாலது. சலந்தரன் செய்த இன்னலுக்கு ஆற்றாது வந்து சரண்புகுந்த தேவர்க்குப் பெருமான் காட்சி அருளுகின்றார்:

கங்கைமதிச் சடைமுடியும் கண்மூன்றும் விண்மூன்றும்
அங்கழியா தருள்மிடறும் அணிப்புயங்கள் ஒருநான்கும்
செங்கையணி மான்மழுவும் சேயிழையான் ஒருபாலும்
பொங்களதிர் முன்னின்றான் புவனங்கள் தொறும் நின்றான்.

இதற்கிடையில் சலந்தரன், சிவனை மட்டுமே இதுவரை வெல்ல வில்லை என்பது மனத்துட் கொண்டு வருதலும், சிவபிரான் கால் விரலால் கீறிய சுதர்சன சக்கரத்தை 'வலியுடையயாகில் எடு பார்க்கலாம்' எனவும், சலந்தரன் அதைப் பெயர்த்தெடுத்துத் தோள்மீது வைத்தான்:

சக்கர மற்றவன் மற்புயமீது
 தரித்தன னோஇலையோ
அக்கண னிற்கொலை வச்சிர மைக்கிரி
 அன்று பிளந்ததெனாக்
தக்க தலங்கள் வரங்கள் உரங்கள்
 சயங்கள் தணந்தவுணன்
மிக்க உடற்சுமை இருபிள வாயிரு
 வெற்பென வீழ்ந்தனவால்.

இவ்வாறு சலந்தரன் ஆகம் பிளந்த சக்கரத்தைத் திருமால் பெற்ற வரலாறு அடுத்த சருக்கத்தில் சொல்லப்படுகிறது: வீர பத்திரன் நரசிங்கத்துக்குச் சொல்கிறார். வழக்கம்போல் இங்கும் முதற்பாடல் நடராசர்துதி. ஆயிரமலரால் அருச்சிக்கும் போது, ஒரு மலர் குறைதலும், கமலக்கண்ணன் தன் கமலக் கண்களில் ஒன்றை இடந்து மலராகச் சாத்தினான். சிவபெருமான் காட்சி கொடுக்கிறார். திருமாலுக்குச் சக்கரமருளி மறைகிறார். இக்கதையை விரிவாக வீரபத்திரர் நரசிங்கத்துக்கு உணர்த் தியும், நரசிங்கம் கொடுமை தணியவில்லை. வீரபத்திரரையே பிடிக்க வந்தது. வீரபத்திரர் விசுவரூபமெடுக்கிறார். பெருமா னுடைய நெற்றிக் கண்ணாகிய கனல் விழியாக, அவருடைய கூறு இவரிடம் வந்து பொருந்தியது. சரப வடிவம் எடுக்கிறார்:

சடையணி முடியும் இளமதிக் கொழுந்தும்
 தழல்விழி மூன்றும்வா ளெயிறும்

தொடரயிற் பரவைத் துண்டமும் காள
கண்டமும் தோள்களா யிரமும்
படர்சிறைப் பாம்பும் நாபியும் கீழுற்
படிவமும் வாலும் நாற் றாளும்
திட முறு புறத்துப் பதமொரு நான்கும்
சேணிடைப் பொலிந்து முன் திகழ.

எயிறுகொண் டதரம் அதுக்கியார் வங்கள்
எழஉயிர்ப் போங்க ஊங் காரப்
புயலொலி யுலைய மிகவன வொளிகள்
புக்கொளித் திடவொளி பொங்கச்
செயிரறு வருவாம் ஈசனுக் குரிய
திருவுரு வருண மா யுதங்கள்
பயிரறப் பயிலா வேற்றுமை திகழப்
பரவரும் சரபமா யினனால்.

*தேவர்கள் துதிக்க, அச்சரபமூர்த்தி, நரசிங்கத்தைப் பற்றிப் பற் களாலும் சிறகாலும் தாளாலும் வாலாலும் துன்புறுத்தி அதன் வலியை அடக்கிற்று. தேவர்கள் துதித்தார்கள்:*

பரசிவ சங்கர புனித சடாதர
பழுதறு செய்கைய முப்
புரஅர வடசிலை யான களிற்றுரி
புலியதள் புனையமலா
பிரம கபால உயிர்க்குயி ராகிய
பெரும் மகேச உருத்
திர சரபத்துரு முதல்வ சிதம்பர
தினகர நீ சரணம்.

*நரசிங்கமூர்த்தியும் தன் வலியெல்லாம் குன்றி, பராபரன் பெருமை யையுணர்ந்து துதித்தான். துதித்து, மானிட மடங்கலின் வடிவத்தை விட்டு உறைந்தான். பரமனும் அம்மடங்கலின் அதளை உரித் துடுத்தார்; அதன் ஆனனத்தையும் கொண்டு விசும்பிடைக் கரந்தார். இவ்வாறு வீரபத்திரர் நரசிங்கத்தின் வலியடக்கி, இவ்விரண்டும் கொண்டு பெருமான் கரத்தில் அளித்தார். இத்தகைய சிறப்பு வாய்ந்த சரபமூர்த்தியின் புராணத்தைக் கேட்டாலே,*

ஆற்றொ ணாதவெந் துயர்பகை யறிதரு மாயபல்
கூற்றம் நண்ணிடா, கோள்வினை யடைந்திடா, முன்னம்
ஏற்ற தீவினை யடைந்திடா, மேல்வினை ஏறா,
சாற்றரும் பிறப் பிறப்புவெந் நரகமும் சாரா.

தொக்க விக்கினத் துஞ்சும்; மாபஞ்ச பாதகங்கள்
அக்க ணத்திடை அழியும்; நீ டவமிருத்து அகலும்;
மிக்க தேவர்கள் உண்மைகள் விளங்கும்; வேதாந்தத்
தக்க சைவ சித்தாந்தமா முத்தியும் சாரும்.

*என்று கூறிச் சரபருக்குரிய 108 நாமங்களையும் செபித்தால் பெரும் பயன் அடையலாம் என்று ஆசிரியர் நூலை முடிக்கிறார்.*

*சரபர் வரலாறு வேறெங்குமே சொல்லப் பெறாமையால், அதை இங்கு சிறிது விளக்கமாகவே கூறலானோம். முன்னம் ஏற்ற தீவினை அடைந்திடா, மேல்வினை ஏறா என்று சஞ்சித ஆகாமிய வினைகளைக் கூறுவதும், சைவ சித்தாந்த மாமுத்தி என்று இறுதியில் கூறுவதும், இவர் சைவ ஞான பரம்பரையில் சீடராய் வந்தார் என்று முன் கூறியதற்குப் பொருத்தமாகவே உள்ளது.*

*சரபரைப் பற்றிய குறிப்பு, தமிழில் மிகவும் அருமையாகவே காணப்படும். திருமாளிகைத் தேவர், முதல் திருவிசைப்பாவில் சரபரைத் துதிக்கிறார்: (10)*

மடங்கலாய்க் கனகன் மார்பு கீண்டானுக்கு
அருள்புரி வள்ளலே! மருளார்
இடங்கொள் முப்புரம்வெந் தவியவை திகத்தேர்
ஏறிய ஏறுசே வகனே!
அடங்கவல் லரக்கன் அருள்திரு வரைக்கீழ்
அடர்த்தபொன் னம்பலத் தரசே!
விடங்கொள் கண்டத்தெம் விடங்கனே! உன்னைத்
தொண்டனேன் விரும்புமா விரும்பே.

*பதினோராந் திருமுறையில் நம்பியாண்டார் நம்பியும் கோயில் திருப்பண்ணியர் விருத்தத்தில் இரண்டு முறை (27, 36) சரபத்தைச் சிம்புள் என்று குறிப்பிடுகிறார்:*

ஆகம் கனகனைக் கீறிய கோளரிக் கஞ்சிவிண்ணோர்
பாகங் கனங்குழை யாயரு ளாயெனத் தில்லைப்பிரான்

வேகந் தருஞ்சிம்புள் விட்டரி வெங்கதஞ் செற்றிலனேல்
மோகங் கலந்தன றுலந்ததன் றோஇந்த மூவுலகே.

அடுக்கிய சீலைய ராய்அகல் ஏந்தித் தசைஎலும்பில்
ஒடுக்கிய மேனியொ டுண் இரப் பார் ஒள் இரணியனை
நடுக்கிய மாநர சிங்கனைச் சிம்புள தாய்நரல
இடுக்கிய பாதன் தில்லை தொழாவிட்ட ஏழையரே.

*சரப மூர்த்தியின் உருவ வருணனை பிற்காலத்தில் காஞ்சிப் புரா ணத்தில் சொல்லப்பட்டுள்ளது:*

நன்னா லிரண்டு திருவடியும்
நனிநீள் வாலும் முகமிரண்டும்
கொன்னார் சிறகும் உருத்திரமும்
கொடும்பே ரார்ப்பும் எதிர்தோற்றச்
செந்நீர் பருகிச் செருக்குநர
மடங்கல் ஆவி செகுத்துக் கொண்டு
ஒன்னார் குலங்கள் முழுதழித்த
உடையான் சரபத் திருவுருவம்.

*(சிவபுண்ணியப் படலம்) சோண சைல மாலையில் சிவப்பிரகாசர் பின்வருமாறு பாடுகிறார்.*

சிம்புளாய் மடங்கல் ஏறுழ்வலி கவர்ந்த
திறனும், முப்புரம்சுடு விறலும்
அம்புயா தனத்தன் முடிகளைந் திட்ட
அடலும்ஏத் தினர்க்கிடர் உளதோ?

*சரபபுராணத்தின் இறுதியில் நூற்பயன் கூறும் பாடல் பின்வருவது:*

இக்கதையை விரும்பினர்கள் கேட்டவர்கள் இசைத்தவர்கள்
தக்க சிவலோகத்தில் இறங்கி மகிழ்ந்து இறைவனுடன்
ஒக்க வுறைந் தவனுடைய உருவமும் பெற் றழியாத
மிக்க பரி பூரணத்தில் நீங்காமல் விளங்குவர்கள்.

*வடமொழியில் சரபமூர்த்தி வரலாறு 35 சுலோகங்களால் சர போப நிடதத்தில் கூறப்படுகிறது. பிப்பலாத முனிவர், மும் மூர்த்திகளில் மேம்பட்டவர் யாரென்று பிரமனைக் கேட்க, பிரமன் இவ்வரலாறு கூறுகின்றான். சரப தோத்திரங்களாகப் பல சுலோகங்கள் இங்கு உள்ளன.*

## ததீசி புராணம்

ததீசி என்பவர் சிவபுராணங்களில் சொல்லப்பட்ட சிவ பக்தி நிறைந்த ஒரு முனிவர். இவர் வரலாற்றைத் திருமலை நாதர் 48 பாடல் கொண்ட ஒரு புராணப் பகுதியாகப் பாடியிருக்கிறார். இது தனித்த புராணம் என்று கொள்ளாமல் ஒரு விரிந்த புராணத்தின் சருக்கங்களில் ஒன்று என்றே கொள்ளத்தக்கது. பின்வரும் பாடலில், 'சிவபிரான் நரசிங்கத்தை அழித்து அதன் தோலைப் போர்த்ததைக் கூறிப் பின்னர்த் ததீசி மேன்மையை உரைப்போம்' என்று கூறுவது காண்க:

மன்று நாயகன் சரபமாய் மானிட அரியைக்
கொன்று தோல்முகம் புனைந்தமை கூறினம்; இப்பாற்
துன்று வண்டலிற் றுளபமால் ஆழியைத் தொலைத்து
வென்றி கொண்டிடு ததீசிதன் மேன்மையை உரைப்பாம்.

இப்புராணத்தின் தொடக்கப் பாடலும் இறுதிப் பாடலும் பின்வருவன:

மனித்த ராயினுந் தேவர்களாயினும் வணங்க
நினைத்த போதினும் அழிவிலா வீடருள் நிமலன்
பனித்த வாணுதல் அம்பிகை பரவிடம் அன்றிக்
குனித்த குஞ்சிதத் தாள்மலர் சென்னிமேற் கொள்வாம்.

அரிய மாதவனும் மாலுநேர் பொரு
    தவத்தல நனே சுரமதனில்
உரியதோர் தீர்த்த மதனையாடினார் சா –
    யுச்சியம் பெறுவரிக் கதையைப்
பரிவுடன் படித்தோர் கேட்டவர் பயமும்
    அடைவிலர் நினைத்ததும் பலிக்கும்
இருவினை யறுக்குங் காதை யீதென்றால்
    யாரிதன் பெருமையை யிசைப்பார்.

நான்முகனுடைய தும்மலில் தோன்றிய குதன் என்பவன் வச்சிராயுதம் பெற்றுப் பூமியை ஆண்டு வந்தான். அதர்வ மகிரிஷியின் மகன் ததீசியுடன் நட்புக்கொண்டான். ஒருநாள் உலகில் முதன்மையுற்றவர் யாரெனப் பேச்சு நடந்தபோது, தேவர் ததீசி முனிவர் என, குதன் மன்னர்களே என்று சொல்லி அவருடன் சண்டையிட்டான். வச்சிராயுதத்தால் ததீசியைப் புடைத்தான். சுக்கிரனால் மிருத சஞ்சீவினி பெற்ற ததீசி

சிவபெருமானை வேண்டி வச்சிரயாக்கை பெற்றார். குதனை எதிர்த்தார். குதன் தானும் வச்சிர யாக்கை பெறத் திருமாலை வேண்டினான். திருமால் ததீசியை எதிர்த்தார். சக்கராயுதத்தை ஏவினார். சக்கராயுதம் சாம்பராயிற்று. திருமால் தேவர்களுடன் சேர்ந்து போரிட்டுத் ததீசியிடம் தோல்வியுற்றார். ததீசி திருமாலின் மார்பில் உதைத்தார். திருமால் நாணி வடுப்பட்ட தமது மார்பில் இலக்குமியை வைத்து மறைத்தார் - என்பது இப்புராணம் கூறும் கதை.

சில பாடல்கள் பின்வருவன:

நீச ராயினும் மறையவ ராயினும் நீங்காப்
பாச ராயினும் பவத்துவக் களித்திடும் பாச
நாச ராயினும் அடியவர் நாசமொன் றில்லாத்
தேச ராகுவர் என்றுமுன் செப்பினன் பரமன். 25

என்று கூறலும் மாயனும் உருத்துட னெழுந்து
வென்றி மாதவர் வெருக்கொள விச்சுவ வடிவாய்
நின்று தன்னிடைச் சராசரம் நிலம்புனல் அனல்கால்
துன்று மண்டலங்கள் யாவையுந் தோற்றுவித் தனனால். 32

வானி றைந்த தேவர் யாரும் வந்து போர்செய் காலையில்
தேன வர்ந்த கொன்றை திங்கள் சென்னி வைத்த சிவபரன்
கானு றைந்த சிந்தை மெய்த்த தீசி யால காலமுன்
மேண டந்த டர்ந்த தென்ன வெகுளி யான டந்தனன். 41

தீதகன் றொளிரும் சக்கரமழிந்து செருவினிலுடைந்ததுமன்றி
மாதவனிடது தாளினா லுதைப்ப வருந்திய வருத்தமுங் கண்டு
போதலரகத்தோன் கடிதுவந்தடைந்த பூசலையகற்றினகன்றான்
பாதபங்கயமத்த தீசியைப்பணிந்து மாயனும்பாற்கடலடைந்து.

## வினாவிடைப் புராணம்

கிடைக்கும் சிவ மகாபுராணத்தில் இது மூன்றாம் பகுதி. இது முந்திய புராணத்தை அடுத்துத் தொடர்வது என்பதை ஆசிரியர் கூற்றாகிய பின்வரும் பாடலால் நன்குணரலாம்.

நீதி மாதவன் நேமிபெற் றுய்ந்தமை
ஓதி னோம்; இனித் தெண்டிரை யுண்டவன்
ஆதி பேரடை யாளம் வினவுறக்
கோதில் வேலன் மொழிந்தமை கூறுவாம்.

*இது சிவமகாபுராணத்தில் ஒரு சருக்கம் போன்றதேயாகும். இதன் பாடல்கள் 44. இதன் முதற்பாடலும் இறுதிப் பாடலும் பின்வருவன:*

விரிவு மைம்புலன் விடக் கரணங்கள்
திரியும் போதுமென் சிந்தை மறக்குமோ,
பரியு நோக்குமை பங்கினன் மன்றுளே
புரியு மாடலும் பூங்கழற் றாள்களும்?

சிந்தைமகிழ்ந் தன்புடனே இக்கதையைக் கேட்பவர்கள்
சிவலோ கத்தின்
முந்தையுறைந் திடுவரெனத் தமிழ்மலைய மாமுனிக்கு
மொழிந்தான், வேலை
வெந்தொழியக் கிரிகிழியச் சூரனுடல் பொடியாக
விட்ட வைவேற்
கந்தனிமை யவர்மடவார் மங்கலநாண் தனைக்காத்த
கருணை யாளன்.

*இதன் இறுதியில் முற்கூறியவாறு 'சிதம்பர புராண மருளிச் செய்த சிவபுராணத்தில் வினாவிடைப் புராணமுற்றும்' என்ற தொடர் காணப்படுகின்றது.*

*இதில் சைவத்தின் பெருமையும், சிவபெருமானுடைய திருவிளையாடல்களும் பேசப்படுகின்றன. அகத்தியர் முருகக் கடவுளிடம் கேட்கும் வினாவும், அதற்கு அக்கடவுள் கூறும் விடையுமாக நூல் உள்ளமையால் வினாவிடைப் புராணம் என்ற பெயர். வினா: கயிலையங்கிரி யிருக்கையில் சுடலையில் நடமிட்டதேன்? விடை: எல்லோருடைய உடல்களும் வெந்தழியும் இடம் சுடலையாதலின் அதனைச் சிவபிரான் சிறப்பிடமாகக் கொண்டார். வினா: கொன்றைமாலை முதலானவை இருக்கத் தலை மாலையணிந்ததேன்? விடை: தேவர்கள் தொகுதி வெந்தழிந்தபின், அவர்களது எலும்பு மண்டையோடு இவைகளை மாலையாகத் தரித்தார். இவ்வாறாக விபூதி யணிந்தது, நடனம் ஆடியது, எருதேறியது முதலானவை கூறப்பட்டுள்ளன.*

*சில பாடல்கள் பின்வருவன:*

சாந்து காரகில் சந்தனங் குங்குமம்
தோய்ந்த நானங்கத் தூரி யிமசலம்
வாய்ந்த வாச வகைவிட்டு மார்பினூல்
ஆய்ந்த நாயகன் பூதி யணிந்ததேன்?

வெய்யவினை நீறாக்கு முறைமையால் நீறென்றும்,
விளங்கு பூதி
துய்யநெறி தருகையாற் பூதியென்றும், மலவிருளைத்
துரத்தி யார்க்கும்
உய்யும்வகை விளக்கலாற் றுளக்கமென்றும், எழுபவத்தை
யொழித்தல் தன்னாற்
பொய்யினரு ளாக்கையென்றும், அப்பொடிக்குப் பெயராகப்
புகல லாகும். 25

வளர்கதத்திற் சூகரமாம் வடிவெடுத்தல் வசுரனுடல்
மாய்த்தப் ப்ாரைத்
தளர்வகற்றித் கொம்பினா லெடுத்தளித்த ஆங்காரம்
தரியா னாகி
விளை மதத்தா லுலகெல்லாம் மதித்திடவப் பன்றியுரு
வெருவச் சாடி
இளையமதித் துளிருரத்தும் புனைந்ததெனப் பிடுங்கியதோ
டிறைவன் பூண்டான். 40

*14ஆம் நூற்றாண்டில் எழுந்த சதமணிக் கோவை என்ற ஒரு சைவ சாத்திர நூல் இதுபோலவே வினா விடையாக அமைந் திருப்பது அறியத்தக்கது; அங்கு வினாக்கள் வெண்பா; விடை ஒரு சிறு தொடர் அல்லது வாக்கியம்.*

## *சிதம்பர புராணம்*

*இப்புராணம் காப்புச் செய்யுளும் பாயிரமும் ஒன்பது சருக்கங்களும் கொண்ட 814 பாடல்களுடையது.*

*பாயிரப் பகுதியில் பரஞ்சுடர், திருச்சிற்றம்பலத்திலகும் பேரொளி, சிதம்பரம், சிவகாமசுந்தரி, கற்பகவிநாயகர், குமரன், (சிவஞான போதமெனும் அருள் நூல் தன்னைவிரித்தருள்) நந்தி தேவன், நால்வர், தில்லை மூவாயிரவர், சண்டேசர் முதலான உருத்திர பல்கணத்தவர் ஆகியோருக்கு முறையே வணக்கம் சொல்லியபின், குலோத்துங்கசோழன், திருவகம்படிமைப் பரிசனர் ஆகியோருக்கும் வணக்கம் சொல்லுகிறார். சேக்கிழார் காலம் பற்றிய கருத்தைத் தெளிவிக்க இவர் கருத்தும் உதவு மாதலால் சோழர் வணக்கப் பாடலை இங்குத் தருவது பொருத்தமாயிருக்கும்:*

பருதிகுலந் தனிலுதித்துப் பரசமய இருளகற்றிப்
  பரமன் ஆடும்
பொருவருபே ரம்பலமும் கோபுரமும் ஆலயமும்
  பொன்மேய்ந் துண்மைச்
சுருதியுடன் சைவநெறி தழைத் தோங்கத் திருநீற்றுச்
  சோழ னென்று
குருமணிமா முடிபுனைந்த குலோத்துங்க வளவனருள்
  குறித்து வாழ்வாம்.

*இப்பாடல், பேரம்பலம் பொன்வேய்ந்த திருநீற்றுச் சோழ னென்று முடிபுனைந்த குலோத்துங்க வளவன் என்று கூறுவது, இரண்டாம் குலோத்துங்கன் என்பது மிகவும் தெளிவு. 13ஆம் பாடலில்,*

முற்றுமுணர் மெய்கண்ட சந்ததிக்கோர் தீபமென
  முதன்மை கொண்ட
கொற்றவன் தன் குடிமருவு குலவுமுமா பதிசிவன்பொற்
  கோயில் உண்மை
சொற்றபுரா ணமுமிருக்கப் பின்னுமொருவகையாலும்
  சொல்வான் புக்கேன்
மற்றவன்தன் திருவடியின் வழிவந்தோர்க் கடியனெனும்
  வழக்கான் மன்னோ.

*என்று இவர் கூறுவது இரு கருத்துக்களுக்கு ஆதரவளிக்கிறது. ஒன்று, உமாபதியார் கோயிற் புராணம் பாடினார் என்பது. இரண்டு, உமாபதி வழி வந்த சிற்றம்பலநாடி மாணாக்கர் வழி யினரான காஞ்சி ஞானப்பிரகாசருடைய மாணாக்கருள் ஒருவர் புராணத் திருமலைநாதர் என்ற கருத்து. அடுத்த பாடலில், இந் நூலைத் தாம் 'தாவாத பெருஞ்சைவ புராணத்தின் வந்துளது சாற்றும் ஈது' என்பதனால், சிவமகா புராணத்தின் பகுதிகள் பல, அவற்றைத் தமிழால் இவர் செய்தார், அவற்றுள் ஒன்று இது என்ற கூற்றும் வலியுறுகின்றது. தாம் நூல்செய்த காலத்தை ஒரு பாடலால் கூறுகின்றார்:*

சூழுமாகடற் புடவியான் சுடர்முடிச் சகற்கீ
ரேழு நூறுடன் முப்பஃ தியைந்த ஆண்டெல்லைத்
தாழுமா மதிச் சடைமுடித் தனிமுதல் என்றும்
வாழும் அம்பலப் பெருமையை வழுத்தலுற் றனன்யான். 18

இதில் குறிப்பிட்ட, காலம் சகம் 1430; கி.பி. 1508: எனவே இவ் வாசிரியர் காலம் வரையறை பெறுகிறது.

இப்புராணம் சைவ மகாபுராணத்தின் பகுதி என்பது முன்னமே கூறப்பட்டது. தில்லை மூவாயிரவர் இதைத் தமிழி னாற் கூறுக எனவே இவர் வடமொழியிலிருந்து தமிழிற் செய்த தாகப் பாயிரத்துள் கூறுகிறார் (பாடல் 15.) 'மூவர் பாடல் இம்முதுல கோங்குக' என்று இவர் பாடிய பாடல் சைவ உலகம் நன்கறிந்தது:

> தாவிலா மறைச் சைவம் தழைத்திடக்
> காவல் வேந்துடன் காசினி வாழ்ந்திடத்
> தேவ தேவன் திருவுரு வாகிய
> மூவர் பாடல் இம்முதுல கோங்கவே.

இந்நூல் அளவில் சிறிதாயினும் சிறந்த சிவ புராணங்களில் ஒன்று. ஆசிரியர் பல இடங்களில் பெருங்காப்பியத்தன்மை தோன்ற தம் நூலைச் செய்துள்ளார். நாட்டு வருணனை நகர வருணனை பல சருக்கங்களிலும் அமைந்துள்ளது; இப்பகுதிகள் பொருட் சுவை யில் பெரும் காப்பியப் பகுதிகளையும் விஞ்சுவன. அப்படியே இவர் கூறியுள்ள போர் வருணனையும். மடக்கு சந்தம் முதலிய செய்யுள் அணிகள் அதிகம் காணப்படுவன. சொல் நயமும் இத்தகைய காப்பிய நயமும் சிறப்பாகப் பொருந்தியுள்ளமை யால், புராணத் திருமலை நாதர் என்ற பெருஞ்சிறப்பு இவருக்கு எல்லா வகையாலும் பொருந்துமென்பது நன்கு விளங்குகின்றது.

ஆசிரியர் சிவபக்தி மிக்கவர். நூலெங்கும் சிவ புண்ணியப் பலன் மிகவும் விரித்துச் சொல்லப்படுகிறது. பொதுவாக இது 15-16ஆம் நூற்றாண்டுகளில் தோன்றிய சைவ நூல்களுக்குரிய ஒரு சிறப்பியல்பு. 14ஆம் நூற்றாண்டில் சைவ சமயத்துக்கு முகம்மதியர் படையெடுப்பால் விளைந்த பெரும் கேட்டைக் கண்டு மனம் புழுங்கி அடுத்துப் பின் வந்த நூலாசிரியர் அனை வருமே சிவ புண்ணியத்தின் பெருமையைத் தங்கள் நூல்களில் எடுத்துச் சொல்வது ஒரு கடமையாகக் கொண்டனர். மறைஞான சம்பந்தர் செய்த சிவ தருமோத்தரம், சிவ புண்ணியத் தெளிவு போன்ற பல நூல்கள் இக்கருத்தினால் எழுந்தவையாகும். சிவத் துரோகங்கள், ஆலயத்தில் செய்யத்தகாத குற்றங்கள் முதலி யனவும் விரித்துச் சொல்லப்பட்டன.

**1. சிதம்பர மான்மியச் சருக்கம்**

காப்பியத்தின் நாட்டுப்படலம் நகரப் படலம் போல் ஆசிரியர் அமைத்திருக்கிறார். புருடனுக்கு உளக்கமலத் தான மாகிய இதில் சிற்சபையில் நடனமிடும் பெருமான் சிறப்புச் சொல்லப்படுகின்றது. ஞானாகாயம், தில்லை, சிற்றம்பலம், பிரமபுரம், புண்டரீகபுரம், சிதம்பரம் என்ற பெயர்களுடையது இத்தலம்.

**2. துன்மதச் சருக்கம்**

பெருமானுடைய ஆனந்தத் தாண்டவங் கண்டோர் அன்பினர் அன்பில்லோர் என்று வேறுபாடில்லாமல் வீடுறு வர்; மதுரையில் தூய அந்தணனொருவனுக்குத் தீய துன்மதன் என்பவன் புதல்வனாய்ப் பிறந்திருக்க அவன் தீயொழுக்கம் கண்ட மன்னன் நாட்டைவிட்டு அவனை அகற்றினான். அவன் எல்லாத் தீத்தொழில்கள் செய்து, ஒரு நாள் தில்லைப் பெருமான் நடனங்கண்டு, அகன்று, ஒரு மறையவன் நல்லுரையும் கேளாது தீத்தொழிலைப் புரிந்து வந்து, உரிய காலத்தில் இறந்தான். யமன் வந்து அவனுயிரைத் தளையிட்டுக் கொண்டு சென்றான். திரு நந்தி தேவர் இடையிட்டுத் தடுத்து, திருநடனம் கண்ட புண்ணி யத்தால் துன்மதன் எல்லாப் பாவங்களிலிருந்து விடுதி பெற்று நற்கதியடைதற்குரியவன் என்று கூறி, அவனைக் காலனிட மிருந்து விடுவித்தார்.

**3. துச்சகச் சருக்கம்**

வஞ்சனையால் கொடிய பாதகங்களைத் துச்சகன் என்பவன் செய்து வந்தான். சேரலர் கோன் தில்லை நடனம் தரிசிக்க வந்த சமயம் இவனைக் கண்ட மன்னர் ஏவலர், இவன் பொதி சுமக்கத் தக்கவன் என்று கருதி இவன் தலையில் சுமை ஏற்றித் தில்லைக்குக் கொண்டுவந்தனர். இங்கு வந்தபின் துச்சகன் வெப்பு நோயால் இறக்கவே, தலவிசேடத்தால் சாயுச்சியம் அடைந்தான்.

**4. நியமச் சருக்கம்**

சிதம்பரத் தலத்தை யடைந்து வாழ்பவர் மேற்கொள்ளும் நியமங்களும் அவற்றின் பயனாய் அவர்கள் மேலான பதவியடை தலுங் கூறும்.

### 5. சோமநாதச் சருக்கம்

சோமநாதம் என்னும் தலத்தில் கார்த்திகைக் கார்த்திகை விழா இறைஞ்சச் சிவசன்மனென்பவன் சென்றான். கூட்டத்தில் அவனருகு நின்ற சோமசன்மன் என்பவன் ஒரு நெய்யகலைக் கீழேதள்ள, தீபம் அணைந்தது. அவன் அதனை அறியான். இவன் அதனைப் பார்த்தும் ஒன்றும் செய்யவில்லை. இப்பாவத்தால் இருவரும் விந்தாடவியில் அலகையாய்ப் பிறந்து துன்புற்றிருந்த காலை, அங்கு வந்த வாமதேவ முனிவரால் தம் பிறப்புணர்ந்து சிவசிந்தனை கொண்டு உரியகாலத்தில் அலகைப்பிறப்பு நீங்கி முத்தி பெற்றனர். இங்கு சிவத்துரோகப் பலன்கள் சொல்லப் படுகின்றன.

### 6. தீர்த்தச் சருக்கம்

இங்குள்ள பத்துத் தீர்த்தங்களின் வரலாறும் சிறப்பும்.

### 7. திருச்சிற்றம்பலச் சருக்கம்

ஆனந்தத் தாண்டவ வருணனையும் காண்பதன் பயனும், பெருமான் திருமாலுக்குப் பல தலங்களின் பெருமையும் திருச் சிற்றம்பலத்தின் பெருமையும் கூறுதல். திருமாலின் துதி.

### 8. சமாதிச் சருக்கம்

திருமால் சைமினி முனிவனுக்குச் சிதம்பரப் பெருமையைக் கூறிச் சமாதியிலிருத்தல்.

### 9. துற்றெரிசனச் சருக்கம்

சகல பாவங்களும் செய்த துற்றெரிசனன் என்ற வேடுவன், வழியே வந்த ஒரு முதிய மறையவன் குமாரனைக் கவர எண்ணி அவனைக் கொலை செய்ய முயன்று அவன் சொற்களுக்கிரங்கி அவனை விடுத்து, வெயில் மறைக்க ஒரு குடையும் கொடுத் தனுப்பிய புண்ணிய விசேடத்தாலும் அக்குடை கோயில் பெரு மானுக்குக் கவிக்க உதவியதாலும், இருவரும் முத்தி பெற்றனர். பின்னர் சிவதருமப் பலன்கள் பல சொல்லப்பட்டுள்ளன.

### பதிப்பு

ஆசிரியர் பெயரில்லாது இந்நூல் இராட்சத வருடம் ஆனி மாதம் (1856இல்) மதுரைத் திருஞானசம்பந்த சுவாமிகளாதீனம் சிதம்பர சுவாமிகளால் பதிப்பிக்கப் பெற்றது. இதற்கு, இச்சுவாமி களிடம் அன்பு பூண்டிருந்த சிதம்பரம் இராமலிங்கம் பிள்ளை (பின்னால் இராமலிங்க சுவாமிகள்) 'சிதம்பர புராணம் இதம்

பெறத் திருத்திய - சிதம்பர முனிவன் பதம் பரவியது' என்று மகுடமிட்டு 71 அடிகள் கொண்ட ஆசிரியப்பாவால் சிறப்புப் பாயிரம் கொடுத்திருக்கிறார். 'என்போன்றவர்க்கும் இன்னருள் புரிவோன்' என்றும் அதனுள் கூறுகிறார். அதன்பின், சிதம்பர சுவாமி தோத்திரமாக ஆசிரிய விருத்தம் என்று தலைப்பிட்டு ஐந்து பாடல்கள் 'மதுரைச் சிதம்பர மாதவனே நிதியே' என்ற மகுடத்தோடு சேர்க்கப்பட்டுள்ளன; இவ்விருத்தமும் இராம லிங்க சுவாமிகள் பாடியது போலும்.

**உரை**

இந்நூலின் ஒரு பகுதிக்குப் பழைய உரையொன்று தஞ்சைச் சரசுவதி மகால் நூல்நிலையத்தில் உள்ளது; அச்சிடப்படவில்லை.

## இறைவாச நல்லூர்ப் புராணம்

இறைசை - இறைவாசநல்லூர். இன்றைய தென்னார்க்காடு மாவட்டம் திருகோவலூர் தாலுக்காவில் எலவானாசூர் என்ற பெயரில் வழங்குகின்ற ஊர் பழமையாக இறையானறையூர் என்று பெயர் பெற்றிருந்தது. இவ்வூர்ச் சிவாலயத்தின் முதற் பிரகாரம் மேலைச்சுவரில் பொறிக்கப்பட்டுள்ள ஒரு கல்வெட்டு இத்தலத்துக்குப் பாடப்பட்ட ஒரு தலபுராணம் பற்றிய செய்திகள் தருகிறது (485/ 1938). திருமலைநயினார் சந்திரசேகரர் என்ற ஒரு புலவர் இப்புராணம் பாடினார். இதன்பொருட்டுச் சகம் 1432இல் (கி.பி. 1510இல்) இவருக்கு நிலமும், ஆனந்தத் தாண்டவன் திருவீதியில் ஒரு மனையும் கோயிலார் அளித்தார்கள் இவர் மெய்கண்ட சந்தானத்தைச் சேர்ந்த சத்தியஞான தரிசனிகளின் மாணாக்கர் என்று அங்கு சொல்லப்பட்டுள்ளது. புராணம் இன்று கிடைக்கவில்லை.

திருமலை நயினார் என்று புராணத் திருமலைநாதர் வழங் கப்பட்டார் என்று முன்னமே பார்த்தோம். இவர் கச்சி ஞானப் பிரகாசரின்-மாணாக்கர் என்றும் குறிப்பிட்டோம். இவர் காலம் கிபி. 1500-25; இதே காலம் இப்புராணம் செய்த ஆசிரியர் திரு வண்ணாமலை சத்தியஞானதரிசனிகளின் மாணாக்கர் என்று சொல்லப்பட்டமையால் இவர் அங்கு சொல்லப்பட்ட சந்திர சேகரர் என்னும் பெயருடையவராய், அத்திருமலைநாதர் மக னாகிய பாட்டியல் செய்த பரஞ்சோதியின் வேறானவராய், காஞ்சிக்கு அருகிலுள்ள திருவண்ணாமலை ஞானாசிரியரிடம் மாணாக்கராயிருந்தாரென்று கருதக்கூடும்.

முதலாம் இராசராசனால் இவ்வூர் கி.பி. 987இல் சோழ கேரளச் சதுர்வேதிமங்கலம் என்று பெயர் இடப்பட்டது. சோழர் பாண்டியர் விசயநகர மன்னர் பலர் சாசனங்கள் இங்கு உள்ளன. சுவாமிபெயர் ஊர்பாகங் கொண்டருளிய நாயனார். திருவாசகத் திருச்சாழல் ஞாயிற்றுக்கிழமையில் இக்கோயிலில் ஓதுவதற் காக விக்கிரம சோழன் காலத்து (1135) நிபந்தம் உள்ளது. சிறப் பான விழாக்கள் நடைபெற்றன. கோயில் செய் குன்றின்மீது; கோங்செங்கட் சோழன் கட்டியது, இன்று சிலமாயுள்ளது.

திருவான்மியூர் டாக்டர் சாமிநாதையர் நூல் நிலையத்தில் இப்புராணத்தின் காகிதப் பிரதியொன்று இருப்பது, காகிதப் பிரதிகளின் பட்டியலை நோக்க நேர்ந்தபோது, தெரிந்தது. ஐயரவர்களின் பேரரும் நூல் நிலையக் காவலருமான திரு. க. சுப்பிரமணிய ஐயரவர்கள் இப்பிரதியைப் பார்வையிட உதவினார்கள். பின்வரும் குறிப்புக்கள் அதை ஆய்ந்து எழுதப் பெறுகின்றன.

இங்குள்ள புராணம் மூலமும் உரையுமாக உள்ளது. இது 'புராணத் திருமலைநாயகர் அவர்கள் இயற்றிய எலவானாசூர் என வழங்கும் இறைவாச நல்லூர்த் தலபுராணம். திருமுது குன்றம் வீரசைவ சுப்பராய தேசிகர் இயற்றிய உரையுடன் கூடியது.' இதன் பாடல் தொகை 376. சருக்கங்கள் பாயிரம், நாட்டுச் சிறப்பு, நகரச் சிறப்பு, அருச்சனைச் சருக்கம், காருண்டன் உற்பவச் சருக்கம், தெய்வீகன் உற்பவச் சருக்கம். காருண்டன் வதைச் சருக்கம், நீரேற்ற சருக்கம் என எட்டு. இறுதி இரு பாடல்கள் பிற்காலத்தில் செய்யப்பெற்றன; உரையாசிரியர் செய்தன போலும்:

வடமொழி யாற் சூதமுனி புகலிறைவா னறையூரின்
    மகிமைத் தீம்பாற்
கடலதனைத் திருமலைநா தன்தமிழாற் றுதிசெய்தான்
    கடைந்தெ டுத்தே
விடலரிய உரையென்னும் நெய்த்தீபம் கவிஞர் சபை
    மேவ வைத்தான்
திடமுதுகுன் றினின் மருவு சுப்புரா யக்கவிஞன்
    செகத்தின் மீதே.

அடுத்த பாடல் சருக்கந்தோறும் பாடல்தொகை என்ன என் பதைச் சொல்லுகிறது (இவையிரண்டும் நீக்கி 374).

## நூற்பொருள்

இவ்வூர் இறையாபுரி என்றும் இறைவானறையூர் என்றும் வழங்கியதென அறிகிறோம். நூலின் முதல் இரு பாடல்கள், 'வேகமா நெறி சேரும் வினைகளும்' என்ற பிரமோத்தரக் காண்டக் காப்புச் செய்யுளும், 'வேதன் நாவிலும் வெண்தாமரைச் செழும் போது' என்ற சரசுவதி தோத்திரப் பாடலுமாகும். இவை இந் நூற்குரியன அல்ல. இனி பாயிரப் பகுதியில் 10 பாடல்கள் - பரமசிவம் (2 பாடல்), நடராசர், அரசவனத்தரன், ஊர்பாகங் கொண்டவர், சிகரசிகாமணிநாதர், பெரியநாயகியம்மை, கணபதி, வேலோன், நால்வர் சண்டேசர் ஆகியோரைத் துதிப்பன. சுவாமி பெயர் சிகரசிகாமணிநாதர், அம்பிகை பெரியநாயகி என அறிகிறோம். பெரியநாயகி துதி குறிப்பிடத்தக்கது:

> கருணை நாயகி விரதநாயகி கடவுள் நாயகியே
> ஒருவர் நாயகி அறிஞர் நாயகி உலக நாயகியே
> தரும நாயகி மறைகள் நாயகி சமய நாயகியே
> பெருமை நாயகி இறைசை நாயகி பெரிய நாயகியே.

தலவிருட்சம் அரசமரம்; அது காரணமாகத் தலம் அரசவனம் என்று பெயர் பெற்றதென்றும், சுவாமிக்கு ஊர் பாகங் கொண்டவர் என்ற பெயர் உண்டு என்றும் அறிகிறோம். மூலநூல் பிரமாண்ட புராணத்துள்ளது என்கிறார்.

இது பெண்ணை நாடு. புருஷாமிருகத்துக்கு வனவாசத்தின் போது தருமன் வீமனுடைய பாதியுடலை வழங்கியநாடு, திருநாவுக்கரசர், சுந்தரர் வரலாறுகள் நிகழ்ந்தது, இராமனுக்கும் சுக்கிரீவனுக்கும் நட்பு நிகழ்ந்தது இங்கு. வேளாளர் விளக்கிடு (கல்யாணம்)* செய்வது இந்த நாட்டில். ஆழ்வார் மூலம் வெண்பாத் தீபம் ஏத்தியது இங்கு. பாண்டவர் வனவாசம் செய்தது இங்கு. அவ்வைக்குப் பனந்துண்டம் கனி தந்தது, தெய்விகன் மணம் முதலியன நடைபெற்றதும் இந்நாட்டில் - இவை 8 பாடல்.

நகரச் சிறப்புப் 8 பாடல். இறுதிப் பாடல் ஆசிரியர் பெயரைக் கூறுகிறது:

---

* விளக்கிடு கல்யாணம் என்பது காரைக்காட்டார் என்னும் கார்காத்த வேளாளர் மட்டும் செய்யும் ஒரு சடங்கு. இவர்கள் பெரும் பகுதி சோழ நாட்டிலும் தென்பாண்டி நாட்டிலும், தென் ஆர்க்காடு ஜில்லா சிதம்பரம், விருத்தாசலம் தாலூக்காவிலும் அதிகமாய் வாழ்கிறார்கள். நடு நாட்டில் குறைவு.

அப்பதியில் அரனடியார் அனைவோரும் விருத்தயாப்
பதனால் என்றும்
ஒப்பரிய புகழிறையா புரிபுரா ணந்தமிழால்
உரைப்பா யென்ன,
பொய்ப் பகைவன் அருணகிரிபுராணத்தைத் தமிழ்நூலாப்
புகன்ற நாவோன்
செப்பரும்இப் புராணத்தைத் திருமலை நாயகன் தமிழாற்
செப்பினானால்.

*திருமலை நாயகன் என்பவர் புராணத் திருமலைநாதர், இவர் இவ்வூர்ப் புராணம் பாடிய செய்தி கல்வெட்டினால் உறுதிப் படுகின்றது. இவர் மேலும் ஓர் அருணிகிரிப் புராணம் செய்தார் என்றும் இதனால் அறிகிறோம். ஒரு கால் இது முன் குறிப்பிட்ட (பக்கம் 178-194) சிதம்பர புராணம், சரப புராணம், ததீசி புராணம் போல, பெரிதாகிய சிவமகா புராணத்தின் ஓர் அங்கமாயிருந் திருக்கக் கூடும். அச்சிவபுராணம் கிடைக்காமையால் இதுபற்றி விளக்கமில்லை. இவர் பாடியதாக இங்கு சொல்லப்பட்ட அருணகிரிப் புராணம் பாடினார் என்பது இப்பாடலால் அறிய வரும் புதிய செய்தி. அருணகிரி என்னும் திரு அண்ணா மலைக்கு இப்போது இரு புராணங்கள் உள்ளன. ஒன்று மறை ஞான சம்பந்தர் செய்த அருணகிரிப் புராணம் (பக்கம் 209-212 பார்க்க). மற்றது சைவ - எல்லப்ப நாவலர் செய்த அருணாசல புராணம் (பக்கம் 147-152 பார்க்க). இவை இரண்டும் இன்று அச்சில் உள்ளன. இப்பாடலால் இப்படி மூன்றாவதாக ஒரு புரர்ணம் இருந்தது என்று அறிகிறோம்.*

*அருச்சனைச் சருக்கம் 32 பாடல், முனிவர் இங்கு பிரம னோடு வந்து பூசித்துச் சனற்குமர முனியின் உபதேசம் பெற்றுச் சிவகதியடைந்தனர். பின் விஷ்ணு முதலியோர் பூசித்துப் பேறு பெற்றனர். இங்கு 14 பாடல்கள் சந்தப்பாடல்கள்.*

*மிருகண்டு முனி இங்கு வந்து பூசனை செய்தபோது வஞ்சனை கோவதை என்ற இரு அரக்கர் குலக்கன்னிகள் தோன்றிப் பிள்ளை வரம் கேட்க, அவர் வஞ்சனைக்கு விறல்மிக்க புதல்வன் பிறப்பான் என்று வரம் கொடுத்தார். பின்பூசைக்கு மலரெடுத்து வர ஒரு பிரமசாரி மாணாக்கனை அனுப்ப, நந்த வனத்தை அவ்விரு அரக்கியரும் அழித்தது கண்டு அவன் மனம் கலங்கித் தாமதித்து வர, முனிவர் கோபங்கொண்டு நீ அந்த வஞ்சனையின் பிள்ளையாகப் பிறப்பாய் என்று சாபமிட்டார்.*

அவ்வாறே அவன் காருண்டன் என்ற அசுரனாகப் பிறந்து தவத் தோர்க்கெல்லாம் துன்பம் செய்ய, அவர்கள் சிகாமணி நாதரிடம் முறையிட்டார்கள். ஏமகூட பர்வதத்திலிருக்கும் முருகனிடம் முறையிடுமாறு அவர் கூற, அவர்களும் அவ்வாறே செல்லும் வழியில் சனற்குமார முனிவரைக் கண்டார்கள். அவர் இவர் களுக்குச் சூரபதுமன் பிறப்பும் கொடுமையும் முருகன் அவதார மும் விரிவாகச் சொன்னார். தந்தைக்குப் பிரணவ உபதேசம் செய்யத் தொடங்கிய போது, அது முறையன்று ஆதலால் அவர் வாக்குத் தடைப்பட்டது. தடைப்படவும் அவர் குருவனம் அடைந்து சிவபிரானை வழிபட்டார். சிவபிரானிடத்து வேலா யுதம் முதலியன பெற்றுச் சூரனை வதைத்தார் என்று இக்கதை யைச் சொல்லிக் காருண்டனும் இவ்வாறு அழிவான் என்று உறுதி கூறினார். இங்கும் இறுதிப் பகுதி (65 - 68) சந்தப் பாடல்.

பின் முனிவர் ஏமகூட மலை சென்று முருகனை வேண்ட, முருகன் தான் வந்து காருண்டனை அழிப்பதாக உறுதி கூறுகி றான். முனிவர் பின்யாகம் செய்ய எண்ணித் தக்க தலம் யாதென்று கேட்க, குக முனிவர் கையில் வேல் வாங்கி எறிய அது திருக் கோவலூர் வந்து தங்கியது. அங்கு வந்து குக முனிவரே யாகம் செய்யுமாறு பணித்தான். பின் அவர்கள் இவ்வரச வனத்தில் தங்கி வழிபட்டு வந்தபோது முருகன் இத்தலத்தின் பெருமையை ஏழு பாடல்களால் சொல்லுகிறான். முதற் பாடல்:

> ஆரூரிற் பிறந்தோர்கள், அம்பலத்தைக் கண்டோர்கள்,
>     அருள் காசிக்கண்
> சீரூர இறந்தோர்கள், கேதாரம் நீராடிச்
>     சிறந்துள் ளோர்கள்,
> பேரூரும் அருணகிரி நினைந்தோர்கள், அரசவனம்
>     பிரியா தன்பாய்
> ஏரூர இருந்தோர்கள் கதி பெறுவ ரென்று ரைத்தான்
>     இகல்வேற் கந்தன்.

பின் இவர்கள் குக முனியுடன் திருக்கோவலூர் மீண்டுயாகம் செய்ய, யாகத்தில் தெய்வீகராசன் கிரீடத்தோடு தோன்றினான். இமராசன் ஒரு சாபத்தால் இவ்வாறு பிறந்தான். இவனே மலையரையன், யாகத்தில் இவனோடு பச்சைக் குதிரை உதித்து வந்தது. இதைத் தமிழ் மூவேந்தரும் கேட்க, இவன் தரமறுத்து அவர்களோடு மல்யுத்தம் புரிய அவர்கள் தோற்று, இவனுக்குத் தங்கள் கிரீடத்தையும் குதிரை வலம் வந்த நாடு முழுமையும்

அளித்துச் சென்றனர். பின் தெய்வீகராசன் மதுரை சென்று குலபதி என்ற பாண்டிய ராசகுமாரியை மணந்தான். அப்போது திருக்கோவலூரில் வில்லோரி என்ற அசுரன் தீமை புரிவது கேட்டு மீண்டு வந்து அவ்வரக்கனை அழித்தான். பின் மகிழ்ச்சி யோடு திருக்கோவலூர் திரும்பி ஆட்சி செய்து வரும் நாளில், பாண்டி நாட்டில் விட்டு வந்த குலபதி என்ற மனைவியின் நினைவு வந்து விரகதாபம் மேலிட்டது. இங்கு சம்பிரதாயம் போல் சந்திரோதயம், தென்றல், குயில், கடல், மன்மதன் முதலான செய்திகள். பின் மந்திரிகள் இவனை மிருக வேட்டையில் ஈடு படுத்துகின்றனர். இவன் ஒரு மானைத் துரத்திவந்து, களைத்துக் குடிக்க நீர் கிடைக்காமல் வருந்தி ஒரு பாறை மீது நிற்க, அங்கு சிகாமணிநாதர் ஓர் அந்தணனாக வந்து, காருண்டனை வதைப் பதாக இவனிடம் உறுதிமொழி பெற்று நீர் தருகிறார்.

வந்தவர் நடராசப் பெருமான் என்றுணர்ந்து தேறி, படை களோடு காருண்டன் மீது போருக்குப் புறப்பட்டான். படை களின் நடையெல்லாம் சந்தப்பாடல்:

பொழி மதத்தன கிரியெடுப்பன புயலையொற்றுவ புவியின்மேல்
மொழி மலைக்குலம் நிகர் வியப்பன முகபடத்தன புகைகளால்
விழிநெருப்பென நிழல் வெறுப்பன வெடிகுரற்கொடு திசைகள் சேர்
வழியடைப்பன உரகனெய்த்திடு வகைநடப்பன கரிகளே.

இப்படியே இரதம் பரிகள் விருதர் - இவை 20க்கு மேற் பட்ட பாடல்கள், பின் போர் 10 பாடல், சந்தம். இறுதியில் தெய்வீகன் சிவபிரான் அருளால் மழுவாயுதம் கொண்டு காருண்டனை மாய்க்கிறான்.

இறுதி நீரேற்ற சருக்கம். காருண்டன் முற்பிறப்பில் பிராமணனாதலால், அவனைக் கொன்றதால் வந்த பிரமகத்தி தோடம் இவனைப் பிடித்தது. முனிவர்களால் காருண்டன் முற்பிறவி வரலாறு அறிகிறான். இத்தோடம் நீங்கும் பொருட்டு அவர்கள் பிராயச் சித்தம் கூறியபடி, யாகம் செய்து எண்ணூறு பிராமணர்களை இத்தலத்தில் குடியேற்றுகிறான். அவர்களுக்கு விருத்திகளெல்லாம் அளிக்கிறான். தெள்ளாறு குழப்பலூர் சித்திங்கூர் கோவலூர் என்ற நான்கு ஊர்களிலும் வீடுகட்டி நானூறு பிராமணர்களைக் குடியேற்றுகிறான். மற்றைய நானூறு பேரையும் அரசவனத்துக்கு அழைத்து வருகிறான். முன் இளைப்புத் தீர நீர் அருந்திய பாறையருகு வந்தபோது அவனுக்கு,

தான் கொண்டு வந்த பிராமணர் 800 அல்ல, 1200. அவர்களில் இதுவரை ஏற்பாடு செய்த 800 போக மீதி இருப்பவர்களுக்கு என்ன செய்வது என்ற அச்சமுண்டாயிற்று. அப்போது அதே மறையவர் தோன்றி, எஞ்சிய நானூறு மறையவர்க்கு ஒரு பங்கும் எனக்கு மட்டும் ஒரு பங்குமாகக் கொடு என்று கேட்டு நீர் வார்த்துக் கொடுக்கப் பெற்று, சிகாமணிநாதராகக் காட்சி யளித்தார். அதனால் இவர் ஊர்பாகங் கொண்ட நாயனார் என்று பெயரும் வந்தது. தானம் செய்த பாறை இன்றும் நீர்ப் பாறை என்று பெயர் பெற்றிருக்கிறது. சிவபெருமான் மறைந்து அங்கிருந்த மூங்கில் வனத்தில் புகுந்து சிவலிங்க வடிவாயினார். தேடிச் சென்ற தெய்வீகன் காணாது மூங்கில் அனைத்தையும் வாள் கொண்டு வெட்ட, சிவலிங்கத்தின் முடியில் பட்டு இரத்தம் பெருக்கெடுக்கவும், இவன் வாள் கொண்டு தன் கழுத்தையே அறுத்தான். பெருமான் இவன் வாளை விலக்கி, அருள் புரிந்தார். பாறை மீது வில்லால் இவர் உண்டாக்கிய சிலாதீர்த்த மகிமை யைக் கூறினார். பெருமான் கட்டளையிட்டபடி இவன் அங்கு நகரமும் ஆலயமும் பிறவும் அமைத்தான். மேற்கே நானூறு கோடி வேதியருக்கும் இடம் அமைத்தான். அரச வீதி வணிகர் வீதி வேளாளர் வீதி முதலியனவும் சிறப்பாய்ச் செய்தான். திருவிழா எடுத்தான். பிரமகத்தி ஒழிந்தது. பிரமசாரியும் தெய்வ பதவி அடைந்தான்.

சேரன் மகள் பதுமாவதியை மணந்தான்; அவள் புதல்வர் நூற்றுவர் மலையமன்னர் எனப்பட்டனர். பின் மதுரையில் ஆயர் குல மன்னன் வீரவர்மன் மகள் கமல வல்லியை மணக்க, அவள் பெற்ற அறுபது பிள்ளைகள் நத்தமர் எனப்பட்டனர். அயோத்தி அந்தண மன்னன் மகள் சனகையை மணந்து அவள் பெற்ற அறுபத்தெட்டுப் பிள்ளைகளும் சுருதி மன்னர் எனப் பட்டனர். குலபதி பெற்ற பிள்ளை அரசுரிமை அடைந்தான். பிற மன்னர் வந்து திரையளிக்கிறார்கள். மன்னர் பெயர்கள் பல தொடர்பாகச் சம்பிரதாயம் போல அடையின்றி அமைக்கிறார்:

> கொங்கர் மகதர் துளுவர் குலிங்கர் கேகயர் கலிங்கர்
> வங்கர் போசலர் குருதர் மாளுவர் ஆரியர் சீனர்
> கங்கர் கோசலர் வடகர் கவுடர் பாஞ்சாலர் முதல்
> துங்க மாமுடியர்கள் தொழுதுதிறை கொடுத்தனரால்.

அரசர் பெயர் மிகை, பொருத்தமில்லாதன பல உள்ளன. கவிஞர் தமக்குத் தெரிந்த பெயர்களை எல்லாம் பாட்டில் அமைத்தார்

என்றே இதை நாம் கொள்ள வேண்டும். புத்திரனிடம் அரசை ஒப்புவித்துத் தவம் செய்தான். பெருமான் தரிசனம் தரக் கண்டு துதித்தான். சரணம் என்று முடிகின்ற ஆறு பாடல்கள்:

அரிய நான் முகன் அறியாவகை அழல் மேனிய சரணம்
தெரியா அரு ளுருவாகிய சிவசங்கர சரணம்
எரியாடிய பரமான்மழு இயல் செங்கர சரணம்
கரியாருரி புனைநாயக கருணாகர சரணம்.

எல்லாப் பாடல்களும் கருணாகர சரணம் என்றே முடிகின்றன. அவன் கேட்டபடி, பெருமான், 'நீ முன் இமராசனாய் இருந்தவன்' என்று அறிவித்து முத்தியளித்தார். வாழ்த்தொடு நூல் முடிகிறது:

உலக மைந்தெழுத் தோதினர் வாழ்கவே
நிலவு நீறுடன் நீதியும் வாழ்கவே
குலவு நான்மறை கோமனும் வாழ்கவே
இலகு சைவமும் இன்பமும் வாழ்கவே.

## சில குறிப்புக்கள்

ஆசிரியர் திருமலை நாயகர் சந்திரசேகரர் என்று கல்வெட்டில் குறிப்பிட்டிருக்கக் கண்டோம். திருமலைநயினார் என்ற பெயர் சரபபுராணம் முதலியவற்றில் காணப்படுகிறது. இந்நூற் பாடலும் திருமலை நாயகர் என்றே சொல்கிறது. ஆகவே முன் காட்டியபடி இவர் புராணத் திருமலைநாதர் என்றே கொள்வதில் எந்தவிதத் தடையுமில்லை. கல்வெட்டில் குறிப்பிட்டபடி சந்திரசேகரர் என்பது இவருக்கு மற்றொரு பெயர் போலும். அன்றியும், திருமலைநாதர் சொக்கநாதர் உலா அரங்கேற்றிய காலம் கி.பி. 1508 என்று முன்னர்க் காட்டினோம் (பக்கம் 177). எனவே கி.பி. 1510இல் இவர் இவ்வூரில் நிலமும் மனை யும் பெற்றார் என்று கூறுவதால், காலமும் பொருத்தமாகிறது.

சைவசித்தாந்த மரபில் கச்சி ஞானப்பிரகாசருக்குச் சீடராய் வந்தார் என்ற வரலாற்றுக்கேற்ப இவர் இந்த நூலெங்கும் சித்தாந்தக் கருத்துக்களை நிரம்பப் பெய்து பாடுகிறார். அத்துவித முத்தி, சத்தியமெய்ஞ்ஞானவழி (4 : 8), மும்மலங்கள் (1 : 9), சஞ்சிதம் முதலான மலங்கள் (1 : 8), நால்வர் சண்டேசர் துதி (1 : 10), மெய்கண்டாரைச் சுவேதவனன் என்று குறிப்பிடுதல் (4 : 12), மலங்களைச் சிதைத்து முத்தியினைக் கொடுப்பான் (4 : 14) முதலான கருத்துக்கள் சான்றாகும்.

பெண்ணை நாடு என்றும் திருமுனைப்பாடி நாடு என்னும் இங்குச் சொல்லப்படுகிறது. தெய்வீகன் என்ற மலையரை யனுக்கு அவ்வையார் அங்கவை சங்கவை என்ற பெண்களை மணம் செய்து வைத்தார் என்பது தமிழ் நாவலர் சரிதை கூறும் கதை. இவ் அவ்வை காலம் 12ஆம் நூற்றாண்டாகலாம். செவி வழியாக வந்த அவ்வை கதையையும் மலையரையர் நத்த மன்னர் முதலான சாதிகளுக்குச் சிறப்புத் தர வேண்டும் என்ற சாதி யுணர்வையும் கூட்டி இப்புராணமாக்கப்பட்டது என்று தோன்றுகிறது.

இனி ஆசிரியர் பல நயங்களும் சிறப்புக்களும் அமைய இந்நூல் பாடினார் என்று ஆங்காங்கு எடுத்துக் காட்டினோம். காருண்டன் வதைச் சருக்கத்தில் நான்கு பாடல்கள் மடக்காகப் பாடியிருக்கிறார்.

வெற்றி யுடன் படு மாடவரே
  வெய்யவன் மேனியை நாடவரே
பற்றர மாதர்கண் மாலைகளே
  படைஞர் கண் மேலிடு மாலைகளே
உற்றெழு மாகன துந்துமியே
  உதிரமுந் நீர்மோ துந்துமியே
செற்றுயிர் வஞ்சம னார்களமே
  செருமுயன் மன்னவ னார்களமே.

வேளாளரைக் குறித்த செய்தியொன்று முன்னமே காட்டப் பட்டது. இது புதுமை. முருகன் அவதாரக்கதை பிரணவம் போதிக்க வந்து நாவெழாதிருந்து பின் சிவபிரானைப் பூசித்து வேலாயுதம் பெற்றான் என்ற கதை - இவை சிறப்பு.

## மறைஞான சம்பந்தர்

### முன்னுரை

16ஆம் நூற்றாண்டின் முற்பாதியில் வாழ்ந்து, சிறந்த சைவ சாத்திரங்கள் அளவில்லாதன செய்த ஒரு பெரும் புலவர் சிதம் பரம் கண்கட்டி மடம் மறைஞானசம்பந்தர் என்பவர். இவர் மெய்கண்ட பரம்பரையில் வந்தவர். சிற்றம்பல நாடிகளுடைய மாணாக்கருள் சம்பந்த முனிவருடைய மாணாக்கரான சிவ புரம் ஞானப்பிரகாசர் வழியாக வளர்ந்தது தருமபுரம் ஆதீனம். சம்பந்த முனிவருடைய மற்றொரு மாணாக்கரான காவை அம்பலநாதத் தம்பிரான் ஒருசிறந்த சித்தாந்த ஆசிரியர் ஆவார்.

அவர் வழிவந்த மாணாக்கர் பரம்பரையில்* தோன்றியவர் இந்த மறைஞானசம்பந்தர் ஆவார். இவருடைய வரலாறு பின்னே இந்த 16ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாறு இரண்டாம் பகுதி யினுள் சைவ சமய இலக்கியம் என்ற தலைப்பில் விரிவாகச் சொல்லப்பட்டுள்ளது. இவர் செய்த பிறநூல்களுள் சிவதரு மோத்தரம் என்பது மிகவும் விரிவான ஒரு நூல்; சிலர் இதைப் புராணம் என்று சொல்வதும் உண்டு. ஆனால் இது பொதுவாக சைவ சாத்திரமாகும்; சரியைப் பகுதி மட்டும் கூறுவது. அது பற்றி இந்நூலை இங்கு ஆராயவில்லை. சாத்திரங்களைக் கூறும் அத்தி யாத்துள் இவ்வரலாறு இரண்டாம் பாகத்தில், ஆராய்கிறோம்.

இப்பெரியார் இரண்டு தலபுராணங்கள் செய்தார் என்று அறிகிறோம். அவையாவன: ஆதி கமலாலய புராணம், அருண கிரிப் புராணம் என்பன. இவை முறையே திருவாரூருக்கும் திரு வண்ணாமலைக்கும் உரிய தலபுராணங்கள் ஆகும். அன்றியும் இவர் வேறு பல புராணங்களும் செய்திருத்தல் கூடும். இப்போது தெரிந்தவை இவை இரண்டே. இவற்றைமட்டும் இங்கு ஆராய்கிறோம்.

## கமலாலய புராணம்

கமலாலயம் என்பது திருவாரூரில் உள்ள சிவதீர்த்தம். இது பரப்பால் மிகவும் பெரியது. கோயிலும் அளவால் பெரியது. அங்கு திருவாரூர்க் கோயிலும் ஐந்து வேலி, கமலாலயமும் ஐந்து வேலி, கழுநீர் ஓடையும் ஐந்து வேலி என்ற பழமொழியும் சொல்லப்படும். நூற்பெயர் கமலாலயச் சிறப்பு என்று 33, 34, 1065ஆம் பாடல்கள் கூறுகின்றன. இங்கு அம்பிகை கமலாம்பிகை: அம்பிகை வணக்கம் கூறுகின்ற பாடல் 'கமலாலய நாயகி பாதம் நினைவாம்' என்று கூறுவதும் கருதத்தக்கது. இருப்பினும், நூல் திருவாரூர்ப் புராணமேயாகும். இவ்வூருக்கு நிரம்ப அழகிய தேசிகர் தம் மாணாக்கரான அளகைச் சம்பந்த முனிவர் பாடியது மிகவும் விரிந்த புராணம் 2929 பாடல்கள் கொண்டது. இதை இரண்டாம் அத்தியாயத்துள் ஆராய்ந்திருக்கிறோம் (பக்கம் 110-118). இப்போது கருதும் புராணம் பாயிரப் பகுதிகள் உள்பட 24 சருக்கங்களும் 1066 பாடலும் கொண்டது. இந்நூலுக்கு ஆதி கமலாலய மகாத்மியம் என்ற பெயரும் உண்டு.

---

* இந்தப் பரம்பரையின் விளக்கத்தை எமது தமிழ் இலக்கிய வரலாறு 14ஆம் நூற்றாண்டு நூலில் காணலாம்.

*ஆசிரியர் இங்கு பாடல்களை எளிய நடையில் அழகு பொருந்த அமைத்திருக்கிறார். அக்காலத்து இயல்பையொட்டி அதிகமான பாடல்கள் சந்தத்திலும், சில பாடல்கள் மடக்கிலும் அமைத்திருக்கிறார். ஒவ்வொரு சருக்கத்தையும் கூறி முடிக்கும் இடத்து அந்தச் சருக்கத்தைக் கேட்டோருக்கு நல்ல பலன்கள் விளையும் என்றும், இதுவரையில் இன்னது சொன்னோம், அடுத்து இன்னது சொல்லப் போகிறோம் என்றும் சொல்லி முடித்து, இவ்வாறு கேட்ட அன்பர் இன்புறுமாறு சூத முனிவன் கூறினான் என ஒரு பாடல் அமைக்கிறார். 4ஆம் சருக்கம் தொடங்கி இறுதி வரையில் எல்லாச் சருக்கங்களிலும் ஒரே பாடலை அமைத்திருக்கிறார். அப்பாடல் பின்வருவது:*

என்று கூறினான் சூத னெனுமுனி
வென்ற வீரருக்கு கைம்புல வேழமும்
கொன்றை சூடுங் குழகன் மலர்ப்பதத்
தொன்று மன்பருக் கின்புற வுள்ளமே.

*இந்த நூலில் சிவலிங்கப் பிரதிட்டையும் தீர்த்தங்களும் எண்ணில்லாதன சொல்லப் பெறுகின்றன. மனுச் சோழன் வரலாறு நடந்ததும், சோழன் தலைநகராய் இருந்ததும், திரு வாரூர்க் கோயிலாய்க் கொண்ட நாள் உலகத் தோற்றத்துக் கெல்லாம் முற்பட்ட நாள் என்று அப்பர் சுவாமிகளால் பாடப் பெற்றதும் ஆகிய இத்தலத்தின் பெருமைக்கு இவ்வகைப் பெருக்கம் பொருந்தக் கூடியதே. எடுத்துக்காட்டாக, சிவலிங்கத் தாபனச் சருக்கம் என்ற 8ஆம் சருக்கத்தில் ஏறக்குறைய 120 லிங்கங்கள் ஸ்தாபித்து பூசை செய்யப்பட்ட செய்தி முறையாகச் சொல்லப்பட்டுள்ளது. இவை மட்டுமன்றி, சருக்கம் தோறும் அனேக லிங்கங்களுடைய பிரதிட்டை சொல்லப்பட்டுள்ளது. தனித்தனியாகத் தீர்த்தச் சருக்கங்கள் எட்டு இருப்பதோடு, இடை இடையே பிற இடங்களிலும் பல தீர்த்தங்கள் சொல்லப் பெறுகின்றன.*

*நூல் விநாயகர் காப்போடு தொடங்குகிறது. இதுவே அழகிய சந்தச் செய்யுள்:*

திருவாரூர்ப் பிரியாதே திகழ்வானை மதியானை
உருவானை உமைபாகந் தருவானை உணர்வாரை
இரவாமல் அருள்வானை இருள்நேர வருமாறு
தருவானை அடிபேண இயலோசை தவிராதே.

பாயிரப் பகுதி 33 பாடல் கொண்டது. இங்கு வழக்கம் போல் சொல்லுகின்ற கடவுள் வணக்கப் பாடல்களோடு, நந்தி கேசுவரன், நந்திமாகாளர், சனற்குமாரன், வியாசன் - சூதன், காரைக்கால் அம்மையார், மெய்கண்ட தேவர், இயற்பகை, சிறுத்தொண்டர், சிவனடியார் முசுகுந்தன், முப்போதும் பூசை புரிபவர் ஆகியோருக்கு வணக்கம் சொல்வது குறிப்பிடத்தக்கது. திருவாதவூரர் ஐந்து தாண்டவம் கண்டவர், மெய்கண்டார் ஆரியத்தின் அத்தம் வண்தமிழால் தந்தார் என்று குறிப்பிடுகின்றார். வாழ்த்துக் கூறும் இடத்துள்ள பின்வரும் பாட்டு கருதத்தக்கது:

ஆரியங் கற்றுமுற்றும் அறிவுடை யாளர் வாழ்க
ஆரியங் தெரிதுஞ் சாரும்அருந்தமி ழாய்வார் வாழ்க
ஆரியந் தமிழாராயும் அதிமதி நிபுணர் வாழ்க
ஆரியந் தமிழராய்வார்க் கணுக்கரும் வாழ்க அன்பால்.

நூல் செய்த காலம் ஆண்டு கலியுகத்து நானூற்று முப்பத்து ஈராயிரத்துள், நாலாயிரமும் அறுநூறும் நாற்பத்து ஏழும் செல்லப் பராபவ ஆண்டு என்கிறார். அதாவது கி.பி. 1546. சைவர் புற்றிடம் கொண்டார் புகழைத் தமிழால் உரைக்கக் கேட்கவும் தேவாசிரிய மண்டபத்தில் எழுதியதாகவும், இது வடமொழிக் காந்தத்தில் உள்ளது என்றும் கூறுகின்றார்.

பதிகம் எட்டுப் பாடல். விரிந்த புராணக் காப்பியங்களில் நாட்டுப் படலம் நகரப் படலம் என்று அமைக்கும் பகுதியை இவர் மண்டல வளச் சருக்கம் திருவாரூர்ச் சிறப்புச் சருக்கம் என்ற பெயர்களால் குறிப்பிடுகின்றார். நாட்டுச் சிறப்பைச் சோழ தேச வளம் என்கிறார். இங்கு மடக்காக நான்கு பாடல்கள். இங்கு பாடல்கள் அனைத்திலுமே சைவசமய ஒழுக்கங்களைக் குறிப்பிடுகிறார். திருவாரூர்ச் சிறப்பில் 'புரந்தரன் அடி ஐந்திணை முழங்க நாறு நடத் தொடங்குவாரே' என்று சொல்லுகிறார். திணை என்பது திணைக்குரிய பறையைக் கருதிப்போலும். தீர்த்தங்களின் சிறப்பும் கோயில்களின் சிறப்பும் தனியே சொல்லப் படுகின்றன. ஒரு பாடல் திருத்தொண்டத் தொகையைச் சிறப் பிக்கிறது. பிற பாடல்களில் சுந்தரருக்குத் தூது சென்றது, கலிக்காமர் பிணக்குத் தீர்த்தது, நமிநந்தி அடிகள் நீர் விளக்கு ஏற்றியது முதலிய பெரிய புராண வரலாறுகள் விரிவாகச் சொல் லப்படுகின்றன. திருநீலகண்ட யாழ்ப்பாணருக்கு அவருடைய வேண்டுகோளுக்கு இணங்கித் திருவாருர்த் திருமூலட்டானர் வடதிசையில் புதுவாயில் செய்வித்து யாழ்கேட்டார், விறன்

மிண்டர் புறம்பு என்று சொன்னமையினாலே சுந்தரர் பாட்டினால் சிவமயம் ஆயினார் என்று இரு செய்திகள். இங்குச் சுந்தரர் வரலாற்றில் புதுமையாக உள்ள ஒன்று, கூனன் ஒருவன் தம்பிரான் சோழராகிய சுந்தரரே தனக்குத் தெய்வம் என்று கொண்டு, மணமலர் தொடுத்துக் கொடுக்க, சுந்தரர் அருட்பார்வையால் கூன்தீர்ந்து சிவபுரி அடைந்தான் என்பது மற்றொன்று. ஒரு குருடன் சிவபெருமான் தடுத்தாட் கொண்டவரே எனக்கும் தெய்வம் எனக் கொண்டு அவருக்கு அடைக்காய் கொடுத்து அவருடைய புன்முறுவலைக் காணக் கண்ணும் பெற்று அவரருளால் சிவபுரம் பெற்றான் என்பது.

திருமகள் இங்கு வழிபட்டு வரம் பெற்றமையால் தலமே கமலாலயம் ஆயிற்று. தேவர் செய்த புற்றில் பெருமான் தோன்றி அவர்கள் அல்லல் நீக்கியமையால் தேவாசிரியம் ஆயிற்று. இவ்வூரில் திருமால் கையில் பிடித்த வில்லின் நாண் அறுந்தவுடன் வில் நிமிர்ந்து அவர் தலையைக் கொய்தது என்று வரலாறு சொல்லப்படுகிறது. சிவலிங்க ஸ்தாபனச் சருக்கத்தில், சிவலிங்கம் ஸ்தாபித்து வழிபட்டோர் பட்டியலைப் பார்க்கும்போது, இங்கு வழிபடாத தேவரே இல்லை என்று தெரிகிறது. பொதுவாகப் புராணங்களில், துன்புற்ற தேவர் முதலியோர் இறைவனைத் துதிக்கும் போது சிவபிரானைத் துதிக்கும் பாசுரங்கள் மட்டுமே காணப்படும். ஆனால் இங்கு திருமால் தனது இதயத்தில் சோமாஸ்கந்தரை வைத்துப் பூசித்துத் தனித்தனியே சிவபெருமானையும் உமையையும் முருகனையும் பூசிக்கிறார். சோமாஸ்கந்தர் வழிபாடு இத்தலத்திற்கும் இப்புராணத்திற்கும் சிறப்பு; இவரே தியாகராசர்.

கோகன்னனுக்கு இயமன் நரகத்தைக் காட்டுகின்றான் என்ற இடத்து 21 பாடல்களில் ரௌரவம் முதல் மைதரணி நரகம் வரையில் 21 நரகங்களும், இன்ன பாவத்திற்கு இன்ன நரகத்தில் தண்டனை என்பது முதலான செய்திகளும் விரித்துச் சொல்லப்படுகின்றன.

குலிசன் பூசித்த செய்தி 12 குலிசேசுவர சருக்கத்தில் 50 பாடல்களில் விரித்துரைக்கப்படுகிறது. இவ் அரசன் துர்வாசருக்குப் புலால் படைத்த பாவத்தால் புலியாகிறான். இந்தப் புலி, நந்தினி என்ற பசு சிவலிங்கத்திற்குத் தன் பாலை அபிடேகித்து வரும் போது அதைப் பிடிக்கப் பாய்கிறது. பசுவானது புலியை மிகவும்

வேண்டித் தான் மீண்டு சென்று சிவலிங்கத்திற்கும் பாலை ஆட்டித் தன் கன்றுக்கும் பால் ஊட்டித் திரும்பும்போது, அக் கன்று பசுவுக்குப் பதிலாகத் தானே பலியாவேன் என்று சொல் வதையும் மற்றப் பசுக்கள் தடுத்ததையும் கேளாமல், மீண்டு வந்து புலியின்முன் நிற்கிறது. அதைக் கண்ட மாத்திரத்தில் புலி முன் உணர்வு பெற்றுச் சிவலிங்க பூசை செய்து குலிசமன்னனாகிச் செல்லுகிறது. இக்கதை தமிழ் நாடெங்கும் கபிலை கதை என்று வழங்குகின்ற ஒரு பழங்கதையே ஆகும். அன்றியும், இது திருக் குறுங்குடியில் அழகிய நம்பியின் திருமுன் கைசிகப் பண்பாடி வந்த நம்பாடுவான் என்ற பாணர் குலத்தைச் சேர்ந்த ஒரு பாக வதன் ஒரு பிரமராக்கதன் கையில் அகப்பட்டுத் திரும்பி வருவ தாக வாக்குறுதி கொடுத்து, சந்நிதியில் சென்று அப்பண்ணைப் பாடி மீண்டு வந்து தன் பண்ணினால் பெற்ற புண்ணியத்தில் ஒரு சிறு பகுதியை அப்பிரமராக்கதனுக்கு அளிக்க அவன் தன் சாபம் நீங்கப் பெற்றுத் தேவ வடிவோடு விண்ணுலகம் சென்றான் என்பது வைணவத்தில் உள்ள ஒரு சிறப்பான கதை. நம்பாடு வான் என்ற அப்பாணர் கைசிகம் பாடிய நாள் இன்றுங் கூட கைசிக ஏகாதசி என்று கார்த்திகை வளர்பிறையில் சிறப்பாகத் திருமால் ஆலயங்களிலெல்லாம் கொண்டாடப் பெறுகிறது.

இங்கு, தான் மீண்டு வருவதாகப் புலியிடம் சொல்லும் போது, வராவிட்டால் இன்ன இன்ன பாதகம் செய்தாருடைய பாவத்தில் செல்லுவேன் என்று 17 பாடல்களில் சுமார் 70 பாவங்களை இப்புராணம் குறிப்பிடுகிறது. இது ஒரு சிறப்பான ஒரு பகுதி. பின்னும் இன்ன சந்தர்ப்பங்களில் சொன்ன சொல் தவறலாம் என்று பிற பசுக்கள் நந்தினிக்கு எடுத்துச் சொல்லு வதும் சிறப்பான உலக நீதியாகும்:

> கேட்டமுங்கிச் சுரபிகளும், கிளர்ந்தமொழி தவறுதலும்
> கீழ்மை யார்க்கும்,
> ஈட்டுமிரு நிதிதன்னை இழக்கவரும் காலத்தும்,
> எதிர்த்து தம்மை
> வாட்டுமவர் வரும்பொழுதும், வாள்விழியார் கலவியினும்,
> வனிதை தன்னை
> வேட்டிடுமங் கலந்தனிலும், வெவ்வினையா கா; போகேல்
> என்ற வேலை.

முனிவர் சிவபெருமானைப் பூசிக்கிறார்கள் என்றவிடத்து, பெருமானுடைய அருள் காரணமின்றிப் பொழிவதாதலால்

அகாரணோபகாரி என்கிறார். இம் முடிவையுடைய மூன்று பாடலில் ஒன்று பின்வருவது:

> பாலனுய்ய வெண்ணியுன் பதம்பணிந்த போதுறும்
> காலனைய வன்றுதைத்த காலனேய காலனே!
> வேலைநஞ்செ ழுந்தபோது விண்ணுளோர் வணங்கவே
> ஆலமுண்ட கண்டனே அகாரணோப காரியே.

கயாதீர்த்தம் என்ற சருக்கத்தில் பேய்களின் வருணனை, சிராத்தம், கயாசிராத்தம் முதலிய செய்திகள் காணலாம்

சர்வ தீர்த்தாசிரயச் சருக்கம் என்ற பகுதியில் இவர் விரிந்த புராணங்களின் இயல்புக்கு ஏற்றபடி யுகதர்மம் கலிகாலக் கொடுமை விக்கிரங்களைத் திருடுதல் முதலிய செய்திகள் சொல்லுகிறார். 20ஆம் நூற்றாண்டோ என நாம் நினைக்கத் தோன்றுகிறது.

இறுதியாக நூல் கேட்கும் முறை, எழுதும் புண்ணியம் என்பன சொல்லி நூல் முடிகிறது.

இப்புராணத்தைப் பார்க்கும் போது ஆசிரியர் தமது இளமையில் செய்திருக்கலாம் என்று தோன்றுகிறது. பொருட் சுவை குறைவுதான். மேலும் சிறந்த சைவ சாத்திரங்கள் செய்த ஆசிரியருடைய சாத்திர அறிவு ஒன்றும் இதில் காணப்பட வில்லை. தலப் பெருமையை எண்ணிட்டுச் சொல்வதுபோல, மிகவும் விரித்துச் சொல்வதொன்றே இங்கு நாம் காண்பது.

**பதிப்பு:**

சாமிநாதையர் நூல் நிலைய வெளியீடாக இந்நூல் 1961இல் வெளிவந்தது. தஞ்சைச் சருசுவ்தி மகால் ஏட்டோடு ஒரு பகுதி ஒப்பு நோக்கப்பட்டிருக்கிறது. நூற்பதிப்பு இன்னும் திருந்துதற்குரியது.

## அருணகிரிப் புராணம்

சைவப் பெரும் புலவராகிய சிதம்பரம் - கண்கட்டி மறை ஞான சம்பந்தர் செய்த புராணம். அருணகிரி என்பது திரு வண்ணாமலை. இதே நூற்றாண்டில்தான் இத்தலத்துக்கு அருணாசலபுராணம் என்ற மற்றொரு புராணமும் (இந்நூல் பக்கம் 147-152) செய்யப்பட்டது. அருணகிரிப் புராணம் 613 செய்யுட்கள் உடையது. பாயிரமுட்பட எட்டுச் சருக்கங்கள். பாயிரப் பகுதி 35 பாடல். விநாயகர் காப்பாக மூன்று பாடல்.

மலையாகிய அண்ணாமலையாரையும் பராசக்தியையும், ஆலயத்துள்ளிருக்கும் அண்ணாமலையாரையும் உண்ணாமுலையம்மையும் தனித்தனியே போற்றுகின்றார். இவர்களையன்றித் தனியே சபாநாதர், அண்ணாமலை நாதர், அதிகார நந்தி, நந்தி, மகாகாளர், இடபதேவர் என்போர் வணக்கமும் முனிவர் வணக்கமும் குறிப்பிடத்தக்கவை. ஆசிரியர் தமக்குரிய வழக்கம் போல் காரைக்காலம்மை, நால்வர், மாளிகைத் தேவர் மெய்கண்டார் ஆகியோருக்கு வணக்கம் சொல்கிறார். மெய்கண்டார் துதி எல்லோரும் அறிந்தது:

> வேதத்தின் அரும்பொருளை விமலன் அருள்நந்திக்குப்
> போதித்த சிவஞான போதத்தைத் குருமரபால்
> ஓதித்தேர்ந் தருந்தமிழால் எமக்குஉணர்த்தி எம்மூனஞ்
> சேதித்த மெய்கண்ட தேவனடி சிந்திப்பாம்.

சிவ பக்தர்களையும் நாயன்மாரையும் வணங்குகிறார். நூல் செய்த காலங் குறித்த பாடல் தனியே மறைஞான சம்பந்தர் வரலாற்றில் காட்டப்பட்டது. பதிகம் என்ற பகுதியையும் பாயிரத்துட்சேர்த்தே கூறுகிறார். இப்பகுதி ஏழு பாடல் கொண்டது. நூலைத் திருநாட்டுச் சிறப்பு திருநகரச் சிறப்பு என்ற அங்கங்களோடு தொடங்குகிறார். நாடாவது அருணைநாடு. எல்லாப் பாடல்களுமே அருணை நாடு, அருணைத் தேசம் என்று முடிகின்றன. திருநகரச் சிறப்பும் அதுபோலப் பெருங் காவியத்தன்மை பொருந்த மிகவும் விரிவாக 53 பாடல்களால் அமைந்துள்ளது. அருணாசலோதயச் சருக்கத்தில் அயன், திருமால் என்ற இருவர்களுடைய உளச் செருக்கை அருணைச் சோதி தோன்றித் தீர்த்தது சொல்லப்படுகிறது. இதுவும் நீண்ட சருக்கம். இறுதியில் 4 பாடல்கள் கடை மடக்காக அமைந்து சிவபெருமான் துதியாக உள்ளன. இந்த இயல்பு சருக்கந் தோறும் காண்கிறோம். இது சிவ தருமோத்தரத்தை* நினைவூட்டி, இரண்டு நூல்களையும் ஒருவரே செய்தார் என்ற கருத்தைத் தெளிவுபடுத்துகிறது.

இரண்டாவது அருந்தவச்சருக்கம் என்பது. உமையாள் கயிலையில் திருக்கண்புதைத்து அந்த குற்றம் நீங்கக் காஞ்சியில் சென்று அருச்சித்து இங்கு வந்து தவம் செய்ததைச் சொல்கிறது.

---

* 16ஆம் நூற்றாண்டு வரலாறு இரண்டாம் பாகம் சைவ சமய இலக்கியம் என்ற அத்தியாயத்தில் விரிவாய்க் காண்க.

இங்கு தொண்ட மண்டலம் என்று முடிகின்ற நான்கு பாடல்கள் அதன் சிறப்பைச் சொல்லுகின்றன. அதே போலக் காஞ்சி என்று முடிகின்ற ஏழு பாடல்கள் காஞ்சி நகரின் புகழைச் சொல்லு கின்றன. இடையில் ஒரு சிறு போர் வருணனை, அதற்கேற்ற சந்தப் பாடல்கள்; மகிடன் என்ற அசுரனைத் துர்க்கை வதைத்த வரலாறு இங்கு சொல்லப்படுகிறது. தேவி பூசை முடித்த இடத் தில் துதிக்கின்ற பாடல்கள் ஐந்து, போற்றி என்று முடிவன. சருக்க இறுதியில் வழக்கம் போல் கடை மடக்கான நான்கு பாடல்கள் உள்ளன.

அடுத்தது வலம்புரிச் சருக்கம். இதன் தொடக்கத்தில் கரி முகவன், சிவபிரான், உமை ஆகியோர் வணக்கம் மூன்று பாடல்களில் சொல்லுகிறார். பிறகு வரகிரிவலம், ஆலயவலம், ஆலயதரிசனம் செய்வார் நிற்கும் எல்லை, பணியும் முறைமை, சாதிகளின் உற்பத்தி, பூசை செய்யும் முறை என்பன சொல்லப் படுகின்றன. இறுதியில் நான்கு பாடல்கள் சிவபிரான் துதி. அவற்றில் முதல் இரண்டு பாடல்களும் கடைமடக்கு.

அடுத்தது ஆலயத்தொடு புரியாக்கிய சருக்கம். முன் போல் மூன்று வணக்கப் பாடல்கள். இறுதியில் இரண்டு பாடல்கள் மடக்கு, இரண்டு துதி. சிற்பிகள் இங்கு ஆலயம் அமைத்த செய்தி சொல்லப்படுகிறது. இறுதி தராபதி புழுகு சாத்திய சருக்கம். முதல் மூன்று பாடல் முன் போல் துதி. இங்கு ஒரு புழுகுப் பூனை புழுகு சாத்தி முத்தி பெற்ற வரலாறு சொல்லப் படுகிறது. முன்போல இறுதி இரண்டு பாடல்கள் கடை மடக்கு. மற்ற இரண்டு துதி.

நூல் முழுமையும் சந்தப் பாடல்களும் பக்திச் சுவையும் நிரம்பிக் காணப்படுகின்றன. இவருக்குப் பாடல்கள் எளிதாகச் சொல் நயமும் சுவையும் பொருந்த அமைகின்றன. பெருங் காப்பியம் செய்யுந் திறன் உடையார் என்று இந்நூற் பாடல் தோறும் காணலாம். இவருடைய பாடல்களின் நயத்துக்கு இரண்டொரு பாடல்களை மட்டும் குறிப்பிடுவோம்.

> கருவினைக் கழிக்கலாம், கரியகட் டழிக்கலாம்,
> ஒருமையுற் றிருக்கலாம், ஒளிருநிட் களத்துநீர்
> இருவருக்கும் எட்டொணா எரிமயக் கனத்தினாம்
> அருணவெற்பு அகத்துணீர் அயர்வினைத் தடுத்துமே.

தண்ணார்மதி சூடுஞ்சடை முடியானடல் விடையான்
அண்ணார்புரத் தொருமால்வரை நயந்தன்றருள் புரிந்தான்
பண்ணார்மொழி உமையாள்வலப் பாகன்பரிப் பாகன்
அண்ணாமலை யமலன்னடி பணிவாம்முடி அணிவாம்.

நாலாகிய மறையாகம நாலேழையும் நவின்றே
மேலாகிய வழிதன்னையும் விரித்தானுய எவரும்
ஆலாகிய விருவர்க்கரு மருந்தானவன் வாமப்
பாலாகிய உண்ணாமுலை பாதம் பணி வாமே.

## *அனதாரியப்பப் புலவர்*

*மதுரைச் சோமசுந்தரக் கடவுளுடைய திருவிளையாடல்களை விரித்துக் கூறுகின்ற நூல்கள் ஒருவகையில் மதுரைத் தலபுராணம் என்று சொல்லத்தக்கவையாகும். இவ்வாறு எழுந்த புராணங்கள் மூன்று. முதலாவது திருவாலவாயுடையார் திரு விளையாடல். பெரும்பற்றப் புலியூர் நம்பி செய்தது; காலம் 13ஆம் நூற்றாண்டு, இதன் செய்யுட்கள் 1753. இது டாக்டர் சாமிநாதையர் அவர்களால் பல முறை மிகவும் சிறப்பாக அச்சிடப்பட்டுள்ளது. மற்றொன்று பரஞ்சோதி முனிவர் செய்த திருவிளையாடற்புராணம்; தமிழ்நாடெங்கும் சைவர்களால் விரும்பிப் பயிலப்படும் மிகச் சிறந்த இலக்கியம்; பாடல் தொகை 3363; காலம் 17ஆம் நூற்றாண்டின் இறுதி, 18ஆம் நூற்றாண்டுத் தொடக்கம். இது பல்லோரால் பல முறை மூலமாயும் உரையுடனும் பதிப்பிக்கப்பட்டுள்ளது; இதற்கு ஏட்டுச்சுவடிகள் மிகவும் அதிகமாகக் கிடைக்கின்றன. மூன்றாவதான புராணம் சுந்தர பாண்டியம். இதன் ஏட்டுப்பிரதி ஒன்றே ஒன்று மட்டும் அபூர்த்தியான நிலையில் ரா. ராகவையங்கார் மதுரைத் தமிழ்ச் சங்கத்துக்கு உதவியிருந்தார்; இது 1955 வரை அச்சில் வரவில்லை; சென்னை அரசாங்கம் இதை அச்சிட்டது. எப்படி நூலை அச்சிடக் கூடாது என்பதற்கு எடுத்துக்காட்டாக இவ் வச்சுப் பதிப்பு அமைந்துள்ளது. இதைப் பின்னே விளக்கிக் கூறுவோம். இச்சுந்தர பாண்டியம் செய்தோரே அனதாரியப்பப் புலவர் என்ற பெரும் பண்டிதர். அச்சிட்ட (அல்லது கிடைத்த) பகுதி 2015 பாடல்கள்; ஆதலின் இதுவும் ஒரு விரிந்த புராணம் என்று சொல்லத் தடையில்லை. இதைப் பாடிய புலவரே அனதாரியப்பப் புலவர் என்னும் அனதாரி.*

## அனதாரியப்பர்

இவருடைய வரலாறும் பெருமையும் சில தனிப்பாடல்களும் தொண்டை மண்டல சதகம், சோழ மண்டலச் சதகப் பாடல்களாலும் அவற்றுள் காணும் மேற்கோள் பாடல்களாலும், சில சாசனச் செய்திகளாலும் நூலகத்துக் காணும் குறிப்புக்களாலும் ஓரளவு தெரியவருகிறது. இவற்றைத் தொகுத்துப் பின்வருமாறு செய்திகளைக் கூறுவோம். இவர் தொண்டை மண்டலத்துச் செங்காட்டுக் கோட்டப் பகுதியில் சேயாற்றின் சங்கமத்துக்கு அருகிலுள்ள வாயற்பதி என்ற வயலூரில் வேளாள மரபில் பிறந்தவர். இவ்வாயற்பதியில் முற்காலத்தில் வடுகநாத முதலிய என்பவர் இருந்தார் என்றும், அவர் தமது உடன் பிறந்த தம்பி இறந்து போனதைக் கூட மூடி வைத்து, அப்பூதியடிகள் அப்பருக்கு அன்னமிட்டது போல, தம்மை நாடி வந்த ஒரு தமிழ்ப் புலவனுக்கு அன்னமிட்டார் என்றும் தொண்டை மண்டல சதகம் (58) சிறப்பித்துப்பாடும் பெருமை பெற்றிருந்தார். இளமையில் இவர் கல்விப் பயிற்சி வேண்டி வாயலை விட்டு நீங்கிச் சோழ நாட்டில் உள்ள உறத்தூர் என்ற ஊரில் வாழ்ந்த தமிழ் மேகம் எனத் தக்க கல்விப் பெருமையுடைய ஒரு வேதியரிடம் மாணாக்கராகி, தமிழ் பயின்று புலமை சான்றவராய் விளங்கினார். பின்னர் அக்காலத்து திருவாரூருக்கு அருகில் உள்ள கன்றாப்பூர் சிங்கராயன் என்ற வள்ளல் இவருடைய புலமையினை நன்கு அறிந்து இவரைத் தன் பால் அழைத்த போது வேதியர் அனுப்ப மறுத்தார் என்றும், பின்னர் பொருள் முட்டுப்பாடு நேர்ந்த சமயம் சிங்கராயன் பொருள் கொடுத்து அவருடைய துயரைத் துடைத்துப் புலவரை அனுப்பச் சம்மதிக்குமாறு செய்து தம்மூர் அழைத்துச் சென்று போற்றி வந்தான் என்றும் அறிகிறோம். பின்வரும் தொண்டை மண்டல சதகப் பாடல் இதை குறிப்பிடுகிறது.

> **மிண்டரை வெல்லும் வளர்சிங்க ராசன் விலைகொடுப்பத்**
> **தண்டமிழ் மேகம் உறத்தூரில் வேதியன் தானும்விற்பக்**
> **கொண்டவன் பின்சென்று மண்டலத் தேபுகழ்கொண்டபிரான்**
> **வண்டமிழ்க் கும்பன் அனதாரி யுந்தொண்டை மண்டலமே** **51**

இங்கு விலைகொடுப்ப விற்ப என்று வரும் தொடர்களை அப்படியே சொற்பொருளாகக் கொள்வது பொருந்தாது. புலவர் விலை கொடுத்துப் பெறும் சரக்காகத் தமிழ்நாட்டில் என்றைக்குமே இருந்ததில்லை. ஆதலால் ஆசிரியருக்கு இவரை

விட மனமில்லை என்பதும், சந்தர்ப்பம் நேர்ந்தபோது மற்றவர் செய்த உதவிக்காக நன்றி பாராட்டி இவரை அனுப்பினார் என்பதுமே பொருளாகும். இவ்வாறு கன்றாப்பூரில் இவர் இருந்த போது தம் புலமையால் நாட்டில் பெரும்புகழ் படைத்தார். அவ்வாறு புகழ் படைத்த காலத்தில் எழுந்தது பின்வரும் பாட்டு:

கம்பனென்றும் தாதனென்றும் காளி ஒட்டக் கூத்தனென்றும்
கும்பமுனி யென்றும்பேர் கொள்வரோ – அம்புவியில்
மன்னா வலர்புகழும் வாயல் அன தாரியப்பன்
அந்நாளி லேயிருந்தக் கால்.

(இதனுள் கம்பனென்றும் கும்பனென்றும் காழி ஒட்டக் கூத்தனென்றும் எனப் பாட பேதங்கள் உள்ளன. தாதன் - வாணியன் தாதன் என்ற புலவன்; கும்பன் - அகத்தியன்; காளி - நம்பி காளி என்ற புலவர். காளி என்றும் ஒட்டக்கூத்தனென்றும் என்று உம்மைத் தொகையாகக் கொள்க. பிற்காலத்தில் இந்தப் பாடலின் மூன்றாம் வரியை 'மன்னாவலர் புடைசூழ் வாழ் குடந்தை ஆரியப்பன்' என்று பிழையாகப் படித்து இப்பாடல் ஆரியப்பப் புலவரைக் கூறும் என்று சிலர் எழுதியதுண்டு. அது பிழையென்பதைச் செவ்வைச் சூடுவார் பாகவதம் என்ற தலைப்பில் தெளிவாக்கியிருக்கிறோம் (அடுத்த அத்தியாயம்)).

அவ்வாறு இருக்கும்போது சிங்கராயன் தனக்குப் பகைமையுணர்ச்சி பூண்டு அதே ஊரில் வாழ்ந்த தண்டாயுதன் என்ற மற்றொரு செல்வனுக்கு அனதாரிப் புலவரைக் கொண்டு ஒரு சீட்டுக் கவி எழுதச் செய்தான். கவி பெற்ற தண்டாயுதன் அதற்கு மறுமொழியாக மற்றொரு பாடலை எழுதி அனுப்பினான். முதல் பாடலில் தண்டாயுதனை ஏளனமாகச் சொல்வது போலவும், தண்டாயுதன் புலவருடைய சிறப்பை எடுத்துக் காட்டுவது போலவும் அமைந்துள்ளன:

திரம் பெறுகன் றாப்புடைய சிங்கப் பெருமான்
உரம்பெறுதண் டாயுதனுக் கோலை – பெரும் பகலே
அந்திவரு நீ நினைந்தா லல்லவென்றா லுங்காலம்
பிந்திவரு முந்திவரும் பேச்சு.

கனைத்திருந்த கடல்புடைசூழ் கன்னைத்தண்டா
யுதனைக் கன்றாப் புடையான்
நினைத்திருந்த நன்மையினாற் குறைவில்லை
யென்றெழுதும் நிருப ருக்கு

முனைத்திருந்த வாணியய னனதாரி
யான்சிவன்றான் முகுந்த னேதான்
உனைத்திருந்த நினைத்திருந்து மடப்புறத்து
மித்தினையென் னுபாதி தானே.

(கன்னையென்பதும் கன்றாப்பூர். ஒரே ஊரில் உள்ளோர் இவ்வாறு எழுதிக் கொண்டனர்) இந்த வரலாற்றைச் சோழ மண்டலப் பாடல் சொல்லுகிறது.

காட்டிற் பொலிய ஆன்பசு என்றெழுதும் கன்றாப்புடைராயன்
சீட்டுக் கவிதை அனதாரி செய்யுந் தமிழின் திறனறிந்தோன்
காட்டிற்புகழ் கன்னைக் குடையான் நாளும் தண்டாயுதன் பெருமை
வாட்டுப் படுமோ அவனகாணி உணர்ந்தோர் சோழ மண்டலமே.

(கன்னைக் குடையான் கோத்திரப்பெயர் என்றும் சொல்வ துண்டு.)

சிறிது காலம் பின்னர் அனதாரி கன்றாப்பூரினின்றும் நீங்கி, திருச்சிராப்பள்ளியருகில் கல்லூர் மன்றை (மன்றச்ச நல்லூர்) என்ற ஊர்களில் தலைவனாயிருந்த திருவிருந்தான் என்ற வள்ளலுடைய ஆதரவைப் பெற்று வாழ்ந்தார். திருவிருந்தான் கச்சி வீரப்பனுடைய அமைச்சராக இருந்தார். இவரூராகிய மன்றை திருவரங்கத்தை அடுத்து வடக்கில் உள்ளது; மலயத் துவச பாண்டியன் தலங்களை விமானத்திலிருந்து சுட்டிக் காட்டிக் கொண்டு செல்லும்போது மன்றைப் பதியையும் காட்டு வதாகப் புலவர் ஒரு பாடல் சொல்வதில் இக்கருத்து உள்ளது:

இருவெஞ்சிலை குனியத்தனி மணிவந் தோட்டெனமேற்
புருவந்துணை விழி பெற்றருள் மயிலை பொன்னி நதிபாய்
உருவந்திகழ் அரங்கக் கருமணியுத்தரத் தொருபான்
மருவுந்திரு விருந்தான் வருமன்றைப் பதியிதுவே.

(அரங்கக் கருமணி உத்தரம் - திருவரங்கத்தில் கரிய வண்ணன் இருப்புக்கு வடக்கு; உற்பத்தி காண்டம், சருக்கம் 15, பாடல் 20.) இனி சுந்தர பாண்டியத்தில், திருவிருந்தானுடைய தமையன் செவ்வந்தியையும் அனதாரி குறிப்பிடுகிறார். (திக்குவிசய காண் டம், சருக்கம் 7 பாடல் 23)

குடக்கொடு குணக்குநிறை யத்திறை கொடுப்ப
வடக்கரசு ரிற்கரு நடப்படையை மாறாய்த்
திடத்தொடு செவந்தி துணை வன்திரு விருந்தான்
அடர்த்த செயலிற் பொருதடாதகை அடர்த்தாள்.

வேறிடங்களிலும் இப்பெயர்களை எடுத்துக் காட்டுகிறோம். செவ்வந்தி என்றமையால் திருச்சிராமலைப் பதியின் தொடர்பு தெளிவு; அங்கு சுவாமி திருநாமம் செவ்வந்தி ஈசர். மேலும் சுந்தர பாண்டியத்தில் ஒரு சருக்கம் திரிசிராமலைச் சருக்கம் என்றே அமைக்கப் பெற்றுள்ளது. இவர் திருவிருந்தான் அவைப் புலவராய் இருந்த போது, வடமொழியிலுள்ள சுந்தர பாண்டியத்தைத் தமிழிற் பாடுமாறு அவன் கேட்கவும் தாம் பாடியதாகக் கூறுகிறார்:

ஆயசொக்கர் அருட்கடல் வெள்ளமார்
நேயன் வெண்குடை நீழலிற் சேடன்போல்
சேயபார்ச் சுமை செந்துகள் தாங்கினான்
தூய நெஞ்சினன் நீதி தொடந்துளான்.

அன்னவன் அரசர் சூழும் கச்சிவீரப்ப னென்று
மன்னவனருள்சேர் மனறைச்செவ்வந்தி துணைவன்வாய்மைத்
தென்னவன் திருவிருந்தான் சவுந்தரன் தேவ பாடைத்
துன்னிருங் கதை தென்னூலாற் சொல்கெனச் சொல்லலுற்றேன்.

(நகரச் சருக்கம் 46, 47; பாயிரம் 2) என்ற பாடல்கள் காண்க. அன்றியும் இவர் திருவிருந்தானைத் தம் நூலின்கண் பல விடத்தும் போற்றிக் குறிப்பிடுகிறார். உக்கிர குமாரர் வேளாளர் பிணையை ஏற்று மேகங்களைத் தளைவிடுத்தார் என்று கூறும்போது, 'மன்றை வாழ் தென்னவன் செவ்வந்தி திருவிருந்தவன் பிணை' என்கிறார். (உக்கிர காண்டம் 8, 5):

மன்னவன் உக்கிரவழுதி மன்றைவாழ்
தென்னவன் செவ்வந்தி திருவிருந்தவன்
தன்னுடைப் பிணையிற் களைதனை விடுக்கவே
மின்னொடு கருக்கொடு விசும்பு மேயதே.

பொருவிருந் தடங்கலுழ்வரப் பொருதரி புயல்வாய்க்
கருவிருந்திட வளர்த்த நீர் நிலங்கலந் தென என்
மருவிருந் தமிழ்த்துகளறுத் தவைகொள மன்றைத்
திருவிருந்தவன் அளித்தலின் உலகமேற் சிறக்கும்

என அவையடக்கத்திலும் கூறுகிறார் (வையைச் சருக்கம் 7); பின் அறம்படு சருக்கம் 15:

மைந்தன் இல்லறம் பரவ மன்றை வாழ்
செந்தமிழ்த் தொடைத்திரு விருந்தவன்

புந்தி நேர்மதிப் புலவர் மன்னனை
எந்தை நட்பினால் இனிது நோக்கினான்.

திருவிருந்தான் அக்காலத்தில் சிறந்த வள்ளலாய்ப் புலவர் பாடும் புகழ் உடையவனாய் வாழ்ந்தான் என்பதைத் தனிப் பாடல்களும் காட்டுகின்றன நாணிக் கண் புதைத்தல் என்ற துறையிலமைந்த ஒரு பாடல்.

செவ்வந்தி தம்பி திருவிருந்தான் மன்றைத் திண்கிரிமேல்
பவ்வந்தருந் திருமா மயிலேபவ ளக்கிரி வாய்த்
தவ்வொன்று னவ்வொன்று மவ்வாறிரண்டொன்று தாமிருக்க
மவ்வஞ்சு தவ்வஞ்சு கவ்வஞ்சு காட்டல் வழக்கல்லவே.

*(தவ்வொன்று ... தனம்; மவ்வஞ்சு ... முதுகு).*

**காலம்**

*மதுரையையாண்ட நாயக்க அரசர்கள் காஞ்சிபுரத்துக்கு உரியோர் 'காஞ்சிபுரத்து விசுவநாத கிருஷ்ணப்ப நாயக்கரய்யன்' என்பது கல்வெட்டில் காணும் தொடர். கச்சிவீரப்பர் என்பதிலுள்ள கச்சி இக்கருத்தையுடையது. இவ்வீரப்பர், கிருஷ்ண வீரப்ப நாயக்கர். இவர் மதுரை ஆண்டகாலம் கி.பி. 1568 - 73 ஆகும், முதலாம் வேங்கடபதிராயர் அப்போது விசய நகரத்தை ஆண்டவர். மைசூரில் அக்காலம் ஆட்சிபுரிந்த ராஜவுடையார் என்பவரை இந்நாயக்கர் திண்டுக்கல்லில் நடந்த போரில் வென்றார். அதுவே மேற்காட்டிய பாடலில் (குடக்கொடு குணக்கு) இவர் கருநடப்படையை வென்றார் என்றதாகும். இப்போரில் ஈடுபட்ட தலைவர்களில் திருவிருந்தானும் ஒருவராகலாம் மதுரைத் திருவாலவாயுடையார் கோயில் திருப்பணி விவரத்தில் 'ஆடிவீதித் தெற்கு ஒன்பது நிலைக் கோபுரம் சிராமலைச் செவ்வந்தி செய்வித்தது - சகம் 1400' (கி.பி. 1478) என்று ஒரு குறிப்பு காணப்படுகிறது. மேலும் அந்நகர்த் திருப்பணிமாலையில் 61ஆம் செய்யுள் செவ்வந்தியின் திருப்பணியைக் கூறுகிறது.**

அரிகுழல் அங்கயற் கண்ணி பொற்கோயிலைச் சூழ்ந்ததெற்குத்
திருமதிலக் கருகே யொருமண்டபம் செய்ததிலே
உரிமையி னாலரும் செவ்வந்தி யீசரை யுண்டாக்கினான்
திருவளர் கல்லூர்ச் சனிப் பெருமாள் தந்த செவ்வந்தியே.

---

* *திருவாலவாயுடையார் திருப்பணிமாலை, மதுரைத் தமிழ்ச் சங்கம், 1928.*

இச்செவ்வந்தி, திருவிருந்தானுக்கு மூத்தவர்; இருவரும் சனிப் பெருமாளின் புதல்வர்கள். இவர் கட்டிய செவ்வந்தியீச்சுரம் பிரதிட்டையின் காலம் சகம் 1486; கி.பி. 1564. இக்கோயில் இன்றும் மதுரையில் இதே பெயரில் உள்ளது. எனவே செவ்வந்தி யையும் அவர் தம்பி திருவிருந்தானையும் பாடும் அனதாரி இதே காலத்தில் இருந்தார் என்பது தெளிவு. ஆகவே அவர் காலமும் சுந்தர பாண்டியம் பாடிய காலமும் 16ஆம் நூற் றாண்டின் இடைப் பகுதியாகும்.

சிறிது பிற்காலத் தெழுந்த ஒரு கல்வெட்டுப் பகுதியையும் இங்கு குறிப்பிடலாம். திருநெல்வேலி மாவட்டம் காடற்குடி யாகிய கோலவார்ப்பட்டிச் சொக்கநாதர் கோயில் சாசன மொன்றும் பின்வருமாறு கூறுகிறது. "சகாப்தம் 1534 (கி.பி. 1612) இல் தொண்டை மண்டலத்துப் பழூவூர்ச் சேக்கிழார் அரிய நயினார் என்பார், சடிலவர்மன் அழகிய சொக்க வரதுங்க ராம வீர பாண்டியன், வேங்கடபதிராயர், விசுவநாத நாயக்கமுத்து வீரப்ப நாயக்கர், செவ்வந்திநாதபிள்ளை, திருவிருந்த பெருமான் பிள்ளை இவர்கள் புண்ணியமாக மேற்படி சிவாலயத்துக்குப் பூமியளித்தார்." இதனால் செவ்வந்தி நாதபிள்ளை திருவிருந்த பெருமாள் பிள்ளை ஆகிய இருவரும் முன்னே நாம் கூறிய கிருஷ்ண வீரப்ப நாயக்கருக்குப்பின் முத்து வீரப்ப நாயக்கர் காலத்திலும் இருந்தார்கள் என்றும் ஒருகால் இவர்கள் வரதுங்க ராம பாண்டியனோடு தொடர்பு கொண்டும் இருந்திருக்கக் கூடும் என்றும் யூகித்தல் கூடும். அக்காலத்தில் அரசராயும் தலைவராயும் இருந்தவர்கள் பெருமாள் என்று வழங்கப் பட்டனர் என்பதை நெறியுடைய பெருமாள், எதிரிலாப் பெரு மாள் என்ற சோழர் பெயர்களாலும் குலசேகரப் பெருமாள் என்ற பாண்டியர் பெயர்களாலும் அறியலாம். திருவிருந்தான் என்பவர் வேளாளர் என்றும் திருவிருந்த பெருமாள் பிள்ளை என்று வழங்கப்பட்டார் என்றும் அறிகிறோம்.

## சுந்தர பாண்டியம்

முதலில் கற்பக விநாயகர் வணக்கம் சொல்லுகிறார். கிடைக்கிற பகுதியில் உற்பத்தி காண்டம், திக்குவிசய காண்டம், உக்கிர காண்டம், லீலா காண்டம் என்ற நான்கு பகுதிகள் உள்ளன. இதற்கு மேலுள்ள பகுதிகள் இப்போது எங்கும் கிடைப்பதாகத் தெரியவில்லை. இவற்றில் முறையே 20, 15, 15, 4

சருக்கங்கள் உள்ளன. கிடைக்கிற மொத்தப் பாடல்கள் 2017. தொடக்கத்திலுள்ள பாயிரப் பகுதியில் சொக்கப் பெருமான், அங்கயற் கண்ணி, சித்திவேழாம், முருகன், நால்வர் ஆகியோர் வணக்கம் சொல்லுகிறார். பிறகு மூன்று பாடல்களில் அவை யடக்கம் கூறி அடுத்த நான்கு பாடல்களில் நூல் வரலாறு கூறு கின்றார். இந்த நூல்* காந்தத்துச் சங்கர சங்கிதையில் சொல்லப் பட்டுள்ளது. காசியில் பிரமன் செய்த யாகத்தில் முனிவர்கள் ஈண்டி நாரத முனிவனை நோக்கிப் 'பந்தம் நீக்கி வீடருள் பதி யாது' என்று கேட்க, அவன் சொன்னான். பின்னர் இதைச் சூத முனிவர் வடமொழியில் சொல்லியதைத் தாம் தமிழில் சொல்வ தாக ஆசிரியர் வரலாறு கூறுகிறார். பின்வரும் பாடல் ஆசிரியர் பெயர் முதலியன கூறும்:

> மதுரை நாயகன் சுந்தர பாண்டிய வடநூற்
> கதிருலா மணி யாறுகாற் பீடத்திற் கல்லூர்
> அதிபனாந்திரு விருந்தவன் அவையினில் வாயற்
> பதியில் வாழ்வன தாரிசெந் தமிழினிற் பகர்ந்தான்

ஆசிரியரே இந்நூலைக் காண்டங்களாகப் பாகுபாடு செய்திருக் கிறார் என்பது நன்கு புலப்படுகிறது. ஒவ்வொரு காண்டத்தின் தொடக்கத்திலும் ஒரு துதிப்பாடலை இவர் பெய்திருக்கிறார்; இது பெருநூல் செய்யும் ஆசிரியர் இயல்பு. பெருந்தேவனார் பாரத வெண்பா, கம்ப ராமாயணம், வில்லி பாரதம், அருளாள தாசர் பாகவதம், பரஞ்சோதி திருவிளையாடல் முதலான எல்லா நூல்களிலும் இவ்வியல்பைக் காணலாம். இரண்டாம் காண்டத் தொடக்கத்திலுள்ள துதியைப் பின்னே காண்க. மற்ற இரண்டு காண்டங்களிலும் உள்ள பாடல்கள் மிகவும் பிழை பட்டுக் கிடக்கின்றன.

---

* இந்நூல் பதிப்பு முதற்பக்கமே பார்க்க அருவருப்பாய் இருக்கிறது. உற்பத்திக் காண்டம் என்பது உற்பத்தியா காண்டம் என்று மூன்றிடங்களில் அச்சுப் போடப்பட்டுள்ளது காப்பையும் ஆக்கியோன் பெயர் நூற்பெயர் அரங்கேற்றம் ஆகியவை கூறுகின்ற பாடலையும் ஒருசேர அச்சிடப்பட்டுள்ளது. பாயிரப் பகுதியில் அமைய வேண்டிய கடவுள் வணக்கமும் அவையடக்கமும் வையைச் சருக்கம் என்ற பெயரில் உள்ள முதல் சருக்கத்தின் தொடக்கப் பாடல்களாக அச்சிடப்பட்டுள்ளன இவ்வளவு பாதகமாக இது காறும் யாரும் தமிழ் நூல் அச்சிட்டதில்லை. இக்கட்டுரை இறுதி யிலும் இது பற்றி சில சொல் சொல்லுகின்றோம்

அரியயன் முனிவர் வானோர் அருமறை தெளியா ஆதிப்
பரிபுரமொலிப்ப வெள்ளி மன்றிடைப் பதஞ் சலிக்கா
விரிமலர்ப் பதமுகைத்தும் வீசியும் கரங்கள் பத்தும்
உரிமையிற் கிளர ஓங்கும் நடத்தினை உளத்தில் வைப்பாம்.

பரஞ்சோதி திருவிளையாடலானது மதுரையாக இருந்த நகரம் நான்மாடக் கூடலாகிப் பின் திருவாலவாயானதை யொட்டி அப்பெயராலேயே மூன்று காண்டங்களாக அமைக்கப் பட்டுள்ளது. தம் நூலை அனதாரியப்பர் சோமசுந்தரக் கடவுளின் புகழைக் கூறுமுகமாக; தடாதகையின் அவதாரம், தடாதகையின் திக்கு விசயம், தடாதகையின் புதல்வனான உக்கிரகுமாரன் வரலாறுகள், பிறகு அவன் காலத்திலும் பின்னரும் சோமசுந்தரர் செய்த லீலைகள் என்ற முறையில் நூலைப் பாகுபடுத்தி அமைக்கிறார். எனினும் தாமும் திருவிளையாடல் எட்டெட்டும் கூறுவதாகவே சொல்கிறார். (நகரச் சருக்கம் 6) தமிழைப் பல இடங்களில் போற்றிச் சொல்லுகிறார். வைகையின் வருகை, 'பொருவில் ஐந்திணை துறை பொருந்திப் பொற்பினைத் தருதலாற் பொருளுடைத் தமிழும் ஒக்குமே' என்கிறார். 'திருந்து பாடலவர் அருந்தமிழ் தேர்வுழினியாம் பொருந்து மாறனே ... வேனில் வந்துதித்தது' என்கிறார். திருக்குறள் கம்பராமாயணம் என்ற இரு நூல்களின் சொற்களும் தொடர்களும் கருத்துக் களும் தொட்ட இடமெல்லாம் காணப்படுகின்றன.

இக்காலத்து (16ஆம் நூற்றாண்டு) புராணங்களில் மிகுதி யாகக் காணப்படுகிறது போல இந்நூலிலும், தோத்திரப் பாடல் கள் அதிகமாகப் பயிலக் காண்கிறோம். பதஞ்சலி தாண்டவ தரிசனம் கண்டு, தாண்டவ நடத்துணைகள் போற்றி என்று போற்றுதல் 7 பாட்டு; ஆலவாயனே என்று குண்டோதரன் போற்றுதல் 8 பாட்டு; ஆலவாயனே என்று தடாதகை போற்று தல் 8 பாட்டு; நான் மாடக் கூடலான போது பாண்டியன் துதித் தல் - சுந்தரநாதனே என்று 8 பாட்டு; வித்தியாபதி மீனாட்சி யம்மையைப் புதல்வியாய் பெறவேண்டி கூடல் அங்கயற்கண் மங்கையே என்று துதித்தல் 8 பாட்டு; அரசன் விமான வழிச் செல்லும்போது இயற்கைக் காட்சிகளைக் காட்டுமிடத்துத் தொடர்ச்சியாகக் 'காண்டியே' என்று முடியும் பாடல்கள் 28; மீண்டும் இதே முடிபு 13 பாடல்கள்; பாராய் என்று முடிவன 12 பாடல்கள், இவ்வாறு ஒரு பொருள் மேல் பல பாட்டுக்கள் அடுக்கிச் சொல்வது இவருக்கு ஓர் இயல்பு என்று தெரிகிறது.

*நான்கு பதிகள் சிறப்புடையன; காசி தென்கயிலை தில்லை. கலந்துயிர் இறக்க, போற்ற, காண முத்தி; ஆலவாய் கேட்க முத்தி (நகர, 2) என்கிறார்; இது புதுமை. செழியர் கோமான் குணச் சிறப்பு (தூது. 28):*

தருமத்திற் காப்பு, நாட்டோர்க்கு
　உயிர், தரித்திரற்குச் செம்பொன்,
கருதிக்கு நுட்பம், சேர்ந்த
　சுற்றத்தோர்க் கினிய செல்வம்,
கருணைக்கு வாரி, தானம்
　தனக்குயர் கற்பகம் – போற்
பொருவற்ற செழியர் கோமான்
　இருந்தனன் அரசர் போற்ற.

*வழுதியின் தூதன் வளவனிடம் சென்றபோது கடந்த ஊர்கள் - ஐயாறு, கும்பகோணம், அருச்சுனம் (இடைமருதூர்), மாயூரம், வெண்காடு (தூது. 70) நகர் புகுசருக்கத்தில், மலையத்துவசன் விமானத்திலிருந்து காட்டும் தலங்கள் - மறைவனம், கடவூர், ஆரூர், திருவாஞ்சியம், பன்னிரு பெயர் பெற்ற திருத்தோணி புரம், வேளூர், இடைமருது, பொன்னம்பலம், வீழிமிழலை, திருநாகேச்சுரம், ஆராவமுது (திருவேதிகுடி), குடமூக்கு, திருத் துருத்தி, ஐயாறு, வயிரப் பெருந்தூணான மழபாடி, எழுவர் தவத்துறை, திருவிருந்தான் மன்றை, ஆனைக்கா, வலஞ்சுழி, திரிசிறவெற்பு, இரத்தினகிரி, (வாட் போக்கி) என்பன. இவை நில அமைப்பின்படி இல்லை என்பது நன்கு தெரிகிறது.*

*முடிசூட்டுச் சருக்கத்தில் அமைச்சர் தடாதகைப் பிராட் டிக்கு அரச நீதிகளை உணர்த்துவது கம்பராமாயணத்தை நினைவூட்டுகிறது. திக்கு விசய காண்டத்தில் பெருங்காப்பியத் தன்மைக்குப் பொருத்தமாய் ப்ல போர்கள் சொல்லப் பெறு கின்றன. இந்திரன் தடாதகைப் பிராட்டியாரை நோக்கிக் கூறும் ஒரு பாட்டு:*

மண்ணென்படும், மலையென்படும், அலையென்படும், மதியா
விண்ணென்படும், எனதங்கையில் விடுசூழியில் உனையான்
பெண்ணென்பது நினைந்தீதுனைப்பொறுத்தேனது பிழைத்தாய்
துண்ணென்பயம் விடுத்தாய், கணைதொடுத்தாய் அமர் அடுத்தாய்.

*தாண்டவச் சருக்கத்தில், மூலாதாரத்தில் தியாகேசனாயும் (ஆரூர்), சுவாதிட்டானத்தில் (ஆனைக்கா), சம்புநாதனாயும்,*

மணிபூரகத்தில் (சோணாசலம்) அண்ணாமலை நாதராயும், அனாகதத்தில் (அம்பலம்) ஆனந்தத் தாண்டவராயும், விசுத்தியில் காளத்தியீசராயும், ஆக்ஞையில் (காசி) விசுவநாதராயும், பிரமந்திரத்தில் (கயிலை) சீகண்டபரமனாயும், துவாத சாந்தத்தில் (ஆலவாய்ச்) சுந்தரனாயும் விளங்குவதாகச் சொல்லுகிறார். திருவிளையாடல் எட்டெட்டும் கூறுவதாகவே சொல்லுகிறார். (நகரச் சருக்கம் 6).

### உற்பத்திக் காண்டம்

இப்பகுதி மிகவும் விரிவாய் அமைந்துள்ளது. பரஞ்சோதி திருவிளையாடலில், திருவிளையாடலைத் தொடங்கும் முன் நாட்டுச் சிறப்பு என்று தொடங்கி, மூர்த்தி விசேடம் என்ற பகுதி வரையில் ஏழு படலங்களால், பாண்டிய நாட்டையும் மதுரையையும் தோற்றுவாய் செய்து முடிக்கிறார். சுந்தர பாண்டியத்தில் இப்பகுதி 20 சருக்கங்களாய் உள்ளது. நாடு நகர் ஆறு தீர்த்தம் மூர்த்தி என்பன மட்டுமன்றி, முதல் நான்கு திருவிளையாடல்கள் இங்கு பிற கதைகளோடு விளக்கிச் சொல்லப்படுகின்றன. தடாதகையின் தந்தை மலயத்துவசனுக்குத் தந்தையான குலசேகர பாண்டியன் வரலாறு அவன் நகரங் கண்டது, சோழனிடம் பொன் வேண்டித் தூதனுப்பியது, மணத்துக்குச் செல்வது, வழியில் திரிசிராமலையில் தங்கியது, திருமணம், விமானத்தில் திரும்பல், வித்தியாவதி தவம் செய்து மீனாட்சியம்மையை மகளாகப் பெறுதல், தடாதகை பிறத்தல் முதலான செய்திகள் ஒவ்வொன்றும் ஒரு தனிச் செய்தியாக விரித்துச் சொல்லப் பெறுகின்றன.

### திக்கு விசய காண்டம்

மலயத் துவச பாண்டியன் அமைச்சரோடு கலந்து யோசித்து, தன்மகளாகிய தடாதகைப் பிராட்டிக்கு முடிசூட்டுகின்றான். அவன் முன் கண்ணுவமுனி தோன்றி உமாதேவி தடாதகையாக வந்து பிறந்த வரலாறும் முன்னர் தாருகாசுரன் உலகுக்குச் செய்த இன்னலை குமாரக்கடவுள் அவதரித்துப் போக்கிய செய்தியும் சொல்லிப் போகிறான். இப்பால் தடாதகை வனவேட்டை தொடங்கி கலிங்கன், இந்திரன், யமன், வருணன், குபேரன் ஆகியோரை அடிப்படுத்தி, வடகுண திசையிற் சென்றபோது, சிவபிரானைக் கண்டு நாணமீதூர்ந்தபோது, அவர், தக்க முகூர்த்தத்தில் கூடலில் வந்து மணப்போம் எனக் கூறலும்,

தடாதகை நகர் திரும்புகிறாள்; திருமணம் நடைபெறுகிறது. இப்பகுதி 15 சருக்கம். இவ்வளவும், பரஞ்சோதி திருவிளை யாடலில் தடாதகை திருவவதாரப் படலத்தில் பிற்பகுதியிலும் திருமணப் படலத்திலும் சொல்லி முடிக்கப் பெறுகின்றன.

### உக்கிர காண்டம்

இதன் 15 சருக்கங்களும் பரஞ்சோதி திருவிளையாடலை வைத்து ஒப்பு நோக்கும் போது, 6 - 21 ஆகிய படலங்களைக் கொண்டன என்று தெரிகிறது; ஆனால் அமைப்பில் வேறு பாடு அதிகம். 13 படலங்கள் மதுரைக் காண்டம், 3 படலங்கள் கூடற் காண்டம். தடாதகைப் பிராட்டி திருமணமான பின் நடந்த நிகழ்ச்சிகள் உக்கிரகுமார பாண்டியர் பிறப்பு என்று தொடங்கி, சோமசுந்தரக் கடவுள் எல்லாம் வல்ல சித்தராக வந்து கல்லானைக்குக் கரும்பு அருத்திய வரையில் இக்காண்டத் துள்ளன. குண்டோதரச் சருக்கம் என்பது, குண்டோதரனுக்கு அன்னமிட்டது, அன்னக்குழியும் வைகையும் அழைத்தது ஆகிய இரு படலங்களையும் அடக்கியிருக்கிறது. எழுகடல் சருக்கம் என்பது, அதுபோல, எழுகடலழைத்தது, மலயத்துவசனை யழைத்தது ஆகிய இரு படலங்களையும் அடக்கியிருக்கிறது. பரஞ்சோதியின் இந்திரன் முடிமேல் வளையெறிந்த படலம், சுந்தர பாண்டியத்தில் வளைவிடுத்தது மேகம் தளை விடுத்தது என்ற இரு சருக்கங்களையும் அடக்கியது. பிந்தியதில் கண்ட சோமவாரச் சருக்கம் என்பது புராண சம்பிரதாயங்களை யொட்டி விரதம் முதலிய புண்ணியச் செயல்களை, பிற புராணங்கள் சொல்வது போலப் போற்றிச் சொல்வதாகும். அடுத்த காண்டத்தில் வரும் சிவராத்திரிச் சருக்கமும் இது போன்றதே. பின்னும் பல மறைந்துபோன பகுதியுள் இருத்தல் கூடும்.

### லீலா காண்டம்

இப்பகுதி சோமசுந்தரக் கடவுளுடைய லீலைகளைக் கூறும் போலும், இது பரஞ்சோதி திருவிளையாடல் இரண்டாம் பகுதி கூடற் காண்டம் படலம் 22க்கு நேரான யானை எய்த படலம் என்பதை அட்டாலைச் சருக்கம் என்று சொல்லி அடுத்து இரண்டு படலங்களை இரண்டு சருக்கங்களாகச் சொல்லி பின்னர் சிவராத்திரிச் சருக்கம் என்றவொரு தனிச் சருக்கம் அமைத்திருக்கிறது. இங்கு அடிமுடியைத் தேட வேண்டி வராகமும் எகினமும் தேடிக் கண்டில என்றும் அதன்மேல்

சிவநிசி விரதம் கடைப்பிடிக்க என்று பெருமான் சொன்னார் என்றும் சொல்லி, பின்னர் சிவராத்திரி விரதம் இருந்த ஒரு வேடன் ஒரு பெண் ஆகிய இருவர் வரலாற்றையும் ஒரு காமுகன் தான் பெற்ற பெண்ணோடு கலந்த பாவத்தையும் சிவராத்திரி விரதம் போக்கிற்று என்ற வரலாற்றையும் சொல்லுகிறது. இப் பகுதி மற்றத் திருவிளையாடல்களில் இல்லை.

64 திருவிளையாடல் சொல்லுகிறேன் என்று வந்தவர் இது வரை சொல்லிய பகுதி 25 திருவிளையாடல். மிச்சமுள்ளது 39. இவற்றுக்கு இன்னும் 2000 பாடல்களேனும் அமைந்திருத்தல் கூடும். ஆக இந்நூல் ஏறக்குறைய 4000 பாடல்களைக் கொண் டிருத்தல் கூடும் என்று நாம் மதிப்பிடலாம்.

லீலா கான்டத்தில் சோமசுந்தரக் கடவுளுடைய பல வகை யான விளையாடல்கள் மட்டும் இருக்குமென்றும் இசையும் தமிழும் சம்பந்தப்பட்ட திருவிளையாடல்கள் (பாண பத்திரர், நக்கீரர்,.வாதவூரர் சம்பந்தர் வரலாறுகள்) தனியொரு காண்ட மாக இருத்தல் கூடும் என்றும் நாம் கொள்ளலாம்.

## பதிப்பு

இது 1955இல் சென்னை அரசாங்கத் தொன்னூல் நிலைய 41ஆவது வெளியீடாக வெளியிடப்பட்டுள்ளது. வெளியிட்டவர் அக்காலம் அந்த இலாகா தலைவராக இருந்த சந்திரசேகரன் என்பவர். இந்த பதிப்புக்கு மூலம் மதுரைத் தமிழ்ச் சங்கத்துக்கு ரா. ராகவையங்கார் கொடுத்த ஏட்டுப் பிரதி. அதை வாங்கி இவர்கள் காகிதப் பிரதி செய்து அச்சிட்டிருக்கிறார்கள். அச்சிட்ட பாடல்களைப் பார்க்கும்போது ஏடு படிக்கத் தெரியாதவர்கள் பிரதி செய்ததாகத் தெரிகிறது. 'எழுதினவன் ஏட்டைக் கெடுத் தான் படித்தவன் பாட்டைக் கெடுத்தான்' என்று சொல்லுகின்ற பழமொழி இந்த நூலைப் பொறுத்தவரையில் முழுமையும் உண்மையான மொழி. புத்தகத்தில் உள்ளது செய்யுள் முதற் குறிப்பு அகராதி ஒன்றுமே. இடையிடையே வெற்றுப் பக்கங்கள் நிரம்ப விடப்பட்டுள்ளன. முழு வெற்றுப் பக்கங்கள் 23 நூலில் பதிப்பாசிரியரது ஆங்கில முன்னுரை அதன் தமிழ்மொழி பெயர்ப்பு இரண்டும் உள்ளன. இதில் சரக்கு ஒன்றுமே இல்லை. செந்தமிழ் (1907) நாலாம் தொகுதியில் ரா. ராகவையங்கார் சுந்தரபாண்டியம் பற்றி விரிவான ஆராய்ச்சியுரை எழுதியிருந்தும் கூட, இவ்வளவு மொட்டையாக ஒரு பதிப்பு வெளியிடுவது

அரசாங்கத்தாரால்தான் முடியும். தனிப்பட்டவர்கள் இப்படி வெளியிட வெட்கப்படுவார்கள். மக்களின் பொருள் அரசாங் கத்தின் மூலமாக வீண் விரயம் ஆவதற்கு நூல் வெளியீட்டுக்கு இணையாக வேறெந்தத் துறையும் சொல்ல முடியாது. இதற்குச் செலவான பணத்தில் ஒரு சிறு பகுதியை அக்காலம் ஏடு வைத் திருந்த மதுரைத் தமிழ்ச் சங்கத்தாருக்குக் கொடுத்திருந்தால் பல மடங்கு அழகிய புலமை நிறைந்த பதிப்பை அவர்கள் வெளியிட்டிருப்பார்கள். நூலின் அச்சுப் படிப்பதற்கே மிகவும் வெறுப்புத் தருகின்ற மானோடைப்பு அச்சு. ஆங்கில முகவுரை யானது பள்ளிக்கூடத்துப் பையன் பரிட்சை எழுதும் கட்டுரை யைப் போல் உள்ளது.

## ரேவண சித்தர்

சிதம்பர ரேவண சித்தர் (ரேவணராத்திரியர்) என்ற ஒரு சிறப்பான ஆசிரியர் இந்த நூற்றாண்டில் வாழ்ந்தார். அகராதி நிகண்டு என்ற சிறப்புடைய ஒரு நிகண்டும் சிவஞானதீபம் என்ற சிறப்புடைய ஒரு நிகண்டும் சிவஞானதீபம் என்ற சித்தாந்த சாத்திர நூலும் இவர் செய்தார். இவருடைய வரலாறும் இந்த நூல்களும் இவ்வரலாற்று நூலின் இரண்டாம் பாகத்தில் ஆராயப் பெற்றுள்ளன. இவர் செய்தனவாக அறியப்பெறும் சில புராணங்கள் பற்றிய குறிப்புக்களைக் கீழே தருகிறோம். ரேவணசித்தர் திருப்பட்டீச்சுரம் திருவலஞ்சுழி திருமேற்றளி என்ற மூன்று தலங்களுக்குப் புராணம் பாடியிருப்பதாக அவரே எழுதிய அகராதி நிகண்டில் குறிப்பிட்டிருக்கிறார். திருப்பட் டீச்சுரம் செழுந்தமிழ்ப் புராணம் - தெரிந்த நற்சிதம்பர ரேவண சித்தன்; வலமிகு வலஞ்சுழி வாணர்தம் புராணம் - உரைதரும் சிதம்பர ரேவணன்; திருமேற்றளிக்குச் செழுந்தமிழ்ப் புராணம் - தெரிதரு சிதம்பர ரேவணன்: என்று இவர் தம்மை அகராதி நிகண்டு 2, 5, 7ஆம் தொகைகளின் இறுதியில் தாமே குறிப் பிட்டுக் கொள்கிறார். மூன்று நூல்களுமே இன்று கிடைக்க வில்லை. பட்டீச்சுரம், மேற்றளி என்ற இரண்டும் பழைய பழை யாறை நகரத்தின் பகுதிகளாகும்.

இவர் வரலாறு அகராதி நிகண்டு ஆராய்ந்த இடத்திலும் சிவஞான தீபம் ஆராய்ந்த இடத்திலும் (16 நூற்றாண்டு வரலாறு பாகம் 2இல் விரிவாகச் சொல்லப்பட்டது.) அகராதி என்ற

சொல்லை ரேவணரே முதலாவதாகப் பயன்படுத்தியதாகக் குறிப்பிட்டோம்.* ஆனால் அகராதி என்ற சொல் திருமந்திரத்திலும் காணப்படுகிறது.

> துரியத்தில் ஓரைந்தும் சொல்லக ராதி
> விரியப் பரையின் மிகுநாதம் அந்தம்
> புரியப் பரையின் பராவத்தா போதம்
> திரியப் பிரமம் துரியம் தெரியவே.

சொல்லகராதி என்பது இங்கு சொற்பிரபஞ்சம்; பரையில் சொற் பிரபஞ்சத்துக்குக் காரணமான நாதம் மிகும் என்கிறார். யோக நிலையில் பொருள் எவ்வாறு இருப்பினும், அகராதி என்ற சொல்லாட்சி முன்னே இருந்தது என்று அறிகிறோம். காலம் சுமார் 5ஆம் நூற்றாண்டு. அகராதி என்பது இங்கு தொகுப்பு என்ற பொருளுடையது.

## திருப்பட்டீச்சுரப் புராணம்

இந்தப் புராணமும் கிடைக்கவில்லை. இத்தலம் திருஞான சம்பந்தருக்குச் சிவபெருமான் முத்துப் பந்தர் அளித்த தலமாகும்; ரேவண சித்தரே நிகண்டில் தருகின்ற குறிப்புக்களால் இப்புராணத்துள் பட்டிகை பூசித்த வரலாறு, மார்க்கண்டேயர் பூசித்த வரலாறு, விசுவாமித்திரன் பூசித்து வேதிய முனிவன் ஆன வரலாறு, சதுர்த்த திமிளன் பூசித்துப் பிரமகத்தி நீங்கிய வரலாறு போன்ற பகுதிகள் இந்நூலில் இருந்தன என்று நாம் கருதக்கூடும்.

## திருவலஞ்சுழிப் புராணம், திருமேற்றளிப் புராணம்

இவையும் இன்று கிடைக்கவில்லை. திருவலஞ்சுழி கும்பகோணத்தருகு உள்ளது.. திருமேற்றளியும் திருபட்டீச்சுரமும் பழைய சோழர் தலைநகரான திருப்பழையாறையின் பாகங்கள். இம்மூன்று தலங்களுமே கும்பகோணத்துக்கு அருகில் உள்ளவை.



---

* இச்செய்தியை 9ஆம் நூற்றாண்டு முதல் பாகத்திலும் கூறியுள்ளார்.

அத்தியாயம் 5

# புராண இலக்கியம் – வைணவம்

முன்னுரை

ஆறாம் நூற்றாண்டு தொடங்கித் தமிழ்மொழியில் திருமாலையே பரம்பொருளாய்க் கொண்டு போற்றும் நூல்கள் எழத் தலைப்பட்டன; அக்காலப் பகுதியில் முதல் முதலாய் முதலாழ்வார் மூவர் பாடிய மூன்று அந்தாதிகளும் தோன்றின. பின்னர் 9ஆம் நூற்றாண்டில் நம்மாழ்வார் வரையில், நாலாயிரப் பாசுரங்கள் தோன்றி, தமிழில் வைணவ நெறியைத் தனிப்பெரு நெறியாக அமைத்தன. அந்த நூற்றாண்டில் பிறந்த நாதமுனிகள் தொடங்கி 1137இல் பரம பதித்த இராமானுசர் வரையில் வைணவ ஆசாரிய பரம்பரை பிறந்து வளர்ந்தது. இந்த நெறி ஆழ்வார் பாடல்களைப் போலத் தமிழில் கால்கொள்ளாமல், வடமொழியையே ஆதாரமாக வைத்து நூல் செய்தது; தமிழும் வடமொழியும் கலந்த மணிப்பிரவாளம் என்ற புதிய உரை நடையை, சமய வியாக்கியான நூல்களுக்காகத் தோற்றுவித்துக் கொண்டது. இந்த நிலை ஓரளவுக்கு 16ஆம் நூற்றாண்டு வரையில் தொடர்ந்து வந்தது. 9-16ஆம் நூற்றாண்டுகளுக்கு இடைப்பட்ட இந்தக் காலப் பகுதியில் நூல் எழுதிய வைணவப் பெரியோர் சிறந்த தமிழ்ப் புலமை பெற்றிருந்துங்கூட, சாத்திர வியாக்கியானம், மணிப்பிரவாள உரைநடை நூல் மட்டுமே எழுதினர். இலக்கியத்துறைக்கு வரவில்லை. இக்கருத்துக்கு விலக்காகச் சிறு தோத்திர சாத்திரச் செய்யுள் நூல்கள் பல செய்த வேதாந்த தேசிகரையும் தோத்திர நூல் செய்த மணவாள மாமுனிகளையும் மட்டும் குறிப்பிடலாம்

16ஆம் நூற்றாண்டுக்கு வரும்போதுதான் இந்த நிலைமை மாறுகிறது. முந்திய நூற்றாண்டுகளில் சைவ சமயத்தில் எழுந்த சமய இலக்கிய வெள்ளம் எல்லோரையும் சமய நெறியில்

ஈடுபடுத்தியது. அதன் பயனாக, வைணவ மக்களையும் அவ் வெள்ளம் ஈர்த்துச் சென்றபோது, வைணவ சமூகம் சற்றே புதிய உணர்வு பெற்று விழித்துக் கொண்டது. சைவ சமயத்தில் சென்ற நூற்றாண்டுகளில் எழுந்த சமயப் பேரிலக்கியங்கள் (சாத்திரங் களல்ல) கந்தபுராணம், உபதேச காண்டங்கள், திருவாதவூரடி கள் புராணம், அருணகிரிநாதரின் முருகன் புகழ்ப் பாக்கள் என்பன. இவற்றால் எழுந்த அலைகள் கரை கடந்து மோதிய போது, அம்மோதல் வைணவரையும் தாக்கிற்று. விழித்துக் கொண்டவர்களில் பெரும் புலவர் பலரும் தோன்றினார்கள். தோன்றியவர்கள், முன்னோ பின்னோ வேறு எக்காலத்திலும் இல்லாதவாறு இந்த நூற்றாண்டில் வைணவச் சார்பாகப் பெரு நூல்கள் செய்தார்கள். தெரிய வருகின்ற பெருநூல்கள் பல இங்கு ஆராய்கிறோம். முதல் இரண்டும் பாகவதம். வடமொழியில் பாகவதப் பெருநூல்கள் ஏழு என்று சொல்வார்கள். இவற்றை அருளாளதாசர் பாகவதம் முதல் பாகப்பதிப்பில் (1913)* கோவிந்தப் பிள்ளை எழுதியிருக்கக் காணலாம். அவ்வேழினுள் முதல் இரண்டும் பெரு நூல்களாய்த் தமிழில் செய்யப்பட்டுள்ளன. முதலாவதாக இதிகாச பாகவதம்: தமிழில் செவ்வைச் சூடுவார் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் செய்தார். இதன் பாடல் தொகை 4973. இரண்டாவது புராண பாகவதம்: வரதராஜ ஐயங்கார் என்னும் நெல்லிநகர் அருளாளதாசர் செய்தார். இதன் பாடல் தொகை 9147. மற்றவை மொழி பெயர்க்கப் பெறவில்லை.

இனி, இக்காலத்தில் முதன்முதலாக வைணவத்தில் தல புராணங்கள் தோன்ற ஆரம்பிக்கின்றன. பொதுவாக வைண வத்தில் தலபுராணங்கள் மிகவும் குறைவு. காரணம் திருமால் பதிகளும் குறைவல்லவா? இந்த நூற்றாண்டில் வாழ்ந்து பல இலக்கண நூல் செய்த, புலவராகிய திருக்குருகைப் பெருமாள் கவிராயர்❖ திருக்குருகைக்கு ஒரு தலபுராணம் செய்தார். அது 3030 பாடல் கொண்ட விரிவான புராணம். அதனுள் அவர் திருக்குருகையின் தலமான்மியத்தையும் நம்மாழ்வார் வரலாற்

* இவை பற்றிய செய்திகளை இதன் பின்னே ஓர் அட்டவணைப் படுத்தித் தந்திருக்கிறோம். இச் செய்திகள் கௌதம சம்மிதையின் முதல் அத்தியாயத்தில் பாகவத லக்ஷணம் என்ற தலைப்பில் தரப் பட்டுள்ளதாகச் சொல்லியுள்ளார்.

❖ இவர் வரலாற்றை இப் பதினாறாம் நூற்றாண்டு இலக்கிய வரலாறு 2, 3ஆம் பாகத்தில் விளங்கக் காணலாம்.

றையும் விரித்துக் கூறுகிறார் இதுவன்றி, கூடற்புராணம் என்ற பெயரில் செய்ய பெற்ற கூடல் அழகர் கோயில் பற்றிய தல புராணமும் இக்காலத்தே செய்யப்பட்டதென்று கருதுகிறோம்.

இவை அல்லாமல், சமய உணர்ச்சியினால் விளைந்த போட்டி உணர்வில் இக்காலத்தே ஒரு பெரு நூல் தோன்றியது; அது இரு சமய விளக்கம் என்ற பெயர் உடையது. அரிதாசர் என்ற புலவர் சைவம் வைணவம் என்ற இரண்டு சமயங்களை யும் விளக்குவதாகச் சொல்லி இப்படி ஒரு பெருநூல் செய்தார். இதன் பாடல் தொகை 2139. பெயர் இப்படி அமைந்த போதி லுங்கூட, இது வைணவ சமயத்திற்கு ஏற்றம் கற்பிக்கவென்றே எழுந்திருக்கிறது.

இவ்வத்தியாயத்தினுள் மேற்கூறியவற்றை - இருபாகவத புராணங்களையும் இரு தல புராணங்களையும் ஒரு விளக்கத் தையும் - ஆராய்வோம்.

வைணவத்தில் தல புராணங்கள் அதிகமாய்த் தோன்ற வில்லை. சைவத்தில் தலபுராணங்கள் நூற்றுக்கணக்கில் உள்ளன. இலக்கிய வரலாறு முழுமையிலும் வைணவத்தில் ஒரு பத்துத் தலபுராணந்தானும் காண்பது அருமை. பழைய தலபுராணங்கள் என்று சொல்லத்தக்கவை திருக்குருகை மான்மியம், கூடற் புராணம், திருவேங்கடத் தலபுராணம், கோலாசல புராணம் போன்ற சிலவே, தலபுராணங்கள் இல்லாத குறையை உணர்ந்து, 19-20ஆம் நூற்றாண்டுகளில் புலவர் பலர் புதிய புராணங்கள் எழுதத் தலைப்பட்டனர். புராணங்கள் இல்லாமையைச் சிந்திக் கும் போது ஒரு நிலைமை புலப்படுகிறது. அனாதி காலமாகவே தமிழ்நாட்டில் மக்களுடைய தனிப்பெருஞ் சமயமாகச் சைவம் எங்கும் பரவியிருந்தது. சிவாலயங்கள் ஆயிரக்கணக்கில் சோழர் காலத்தில் புதுப்பிக்கப்பெற்றன; புதிதாய் எழுந்தன. திருமால் வழிபாடு கூட, ஆதிமுதல் சைவத்தில் ஓர் அங்கமாகவே இருந்து வந்திருக்கிறது. இராமானுசருக்குப் பின் வைணவத்தில் புதிய எழுச்சி தோன்றி, திருமால் வழிபாடு வளர்ந்து, திருமால் சமய மும் தனிச் சமயமாக ஆயிற்று. தனிக்கோயில்களும் எழுந்தன. எனினும், இவை நூற்றுக்கணக்கில்தான் இருந்து வருகின்றன. இக்காலத்தில் வைணவர் தங்கள் கூட்டத்தைப் பெருக்குவதிலும், ஆலயங்களை அமைப்பதிலும் வழிபாட்டை நெறிப்படுத்து வதிலும், சாத்திரங்களை விளக்குவதிலும் தங்கள் கவனத்தைச்

செலுத்தினார்கள். தலங்களின் பெருமையை எண்ணாமல், நாலாயிரத்தின் பெருமையையும் சாத்திரங்கள் வியாக்கியானங் களின் பெருமையையுமே பேணி வந்தார்கள்.

இந்த நிலையில் கந்தபுராணம் போன்ற பேரிதிகாசங்கள் சைவ மரபில் தோன்றவும் கண்டார்கள். கந்த புராணம் தோன்றிய நிலையையும் நாம் யூகித்தல் கூடும். கந்த புராணம் பாடிய கச்சியப்ப சிவாசாரியார் தமது பக்திப் பெருக்காலும் அன்பர் வேண்டுகோளாலும் முருகன் கதையை இப் பெருங் காப்பியமாகப் பாடினார் என்பது வரலாறு. உண்மை. ஆனால் இதன் எழுச்சிக்கும் ஒரு காரணம் உண்டு. பேரிதிகாசங்கள் இரண்டு - இராமாயணமும் மகாபாரதமும். இவை தமிழில் கம்பராமாயணமாகவும் வில்லிபாரதமாகவும் உருக்கொண்டன. இரண்டிலும் பேசப்படுபவை திருமாலின் அவதாரங்களான இராமன் கதையும் கண்ணன் கதையும். ஆனால் கம்பரும் வில்லியும் தங்கள் நூல்களைச் சமய நூல்களாகப் பாடாமல், இதிகாசங்களாகப் பெருங்காவியங்களாகவே பாடினார்கள் என்பது அவர்களுக்குரிய சிறப்பு. இந்த நூல்களையுணர்ந்த சைவ மக்களிடையே, சைவ சமயத்திலும் இப்படியொரு பெருங் காவியம் வேண்டும் என்ற உணர்வு உதித்தது. இவ்வுணர்வின் வடிவமே கந்த புராணம். திருமால் அவதாரம் போல முருகன் அவதாரத்தை இது போற்றிப் பாடுகிறது. பாடியவர் சிவாசாரியர் ஆனமையால், அவர் இதை வெறும் காவியமாகப் பாடாமல், சமய காவியமாகப் பாடி வைத்தார். பாடியவர் கௌமாரம் என்பது போன்ற பெயரைத் தம் நூலுக்கு வைக்காமல், புராணம் என்ற பெயர் வைத்தார். (வில்லியும் கச்சியப்பரும் ஒருகால் சமகாலம்).

இது நிகழ்ந்தது சுமார் 1400க்குச் சற்று முன்னாக இருக் கலாம். நாளடைவில், வைணவத்திலும் இப்படி புராணம் வேண்டு மென்ற கருத்து உருக்கொண்டது. அதன் விளைவாக எழுந் தனவே, நூறாண்டு கழித்து, 16ஆம் நூற்றாண்டின் முற்பகுதி யில் தோன்றிய இரு பாகவத புராணங்களும். பாடினோர் இரு வரும், தாங்கள் சொல்லாவிட்டாலும் கூட, கந்தபுராணம் ஒத்த பெருங்காவியமாகப் பாட வேண்டுமென்று எண்ணியே பாடியிருக்கிறார்கள். சைவ வைணவப் போட்டியைக் கதை யாகச் சொல்லி, வைணவத்துக்கு ஏற்றம் சொல்லும் இரு சமய விளக்கம் தோன்றவும் இவ்வுணர்வே காரணமாயிருந்தது.

இனித் தலபுராணம் என்று பேசும்போது ஒரு நிலையை மனத்தில் கொள்ளவேண்டும். 12 நூற்றாண்டின் பின்னர், சமய அனுட்டானமானது தமிழ்நாட்டில் மூன்று பிரிவாக இருந்தது என்பதை அறியலாம்.

ஒரு முக்கிய பிரிவு, அனாதிகாலமாக வந்த சைவ சமயம்; இது சிவாலய வழிபாடு, திருமுறை ஓதுதல் என்ற நெறியில் சென்றது.

இரண்டாவது வைணவ சமயம். இது திருமால் ஆலய வழிபாடு, நாலாயிரம் ஓதுதல், பூர்வாசாரியர் வியாக்கியானங் களை ஓதுதல் என்ற நெறியில் சென்றது. இச்சமயத்தார் அனை வரும் ஸ்ரீவைஷ்ணவர்: பிராமணர்கள்; சாத்தின முதலிகள்; இவர் களிடையே சாத்தாத முதலிகளான பிராமணரல்லாதாருக்கு எந்த இடமும் இல்லை.

மூன்றாவது நெறி, சங்கர அத்வைத நெறி. ஒன்பதாம் நூற் றாண்டில் சங்கரர் தோன்றி அத்வைத நிருபணம் செய்த பின் னர், முன் சிவேதியராயிருந்த தமிழ்ப் பிராமணர் அனைவரும், ஸ்மார்த்த அத்வைதிகளாயினர். இவர்களுக்கு ஆலய வழிபாடு முக்கியமல்ல. ஆகவே கோயில் வழிபாடு என்று பேசும்போது, பொதுவாக, பிராமணரல்லாத மக்கள், சைவர்கள், கோயில் ஈடுபாடு கொண்டவர்களாய், தலபுராணம் பாடினார்கள். ஸ்மார்த்தப் பிராமணர்கள் சங்கர பாஷ்யங்களையே பற்றிக் கொண்டவர்களாய், கோயில் நெறியினின்றும் விலகி நின்றார் கள். ஸ்ரீவைஷ்ணவர்களும் தங்கள் வடமொழி நூல்களையே பற்றிக்கொண்டு, நாலாயிரம் தவிர வேறு தமிழ்ச் சம்பந்தம் இல்லாதவர்களாய் வாழ்ந்தார்கள்.

ஆகவே தலபுராணம் செய்யும் சூழ்நிலை வந்தபோது, சைவர் பெருவாரியாக நூல் செய்தார்கள், பிராமணர் செய்ய வில்லை. ஆகவே சைவத் தல புராணங்கள் அதிகமாய்த் தோன் றின. பிராமணரே ஆதிக்கம் வகித்த வைணவத்தில் தல புரா ணங்கள் தோன்றவில்லை; பிராமணர் செய்யமாட்டார்கள், செய்ய வல்ல பிராமணரல்லாத வைணவர் மிகவும் குறைவு. செவ்வைச் சூடுவார் பிராமணர்; பாகவதம் இதிகாசமாதலால் செய்தார்.

திருமால் பதிகளும் குறைவு என்பதால் தல புராணங்களும் குறைவாகத்தானே தோன்றியிருக்க முடியும்.

| வைணவ புராணங்கள் | | | | | |
|---|---|---|---|---|---|
| எண் | புராண வகை | புராணம் | ஆசிரியர் | பாடல் | காலம் கி.பி. |
| 1 | இதிகாசம் | பாகவதம் | செவ்வைச் சூடுவார் | 4973 | 1500 - 1525 |
| 2 | இதிகாசம் | பாகவதம் | அருளாள தாசர் | 9147 | 1543 |
| 3 | தல புராணம் | திருக் குருகை மான்மியம் | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | 3030 | 1548 |
| 4 | தல புராணம் | கூடற் புராணம் | தெரிய வில்லை | 757 | 1575 - 1600 |
| 5 | சமய வாதம் | இருசமய விளக்கம் | அரிதாசர் | 2139 | 1500 - 1525 |

## செவ்வைச் சூடுவார்

தமிழிலே செய்யுள் வடிவில் இரண்டு பாகவத புராணங்கள் உள்ளன. ஒன்று ஸ்ரீ பாகவத புராணம் என்றும் இதிகாச பாக வதம் என்றும் வழங்குவது, செவ்வைச் சூடுவார் செய்தது. மற்றது மகாபாகவதம் அல்லது புராண பாகவதம் என்று சொல்லப் பெறுவது, அருளாள தாசர் செய்தது. இரண்டும் 16ஆம் நூற் றாண்டிலேயே சற்றுமுன் பின்னாகச் செய்யப்பட்டன என்று தெரிகிறது. இவ்விரண்டினுள் முந்தியதாகிய இதிகாச பாகவதத் தையே இக்கட்டுரையுள் ஆராய்கிறோம்.

### ஆசிரியர்

இவர் வேப்பற்றூரில் சிறந்து விளங்கிய புலவர் பரம்பரை யில் வந்தவர். வேப்பற்றூர்ப் புலவர் அனைவரின் பெயரையும் தொகுத்துச் சொல்லுகின்ற பாடல், இவர் பெயரைச் சுட்டி இவர் 'பாகவத பௌராணம்' ஓதினார் என்று குறிப்பிடுகிறது:

திருமருவு பஞ்சலக் கணவேலை பொங்கிச்
    செழிக்கும் இருநிதி கொழிக்கும்
தென் நிம்பை நகரமதில் வாழும் அந்தணரில்
    சிறந்த செவ்வைச் சூடுவார்

சுருதிபுகழ் பாகவத பௌராணம் ஓதினர்;
துளங்கும் வாசிட்ட மதனைச்
சொல்லினர் ஆளவந்தார் மாதவபட்டர்;
சொன்ன திருவிளையாடலும்
........... ........... ........... ........... ...........
........... ........... ........... ........... ...........
........... ........... ........... ........... ...........*
புகழ் சவுந்திரிய லகரி
பெருமைமிகு கவிராச பண்டிதர் புகன்றனர்;
ப்ரதாப மிகு திருநெல்வேலிப்
பெருமாளை யன் சொனான் நெல்லையின் கோவைப்
பிரபந்த வகை பெருகவே

*என்ற பாடல் காண்க. எனினும், 1881இல் பாகவத புராணம் அச்சிட்ட பெரும் வைணவ பண்டிதரான கோமளவல்லிபுரம் இராச கோபால பிள்ளை என்பவர் இப்புராணத்தைத் திருக் குடந்தை ஆரியப்பப் புலவர் பாடினார் என்று குறிப்பிட்டார். இவர் கூற்றுக்கு ஆதாரமாயுள்ளது, ஒரு பழம் பாடலுக்கு இவர் கொண்ட பாடம்.*

கம்பனென்றும் கும்பனென்றும் காளி ஒட்டக் கூத்தனென்றும்
கும்பமுனி என்றும் பேர் கொள்வரோ – அம்புவியில்
மன்னா வலர்புடைசூழ் வாழ்குடந்தை யாரியப்பன்
அந்நாளி லேயிருந்தக் கால்.

*ஆனால் இப்பாடலின் உண்மை வடிவமும் அது குறிப்பிட வந்த பொருளும் வேறு என்பதை வேறிடத்தில் விரிவாய்க் குறிப்பிட் டிருக்கிறோம். வாயற்பதியில் வாழ்ந்த அனதாரியப்பன் செய்த சுந்தர பாண்டியம் என்ற புராணத்தைச் சிறப்பிக்க வந்ததே இப் பாடல். மூன்றாம் அடியில் சீர்கள் 'மன்னாவலர் பரவும் வாயல் அனதாரியப்பன்' என்றே காணப்படுவன. இதை யாரோ, தெரி யாமல் ஆரியப்பன் என்று திரித்து, வேறு ஒரு புதுப் புலவராக்கி விட்டனர். ஆரியப்பன் என்ற பெயர் தமிழ் இலக்கிய வரலாற்றில் எங்கும் வழங்கியதேயில்லை.*

*ஆரியப்பப் புலவர் பெயர் எப்படி பாகவதத்தில் நுழைந்தது என்பதை மட்டுமல்லாமல், சென்ற நூற்றாண்டின் பிற்பாதியில் கல்வி வல்லார் எவ்வளவு பொறுப்போடு அச்சிட்டார்கள்*

* *இப் பகுதி கிடைக்கவில்லை.*

என்பதையும் ஐயரவர்கள் 'என் சரித்திரம்' என்ற தம் நூலில் எழுதியிருக்கும் ஒரு குறிப்பிலிருந்து நன்கறியலாம்.

"பாகவதம் முழுவதையும் இராசகோபாலபிள்ளை அச்சிட்டிருந்தார். அதில் சில பகுதிகள் ஒரு வருஷம் பி.ஏ. பரீட்சைக்குப் பாடமாக இருந்தன. மீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்களிடம் நான் படிக்க வருவதற்கு முன்பிருந்தே பாகவதத்தில் எனக்குப் பழக்கம் இருந்தது. பாகவத ஏட்டுச் சுவடிகள் பல வற்றை நான் பார்த்திருக்கிறேன். இராசகோபால பிள்ளையின் பதிப்பில் நூலாசிரியரின் பெயர் ஆரியப் புலவர் என்று இருந்தது. 'சிந்தகத்துக் கீழமர்ந்த' என்ற சடகோபர் வணக்கச் செய்யு ளொன்றும் இருந்தது. இவ்விரண்டையும் ஏட்டுப் பிரதிகளில் நான் கண்டதில்லை. அதனால் இராசகோபாலபிள்ளையிடம், 'நான் பார்த்த பிரதிகளிலெல்லாம் ஆசிரியர் பெயரே காணப் படவில்லை. இந்தச் செய்யுளும் காணப்படவில்லையே. இவற்றை நீங்கள் எங்கே கண்டுபிடித்தீர்கள்?'' என்று கேட்டேன். அவர், 'அந்நூலை நான் பதிப்பிக்கவில்லை. இப்பாகம் மாத்திரம் பார்த்ததுண்டு. என் பெய்ரைப் போட்டு யாரோ அச்சிட்டு விட்டார்கள். ஆதலால் இந்த விஷயத்துக்கு நான் பொறுப் பாளியல்ல' என்று சொல்லவே, நான் வியந்தேன். பிற்காலத்தில் பாகவதத்தின் ஆசிரியர் வேம்பற்றூர்ப் புலவர்களுள் ஒருவரான செவ்வைச் சூடுவாரென்பதும், 'சிந்தகத்து' என்னும் முதலை யுடைய செய்யுள் அச்சிட்டவர்களால் சேர்க்கப்பட்ட தென்பதும் எனக்குத் தெரிய வந்தன.''

மேலும், பாகவத ஏட்டுப் பிரதிகளில் காணப்படுகின்ற ஒரு பாயிரப் பாடல் ஆசிரியர் பெயரைத் தெளிவாகக் கூறுகிறது:

> கதிக்குமறு பிறப்பொழித்துக் கதிகொடுக்கும் பாகவதக்
> கதையை முன்னம்
> மதிக்குமுயர் வடமொழியாற் புனைந்தருளவ் வியாதமுனி
> வரனே மீள
> உதிக்கும் நீம்பை மாதவபண்டிதச்செவ்வைச் சூடியென
> உலகு போற்ற
> விதிக்குமறை யவர்குலத்தில் தோன்றியருந் தமிழாலும்
> விளம்பி னானே.

இப்பாடல் நூலையும் ஆசிரியர் பெயரையும் குறிப்பிடுவது காணத்தக்கது. இவருக்கு மாதவ பண்டிதர் என்றும் பெயர் உண்டென்று சொல்வர் (மாதவராயர்); அல்லது பெருந்தவ

முடைய பண்டிதராயிருந்தார் என்று கொள்ள இடமுண்டு. வடமொழியில் பாகவதம் சொன்ன வியாசரே மீண்டும் செவ்வைச் சூடுவாரெனப் பிறந்து தமிழால் இப்பாகவதம் சொன்னார் என்று இப்பாடல் இவரைப் புகழ்ந்துரைக்கிறது.* நிம்பை - வேம்பு, வேம்பற்றூர். இவர் அந்தண மரபினர்.

## இதிகாச பாகவதம்

பகவானுடைய வரலாற்றுக் கதைகளைச் சொல்லுவது பாகவதம். பகவான் என்றால் வைணவத்தில் சிறப்பாய்க் கண்ணபிரானைக் குறிக்கும். 'வியாசர் செய்ததாய் வழங்கும் வடமொழிப் பதினெண் புராணங்களில் திருமால் புகழ் கூறும் புராணங்கள் பாகவதம், விஷ்ணு புராணம், நாரதீயம், காருடம் என்னும் நான்கு. இவற்றுள் முதலாவது பாகவதம். அன்றி, தேவி யின் புகழைக் கூறும் தேவி பாகவதம் என்றொரு பெருநூலும் உண்டு: அது உபபுராணமாகும். வடமொழியில் கண்ணபிரான் கதைகளைக் கூறும் பாகவத புராணம் ஏழு - இதிகாசம், புராணம், சங்கிதை, உபசங்கிதை, விஷ்ணு ரகசியம், விஷ்ணு யாமளம், கௌதம சங்கிதை என்றும், அவற்றுள் முதல் இரண்டுமே தமி ழில் செய்யப்பட்டன என்றும் ஆன்றோர் சொல்வர். இதிகாச பாகவதம் வடமொழியில் 18,000 சுலோகமாக வியாசரால் செய்யப்பட்டது. அதில் சுருதி கீதை முதலான நான்கு கீதை களும், திருமால் அவதாரங்களில் நான்கு அவதாரங்களும் சொல்லப்பட்டுள்ளன. அதைச் சொன்னவர் சுகமுனிவர், கேட் டவர் பரீட்சித்து மன்னன். இந்தப் பாகவதம் பன்னிரண்டு ஸ்கந்தமாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இந்தப் பாகவதம் படித்த லால் பயன் ஞானம் விளைதல் என்று சொல்லப்பட்டுள்ளது.

தமிழில் செவ்வைச் சூடுவார் செய்த பாகவத புராணம் இந்த இதிகாச பாகவதத்தின் மொழி பெயர்ப்பாகும். இதுவும் 12 கந்த (ஸ்கந்த)ப் பாகுபாட்டைக் கொண்டது. பாயிரம், பின் மொத்த அத்தியாயங்கள் 155, பாடல் தொகை 4973. இந்நூல் பாகவத புராணம், இதிகாச பாகவதம், விண்டு பாகவதம் என்ற பெயர்களால் வழங்கும்.

---

* இதே போல வடமொழியில் கீதை சொன்ன கண்ணனே மீண்டும் பட்டராய்ப் பிறந்து தமிழில் பரமார்த்த தரிசனம் சொன்னான் என்ற கருத்து தமிழ்ப் பகவத்கீதையின் சிறப்புப் பாயிரத்தில் காணப்படுகிறது - எமது தமிழ் இலக்கிய வரலாறு 13ஆம் நூற் றாண்டில் காண்க.

*நூல் முகப்பிலுள்ள கடவுள் வாழ்த்துப் பகுதி ஐந்தே பாடல் கொண்டது. முதலாவதான திருமால் வணக்கம் எண்ணிடாமல் தனிக்காப்புச் செய்யுளாகவே ஏட்டுப் பிரதியில் உள்ளது. பின்னர் சுக முனிவர் வணக்கம், நூற்பெருமை, கலைமகள் வணக்கம், அவையடக்கம். இந்நூல் முழுவதும் கலைமகள் என் நாவிலிருந்து பாடிய காரணத்தால், அத்தேவியைப் போற்றி நான் ஒரு துதி சொன்னாலும், அது அவளே தன்னைப் பாடிக் கொண்டதாய் முடியுமென்கிறார்:*

**பூம டந்தை புணர்ந்தவன் மாக்கதை**
**நாம டந்தை நவின்றன ளாகலான்,**
**காம டந்தை யென் றோர்கவி யான்சொலின்**
**பாம டந்தைதற் பாடிய தாகுமே.**

*நூற்பாகுபாட்டைத் தொகுத்துக் கூறும் பகுதியாகிய பதிகம் என்பது அடுத்து இருத்தற்குரியது. இது இந்நூலின் இறுதியில் சொல்லப்பட்டுள்ளது. இதை இவர் பாயிரம் உரைத்தது என்று 33 பாடலுடைய தனி அத்தியாயமாக ஆக்கி, அதன் பின் புராண அளவை உரைத்த அத்தியாயம் என்ற தலைப்பில் புராணங்கள் 18 என்றும், அவற்றின் கிரந்த சங்கியை இன்னது என்றும் கூறி,*

**இந்த நூலின் இசைத்ததென் காரணம் என்னில்**
**அந்தமாதி மற்று இடையினும் ஞானமாம், அதனால்**
**சிந்தைசேரும் வெந்துயர் தவிர்த்திட இது தெரித்தான்.**

*என்று சொல்வி, புராண படனப் புண்ணியப் பயன் சொல்லி முடிக்கிறார்.*

*இக்காலத்தில் எழுந்தபெரும் புராணங்களில் உள்ளது போல, இவரும் கால அளவு, உலகளவு (நாவலந் தீவு, ஏழு தீவு, சூரிய மண்டலம், மேலுலகு, கீழுலகு, நரகம்), வருணாச்சிரமம் முதலான பொருள்களைப் பெருக்கிக் கூறுகிறார். பகவானுடைய வரலாறுகள் நிகழ்ந்த இடங்கள் பலவாதலால் நாட்டுப் படலம் நகரப் படலம் என்ற பகுதிகளைத் தனியே விரிக்கவில்லை. வழக்கிழந்து போன பாக்களான காப்பியத் துறையும் வஞ்சித் துறை முதலாயினவும் இதனுள் பயில்கின்றன. பாகவத புராணம் வியாச முனிவரால் அவருடைய புதல்வரான சுகமுனிவருக்குச் சொல்லப்பட்டது. இவர் பரீட்சித்து மன்னனுக்குச் சொன்னார்; இதைப் பிற்காலத்தில் சூத முனிவர் நைமிசாரணிய முனிவர் களுக்குச் சொன்னார் என்பது வரலாறு.*

## நூற் பொருள்

### முதல் ஸ்கந்தம்

*8 அத்தியாயம். மாயவன் அம்சாவதாரம் உரைத்தது என்ற முதல் அத்தியாயத்தில் 22 அவதாரங்களைக் கூறுகிறார். கவுமாரம், ஏனமாய் இருநிலமெடுத்தான், மறை சொல் நாரதனாய்ப் பாஞ்ச ராத்திரம் வகுத்தான், நர நாராயணராய்த் தவம் விரித்தான், கபிலனாய்த் தவம் உரைத்தான், தத்தாதிரையனாய் அவர்க்கன் பிரகலாதனுக்குத் தத்துவம் உரைத்தான், மகப்புருடன், விடபன், மீனுரு, கமடம், தன்வந்திரி, மோகினி, நரமடங்கல், வாமனன், பரசுராமன், வியாசன், தசரத ராமன், பால் வண்ண இராமன், கண்ணன், புத்தன், துரகமாய் எழுவான், புராண வரலாறு, தரும புத்திரன் அரசு பெறுதல், கண்ணன் துவாரகை அடைதல்; கண்ணன் துவரையடைந்த அத்தியாயத்தில் கண்ணனைக் கண்ட ஆயர்மாதர் நிலையை நாற்பதுக்கு மேற்பட்ட பாடல்களால் விரிக்கிறார். 'ஆடவர் பெண்மையை அவாவும் தோள்' என்பன போன்ற கம்பராமாயணக் கருத்துக்கள் அதிகமாய்க் காணப் படும். வஞ்சித்துறை, வஞ்சி விருத்தம், கலி விருத்தம் போன்ற சீர் குறைந்த பாடல்கள். பரீட்சித்து பிறத்தல், தருமன் முதலானோர் வீடு பேறு. பரீட்சித்து ஆட்சி, சாபம் ஏற்றல். இவன் சிறப்பை ஆசிரியர் உணர்த்தும் முறை நோக்கத்தக்கது.*

தள்ளரும் கொடையினால் சார்ந்த அஞ்சிறைப்
புள்ளினுக் குயர் துலைப் புக்க வேந்துஇவன்;
எள்ளலில் அன்பினால் எறிந்த தூணெழும்
வள்ளுகிர் மடங்கலை வழுத்து தோன்றலே.

மேதகு தயரத ராமன் மெய்ம்மையால்;
தீதகல் விசயன் வெஞ்சிலை யினால் இவன்;
ஏதமில் பொறுமையால் இனிய பார்மகள்;
ஒதிய தாய்உல குயிர் புரத்தலான்.

*(வேந்து - சிபி. தோன்றல் - பிரகலாதன். விசயன் - அருச்சுனன். பார்மகள் - பூமாதேவி).*

### இரண்டாம் கந்தம்

*3 அத்தியாயம், சுகர் தத்துவத் தோற்றம் சொல்கிறார். மாய வனிடத்து ஈடுபடாத கண், மூக்கு, கைகள், நா, தலை, உளம், கால், செவி என்பன பயனற்றன என்கிறார். முதற் பாடலை இங்கு தருகிறோம்.*

இறந்தொழிந் ததுவெங்கூற்றம்என்று ளத்துணர்ந்தார் போலும்
அறந்தலை மணந்த செங்கோல் ஐவர்பார் ஏழும் காப்ப
நறுந்துழாய்ப் பகவன் தூது நடந்ததாட் கமலப் போது
மறந்தனர் மாக்கள் வாளா வருபகல் கழிக்கின் றாரே.

*கையும் நாவும்.*

இடிக்குரல் யானை வெண்கோடு
  இறுத்தவன் இணைப்பொற் றாளின்
*கடித்துணர் புனையாக் கைகள்*
  கையறு கைக ளாமால்;
பொடித்தசெங் கதிர்போற் காந்தி
  பொழிமணிச் சூட்ட ராவின்
நடித்தவன் நாமம் பாடா
  நா வழங்காத நாவே.

*மூன்றாம் கந்தம்*

*9 அத்தியாயம். விதுரனுக்கு உத்தவர் கண்ணன் சரிதம் கூறுதல்; மைத்திரேயர் விதுரனுக்குத் தத்துவம் உரைத்தல், பிரமன் தோற்றம்; கால அளவு, சனகாதியர் தோற்றம், வராகா வதாரம், தேவர் தோற்றம், கபிலர் பிறப்பு, கபிலன் தத்துவம் உரைத்தது (சாங்கிய நூல்); சுக முனி தத்துவமுரைத்தது (2:3), விதுரற்குத் தத்துவமுரைத்தது (3:2) போன்ற அத்தியாயங்கள் தத்துவங்களின் தோற்றம் இயல்பு முதலியன கூறும் சமயப் பகுதிகள்.*

*நான்காம் கந்தம்*

*6 அத்தியாயம். மரீசி முதலியோர் படைப்பு, தக்கயாக சங்காரம்; தக்கயாக சங்காரத்தில் போர் வருணனையைக் காண லாம். இங்கு சிவபிரான் சிறப்புக்கள் மிகவும் அழகாகவே சுவை படக் கூறுகிறார். அதனுள், முருகன் அவதாரமும், அழகாகச் சொல்கிறார். துருவன், பிருது மன்னன் முதலியோர். துருவன் வரலாற்றில் இரண்டு பாடல்கள்: திருமாலைக் காண்கிறான்:*

மண்டலம் நிறைந்த திங்கள் வதனமும் கமலக் கண்ணும்
குண்டலஞ் சுடரும் காதும் குறுநகைப் பவள வாயும்
தண்துழாய் அலங்கல் மார்பும் தடக்கையோர் நான்கு மாகக்
கண்டனன் மறையுங் காணாக் கரியவன் உருவம் அம்மா.

*கண்ட துருவன் செயல் 855: கண்டு துதிக்கிறான்:*

வானே, வளியே, வயங்கெரியே,
　　வனமே, மண்ணே, இவ்வைந்தின்
ஊனே, உயிரே, உயிர்க்குயிரே,
　　உன்னும் உறுவர் உளத்தூறும்
தேனே, நங்கள் பெருவாழ்வே,
　　சிவனே, அயனே, இருவருக்கும்
கோனே, நின்னைக் குணமில்லேன்
　　குறித்தென் சொல்லிப் பழிச்சுகோ?

## ஐந்தாம் கந்தம்

*8 அத்தியாயம். பிரிய விரதன் மரபு, பரதன் வரலாறு, நாவலந் தீவு. கங்கையில் பிதிர்க்கடன் செய்வதால் வரும் நற்பயனைக் கூறும் பாடல் (1233):*

புலங்கொள் சங்கம்வை கங்கதம் பொருந்திய நாகம்
நலங்கொ ணாரத முதலிய நல்வரைக் குலங்கள்
துலங்கு மேருவின் சுற்றிலுங் கமழுமால், துகள்தீர்ந்து
இலங்கு நற்பொகுட் டருகுசூழ் கேசர மெனவே.

*பிற தீவுகள், கடல், சூரிய மண்டலம், மேலுலகு கீழுலகு, நரக இயல்புகள்.*

## ஆறாம் கந்தம்

*9 அத்தியாயம் அசாமிளன், தக்கன், விச்சுவரூபன் வரலாறு கள். அசாமிளன் கதையில் நாராயண என்ற நாலெழுத்தின் பெருமையைப் பல பாடல்கள் பேசுகின்றன.*

பத்திசெய் தாயினும் பகைசெய் தாயினும்
வித்தக னொருவன்பேர் விளம்பற் காயினும்
ஒத்துநா ராயணா வெனஉ ரைப்பரேல்
கொத்துவெம் பாதகங் குலைந்து நீங்குமே.

தும்மினும் இருமினும் துயர மிக்குளம்
விம்மினும் வீழினும் வினைசெய் போதிலும்
அம்மவிந் நாலெழுத் தறைவரேல், அவர்
செம்மலர் மால்பதம் சேர்தல் திண்ணமே.

*இந்திரன், விச்சுவரூபன் உபதேசித்த நாராயண கவசம் தாங்கி யமையால் (செபித்தமையால்) அவுணரோடு செய்த போரில் வெற்றி பெற்றான். நாராயண கவசம் ஒரு தனி அத்தியாயம் - கவசம்*

*மட்டும் 26 பாடல். நாராயணனுடைய வடிவங்கள் உறுப்புக்கள் ஒவ்வொன்றும் காக்க என்று சொல்வது; பின்வருவன எடுத்துக் காட்டான பாடல்கள்:*

புகழ்பெறு மீனுரு வெடுத்த புங்கவன்
அகமகிழ் தந்துநீ ரடைந்து காக்க; இச்
சகமிசை வாமனன் சார்ந்து காக்க: வேர்
மிகுநிலம் அளந்தமால் விகும்பிற் காக்கவே.

பன்னிய வரைமுதற் பல அரண்களில்
துன்னு வெம் சமத்திடைத் தோன்ற லுற்றுமுன்
மன்னுவெம் கனகனை மாய்த்த மைந்துடை
நன்னலம் சேர்நர மடங்கல் காக்கவே.

*பின்னர் இந்திரன் விருத்திரன் முதலியோரை அழித்தல், அந்தப் பிரமகத்தியைப் போக்கியது, சித்திரகேது, மருத்துக்கள் ஆகிய வரலாறுகள்.*

**ஏழாம் கந்தம்**

*4 அத்தியாயம். சிசுபாலன் வீடுபேறு, இரணிய வதம்; இரணிய வதத்தின் பின் பிரகலாதன் துதி 10 பாடல்:*

விழைவற வெறிந்தார் நாடும் விழுப்பெருஞ் சுடரே, தூய
பழமறைக் கொழுந்தே, பச்சைப் பசும்புயல் வண்ணா, நின்னை
வழிபடு மன்பே யன்றி வரமெவன் பெறுவ தென்னாத்
தொழுதனன் வழுத்த லுற்றான், தூயபே ரறிஞ னம்மா.

பூவுறை மணம்போ லெல்லாப் பொருளினு முறைவாய், நின் பொன்
சேவடி தொழுது போற்றார் தேவரே யேனும் நிசர்
ஆவர்; பொல் லாத நீச ராயினும் வணங்கி நின்சீர்
நாவினால் வழுத்தில் தேவ நாயகர் நாத ராவார்.

*வருணாசிரமம், இல்லற இயல்பு.*

**எட்டாம் கந்தம்**

*8 அத்தியாயம். மனு, கசேந்திரன்; கசேந்திர அத்தியாயத்தில் யமகம் திரிபு நிரம்ப அமைத்திருக்கிறார். பாற்கடல் கடைந்தது, தேவாசுரர் போர், மோகினி யுருக்காட்டியது, வைவச்சுதன், வாமனாவதாரம்: வாமனாவதாரப் பாடல் யாப்பு, கம்பராமாயணத்தில் இதே பகுதியை நினைவூட்டும்; மச்சாவதாரம் ஆகிய வரலாறுகள். இவற்றுள் மோகினியைப் பற்றிக் கூறியவிடத்து, கனலுமிழ் கணிச்சியான் கூறியபடி புருடோத்தமன் மோகினி*

*வடிவம் எடுப்பதை 12 பாடல்களால் விரிக்கிறார். மோகினியைக் கண்டு பிஞ்ஞகன் மயங்குகிறான் என்பதையும் சுவைபடக் காட்டுகிறார்; 'மாயோன் பிழிந்து கொள்வனைய சொல்லிப் பெண்ணுருவெடுத்து நின்றான்':*

பிறையும் வில்லுமொத் திலகிய திருநுதற் பேதை
அறையும் வண்டிமிர் அணிமலர்த் தடஞ்சினை தோறும்
மறையு மாற்றரு மாதர்மீ தூரமுக் கண்ணன்,
இறையும் நாணிலன்; பின்செலும் இருங்களி றேய்ப்ப.

நெறித்து நெய்கனி குழலுமை நகுவது நினையான்,
பொறுத்த கங்கையாள் புன்னகை கோட்டலுங் கருதான்,
அறற்க ருங்குழல் பற்றினன் அங்கையாற் றழுவ,
எறிக்குஞ் சேயிழை மின்னெனக் கைப்படா திலகும்.

*இதிலிருந்து கவிஞர் கூற்று:*

கொன்றை சூடும் குழகனும் இவ்வகை
ஒன்று காமம் உழந்தனன் என்னின், யார்
வென்றி வேல்விழி யார்மயல் வெல்பவர்?
என்று வேந்துக் கிருந்தவன் ஓதினான்.

### ஒன்பதாம் கந்தம்

*18 அத்தியாயம். சிவன், சையாதி, அம்பரீடன், இக்குவாகு, அரிச்சந்திரன், சகரன், பகீரதன், கன்மாட பாதன்; பின் இராமா வதாரமும் இராமன் தன்னுடைய அடிச் சோதிக்கெழுந்தருளிய வரலாறும், இராமாயணம் முழுமையும் 137 பாடல், உத்தர காண்டம் 16 பாடல். நூல் கண்ணன் வரலாற்றை விரிப்ப தாகவே, பிறவற்றின் விரிவுக்கு இங்கு இடமில்லை. பின்னர் நிமி, சந்திரன், பரசுராம விசுவாமித்திரர், யயாதி, பூரு, சந்தனு, அனுமரபு, எது மரபு.*

### பத்தாம் கந்தம்

*54 அத்தியாயம். பாகவதத்திலேயே மிகவும் நீண்ட பகுதி இதுவே: 1682 பாடல்கள் இப்பகுதி கண்ணன் திருவவதாரம் முதல், கண்ணனுடைய இறுதிக் காலத்தில் யாதவர்கள் தங்கள் முடிவுக்குக் காரணமான இருப்புலக்கை பெறுகிற வரையில் உள்ள கிருஷ்ணாவதாரக் கதையை விரிவாகச் சொல்லுகிறது. கண்ணனுடைய பாலலீலைகள் யாவும் தனித்தனி அத்தியாய மாக இங்கு விரித்துச் சொல்லப்படுகின்றன. நூலுக்கு அமைந்த*

*பாகவதம் என்ற பெயரே இந்த ஸ்கந்தத்தை வைத்து வந்தது. தேவகி கருவில் திருமால் தங்குகிறான்: தேவகி திருவயிறு அந்த ஆலிளந்தளிர்போலும் என்று அடைந்தனன். பூதனை பாலைக் குடிக்க அவள் வீடு பெறுகிறாள். சகடம் உதைக்கிறான். மண் அருந்துகிறான். வந்து பார்க்க, யசோதை என்ன காண்கிறாள்?*

'நங்காய்மண் அருந்தினன் நின் மதலை' என,
'இல்லை' என நவின்றா னாகக்
கொங்கார்ந்த செழுங்கமலக் கோற்றொடிகை
பற்றினள், வாய் காட்டு கென்ன,
அங்காந்த மணிவண்ணன் அம்பவளத்
துவர்வாயி னழகு காலும்
செங்காந்தள் முகிழ்விரலந் தீங்கிளவி
உலகனைத்துந் தெரியக் கண்டாள்.

விண்கண்டாள், விண் வளைக்கும் வெங்கதிருந்
தண்சுடரும் விளங்கக் கண்டாள்,
மண்கண்டாள், மண்வளைத்த மாகடலும்
மேருயர்மால் வரையுங் கண்டாள்,
தண்கொண்ட வெண்கோட்டுத் தளவ நெடு
வனங்கண்டாள், தனையுங் கண்டாள் –
பண்கொண்ட வண்டரற்றும் பசுந்துளவோன்
இவனெனவே பரவி னாளால்.

முருகொழுகு முகிழ்விரியும் மொய்துளவோன்
மாயையினான் மறைத்த லோடும்
பருகுவனள் போனோக்கிப் பழுத்தொழுகும்
அனபினளாய்ப் பராவி, அன்னை
பொருகளிறு வருக, வளர் போரேறு
வருக, எழிற் பூவை வண்ண
வருகவெனத் துகிரில்விளை மணிமுத்தங்
கொண்டனள், உண் மகிழ்வு பூத்தாள்.

*மருதிடைத் தவழ்கிறான். மலரவன் கவர்ந்த சிறார்களையும் கன்றுகளையும் மீட்கிறான். காலிங்கன் மீது ஆடுகிறான். வேய்ங்குழல் இசைக்கிறான். கோவியர் துகில் கவர்கிறான், கோவர்த்தன கிரி எடுக்கிறான். கோவியரை மணக்கிறான். ஆசிரிய ரான சாந்தீபினி முனிவரின் மைந்தரை மீட்டுத் தருகிறான். சத் தவனைக் கோகுலத்திலும் அக்குரூரனை அத்தினாபுரத்திலும்*

விடுத்து, சராசந்தனை வதைக்கிறான். முசுகுந்தனுக்கு அருள் புரிகிறான். ருக்குமிணி திருமணம். பிரத்தியும்னன் பிறக்கிறான். சத்தியபாமை திருமணம். சததன்னுவா வதம். காளிந்தி மணம்; பின்னும் பலர் மணங்கள். நரகாசுர வதம் பிரத்தியும்னன், அநிருத்தன் மணம். நிருகனுக்கு அருள் புரிதல், பலராமன் கோகுலம் அடைதல், பவுண்டரன்வதம், சாம்பன் மணம், பதினாறாயிரம் கோபியரோடு விளையாடல். தருமபுத்திரன் செய்த இராசசூய யாக முடிவில், அக்கிர பூசை யார்க்குச் செய்வ தெனச் சிந்திக்கும் போது, கண்ணனே அக்கிர பூசைக் குரியவன் என்று சகதேவன் துணிகிறான்:

பூப்பவன் றானும் பூவாப் பொழிலெலாம் பூத்து நின்ற
காப்பவன் றானும் ஊழிக் கடையினிற் கனலுந் தீயால்
தீப்பவன் றானும் ஆயர் தேமொழி மாதர் செங்கை
கூப்பிடத் தூசு வாரிக் குளிர் மரத் திவர்ந்த கோவே.

உலகெலாங் கண்ண னன்றி யொன்றிலை, உணருங் காலைக்
கலவமா மயிலெ ருத்திற் கவின்கனிந் தொழுகுமேனி
மலர்துழாய் அலங்கல் மாலை மாயனுக் காற்று பூசை
அலர்தலை யுலகுக் கெல்லாம் ஆற்றிய பூசையாமல்.

அதைப் பொறாது போருக்கெழுந்த சிசுபாலனைக் கண்ணன் வதைக்கிறான். சாலுவன் வதம், தந்தவக்கிரன் வதம், பலராமன் தீர்த்த யாத்திரை. இங்கு இவர் பல தமிழ் நாட்டிடங்களைக் குறிப்பிடுகிறார்.

தெண்டிரை நிலத்தொரு திலக மாகிய
தண்டமிழ் நாட்டகம் சார்ந்திட் டானரோ.

பெண்ணை, பம்பை இவற்றில் ஆடிய பிறகு, முருகனை வழி பட்டு, சயிலம் பணிந்த பிறகு, தமிழ்நாடு, வேங்கடமலை, காஞ்சி, துளவப் படலை தாழ் மார்பன் கண்வளர் கோயில் (திருவரங்கம்), காவிரி, சிலம்பாறொழுகு பூஞ்சோலை (திருமாலிருஞ்சோலை மலை), மதுரை வளநகர், வடித்த தீந்தமிழ் தண் துறைதொறும் மணக்கும் வையை, சேது, குலாசலம் (பொதியில்), பொருநை, கன்னியந்துறை (குமரி), திருவனந்தபுரம், யதுகிரி,* கோகன்னம் ஆகிய தலங்களும் நதிகளும் சொல்லப்படுகின்றன. குசேலருக்கு அருள் புரிகிறான். (மிகவும் சுருக்கமாக இருபதே பாடல்களில்

---

* யதுகிரி எனக் குறிப்பிட்ட பாடல் (4102) ஏட்டில் இல்லை என்பது பதிப்பாளர் குறிப்பு (யதுகிரி - திருநாராயணபுரம்).

*குசேலருடைய பக்திப்பெருக்கு நன்கு வெளிப்படும்படி ஆசிரியர் பாடியிருக்கிறார். இவ்விருபது பாடல்களே பின்னால் குசேலோ பாக்கியானம் என்ற தனிப்பெரு நூலாக விரிக்கப்பட்டுள்ளன.) குசேலன், பொருள் விழைந்து நம்மைப் போற்றுபவனல்லன், மனைக் கிழத்தி செல்கென வந்தான் என்று உன்னி, அவன் கொணர்ந்த பாசவலைக் கண்ணன் எடுத்து மிசைகிறான். ஒரு முறை எடுத்தவுடன் குசேலன் வீட்டில் இந்திரச் செல்வம் நிறைகிறது: இரண்டாமுறை எடுக்கு முன் உருக்குமிணி போது மென்று தடுக்கிறாள். கையில் செல்வமெதுவும் கண்ணன் தரா மையால் பொருள் தந்தால் நம்மை இவன் மறந்து விடுவான் என்று கண்ணன் தரவில்லை போலும் என்று குசேலன் அமைதி பெறுகின்றான்.*

அம்ம உய்ந்தனம் உய்ந்தனம், அரும்பொருள் எய்தின்
மம்மர் கூர்தர மறக்குவன் நமையென மதித்தே
மும்மை சாலுல களித்தருள் முளரியஞ் செங்கட்
செம்மல் நல்கலன் செல்வமென் றுவந்தனன் சென்றான்.

*சமந்த பஞ்சகம் செல்லல், இறந்த குழந்தைகளை மீட்டல் சுபத்திரையை அருச்சுனன் மணத்தல். சனந்தனர் சனகனாதி முனிவர்க்குச் சுருதி கீதை யுரைத்தல்; அதன் சாரமாவது:*

பகைத்து நாடுநர் பற்றுமாறு அற்றுனை
அகத்து நாடுந ராய விருவரும்
நிகர்த்துன் சேவடி நீழல்வந் துற்றனர்
மிகுத்த நின்னிலை விள்ளவல் லேங்கொலோ.

*விருகாசுரன் வதம், பிருகுமுனி சென்றது, இறந்த மக்களை அந்தணனுக்கு மீட்டுத் தந்தது, புனல் விளையாட்டு என்ற பகுதி களோடு பத்தாம் கந்தம் முடிகிறது. புனல் விளையாட்டு சண்டை யில் முடிந்து யாதவர் மடிவது பின்னர் சொல்லப்படும்.*

### பதினோராம் கந்தம்

*18 அத்தியாயம். யாதவன் சாம்பன், உலக்கை பெறுதல். வசுதேவருக்கு நாரதர் உலக நிலையாமையும் கண்ணனின் தத்துவமும் உணர்த்துகிறார். பின் பல அத்தியாயங்கள் ஞானப் பகுதி, வருணாச்சிரமம், இயம நியமம், பூசனை என்பன சொல்லி, கண்ணன் தன்னுடைய அடிச்சோதிக்கு எழுந்தருளிய செய்தி கூறி இக்கந்தம் முடிகிறது. கண்ணன் போன பின் துவாரகை யைக் கடல் கொண்டது.*

கருமுகி லனையஅக் கண்ணன் பின்தொடர்ந்து
இருவிசும் பேகிய விசையும் மெய்ம்மையும்
தருமமும் பொறுமையும் தவமும் தானமும்;
மருவின தவனியின் மறஞ்செய் வெங்கலி.

காலமும் பிறிவொடு கலப்பு மற்றுயர்
சீலமு மானவன் செய்கை இந்திர
சாலமும் அவைக்களஞ் சான்ற கூத்தினர்
கோலமும் அல்லதென் கூறல் வேண்டுமால்.

## பன்னிரண்டாம் கந்தம்

*10 அத்தியாயம். கலிதன்மம் உரைத்தல் கல்கியவதாரம், பிரளயம், பரீட்சித்து வீடு பெறுதல், சனமேசயன் சர்ப்ப வேள்வி செய்தல், வேதம் நான்கு என்ற பகுப்பு. மார்க்கண்டேயர் தவம் செய்து திருமாலை வேண்ட, சிவபிரான் தோன்றி மாயனும் நாமும் வேறலேம் என்று சொல்லி வரங் கொடுக்கிறார் பின் சூரிய துதி. இறுதியில் தொடக்கத்தில் சொல்லியவாறு, பாயிரம் உரைத்தது என்னும் பதிகப் பகுதியும், புராணங்களின் அளவும். நூலின் இறுதிப்பாடலில் ஆசிரியர் நூல் கற்போருக்கு வாழ்த்துக் கூறுகிறார்.*

கனைத்துவண் டிமிர் துழாய்க் கண்ணன் மாக்கதை
மனத்துற வழங்குநர் மகிழ்ந்து கேட்குநர்
வினைத்திருக் கற்றுறு மெய்ம்மை யாதியா
நினைத்தன பெற்றிவண் நீடு வாழியே.

*செவ்வைச் சூடுவார் சிறந்த பக்தியோடும் புலமையோடும் புராணத்தை மட்டும் சொல்லிக் கொண்டு போகிறார். அலங் காரங்களிலோ, வருணனைகளிலோ, காவியரசம் வேண்டுமென் பதிலோ, இவர் கருத்தைச் செலுத்தவில்லை. இவர் சொல்லும் கதைகள் வரலாற்று முறையாக இல்லை. ஆங்காங்கு முனிவர் கள் வினாவ, சூதர் சொல்வதாகக் கதை அமைத்திருக்கிறார். அவதாரங்கள் வைப்பு முறையைப் பார்த்தால் இது விளங்கும். முதல் அவதாரமாகிய மச்சாவதாரம் கடைசியில் வருகிறது. பிற யாவுமே இதற்கு முன்னால் சொல்லப்படுகின்றன.*

*திருமால் பக்தி இவரிடம் அழகாக விரிந்த சமயப் பொது நோக்காக அமைந்திருக்கிறது. நெறியாக அமையவில்லை. இந்தச் சிறந்த இயல்பை நூல் முழுமையும் காணலாம். மோகினியுரு எடுத்த கதை இத்தன்மைக்கு எடுத்துக் காட்டாகும். மேலும்*

| வடமொழிப் பாகவத | | | | | |
|---|---|---|---|---|---|
| எண் | பெயர் | ஆசிரியர் | அமைப்பு | கீதை | ஸ்கந்தம் |
| 1 | இதிகாச பாகவதம் | வியாசர் | சூர்ணிகை விருத்தம் பத்தியம் தண்டகம் | 12 சுருதி கீதை முதலாயின | 12 |
| 2 | மகா பாகவதம் (புராண பாகவதம்) | வியாசர் | அனுஷ் டுப்புச் சுலோகம் | 25 | இல்லை |
| 3 | சம்மிதா பாகவதம் | - | பத்தியம் அனுட் டுப்புச் சுலோகம் | 30 | 18 காண்டம் |
| 4 | உப சம்மிதா பாகவதம் | - | பலவகை விருத்தம் | 32 | 100 பரிச் சேதம் |
| 5 | விஷ்ணு ரகசிய பாகவதம் | - | தண்டகம் கலந்தது | 50 | 1000 அங்கம் |
| 6 | விஷ்ணு யாமள பாகவதம் | - | வாக்கிய ரூபமும் உண்டு | 4 பிரம, அய, அரி சங்கர கீதை | 8 ஸ்தானம் |
| 7 | கௌதம சம்மிதா பாகவதம் | - | - | - | - |

## அட்டவணை

| அத்தியாயம் | சுலோகம் ஆயிரம் | வக்தா சொன்னவர் | சுரோதா கேட்டவர் | பொருள் | பயன் |
|---|---|---|---|---|---|
| 200 | 18 | சுகமுனி | பரீட்சித்து | பகவத் துதிகள். நான்கு அவதாரம்மட்டும் விரிவு | ஞானம் |
| 600 | 30 | நாரதர் | ருக்குமணி | பகவத் துதிகள். ஆறு அவதாரம் விரிவு. பத்து அவதாரம் உண்டு | பாவ நீக்கம் |
| 1100 | 50 | வைசம்பாயனர் | சனமேசயன் | பகவத்துதிகள்20 அவதாரம்22 அவதாரக்கதை வைராக்கிய ரசம் | பக்தி |
| 2000 | 70 | அகத்தியர் | சுதர்சனர் | பகவத் துதிகள் 100 பாகவதர் சரித்திரம். 32 அவதாரம் | ரோக நீக்கம் |
| 10,000 | 100 | ஆரீதர் | காசிபர் | பகவத்துதியே நிறைந்தது 100 பாகவதர் சரித்திரம். 25 அவதாரம் | இஷ்ட சித்தி |
| 800 | 80 | பராசரர் | மைத்திரேயர் | தருக்கம் விசித்திர வித்தை மந்திர சாத்திரம் | பக்தி |
| 100 | 10 | கௌதமர் | கௌசிகர் | மோட்சமளிக்கும் கிருஷ்ண சரித்திரம் மட்டும் | மோட்சம் |

தக்கயாகத் தினழிவு கூறிய இடத்தில் சிவ பரம்பொருள் என்ற தன்மைக்கு மாறுபடாமல் பாடுகிறார். பின்வரும் இரு பாடல் களையும் காண்க.

விரிசினை யால நீழல் மெய்த்தவச் சனக னாதி
அருமறைக் கிழவர் சூழ அமர்ந்தவா னந்த ரூபத்
தொருமுத லவனைக் காணா உவந்தனர் அமரர் தாழ்ந்தார்
மரைமலர்ப் பொகுட்டு வாழும் மறையவன் வழுத்தி னானால்.

ஆவயி னாரன் மீனோர் அறுவர்வந் தன்பு முற்றித்
தீவிய முலைப்பா லூட்டத் திருமுக மாறு கொண்டு
மேவிய மடவார் கொம்மை வெம்முலை யொருங்கு மாந்தி
மூவிரு முகனென் றெல்லா உலகமும் மொழிய நின்றான்.

மார்க்கண்டேயன் தவமுரைத்த இடத்தும் சிவபிரான் தமக்கும் மாயனுக்கும் வேறுபாடில்லை என்று கூறுவதாக இவர் பாடு வதும் நோக்கத்தக்கது.

### காலம்

அருளாளதாசர் பாகவதம் கி.பி. 1543 என்று பின்னே குறிப் பிட்டோம். முதல் பாகவதம் பாடிய செவ்வைச் சூடுவார் அவரினும் காலத்தால் முற்பட்டவர். புராணங்களின் பொது இயல்பை ஆராய்ந்துள்ள இடத்துக் கூறிய கருத்துக்களால் இவர் காலமும் ஏறக்குறைய இதே காலம் - அதாவது அருளாள தாச ருக்குச் சற்றுமுன் - 16ஆம் நூற்றாண்டின் தொடக்கம் என்று கூறலாம்.

### பதிப்பு

கோ. இராசகோபால பிள்ளை பதிப்புப் பற்றித் தொடக் கத்தில் சொல்லப்பட்டது. காலம் கி.பி. 1881. பின்னர் ஐயரவர்கள் எழுதி வைத்த குறிப்புரை முதலியவற்றோடு நல்ல பதிப்பாக அவருடைய புதல்வர் கலியாணசுந்தரமையர் அவர்களால் முதல் பாகம் (9 ஸ்கந்தம்) 1949இலும், இரண்டாம் பாகம் (10 - 12 ஸ்கந்தங்கள்) 1953இலும் திருமலை திருப்பதி வேதஸ்தானத் தாரால் வெளியிடப்பட்டன. செய்யுள் முதற்குறிப்பு, அரும்பத அகராதி அபிதான விளக்கம் முதலிய பகுதிகள் சேர்க்கப்பட் டிருப்பது மிகவும் சிறப்பு.

இவ்வழகிய புராணம் இன்னும் அதிகமாகத் தமிழறிஞரிடை ஆட்சியில் இருத்தற்குரியது. சென்ற தலைமுறைகளில் இதைப் பயின்றவர்களும் இதற்கான ஏட்டுப் பிரதிகளும் அதிகம்.

## நெல்லிநகர் - அருளாளதாசர்

### ஆசிரியர்

அளவாற் பெரிய பாகவத புராணத்தைத் தமிழில் மொழி பெயர்த்துச் செய்தவர் இவ்வாசிரியர் இவர் நெல்லிக் கதிபதி. இயற்பெயர் வரதன்; வரதராச ஐயங்கார் எனவும் வழங்கும்; குணச் சிறப்பினாலும் நூல் செய்த சிறப்பினாலும் அருளாள தாசர் என வழங்கப் பெற்றார். சிறப்புப் பாயிரம் இதை உணர்த்துகிறது.

எதுகுலத்து வருமுறையோன் சரிதையைநற்சுகன் இசையால்
உதவு சொலைத் தமிழினால் உரைத்தவன்வண் திருவ ரங்கம்
பதியமர் வேத்திரக்கரத்தோன் பழமறையோன் வரதன் நெல்லிக்
கதிபதியாய் உயர்ந்திடுபே ரருளாள நாதனரோ. **1:53**

இப்பாடலால் இவர் திருவரங்கத்தில் வாழ்ந்தவர் என்றும், இவர் வரதன் என்று சொல்லப்படும் அருளாளநாதன் என்று பெயர் பெறுகிறார் என்றும் அறிகிறோம். இதற்கு அடுத்த பாட்டு, நூல் செய்த காலம் கூறுவது (காலம் என்ற தலைப்பில் பார்க்க). அப்பாடல் இவரை நெல்லிநகர் வரதராசன் என்றும், நூலை வாசுதேவ கதை என்றும் கூறுகிறது; வாசுதேவன் - வாசுதேவர் புதல்வனான கண்ணன். பாகவதம் பகவானுடைய கதையைச் சொல்வது; பகவான் - கிருஷ்ண பகவான் ஆவார். இப்பாகவதம் கிருஷ்ண பகவான் கதையையே அதிகமாய்ச் சொல்லுவதால் வாசுதேவ கதை என்று பெயர் பெற்றது; நூலின் பல இடங்களில் இந்நூற்பெயர் வாசுதேவ கதை என்றே சொல்லப்படுகிறது.

நூலின் இடையிலும், இந்தக் கதையை வடமொழிப் பதினெண்ணாயிரம் சுலோகத்தைத் தமிழில் நெல்லி வரதையன் 9000 விருத்தப்பாடலாகச் சொன்னான் என்று பாடல் சொல்லு கிறது (14:5).

இதுவலால் உருக்கு மணிக்குநா ரதன்தான்
  இசைத்ததை நைமிசா ரணியத்து
அதிற்சவு னகனே முதல்வரெண் பத்தெண்
  ணாயிரர் முனிவர் கேட்பச்
சதுர்மறைச் சூதன் உரைத்திடும் நூல்சுலோக
  மாம்பதி னெண்ணா யிரமும்

விதிதமிழ் நெல்லி வரதையன் சொன்னான் –
விருத்த மொன்பான் சகசிரமே.

வடமொழிப் புராண பாகவதம் வியாசர் செய்தது. 36,000 சுலோகமுடையது. மகாபாகவதம் என்று இது வழங்கும். இதில் 25 கீதைகள் உள்ளன. ஆறு அவதாரக் கதைகள் இதில் சொல்லப் படுகின்றன. பெரும்பாலும் அனுட்டுப்புச் சுலோகத்தாலும் சிறுபான்மை மற்றவற்றாலும் செய்யப்பட்டுள்ளது. அத்தியா யம் 600. இதில் அத்தியாயம் ஒவ்வொன்றின் தலைப்பிலும் ஒரு கடவுள் வாழ்த்து உண்டு. நாரத முனிவர் ருக்குமணிப் பிராட்டி யாருக்கு இதைச் சொன்னார். பின்னர் பரீட்சித்து மன்னனுக்குச் சுகமுனிவர் கூறினார், இதுவே பதினெண் புராணத்துள் ஒன்று என்பர். இதையே அருளாளதாசர் தமிழில் பாடினார்.

வரதராச ஐயங்கார் என்றும் சொல்லக் கேட்டிருக்கிறோம். ஐயங்கார் என்பது இன்னும் பிற்காலச் சொல். 17ஆம் நூற் றாண்டில் பல பிரபந்தங்கள் பாடிய மணவாளதாசர் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் என்று வழங்கப் பெறுகிறார். இதற்கு முன் இச்சொல்லுக்குச் சிறப்பான ஆட்சி இருந்ததாகத் தெரிய வில்லை. வரதன், வரதராசன், வரதையன் என்றே இவர் சொல்லப் பெறுகிறார். 16ஆம் நூற்றாண்டுக்குப் பின் ஐயங்கார் என்ற சொல்லாட்சி பெருகிவிட்டபடியால், ஐயன் ஐயங்கார் ஆகி விட்டார். பாடல்கள் சொல்லுகின்ற வரதர் எப்படி அருளாள தாசர் ஆனார் என்பது தெரியவில்லை. தாசர் என்று பெயர் சூட்டிக் கொள்வது அக்காலத்தில் வைணவத்தில் ஒரு சிறப்பாய்க் கருதப்பட்டது போலும். பிள்ளை உறங்காவில்லி தாசர் (12), கூரகுலோத்தம தாசர் (14ஆம் நூற்றாண்டு), அரிதாசர் (16ஆம் நூற்றாண்டு), மணவாள தாசர் (17ஆம் நூற்றாண்டு) முதலான பெயர்களை நோக்குக.

## புராண பாகவதம்

இத்தமிழ்ப் பாகவத புராணம், வாசுதேவ கதை என்றும் புராண பாகவதம் என்றும் பெயர் பெறும். 130 படலங்களும் 9147 செய்யுட்களும் உடையது. செவ்வைச் சூடுவார் பாகவதத்தைப் போல இதில் ஸ்கந்தப் பாகுபாடு இல்லை. முதலில் கடவுள் வாழ்த்துப் பகுதி ஆறு பாடல், முறையே ஆலிலையிற் பள்ளி கொண்ட குழவி, யாவும் தானாகி நின்ற தலைவன், பரம பதத்து ஒளிகொளரி, தெசரதனடியில் வீழ்ந்த செம்மல், வாசுதேவன்,

அரங்கேசனார் மகிழ் திருப்பணி செய் ஆயனார் என்று வணக்கம் சொல்கிறார். முதல் படலம் திருவரங்கப் படலம் 155 பாடல். முதல் வாழ்த்து காவிரிக்கு.

> சீராரும் இந்திரை மண் மகள் சேர்ந்து போற்ற
> ஓரா யிரவாய்ப் பணிமீது உறைவானை உள்கி
> நீராயுழ னந்திரு பாலும் நிறைந்து நேர்ந்த
> காராளன் பொழில்சூழ் திருக்காவிரி வாழி வாழி.

பிறகு அரங்கனாரைப் பாதாதிகேசமாகப் பல பாடல்களில் வாழ்த்துகிறார். அரங்கவீசர் அடியிணை, பீதாம்பரம், உந்தி மலர், உதரபந்தனம், கவுத்துவம், வாயும் முறுவலும், கண்டம், கண்ணிணை, திருமுகச் செவ்வி, நீலமேனி, மகுடம், பஞ்சாயு தங்கள், பின் அரங்க நாயகி, பூதேவி, நீளை, கோதை - சூடிக் கொடுத்தவள், பிரணவ விமானம், அனந்தன், கருடராசன், சேனாபதி, அனுமன், வாயில் காவலர்; பிறகு தலங்களுக்கு வாழ்த்துக் கூறுகிறார். முதலில் அரங்கம் பின் 83 பாடல்களில் 108 திருப்பதிகளுக்கும் வாழ்த்துக் கூறுகிறார். அடுத்த பாடலில் இத்தலங்களில் எழுந்தருளியுள்ள மலர் மங்கை நிலமங்கை சூழுந் தேவர். அடுத்த பாடல் பிரகலாதன் முதல் விபீஷணன் வரை யுள்ள பாகவதர்கள். பின்னர் பன்னிரு ஆழ்வார், இராமானுசர், நாதமுனி, உய்யக்கொண்டார், மணக்கால் நம்பி, ஆளவந்தார், பெரிய நம்பி, எம்பெருமானார், கூரத்தாழ்வான், பெரிய நம்பி பிள்ளை, நம்பிள்ளை, மணவாள மாமுனி; நாதமுனி, சீரங்க நாராயண முனி, பராசரபட்டர், வேதவியாச பட்டர், கந்தாடை யண்ணன்; வதிட்டையாயன் (2 பாடல்கள்). பின்னர் மீண்டும் கண்ணனைப் பல பாடல்களால் துதித்து, சுக முனிவரையும் வணங்கி, சாத்துவிக மகாபுராணமாகிய இதைச் சொல்லத் தொடங்குகிறார். இவ்வாறு, பாயிரம் என்று சொல்லத்தக்க திருவரங்கப் படலத்துள்ள 155 பாடல்களில், இவர் மிக விரி வாகத் துதி சொல்லியிருக்கிறார். தமிழில் இவ்வளவு அதிகமான கடவுள் வாழ்த்துப் பகுதி வேறெந்த நூலிலும் இல்லை. கடவுள் வாழ்த்துப் பாடல்கள் யாவும் வாழி என்ற முடிபையே கொண் டவை. மேலும் இங்கு, பெரும்பான்மைப் பகுதி, பாடல் தோறும் யாப்பை மாற்றி இவர் பாடிவருவது ஒரு விசித்திர அமைப்பு.

இது மட்டுமல்ல, இந்தப் பாகவதம் 132 படலங்கள் உடையது என்று சொன்னோம். ஆசிரியர் ஒவ்வொரு படலத்தின் தொடக் கத்திலும் ஒரு திருமால் வணக்கப் பாடல் சொல்லியிருக்கிறார்.

இவற்றையும் திருவரங்கப் படலப் பாடல்களையும் சேர்த்தால் இது 300 பாடல்களுக்கு மேற்பட்ட ஒரு சிறந்த திருமால் தோத்திர நூலாகும். பல சமயம் இரண்டு துதிப் பாடல்களைத் தருகிறார். முதல் பாடலில் துதிமின் தொண்டீர் என்கிறார். இரண்டாம் பாடல் வரும்போது, 'என் மனனே, உலகேழயின் றவன் நாமம் பகர்தி' என்பது போன்ற தொடர்களால் நெஞ்சுக் குச் சொல்லுகிறார். சிற்சில இடங்களில் அந்தந்தப் படலத்தில் கூறப் போகும் பொருளைச் சுருக்கி இவ்வாறெல்லாம் செய்த கண்ணனை வணங்குகிறேன் என்கிறார். பன்னிரு நாமங்களை யும் சொல்லி வணங்கும் பாடல்கள் பல. ஒரு பாடல்:

> கேசவன் நாராயணன் உயர்மாதவன்
> கிளர் கோவிந்தன் விண்டு
> மாசகன் மதுசூதன் திருவிக்ரமன்
> மன்னு வாமன் அவிர் மலியும்
> தேசுறு நிகரில் சிதரன் இருடிகேசன்
> ஒண்பதும நாபன் சீர்
> வீசிய தாமோதரன் என உரைமின்,
> வினையற உயர் பதத் துறலாம்.

ஒரு பாடலில் பன்னிரு மாதப் பெயர்களும் அமையப் பாடுகிறார்.

> வாமமவிர் சித்திரைவை காசியானி கலையாற்றி
> வெண்ணைக்காடி யாவணிக்கு ணின்று கஞ்சத்
> தீமையன் மண் விழப் புரட்டாசியற் பசிக
> பாலன் சிரந்துணியவே ஆழியைவிடு நற்றேவன்
> சோமகுல அந்தகன் சேய்முனர் நடுங்காத் திகைத்தாள்
> தூசிடைமாளா தருளுந் துளபமார் கழியான்
> பூமன் வனிதைக் காய்மாசில் சாபங்குனியப் போரினில்
> தெசமுகனைச் செற்றானைப் போற்றி செய்வாம்.

பல இடங்களில் தசாவதாரங்களையும் குறித்துப் பாடுகிறார்.

> ஊரிலி யுருவம் இலிகுணமிலிபே
> ரிலியிழை கருமமொன்றிலியால்
> ஆருனை யறிவார் அறிந்தவர் பிறவி
> அளக்கரின் வீழ்ந்திடா வண்ணம்
> சிறாறு மீன்கூ ருமகிரி மான் குறள்
> மழுச் சிலையலா யுதராய்.

நேரில் யாதவனா யிவணினிற் றோன்றி
நிகரிலாக் கற்கியு மாவாய்.

*ஒரு துதிப் பாடலில் முத்தி நகர் ஏழையும் குறிப்பிடுகிறார்.*

மாசில் அயோத்தி மதுராபுரி மாயா
காசி உயர்காஞ்சி கவின்சேர் அவந்திகா
ஏசில் கடற் றுவரையோ டிவ்வெழு நகரின்
ஆசகல் முத்தியருள் அச்சுதன் பதம்பணிவாம்.

*ஒரு பாடலில் எண்களை நிரல்பட வைத்துச் சொல்கிறார்.*

ஒருதனி முதல்வன் இருசுடராகி
உயர்ந்திடு மூர்த்திகள் மூன்றாய்
அருமறை நான்காய் ஐந்து பூதமுமாய்
ஆறுசாத் திரங்களாய் ஏழு
பறவையாய் எட்டுப் பருப்பதமாகிப்
பவமிலா நவக்கிர கத்தின்
சுருபமாய் நிலத்தில் தசவவ தாரம்
ஆகிய சோதியைப் பணிவாம்.

*கம்பராமாயணத்தில் நாந்திச் செய்யுள் என்னும் நாடிய பொருள் கை கூடும் என்ற பாடலைத் தழுவி இவர் தம் நூலுக்கும் இரு பாடல்கள் அமைத்திருக்கின்றார். முதல் பாடல் பின்வருவது:*

நீதிசேர் செல்வம் வாய்க்கும், நிவந்த மெய்த்தருமம் நீளும்,
ஏதமின் ஞான மெய்தும், இந்திரை இனிது நோக்கும்,
சேதிப ராச னோடச் செருவென்று விதற்ப னல்குங்
கோதையை மணந்த மாயோன் சிலைவலி கூறு வோர்க்கே.

*நாச்சியார் அவதாரப் படலத்தில் நாச்சியார் திரு அவதாரம் செய்து வளர்ந்து வருகின்ற நிலையைக் கூறுமிடத்து, பிள்ளைத் தமிழுக்குரிய பெரியாழ்வார் கருத்துக்கள் பலவற்றைப் பாடலில் அமைத்துப் பாடுகின்றார். தாலப் பருவத்துக்குரியது பின்வரும் பாட்டு.*

தாலேலோ வினைதானி லாதவள்
தாலேலோ சுதை தங்கு பொற்குயில்
தாலேலோ கமலா சனத்தவள்
தாலேலோ திரு வென்று சாற்றினார்.

*தொடர்ந்து விளையாட்டு. செங்கீரையாடுக செம்மையுற, சப்பாணி கை கொட்டுக சந்தமுற, தவழ்ந்தே விளையாடுதி, தோள் வீசி நடந்திடு, தளரும் நடை நீ நட, அச்சோ புயலே, புறம்புல்குதி, அப்பூச்சி கண்டாடுக, அம்புலி வா என ஓதுதி, அக் காக்கை பொன்னால் அமர் கோல் கொடுவா, தும்பி மலர் ஓது என்றெல்லாம் தாயார் போற்றுவதாகக் கூறுகிறார். விளையாட்டைச் சொல்லும்போது சிறுபோது சிறுசோறு அடுதல், கழங்காடுதல், அம்மானை பாடியாடுதல், பந்தாடுதல், ஊசல் ஆடுதல், நீராடல், மலர் கொய்தல் என்பதைத் தனித்தனி விரித்துரைக்கிறார்.*

*இயற்கையை இவர் வருணிக்கத் தலைப்படும் போது எங்கும் மரவகைகளை அடுக்கிச் சொல்வார் (7 : 32 - 35).*

**பாகவதக் கதை**

*இந்தப் பாகவதத்தின் கதைப் போக்கும் தொடர்பும் விளங்கும் பொருட்டுக் கதையைச் சுருக்கி இங்கே தருகிறோம். ஆறாம் அத்தியாயத்தில் நாச்சியார் திருஅவதாரப் படலம் என்ற பெயரோடு கதை தொடங்குகிறது. கண்ணனுடைய தேவியாகிய ருக்குமணிதேவி விதர்ப்ப நாட்டு மன்னன் மகளாகப் பிறந்து மணப் பருவம் அடைந்தபோது நாரதமுனிவன் வருகிறான் (6). 78 படலம் வரையில் அவளுக்கு நாரதமுனிவன் கூறும் வரலாறு ஆகும். முனிவன், கஜேந்திர மோட்சம், வராக அவதாரம், கபில முனி வரலாறு, நரசிங்க அவதாரம், துருவன், மச்சாவதாரம், கூர்மாவதாரம் (7 - 13) ஆகியன சொல்லுகிறான். அடுத்த (14) அண்டப் படலம் என்பதில் பூலோகம் முதலான உலகங்கள் தீவுகள் முதலியன மற்றப் புராணங்களில் உள்ளது போல விரிவாகச் சொல்லப்படுகின்றன. பின்னர் பிருதுச் சக்கரவர்த்தி, இடபராசன், வாமன அவதாரம், அஜாமினன், உருக்குமாங்கதன், அம்பரீடன், பரசுராம அவதாரம், இராகவன் அவதாரம் ஆகிய வரலாறுகள் சொல்லப்படுகின்றன (15 - 22). அடுத்த 42 படலங்கள் (23 - 64) கண்ணன் பிறந்தது முதல் அவனுடைய படத்தை ருக்குமணி காண்கிற வரையில் கண்ணனுடைய வரலாற்றை நாரதமுனிவன் கூறுவதாக உள்ளன. தேவகிப் படலம் (23) கம்சன் தங்கையாகப் பிறந்த தேவகியின் மணமும் அவள் பெற்ற குழந்தைகளைக் கம்சன் கொன்ற செய்தியையும் கூறுகிறது. தேவர்கள் திருமாலை வேண்ட அவர் பூவுலகில் தேவகி வயிற்றில் கருவாய் வந்து தங்குகிறார். சிறையிலிருந்த வசுதேவர்*

ஆயர்பாடியில் நந்தகோபன் மனைவி யசோதையினிடம் அக்குழந்தையைக் கொண்டு போய் விடுகிறார். உரோகிணி பெற்ற பெண்ணைத் தேவகியின் பெண் என்று எண்ணிக் கண்ணன் கொல்ல முயலும்போது, அக் குழந்தை மாயையாக மாறி உன்னைக் கொல்லத் திருமால் குழந்தையாகப் பிறந்திருக் கிறான் என்று சொல்லி மறைகிறது. கம்சன் தன் துன்மந்திரி களோடு ஆலோசித்து அக்குழந்தையைக் கொல்ல வழி என்ன என்று தேடுகிறான் (24). பூதனைவதை, சகடாசுரன், காரியாசுரன், குக்குடாசுரன் வதை (25 - 28). கண்ணன் வெண்ணெய் திருடுதல், அவன் வாயினுள் உலகத்தைக் காணுதல் (29). ததிபாண்டன் முத்தி (30). மருதமரமாக வந்த அசுரர், பகாசுரன் அகாசுரன் வதை (31 - 33). கண்ணன் தானே ஆயர் சிறுவராயும் கன்றுகளாயும் இருந்து மாயை காட்டுதல் (34). தேனுகன் வதை, காளியமர்த்தனம், பெலம்பன் கதை, கோபியர் ஆடை கவர்தல், வனத்தில் இருந்த வேதியர் மனைவியருக்கு அருள் செய்தல், கோவர்த்தன கிரியைத் தூக்கல், மழையிலிருந்து காத்தல், குழலூதுதல் (35 - 42). அம்பிகா வனத்தில் நந்தனை நாகம் பற்றி விழுங்கக் கண்ணன் திருவடி பட்ட மாத்திரத்தில் நாகம் வித்தியாதரனாகி விமானத் தில் ஏறிச் செல்லுதல் (43). கும்பகன் பெண் நப்பின்னையை ஏழு விடைகளை அடக்கி மணத்தல் (44). அருட்டாசுரன், கேசி வதை வியோமனன் வதை (45 - 47). அக்ரூரன், சமந்தக மணியின் வரலாறு (48). தாருகன்வதை (49). சுதாமகாவுக்கு அருளுதல், திரீவக்கிரி என்ற கூனிக்கு அருளுதல் (51). இந்திர தனுவை யொத்த ஒரு வில்லையெடுத்து வளைத்து ஒடிக்க, சூழ்ந்த சேனையை அழித்தல் (52). கஞ்சன் செய்யும் கொலை முயற்சி, குவலயா பிடம், சாணூரன், கம்சன் வதை (54 - 56). உக்கிரசேனன் முடிசூடுதல், சாந்திப முனிவர்க்கு இறந்து போன பிள்ளையை வருணனிட மிருந்து பெற்றுக் குருதட்சணையாகக் கொடுத்தல் (57 - 58). கண்ணன் மதுரையில் இருக்கும் போது அங்கிருந்து உத்தவன் ஆயர்பாடி சென்று கண்ணன் பழகிய ஆயர் கன்றுகள் இடங்கள் பார்த்து வருதல் (59). பாண்டவருக்கு நேர்ந்த இன்னல்களை அக்ரூரன் சொல்லக் கண்ணன் கேட்டறிதல் (60). கம்சன் வதம் கேட்டு அவன் மாமனாகிய சராசந்தன் படையோடு வந்து கண்ணனிடம் போரிட்டுத் தோற்று ஓடுதல் (61). அசுரர் கோமான் சிரகாளன் என்பவன் முனிவருக்குத் தீமை செய்வது கேட்டு அவனோடு பொருது அவனை அழித்தல் (62). காள எமன் வதை (63). இரேவகன் என்னும் அரசன்மகள் இரேவதியை

மணத்தல் (64). நாரத முனிவன் கண்ணன் குணாதிசயங்களை உருக்குமணிக்கு எடுத்துக் கூற அவள் அவனை மணக்க உறுதி கொள்கிறாள். அவளுடைய விரகதாபம், ஒரு தோழி கண்ணன் வடிவத்தைப் படத்தில் எழுதுகிறாள் (65). விதர்ப்பராசன் மந்திரி களோடு கலந்து மகளுக்கு ஏற்ற மணவாளன் கண்ணனே என முடிவு செய்கிறான். ஆனால் அவனுடைய மகனான உருக்குமி சிசுபாலனுக்கு அவளைக் கொடுக்கத் துணிந்து மறுநாளே ஓலை போக்குகிறான். உருக்குமணி ஒரு புரோகிதன் மூலம் கண்ண னுக்கு ஓலை அனுப்புகிறாள். மறுநாள் சிசுபாலன் வரவும் உருக்குமி தங்கைக்கு மணக்கோலம் செய்யுமாறு கட்டளையிடு கிறான். உருக்குமணியும் அன்னையுமாக அம்பிகை கோயில் சென்று வழிபட்டு ,வரும் வழியில் கண்ணன் வர அன்னை உருக்குமணியைக் கண்ணன் கையில் கொடுக்க அவன் அவளைத் தேரேற்றிச் செல்கிறான் (66 - 70). சூழ்ந்த சேனைகளை முறி யடித்துச் செல்லும்போது உருக்குமியைப் பலராமன் மார்பில் அடித்துத் தலையை முறிக்கப் போகும் போது உருக்குமணிக்காக அவனை விடச் செய்கிறான். மீண்டும் உருக்குமி சண்டைக்கு வர அவனைப் பங்கப்படுத்தி வெற்றியோடு துவாரகை அடைகிறான் (71 - 78). உருக்குமணிப் பிராட்டி திருமணம் (79). சத்தராசித்து மன்னன் என்பவன் சிறப்பான சமந்தக மணி வைத்திருந்தான். அதைக் கண்ணன் கேட்டபோது கொடுக்கவில்லை. அவன் தம்பி அம்மணி யணிந்து வேட்டையாடியபோது ஒரு சிங்கம் அவனைக் கொன்று மணியோடு செல்ல, கரடியரசன் சாம்பவன் அச்சிங்கத் தைக் கொன்று அம்மணியைத் தன் மகள் சாம்பவதிக்குக் கொடுத் தான். கண்ணன் சாம்பவதியை மணந்து மணியைப் பெற்றபின் சத்தராசித்து உண்மை அறிந்து தன் மகள் சத்தியபாமையைக் கண்ணனுக்கு மணம் செய்து கொடுத்தான் (80 - 81). சத்திய பாமையின் தந்தை சத்தராசித்துவைக் கொன்ற சதத்தனுவாவை வதைத்தான் (82). தன்னை விரும்பித் தவம் செய்த காளிந்தியை மணந்தான் (83). மித்திர விந்தை சுயம்வரத்திற்குச் சென்று அவளை மணந்தான் (84). ஏழு விடைகளை அழித்து நாக்கினசித்துவை மணந்தான் (85). பத்திரை என்ற பெண்ணை மணந் தான் (86). வில் வளைத்து மச்சம் வீழ்த்தி இலக்கணையை மணந் தான் (87), நரகாசுரன் வதை (88). பாரிஜாதத்தைப் பெற்றுச் சத்தியபாமைக்குக் கொடுத்தல் (89). சுபத்திரையை அருச்சுன னுக்கு மணம் செய்வித்தல் (90), வசுதேவர் வேள்வி செய்தல் (91). கண்டகருணன் முத்தி (92) கயிலாய யாத்திரை; பௌண்டனன்

வதை, சுதரிக்கனன் வதை, துவிந்தன் வதை (93 - 96). மன்மதன் பிறப்பு, சம்புராசன் வதை, அநிருத்தன் பிறப்பு, கண்ணன் ஏக காலத்தில் பதினாறு ஆயிரம் கோபியருடனும் கூடி வாழ்ந் திருத்தலை நாரதன் காணுதல் (97 - 99). அங்கிசமன் திபிகன் வதை (100), ஓந்தியாய் இருந்த நிருகராஜன் (101). உருக்குமி கல்யாணம் (102). பலராமன் அத்தினாபுரத்தைப் பேர்த்து எறிவ தற்கு அஞ்சித் துரியோதனன் தன் மகள் இலக்கணையைக் கண்ணன் மகன் சாம்பனுக்கு மணம் செய்து கொடுத்தல் (103). வனாசுரனுடன் பொருது அவன் மகள் உடாங்கனையைத் தன் மகன் சாம்பனுக்கு மணம் செய்வித்தல் (104). தருமபுத்திரனுடைய இராசசூய யாகத்தில் தன்னை எதிர்த்த சராசந்தனை வதைத்தல் (105). சிசுபாலன், சாலுவன், தந்தவக்கிரன் வதை (106 - 108). பாண்டவர் வனவாசம் (109). தருமபுத்திரனுக்கு வியாசர் குருகுல வரலாறு சொல்லுதல் (110). தட்சயாக அழிவை வியாசர் கூறுதல் (111). பார்த்தன் சிவனை நோக்கித் தவம் செய்து பாசுபதாத்திரம் பெறுதல், ஊர்வசியின் சாபம் பெறுதல் (112). வீமன் மந்தார மலர் பெற்றுவருதல் (113). சிறைப்பட்ட துரியோதனனை விடுவித்தல், சயித்திர பங்கம், நச்சுப் பொய்கை வரலாறு (114), விராட நகர் வாசம், கிசகன் வதம் (115). கிருஷ்ணன் தூது (116). மகாபாரதப் போர் (117). பலராமன் தீர்த்தயாத்திரை (118). துரியோதனன் வதை (119). உத்தரை வயிற்றில் பரிட்சித்து பிறத்தல் (120). மிதிலை மன்னனுக்கு அருள் செய்தல் (121). குசேலர் அருள் பெற்றது (122). அந்தணன் புதல்வனை மீட்டது, தசாவதார நடிப்பு (123). யாதவர் சாபம் பெறுதல், உத்தவன் கேட்கும் வினாக்களுக்குக் கண்ணன் உபதேசங் கூறி அனுப்புதல். இதுவே உபதேசப் படலம் (124). துவாரகையில் இருந்தோர் முத்தியடைதல் (125). மார்க்கண்டேயர் வரலாறு, விருகாசுரன் (127 - 128). பரீட்சித்து மோட்சம் அடைதல், சனமேசயன் தந்தைக்குக் கடன்கள் ஆற்றிப் பாகவதம் கேட்டு முக்தியடைதல் (129 - 130). கல்கி வரலாறு, கலியுக தர்மம் (131). வைனதேயனுக்குப் புராணங்களின் சார மான திருமால் பதிகளையும் மூர்த்திகளையும் தீர்த்தங்களையும் வியாசர் உரைத்துப் புராணத்தை முடித்தல் (132).

மேற்குறிப்பிட்டதே பாகவதக் கதை. அளவால் கந்த புராணம், கம்பராமாயணம் ஒத்த பெருமை இந்நூலுக்கு உண்டு என்பது தெளிவு. இவ்வளவு பெரிய நூலிலுள்ள பொருள்களைத் தேர்ந்தெடுத்துச் சில மட்டும் இங்குச் சொல்ல முற்படுகிறோம். எல்லாவற்றையும் சிறு அளவில் சொல்லிவிடமுடியாது.

## நூற் பொருள்

நூலில் அண்டப் படலம் என்பது பூவுலகம் தீவுகள் முதலிய பிரபஞ்சப் பகுதிகள் எல்லாவற்றின் தோற்றமும் கூறு கிறது. இது இந்த நூற்றாண்டில் தோன்றிய சிறப்புடைய எல்லாப் புராணங்களுக்கும் பொருந்துகின்ற ஒரு பொது இயல்பு. பெரிய அளவினவான சிவபுராணங்கள் அனைத்திலும் இவ்வியல்பைக் காணலாம். அப்படியே கலியுக தருமம் என்று எல்லாப் புராணங் களும் ஒரு படலம் சொல்லும். அதை இவர் கர்க்கிப் படலத்தில் சில பாடல்களால் சொல்லுகிறார். திருமால் வரலாற்றில் போர்ச் செய்திகள் மிகவும் அதிகம். அவற்றையெல்லாம் இவர் வருணிக் கும் போது, பெருங்காப்பிய இலக்கணம் பொருந்த விரித்துச் சொல்வது ஆங்காங்கு சிறப்பாகவே உள்ளது. அப்படியே ஓரிடத்தில் இவர் வேட்டையை வருணிப்பதும், போர்த் தன்மை பொருந்தவே அமைந்துள்ளது.

கயிலாச யாத்திரை என்ற படலத்தில் திருமாலின் துவாதச நாமங்களுக்கும் விரிவாகப் பொருள் சொல்லுகிறார். குருகுல மரபே பாரதச் சரித்திரம். இம்மரபை மிகவும் விரித்துப் பாடி யிருக்கிறார் (539 பாட்டு). சந்தப் பாடல்கள் சொன்ன இடமெல் லாம் இவருக்கு எளிதாக வந்து ஏவல் கேட்கின்றன. நம என்று பாடித் துதிப்பதில் இவருக்குப் பெருவிருப்பம். முடிந்த இடமெல் லாம் இதைச் சொல்லுவார். திருமாலைச் சென்று துயிலெழுப்பிய பிறகு தேவர்கள் துதிக்கிறார்கள். 12 பாடல்கள், திருமாலின் பன்னிரு பெயர்களையும் சொல்லித் துதிப்பன:

> ஈச நேமிய எம்பர னே, அலை
> விசு பாற்கடல் மேவிய வித்தக,
> மாசி லாமலர் மங்கைதன் நாயக,
> கேச வா கெருடக் கொடிய யாய் நம.

கண்ணன் மண் தின்றான் என்று கோவித்து யசோதை வாயைத் திறக்குமாறு சொல்ல; அவன் வாயைத் திறந்தபோது, அவ் வாயினுள்ளே யசோதை காண்கிறாள்:

> பிரமனைக் கண்டாள் அண்ட கோளத்தின் பெருமை கண்டாள்
> இரவியைக் கண்டாள், வானி னிந்துவைக் கண்டாள், எட்டு
> வரையினைக் கண்டாள், ஏழு மகோததி தன்னைக் கண்டாள்
> கரியிரு நான்குங் கண்டாள், கனகமாங் கிரியைக் கண்டாள்.

ஏருறத் திசையின் வைகு மெண்மரைக் கண்டாள், வானில்
தாரகைக் கண்டாள், தேவ தவத்தினர் குழாத்தைக் கண்டாள்,
பாரினைக் கண்டாள், ஆயர் பாடியில் தன்னைக் கண்டாள்.
சீருறு மகனைக் கண்டாள், சிறந்ததன் கைக்கோல் கண்டாள்.

ஏதிவன் இயற்கையென்னா ஏங்கினள் இருகண் மூடி
ஆதியாய் அகண்ட மெல்லாம் தன்வயிற் றடக்கி நின்ற
சோதியாம் இவனை யென்னே என்மக னென்று சொல்லும்
பேதைமை யென்னவென்று பீதிகொண் டசோதை நின்றாள்.

*பாரதப் போரைச் சொல்லுமிடத்து, தொடக்கத்திலுள்ள கீதை யுபதேசத்தை இவரும் சொல்லுகிறார். பாரதப் படலம் என்ற பகுதி போரைச் சொல்வது. இதனுள் 12 பாடல்கள் கீதை உபதேசம்; கருத்து, கண்ணன் யாவும் நானே என்று சொல்வது;*

'விசயநீ யானே உன்றன் வில்லியான் விசிகம் யானே
கசியுறு சதமும் யானே துணியுமொன் னலரென் சேட்டை
வசையுனக் கெங்கன் எய்தும் வருந்தல் நீ' என்றுமாயன்
இசைவுற விளம்பத் தன்பேர் உருவம் வான் இலங்க நின்றான்.

*நாராயண கவசம் என்று இவர் குறிப்பிடுகிறார் (110 : 165); ஆனால் கவசத்தைச் சொல்லவில்லை. கவசம் செவ்வைச் சூடுவார் பாகவதத்தில் உள்ளது.*

*சிசுபாலன் கண்ணனைப் பழித்தபோது, வீடுமன் அவனைத் தடுத்துக் கண்ணனைப் புகழ்கிறான் - 13 பாடல்கள் (106 : 49 - 69):*

இவனே உலகேழையும் ஈன்ற ருள்வோன்,
இவனே அயனைத் தரும் ஈறில் பிரான்,
இவனே அரன் வெவ் விடரைக் களைவோன்,
இவனே உயரும் பதம் ஈபவனே.

*கண்ணன் அருள் பெற்றோருள் இருவர் குறிப்பிடத்தக்கவர் - ஒருவர் மலர் கொண்டு அணிந்தவன், ஒருவன் சாந்தங்கொண்டு அணிந்தவன் (படலம் 50, 51).*

*இவர் பாடல்கள் எளிமையாயிருப்பினும் கவிதைப் பண்பில் சிறந்தவையல்ல; சுவையற்றிருப்பதும் உண்டு. பின்வரும் பாடல் கள் காண்க. திருக்கல்யாணத்துக்காக உருக்குமிணியை அலங் கரிக்கும் சமயம் சேடியர் கூறுகிறார்கள்:*

நித்திலப் பெண் நிறை மலர்க் காந்தளாம்
கைத்தலப் பெண் அருந்ததிக் கற்புப் பெண்
வித்தகப் பெண் விதர்ப்பனருட் பெண் நல்
உத்தமப் பெண் உருக்குமணிப் பெண்ணே.

மாதவப் பெண் மதிமுகப் பெண்மலர்
மீதி னுற்றபெண் வித்துருமப் பெண்ணே
ஏதமற்ற பெண்ணிந் திரை யாகும் பெண்
ஓதிமப் பெண்ணு ருக்குமணிப் பெண்ணே.

*கண்ணனுக்குத் தேவியர் எண்மர்; பதினாயிரத்தொருநூற்றெண் மர் என்று புராணம் சொல்லும். இத்தனை பேரிடமும் அவன் எவ்வாறு நேயமோடிருக்கிறான் என்பதை நேரில் கண்டறிய ஒருநாள் நாரதமுனி வந்தான். அவன் கண்டபோது, கண்ணன் ஒவ்வொரு தேவியின் இல்லிலும் எவ்வெவ்வாறு இருந்தான், எப்படி நாரதனைத் தவறாது உபசரித்தான் என்பதைப் புராணம் மிகவும் சுவைபடச் சொல்லும் 99: (34 - 57).*

*உபதேசப் படலம் என்பது இப்புராணத்தில் மிகவும் சிறப்பான ஒரு பகுதி (படலம் 124). இதனுள்ளும் உத்தவன் கேட்கக் கண்ணன் உத்தரங் கூறியதாக 14 பாடல்கள் உள்ளன. அவை மிகவும் சிறப்பானவை; அவற்றைக் கீழே காண்க:*

ஏதமில் இயமம் எத்தனை, நியமம்
  எத்தனை, சற்குணம் ஏது,
நீதியாய் வழங்கும் தவம் எது, சவுசம்
  எது, நிகரில் பொறை ஏது,
பாதகம் அகற்றும் தவம் எது, தியாகம்
  எது, தனம் எது, பலம் ஏது,
வேதமார் வேள்வி ஏது, மறை நெறியார்
  விழுமிய தக்கணை ஏது.

தயிரியம் எது, நற் சவுரியம் ஏது,
  சத்தியம் எது, உண்மை ஏதாம்,
இயல்புறும் இலாபம் எது, வித்தை ஏது,
  நலனுறு விபவங்கள் ஏது,
மயர்வற வயங்குந் திருஎது, வண்மை
  வளர் விதானங்கள் ஏது,
துயர்உறும் இலச்சை எது, சுகம் ஏது,
  துரிதமாய் வருதுக்கம் ஏது.

உறவெது, சுவர்க்க மெரிநர கெய்தாது
    உயர்த்திடு மனைஎது, நெறிசேர்
அறிவெது, அழிவில் லாதன ஏது, நல்
    அறிவிலா னெவனெவன் மூர்க்கன்,
வறியவ னெவன், சம் பன்னனார், வயங்கும்
    பண்டித னெவன், மரு ளகற்றி
அறிவுறும் ஈசன் எவன், எவன் ஈசன்,
    இயம்பென அரியருள் செய்வான்.

சத்தியம்பரர் சொத்துறத்தலின் னாவைத்
    தவிருதல், பிறர்மனை அடையாச்
சுத்தமெய் மறையை யறி குதல்நிலைமை
    துலங்கிடும் பொறுமை துன்பங்கள்
எத்தனை வரினும் வெருவுத லொழிதல்
    சஞ்சலம் விடைய மற்றிருத்தல்
குத்திர விடமம் விலக்குதல் அவச்சொல்
    குறைப்பதீது இயமம் பன்னிரண்டே.

தவஞ்செவம் ஓமம் சவுசநற் சிரத்தை
    தானம் ஆசாரிய சேவை
பவந்தனை ஒருவுந் தீர்த்த யாத்திரை ஒண்
    பரமனாம் முராரிதன் பத்தி
அவந்தனை அகற்றும் பரவுபகாரம்
    அறிஞனா யுளம் மகிழ்ந்திருத்தல்
கவந்தனைக் களைந்தோன் அருச்சனை யிவைதான்
    துவாதசங் கலக்கமில் நியமம்.

பரமனாம் எனது பதத்தினில் கருத்தைப்
    பற்றுவித்து அமர்தல் சற்குணமாம்,
சரீர விந்திரிய மொடுக்குதல் தவமாம்,
    சவுசமே கருமத்தை யொழித்தல்,
இருநிலத் திடுக்கண் கமிப்பது பொறையாம்,
    இருள்தரு காமத்தை ஒழித்தல்
அரிய மாதவமாம், தியாகம் இல்வாழ்க்கை
    அகற்று சந்நியாசமே ஆகும்.

தருமமே தனமாம், தயங்கிய பிராணா
    யாமமே சரியிலாப் பரமாம்,
விரிவுறு மவிதோய் வேள்வி யேயான்
    ஆகியவரி விளம்பு தக்கணைதான்

மருளகல் குருவாய் மலருஞா னோப
தேசமாம், வருதயி ரியமாம்
விரகமோ டிரத மொருவுதல், கலரை
வெறுத்தலே சவுரியம் ஆகும்.

ஆற்றுஞ் சமமே அவமில் சத்தியமாம்,
அறையு நல்வசனமே உண்மை,
தோற்றும் ஈறிலா முராரியாம் எனையே
துதித்திடும் பத்தியாம், வித்தை
சாற்றிடில் பரமாத்து மாவினை அறிதல்
சரியிலா விபவமா வனதான்
ஏற்றமா கியவை குந்தத்தினில் அங்கும்
ஈசுரன் இணையடி சேர்தல்.
ஆசையற் றிடுதல் திருவென லாகும்,
அளித்திடு தானமே தென்னில்
ஏசுற நிலத்தில் பல பிராணியையும்
தெண்டியா தொழிதலாம், இலச்சை
மாசுறு கருமம்தனின் மனமொழிதல்,
மறுவிலாச் சுகமின்ப துன்பம்
பாசம் அற்றிடவே கடக்குகை, துக்கம்
பலமுறு காமநத் திடுதல்.
உறவு சற்குருவாம் சுவர்க்கமாம் அவனதாள்
உயர்ந்த சாத்திக குணமலிதல்,
மறலிதன் உலகின் நிரையமாவது
தாமத குணம் வளர்தல், ஒண்மனையே
அறிவுறு கருத்தார் சரீர நல்வாள் இலா
அச்சுதனா மெனை அடைதல்,
வெறியுறு நெறியா வதுமனம் எங்கும்
விரிந்து குத்திர தெய்வத் தமர்தல்.
அருளிலாதவன் இந்திரிய நிக்கிரகம்
செயு நலனறிவி லாதவனாம்
மருடரு மதிக மூர்க்கனாங் காரம் வளர நான்
சமர்த்தனென்று அமர்வோன்
திருவரும் வறியன் சேர்ந்திடும் பொருளில்
சிந்தையில் பிரிதியில் லவனே
இருநிதி யுறுசம் பன்னனாம் அவனே
இயல்புறு சற்குண முடையோன்.

சரியில் பண்டிதன் இல்வாழ்க்கையில் பாசந்
தவிர்ந்து நற்கதியினை யறிவோன்
இருநில மதனின் ஈசனா னவனே
விடை அறப் பற்றுதல் தவிர்ந்தோன்
மருடரு நீசன் சகல பாவத்தின்
மருவுவோன் இவை யெலா ஞான
உருவமா யமருந் தவவுணர் கெனவே
உலகளந்தவன் பினர் அறைவான்.

இருநிலம் அதனில் இயற்றும் இல்வாழ்க்கை
உததியைக் கடந்திட விலங்கி
வருதரு நாவாயா மனிதர் தஞ் சனன
மன்னியவ் ஓடத்தை விடுப்பான்
சரியில் சற்குருவாம் சார்ந்திடா நெறியைத்
தருமனு கூலமாம் பவனன்
பரமனாகிய யானிவையறிந் துய்யாப்
பாவியர் தம்மைத் தாங் கெடுப்பார்.

துட்டமாவினின் வாய்துலங்கய முறவே
பிணித்திடும் சூத்திரக் கயிறு
மட்டினை அறியா ததிகமாய் மெட்டி
அவமென மனத்திடை உணர்ந்தே
விட்டு மெட்டிடுநல் விரகினைச்சீவன்
விடையத்தின் கருத்தினை விட்டே
அட்டைபோல் அவை பற்றுவ முனர்த்திருப்பி
என்னிடத்து அமைப்பதே அறிவாம்.

## நப்பின்னை வரலாறு

*ஆசிரியர் 36 பாடல்களில் நப்பின்னைப் படலம் என ஒரு படலம் அமைத்திருக்கிறார். நப்பின்னை வரலாறு தமிழ்மொழிக்கு ஒரு சிறப்பான வரலாறு. யசோதையின் தமையனாய் மிதிலையில் வாழ்ந்த கும்பகனுடைய பசு நிரையில் கால நேமி என்ற அசுரன் புத்திரர் எழுவர் எருதின் உருவங் கொண்டு புகுந்து யாருக்கும் அடங்காது பேரின்னல் விளைத்து வந்தனர். அவற்றை அடக்குவார் யாரும் இலர். மிதிலை அரசனான வெகுலாசுவன் என்பவன் தன் சேனைகளைக் கொண்டு அடக்க முயன்றும் முடியவில்லை. இந்த எருதுகளை ஒழிப்பவர்களுக்கு என் மகள் நப்பின்னையை மணம் செய்து கொடுக்கிறேன் என்று அவன் பறைசாற்ற, வந்தோரெல்லாம் அந்த எருதுகளால் தாக்குண்டு*

மடிந்தனர். அதன்மேல் கும்பகன் நந்தகோபனுக்குச் சொல்லி யனுப்பி, அவன் அங்கு வருகிறான் உடன் வந்த மகனாகிய கண்ணபிரான் அந்த எருதுகளோடு போரிட்டு அவற்றை அழித் தான். நப்பின்னை கண்ணனுக்கு மாலையிட்டாள். முறைப்படி திருமணம் நடந்தது.

நப்பின்னை திருமணம் உருக்குமணிப் பிராட்டி திருமணத் திற்கு முன் நிகழ்ந்தது. நப்பின்னையின் வரலாறு தமிழ்நாட்டில் வழங்கும். சிலப்பதிகாரம், மணிமேகலை, சிந்தாமணி ஆகிய காப்பியங்களும், தேவாரம், திருக்கோவையார் ஆகிய சைவ நூல் களும், ஆழ்வார் பாடல்களும் நப்பின்னையைக் கண்ணன் தேவி யாகக் கூறுகின்றன. ஆண்டாள் திருப்பாவை 20ஆம் பாடல் திருமாலைத் துயிலெழுப்புமிடத்து, 'செப்பன்ன மென்முலை செவ்வாய்ச் சிறுமருங்குல் நப்பின்னை நங்காய் திருவே துயி லெழாய்' என்று சொல்வது காண்க. திருவள்ளுவ மாலையில் 'உபகேசி தோள் மணந்தான்' என்றவிடத்து 'உபகேசி - நப்பின்னைப் பிராட்டியார்' என்றும் நேமிநாத விருத்தி கூறும். பண்டைய தமிழ் இலக்கணத்தில் ஏறு தழுவுதல் என்ற ஒரு செயல் ஆயர் களிடையே திருமணத்துக்கு முன் நிகழ்வதாகச் சொல்லப் பட்டிருக்கின்றது. இதுவே இந்தப் பாகவத புராணத்தில் நப்பின்னைப் படலமாக உருக்கொண்டது போலும். நப்பின்னை யின் பெயர் பின்னை; ந என்பது அடைமொழி. பின்னை பிஞ்ஞை என்றும் இலக்கியத்தில் வழங்கும்.

தமிழ்நாட்டில் ஆண்டாள் நீளையின் அவதாரம் என்று சொல்லுவர். இந்த நீளையே நப்பின்னை என்பது பிள்ளை லோகஞ்சியர் முதலான ஆன்றோர் கருத்து.* வடநாட்டுக் கிருஷ்ண லீலைகளில் கிருஷ்ணனுக்கு ராதை எப்படி ஒப்பானவளோ, அப்படியே தமிழ்நாட்டில் நப்பின்னை ஒப்பானவள்.

நப்பின்னை அல்லாமல் அருளாளதாசர் நாக்கினசித்து திருக்கல்யாணம் என்ற ஒரு படலம் அமைத்திருக்கிறார். இங்கு இவ் வரலாறு 32 பாடல்களால் சொல்லப்படுகிறது. கௌசல ராசன் மகள் நாக்கினசித்து. தன்னிடமுள்ள ஏழு எருதுகளையும் அடக்கியவனுக்குப் பெண்ணைக் கொடுப்பதாக அரசன் முரசறை வித்தான். பிற அரசர் எருதுகளை அடக்க முடியாது போகக் கண்ணன் அவைகளை அடக்கி நாச்சினசித்தை மணந்தான்.

---

* மு. இராகவையங்கார் ஆராய்ச்சித் தொகுதி 1938. நப்பின்னைப் பிராட்டியார் என்ற கட்டுரை பார்க்க.

வந்து தடுத்த மன்னர்களை அருச்சுனன் தன் அம்புமலையால் தடுக்க, கண்ணன் நாக்கினசித்தைத் துவாரகைக்குக் கொண்டு சென்றான்.

இது புராண வரலாறு இங்கு நாக்கினசித்து அரச பரம்பரை. நப்பின்னை ஆயர் குலத்தவள். ஆனால் எருதுகளை அடக்கி மணந்த இரு வரலாறுகளையும் இரு மணங்களையும் புலவர் கூறுவது ஒரு விசித்திரமே. நப்பின்னை வரலாறு வடமொழி யில் இல்லை. கண்ணன் மணந்த தேவியருள் தலைசிறந்தவர் எண்மர். அவர்களாவார் உருக்குமணிப் பிராட்டி, சத்தியபாமி, சாம்பவதி, காளிந்தி, மித்திரவிந்தை, சத்தியை, பத்திரை, இலக்கணை என்று வடமொழிப் புராணங்கள் கூறும்.* இவ்வெண் மருள் முதல் இருவரையுமே அடியவர் உலகம் நன்கு அறியும். இங்கு நீளையோ ராதையோ சொல்லப்படவில்லை. நப்பின்னை பற்றிய தமிழ் வரலாறுகள் வடமொழித் தொடர்பில்லாமலே வழங்குபவை. வடமொழியையொட்டி எட்டு மணங்களையும் பற்றிக் குறிப்பிட்ட அருளாளதாசர், தமிழ் மரபை ஒட்டி நப்பின்னை மணத்தை அதிகமாய்ச் சொன்னார் போலும். எப்படியும் ஏறு தழுவி மணந்த இரு வரலாறுகள் இங்கு உள்ளமை அறியத்தக்கது; அன்றியும் உருக்குமணி திருமணத்திற்கு முன் நப்பின்னை இரேவதி என்ற இரு மணங்களை இப்பாகவத புராணம் கூறுவது கருதத் தக்கது.

சத்தியை - சத்தியவதி, நாக்கின சித்து - நக்னஜித் என்று வடமொழியில் சொல்லப்படும்.

### பிற செய்திகள்

அச்சுதானந்த கோவிந்தன் என்பது இவருக்கு மிகவும் பிடித்தமான ஒரு தொடர். உருக்குமிணியை நாச்சியார் என்றே சொல்லுவார்; இரு படலங்கள் இப்பெயரை யொத்து அமைத் திருக்கிறார். உருப்பிணி என்றும் சொல்வார்; இச்சொல் வடிவம் நாலாயிரப் பிரபந்தத் துள்ளும் காணப்படுவது. வடமொழிப்

---

* கண்ணன் தேவியர் எண்மரை மணந்தான் என்ற வரலாற்றைத் தழுவி, சிந்தாமணியில் சீவகனுக்கு ஆசிரியர் எட்டு மணம் சொல் கிறார். ஏறு அடக்கி நப்பின்னையை மணந்ததற்கு ஏற்ப, சீவகன் ஏறு அடக்கிப் பதுமுகனுக்காக ஆயர்குலப் பெண்ணான கோவிந்தையை மணக்கிறான். அங்கும் கோவிந்தை மணம் சீவகனுடைய எட்டு மணங்களுக்குப் புறம்பாகத் தொடக்கத்திலும் உள்ளது. கடைசி மணம் பாகவதத்தில் இலக்கணை மணம், சிந்தாமணியிலும் கடைசி மணம் இலக்கணை மணம்.

பெயர்களைத் தமிழில் வழங்கும்போது, சில ஆசிரியர் தம் மனம் போல் மாற்றிக்கொள்வார்கள். சிஷ்யன் என்ற சொல் சீடன் எனவே வழங்கும்; மணவாள மாமுனி சிச்சன் என்பார். வாணா சுரன் மகள் உஷாவை உழை என்று சிலப்பதிகாரம் கூறும். நம் அருளாளதாசர் உடாங்கனை என்றே எல்லா இடங்களிலும் வழங்குகிறார்; இவர் சிலப்பதிகாரம் பார்த்ததில்லை போலும். மிதிலை என்பதை மிதுலை என்றே சொல்கிறார். காவிய நாயகிக் குரிய சிறப்புக்கள் அனைத்தையும் உருக்குமிணிப் பிராட்டி யாருக்கு அமைத்துப் பாடுகிறார். உருக்குமிணி அவதாரம் கூறிய விடத்து, பெரியாழ்வார் திருமொழிப் பாடல்களையொட்டிக் கருத்துக்களை அமைக்கிறார். பொற்கொடிக்குச் சாதகம் பண்ணி னார். தாயர்வாய்ச் சங்கம், பைந்தமிழ் நாட்டினர், நாமம் உருக்குமிணி என விளம்பினர் சோபனம் பாடித் தொட்டிலுய்த் தனர். பொன்னின் சங்கிலித் தொட்டிலாட்டித் தொனியெழப் பாடுவார். தாலேலோ திரு என்று சாற்றினார். திருவிளையாடீ ரெனவே விளம்புவார். திருவே செங்கீரையதாடுக, சப்பாணி கை கொட்டுக, தவழ்ந்தே விளையாடுதி, தோள் வீசி நடந்திடு, தளருந் நடை நீ நட, புறம்புல்குதி, அப்பூச்சி கண்டாடுக, அம்புலி வாவென ஓதுதி, அக்காக்கை பொனாலமர் கோல் கொடுவா, தும்பீ மலருது; பின்னர் கழங்குமாடிக் களித்து வந்தாள், அம்மானையு மாடினள், பந்தாடி யுவந்தனள், ஊசல்லினி தாடினள், நீராடல் உவந்தனள் - என்ற இடங்களில் பிள்ளைத் தமிழின் பொருளமைப்பையும் காண்கிறோம்.

பேதை பெதும்பை நிலைகளை மேற்காட்டியவாறு பாடி விட்டு மங்கைப் பருவ அழகை விரிக்கிறார். பாதாதிகேசமாக 25 பாடல்கள். சில சமயம் இவர் முழுப்பிரபந்தங்களையே நூலுள் அமைத்திருக்கிறார். அவ்வாறு அமைந்தவை ஊசல் பள்ளியெழுச்சி என்பன. ஊசலில் பெரிதும் விருப்பமுடையவர் போலும். சந்தர்ப்பம் நேர்ந்தபோதெல்லாம் ஊசலைச் சொல்லு கிறார் உருக்குமிணி திருக்கலியாணத்தில், 'பொன்னூசலினேறி னன் பூந்திரு' என்று பலமுறை குறிப்பிட்ட பிறகு, நான்கு பாடல்கள் 'ஆடீரூசல்' என்று பாடுகிறார்.

கைவளைகள் கலகலென ஆடீரூசல்
காலிலணி சிலம்பார்ப்ப ஆடீரூசல்
மொய்யணி ஐம் பாலிலெழ ஆடீரூசல்
மூவுலகில் நிகரில்மின்னே ஆடீரூசல்

மெய்யுரைசெய் நாவுடையீர் ஆடீரூசல்
　　விதர்ப்பனருள் மெல்லியலீர் ஆடீரூசல்
பையரவில் நடித்திடுவான் தேவியான
　　பங்கயமேற் பசுங்கிளியே ஆடீரூசல்.

*திருமணம் முடிந்த பிறகு, கண்ணனும் உருக்குமிணியும் ஊசலில் அமர்கிறார்கள். அந்த இடத்தில் ஆசிரியர் எட்டுப் பாடல்கள் கொண்ட ஓர் ஊசல் பிரபந்தமே பாடுகிறார்.*

நீலமணி யொடுமாலின் மணியு மாட
　　நித்திலத் தாமமுமாட நிறைந்த பூவின்
மாலைகளும் அசைந்தாட வண்டுமாட
　　மருங்கெழின்மே கலையாடக் குழையு மாட
வேல்களெனும் விழிகுழையோ டாடக் காதின்
　　விளங்குதிருக் குண்டலமும் தோடு மாட
ஆலினமர் பழம்பொருளே ஆடீரூசல்
　　அழகுசெறி உருக்குமிணி ஆடீரூசல்

*அடுத்த ஏழு பாடல்களில் ஊசலாடினார்கள் என்றே சொல் கிறார். பின்னும் சத்தியபாமை திருக்கல்யாணம் முதலான இடங் களிலும் ஊசலாடினார்கள் என்றே சொல்லிக்கொண்டு போகிறார்.*

*பள்ளி எழுச்சியும் இதுபோல, பாற்கடலில் பள்ளி கொண்டு யோகத்துயில் புரியும் பரந்தாமனை இந்திரனை முன்னிட்ட தேவர்கள் சென்று வணங்கித் துயிலெழுப்புகிறார்கள். இவ்விடத்து ஆசிரியர் பத்துப்பாடல் கொண்ட ஒரு பள்ளி எழுச்சிப் பிரபந்தமே பாடியிருக்கிறார். இங்கு கூர்மம், ஆதிமூலம். மீனம், வராகம், நரசிங்கம், வாமனன், இராமன், கண்ணன், ஆகிய அவதாரங்களை முறையாகப் பாடுகிறார்; பல இடங்களிலும் இவர் கூறும் குறிப்பால், கஜேந்திரனுக்கு அருள் செய்துவந்த ஆதிமூலத் தோற்றத்தையும் ஓர் அவதாரமாகவே கருதினார் என்று தெரிகிறது.*

வெற்பினைக் கடைமத்தென வேலையுள் நிறுவிச்
சற்பம் வண் கயிறாகிடக் கடைந்தமிர் தத்தை
அற்ப மாமசுரர்க் கிடாதெமக் குவந் தளித்த
அற்புதா அமலா பள்ளி யுணர்ந்தரு ளாயே.

*மண நிகழ்ச்சிகள் மிகவும் அதிகமாக வருகின்றன என்று குறிப் பிட்டோம். முதலாவதாக வசுதேவர் தேவகியை மணம் புரிவதி லிருந்து வாணாசுரன் மகள் உடாங்கனையை (உஷையை)*

*அநிருத்தன் மணம் புரிகிறவரையில் சொல்லப்பட்ட பதினைந்து திருக்கல்யாணங்களிலும் மாலையிடுதல், கனலிடை ஆகுதிகள் சமித்துடன் நிரைத்தல், மங்கல நாணினைப் பூட்டுதல், பொரி அக்கினியிற் பெய்தல், அம்மி மிதித்தல், அருந்ததி காட்டல் என்ற சடங்குகளைத் தவறாது குறிப்பிடுகிறார்.*

அங்கியின் னிறை யாகுதி பெய்தனர்
சங்குபேரி கழன்றிடச் சாகைமா
நங்கை நப்பினை நற்கந் தரத்தினிற்
செங்கை மங்கல நாண் செறிந் தானரோ.

மற்று மாகுதி செய்து வலமுறச்
சுற்றித் தேயுவைத் தாய் மலர்த் தாளிறை
பற்ற அம்மி மிதித்துப் பல் லாண்டெழ
உற்று நோக்கினர் உம்பர் அருந்ததி.

*மற்றுமோரிடமும் குறிப்பிடுவோம். கண்ணன் மகனான சாம்பன் துரியோதனன் மகள் இலக்கணையை மணம் புரிகிறான். அந்த இடத்தில் ஒரு பாடல்:*

அருமறை யவர்களெல்லாம் ஆகுதி செய்யச் சாம்பன்
தெரிவைதன் கந்தரத்திற் சிறந்தமங் கலநாண் சாத்தி
அரிவைதன் னுடனே தீயை வலம்வர அம்மி மீதின்
மருவமர் குழலி காலால் மிதிக்கவான் வடமீன் கண்டார்.

*சில இடங்களில் படலமுடிவில் பல சுருதியும் சொல்கிறார்.*

*பாகவத புராணம் கண்ணன் வரலாற்றைக் கூறும் முகத்தால் திருமால் பரத்துவம் கற்பிக்க எழுந்தது. ஆதலால் சிவபிரானும் திருமாலைத் துதித்தார் என்று கூறுவதே இதன் இயல்பு. இந்த இயல்பைப் பல இடத்தும் காண்கிறோம். சிவ பெருமான் தம் முன் தோன்றிய அரியைப் பன்னிரு நாமமும் சொல்லித் துதித்தல்:*

கேசவ நமவே நாரண நமவே
 கிளரொளி மாதவ நமவே
மாசறு சுடர்க்கோ விந்தனே நமவே
 வண்மைசேர் விண்டுவே நமவே
ஏசற உயர்ந்த எழிலுறு மதுசூ
 தனநம இடரினை யகற்றும்
தேசுறு திருவிக் கிரமனே நமவே
 சிறந்திடும் வாமனா நமவே.

பல இடங்களிலும் சிவபெருமானைக் குறிப்பிடும்போது, முறையாக ஆகுவாகனன், தோகை மாமயிற் சண்முகன், கணங்கள் முதலியன தவறாது குறிப்பிடுகின்றார். பின்னர் பஸ்மாசுரன் என்னும் வருகாசுரனுக்குப் பரமேசுவரன், 'நீ யார் தலையில் கை வைத்தாலும் அவர் அழிவர்' என்று வரங் கொடுக்கவும், அவன் அவர் தலையிலேயே கைவைக்கப் பார்க்கிறான். அவர் ஓடவும், திருமால், அங்குத் தோன்றி அவன் தன் தலையிலேயே கை வைத்து அழியும்படி செய்து 'மருளனாகிய அசுரனுக்கு இவ்வரம் அருளலே அவம்' என்று அறிவுறுத்துகிறார்.

அம்பிகா வனப் படலத்தில், அம்பிகையை நந்தகோபன் முதலான யாதவர் சென்று வழிபடுவதைச் சொல்லும்போது, விநாயகரையும் சண்முகரையும் குறிப்பிடுகிறார். அங்கு அம்பிகை பாகன் ஆலயமும் உள்ளது என்கிறார். இது போலவே, நாச்சியார் தேரேறு படலத்தில், கண்ணன் வராதது கண்டு உருக்குமிணி அம்பிகைக்கு அருச்சனை செய்து வேண்டுகிறாள். அம்பிகையை அங்கு துர்க்கை என்று கூறுகின்றார்.

சரித்திரத்தின் தன்மையால் ஆசிரியர் திருமால் பரத்துவம் சொல்லும் நிலைமை இருப்பினும், பல இடங்களிலும் சிவனுக்கும் திருமாலுக்கும் வேறுபாடின்மையை நன்குணர்த்திச் செல்கின்றார். தட்சகப் படலத்தில், அரி அரனுடனே, 'உன்னை எள்கினரேல் என்னையும் அகற்றினராம். உன்றனைத்தான் யானென உணரார் சாந்தியை உறார்' என்று ஓதுகிறார். கயிலாச யாத்திரைப் படலத்தில் அரி அரன் இருவரும் ஒருவரையொருவர் துதித்துக் கொள்வது காணத்தக்கது:

> வரையினைத் தனுவாய் வளைத்தருள் முதல்வா
> நம, உனை மதிக்கிலா அசுரர்
> திரிபுர மெரித்த சிவநம, இந்து
> திகழ் கின்ற வேணியாய் நமவே,
> கரியுரி தனைப் போர்த் தருளுவாய் நமவே
> கறை மிடற் றிறைவனே நமவே,
> அரகரா நமவே, பசுபதி நமவே,
> அந்தகாந் தகநம என்றான்.

சிவபிரான் திருமாலைத் துதித்தது 'கேசவ நமவே' என்ற பாடல் முன்னே காட்டப்பட்டது. மேலும், சிவபிரான் வருணனையைக் கூறும்போது இவர் சைவ சம்பிரதாயம் முழுமையும் தழுவியே பாடுகிறார்:

வானதி பிறை வெண் கூவிளை கடுக்கை
சாந்தையோ டெருக்கலர் மத்தம்
பூ நிறை சடைகள் அசைந்திட நுதலின்
அழல்விழி பொருந்திடப் பஞ்ச
ஆனனந் திகழ உழைமழுக் கபாலம்
அழல் கரத் துறமலை யரையன்
மானிடத் திலகக் கொடி குடை வயங்க
அரனுயர் விடையின்மேல் வந்தான்.

உரக கங்கணம் கையில் இலங்கிடச் சூலம்
ஒளிவிட உமாபதி விடைமேற்
சரியிலாப் பவளக் கிரியென வரவே
சங்கொடு தமருகம் முழங்க
மரவுரி யுடுத்த சதமுகன் குண்டோ
தரன் திரிவாமிமா வனுவோடு
அரிமுகன் பஞ்ச வாகு வெண்ணீற்றை
அணிந்தவர் அன்புடன் அடைந்தார்.

*கம்பராமாயணத் தொடரும் கருத்தும் இந்நூல் எங்கும் காண லாம். இது இயற்கை. பெருநூல் செய்த இவ்வாசிரியர், தம்மினும் பெருநூல் செய்தாரைப் பயின்று செய்தலே மரபு. 'நாடிய பொருள் கை கூடும்' என்ற பாடலைத் தழுவியது முன் காட்டினோம். 'வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்' என்ற கம்பர் பாடலைத் தழுவி எழுந்தது பின்வருவது:*

மறமில்லை மனந்தனின் ஞான முற
அறனில்லை அதன்ம மிலாதுயரும்,
உறவில்லை உறும் பகை யின்மையினால்
குறைவில் வள நாடியல் கூறரிதே.

*நாராயணன் எங்குமிருக்கிறான் என்று பிரகலாதன் இரணியன் முன் சொன்ன 'சாணினுமுளன்' என்ற கம்பர் பாடல் இங்கு,*

நொய்யதாகும் அணுவினை நூறெனக்
கொய்து கூறிட்ட கோணங்கள் தோறுளன்,
வையம் வானம் வடவரை மீதுளன்,
மெய்யுட் டோன்றி விளங்கிய மாமுதல்.

நிகரிலாத என்நெஞ்சி லுளன், இவன்
புகலுஞ் சொல்லினுளன், மணி பூணுளன்

இகழ்வில்உன்னி தயப்பங் கயமெனும்
முகையின் விஞ்சும் பொகுட்டுள மூர்த்தியோன்

என வருகிறது. இதனோடு கம்பர் பாடலை ஒப்புநோக்குக.

சாணினும் உளன், ஓர் தன்மை அணுவினைச் சதகூறிட்ட
கோணினும் உளன், மாமேருக் குன்றினும் உளன், இந்நின்ற
தூணினும் உளன், நீ சொன்ன சொல்லினும் உளன், இத்தன்மை
காணுதி விரைவில் என்றான் நன்றெனக் கனகன் நக்கான்.

'நம்பியைக் காண நங்கைக் காயிரம் நயனம் வேண்டும்' என்ற கம்பர் பாட்டு இங்கு 'மாயன் வடிவின்னலம் மகிழ்ந்தினிது நோக்க - ஆயிழை உனக்கு விழி ஆயிரமும் வேண்டும்' என்று வருகிறது.

இந்தப் பாகவதம் திருமாலின் பத்து அவதாரங்களையும் விவரிக்கிறது. முதல் ஏழு அவதாரங்களையும் தனித்தனிப் படலங்களில் குறித்துக் கூறிய பிறகு நாரதமுனிவன் கண்ணன் பிறப்பு முதல், அவனே உருக்குமிணிக்கேற்ற மணவாளன் என்று கூறுவது வரையில் பல படலங்களால் விரித்துரைக்கிறார். இதுவரை நூலின் பாதிப் பகுதி. கண்ணன் மணம் செய்தபின் நடந்த நிகழ்ச்சிகள் அடுத்த பகுதி. வைதிகப் படலத்தில், கண்ணன் உருப்பிணியுடன் ஓர் யாகம் செய்யத் தொடங்குகிறான். அப்போது ஓரந்தணன் தோன்றி, "என் பிள்ளைகள் மூவர் பிறந்தவுடன் உடலோடு மாயையால் மறைந்து விட்டார்கள். என் மனைவி நாலாம் பிள்ளை பெறப் போகிறாள். இப்பிள்ளை யேனும் மாயையால் மறையாமல் நீ காத்தருள்" என்று வேண்டலும் பார்த்தன் அதற்கு உறுதியளிக்கிறான். அப்பிள்ளையும் பிறந்தவுடன் மறைந்தது கண்ட வேதியன் பார்த்தனுடைய வில்லாற்றலைப் பழிக்கிறான். கண்ணனிடம் முறையிட, அவன் அவ்வேதியனையும் பார்த்தனையும் தேரில் ஏற்றிக் கொண்டு விரசையாற்றங் கரையில் இருவரையும் நிறுத்தி விட்டு, அப்பால் வைகுந்தம் புகுகிறான். அங்கு கீழ்த் திசையில் சண்டப் பிரசண்டர், தென் திசையில் பத்திர சயத்திரர், மேல் திசையில் சய விசயர் வட திசையில் தாதா விதாதா காவல்; உட்சென்று அங்கு அச்சுதனைக் கண்டான். 'அந்தணன் சிறுவனைத் தருகிறேன். நீ அவனியில் தச அவதாரம், இந்துவின் வதனத் தெண்மர் தேவியர் மகிழ்ந்திடக் காட்டுதி' என்றான். இவனும் மச்சாவதாரம் முதலான எல்லா நிகழ்ச்சிகளையும் விரிவாய் நடித்துக் காட்டினான். தனது அவதார நிகழ்ச்சிகளையும் விரிவாய் நடித்து, மறையவன் புதல்வனுக்காக இங்கு வந்து நிற்பதையும் நடித்துக் காட்டி, மேல் வரப் போகிற

*பரியுருவாகிய கல்கி யவதாரத்தையும் நடித்துக் காட்டினான். விமலன் மகிழ்ந்து அந்தணன் சிறுவனைத் தரவே, பெற்று வந்து அந்தணனிடம் கொடுத்தான்.*

*இவ்வாறு கண்ணன் அங்கு நடித்துக் காட்டிய கல்கியவ தாரத்தையும் கற்கிப்படலம் என்ற தனிப் படலமாக இறுதியில் விரித்துரைக்கிறார். சனமேசயனுக்குப் பின் தொடர்பாகப் பல தலைமுறை ஆட்சி செய்வோர் வரலாறுகளைச் சொல்கிறார். இவ்வாறு பெயரும் ஆட்சிக் காலமும் சொல்லுகின்ற பாடல்கள் 24. பிறகு உலகில் ஆட்சியும் தருமம் எப்படிக் கீழாகும் என்பதை மூன்று பாடல்கள் கூறும்.*

தருமமில் மிலேச்சர் மரபினோர் அனேகர்
　　தரையினை யாளுவர், தம்மில்
துரிதம் வந்துற வேஅமரிடை அனேகர்
　　மடிந்திடச் சூத்திரர் முதலாய்,
வருண மற்றுயரும் சங்கர சாதி,
　　மறுவிலா அனா மிகராள்வர்,
அருமறை புராணசாத்திரம் எவையும்
　　அருமறை நெறி அகன்றிடவே.

வருணமும் இலாமல் மறை நெறிப்படியே
　　மணஞ் செயும் கருமம் அகல,
அரிவையர் பலரை யணைந்திடஅதுவும்
　　அறன் எனச் சம்மதமாகிப்
பருவமோ ரெட்டில் சிசுவை மங்கையார்கள்.
　　பயந்திடப் படியிடை நரர்க்குப்
புருட வாயுசுசொல் வருட முப்பதுமாய்த்
　　தும்பைபோற் குறுகும் பூமரங்கள்.

தரும மெய் பொறை சற்குணம் அருளீகை
　　தவந் தெய்வம் பேணுதல் எல்லாம்
இருநிலத் தகலக் கதம் வதை முயற்சி
　　இகழ்ச்சி பொய் வஞ்சனை யதனம்
மருளிவை மலிய மலர் மகள் வாணி
　　அகன்றிட மதியிலாக் கயவர்
திரளு வரியினும் அதிகமாய்ப் புவிமான்
　　திடுக்கிட மிடைகுவா ரன்றே.

*இதன் பின் அவந்தி தேசத்தின் கம்பளக் கிராமத்தில் பிராமண குலத்தில் விண்டுசித்து என்பவன் மகனாய்க் கற்கி பிறப்பான்.*

*இவன் தங்கையானவள் கயவர்களை அழிப்பாள். கலியுகம் நீங்கும். கிரேதாயுகம் பிறக்கும். தரும வழியில் நிற்கும் மனிதர்களே எஞ்சுவார்கள்.*

*இவ்வாறு கதையை முடித்துப் பின் பாகவதம் வந்த வழியை யும் சொல்கிறார். அனந்தன் முதலாக விதுரன் வரை சொல்லப் பட்டது என்கிறார்.*

*மீன் முதலாக தெய்வத் தன்மை பொருந்திய கிருஷ்ணாவ தாரம் வரையில் வளர்ந்து அபிவிருத்தியடைந்த அவதாரமுறை. அடுத்ததாகிய குதிரை வடிவமுடைய கல்கியவதாரத்தில் கீழிறிங்கி விடுகிறது. இனி வரப் போவதையும் இவ்வாறு வரை யறை செய்து புராணங்கள் உணர்த்துவது இன்று படிக்கும் நமக்குப் பெருவியப்பாய் உள்ளது. இதை நாம் புரிந்து கொள் வது எளிதன்று. உலகத்தின் இறுதி ஊழியிலே கடவுள் குதிரை யாக வந்து, அதர்மம் எல்லாம் அழியச் செய்து தருமம் மீண்டும் புதிய யுகத்தில் தலையெடுக்கச் செய்கிறார். அணு யுகத்தையும் அணுச்சக்தி ஒரே வினாடியில் பல லட்சம் மக்களை அழித்த உண்மை நிகழ்ச்சியையும் நேரில் உணர்ந்த நாம், எதிர் காலத்தில் இப்படி நடக்கப் போவதைப் புராணத்தில் படிக்கும் போது, சிறிது சிந்திக்கவே செய்வோம். பறக்கும் தட்டுகள் பூவுலகில் பறக் கின்றன. சிலர் கண்டார்கள். இவை பூவுலகத்துக்குச் செவ்வாய் கிரகத்திலிருந்து வருபவையோ என்ற அச்சம் அமெரிக்க விஞ்ஞானிகள் மனத்தில் இருக்கிறது. பூலோகத்தில் தெரிந்த எந்த ஆற்றலும் அப்பறக்கும் தட்டுகளைப் பாதிக்க இயலவில்லை. ஒரு கால் இது கல்கியவதாரத்தின் முன்னோடியாக இருக்கலாம் அல்லவா? யாரும் அறிந்து சொல்ல இயலவில்லை.*

***காலம்***

*நூல் அரங்கேற்றிய காலத்தைத் திருவரங்கப் படலம் 154ஆம் பாடல் திட்டமாய்க் குறிப்பிடுகிறது.*

ஆயும் மறையோ ரெண்ண வரும்ச காத்தம்
    ஆயிரத்து நானூற்றோ டறுபத் தஞ்சாம்
தூயகப கிருதுதனின் முதன்மா தத்தில்
    துலங்கு குரு வாரத்துத் திராட நாளில்
நேயமுடன் நெல்லிநகர் வரத ராசன்
    நிகரிலரங் கத்திலர வணையின் ஓங்கும்
நாயகன்முன் அறிஞர் மகிழ்ந் திடவே வாகு –
    தேவகதை அரங்கேற்றி நலனுற் றானே.

அரங்கேற்றிய காலம் சகாத்தம் 1465, அதாவது கி.பி. 1543 சுப கிருது வருடம் சித்திரை மாதம் குருவாரம் உத்திராட நட்சத்திரம். ஆதலால் வாசுதேவ கதை செய்த வரதராசர் (அருளாளதாசர்) காலம் 16ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியாகும்.

நூலகத்துள்ள மற்றொரு குறிப்பும் கருதத்தக்கது. தில்லைக் கோவிந்தராசர் துதிப்பாடல் (திருவரங்கப் படலம் 68)

நச்சணி நகில் வீறிய உமை கொழுநன்
நடஞ் செயக் கமலனோ டிமையோர்
நிச்சலும் முராரி தனைத்தொழும் பதியை
முன்புபோல் நிறுவிய நிருபன்
அச்சுத ராயன் வணங்கிட அரவின்
அழகிய தில்லையம் பதிக்கே
மைச்சுடர் வரைபோல் வயங்கு கோவிந்த
ராயன்மா மலரடி வாழி.

இங்கு குறிப்பிட்ட அச்சுதராயன் 1529இல் விசயநகரப் பேரரசின் மன்னர் பதவி ஏற்றவன். இவன் காலத்தில் ஆசிரியர் நூல் செய்யத் தொடங்கி 1543இல் முடித்தார் என்று தெரிகிறது.

## பதிப்பு

நெல்லிநகர் அருளாளதாசரென்னும் மதுரகவி ஸ்ரீவரத ராஜ ஐயங்கார் அருளியது, ஸ்ரீமகா பாகவதம் முதற்புத்தகம்; திரிசிபுரம் மகாவித்துவான் கோவிந்த பிள்ளை, பரங்கிப் பேட்டை இலட்சுமணப் பிள்ளை பார்வையிட்ட பிரதிக்கிணங்க காளப்பட்டி வித்துவான் வ.வெ. திருமலைகொண்ட நாயக்கர் குமாரர் தி.வி. சிங்கிரி நாயக்கர் பரிசோதித்து, பி.நா. சிதம்பர முதலியாருடைய வித்தியாரத்நாகர அச்சுக்கூடம், 1913, படலம் 78 பாடல், 4664. இரண்டாம் புத்தகம்: பவானி பால பாரதி முத்து சாமி ஐயர், ச திருச்சிற்றம்பலம் பிள்ளை, வ.வெ. திருமலைக் கொண்ட நாயக்கர் என்னும் மூவராலும் பல தேச ஏட்டுப் பிரதி களைக் கொண்டு பரிசோதிக்கப்பட்டு அச்சிட்ட பிரதிக்கிணங்க, சிங்கிரி நாயக்கரிடம் அனுமதி பெற்று, சிதம்பர முதலியார் வித்தியாரத்நாகர அச்சுக்கூடம், 1913, படலம் 79 முதல் 132 வரை; பாடல் 4483. ஆக இரண்டு பாகமும் மொத்தப் பாடல் 9147. இம்முகப் பேட்டினால் இப்பாகவதத்துக்கு முன்னமே ஒரு பதிப்பு இருந்ததென்பது தெரிகிறது பதிப்புரையில் பின்வரும் பகுதி காண்க; இம் மகா பாகவதத்தை அச்சிட வேண்டுமென்று

புங்கத்தூர்க் கந்தசாமி முதலியார் சற்றேறக் குறைய 25 வருஷங் களுக்கு முன் முதற்கொண்டு வருந்தி முயற்சித்து இற்றைக்கு நாலைந்து வருஷங்களுக்கு முன் 4664 செய்யுட்களை மாத்திரம் அச்சியற்றி வெளியிட்டார். அவர் ஆயுள் முடிவெய்தினமையால் எஞ்சியது வெளிவரவில்லை..... நாங்களும் பற்பல ஏட்டுப் பிரதி களைக் கொண்டு இயன்றவரை பாடுபட்டுப் பரிசோதித்துச் சிற்சில பிரதிகளிற் காணப்படுமாறு வயினதேயப் படலத்தையும் உடன்சேர்ந்து வெளிப்படுத்தினோம். பா. மு; ச. தி; வ. வே. தி; 1891 விகுர்தி வருடம், புங்கத்தூர்க் கந்தசாமி முதலியார் இப் பாக வதப் பதிப்புக்கு முன் கம்பராமாயணம், திருத்தொண்டர் புராணம், அப்பர் தேவாரம், காஞ்சிப் புராணம், திருவிரிஞ்சைப் புராணம், தொல்காப்பியச் சொல்லதிகாரம், திருக்கழுக்குன்றப் புராணம் ஆகியவை அச்சிட்டிருந்தாரென்று, பூவை, கலியாண சுந்தர முதலியார் சிறப்புப் பாயிரத்தில் சொல்லியுள்ளார். இயன்ற வரை இரண்டு பாகங்களும் நன்முறையில் அச்சிடப்பட்டுள்ளன. கந்தசாமி முதலியார் பதிப்பு, சென்னை சூளை ஸ்ரீ ருக்குமணி விலாச அச்சுக்கூடத்தில் அச்சாயிற்று.

## திருக்குருகைப் பெருமாள் கவிராயர்

இவர் நம்மாழ்வர் திருவவதாரம் செய்த ஆழ்வார் திருநகரி என்ற திருக்குருகையில் வேளாள மரபில் பிறந்த ஒரு பெரும் புலவர். இலக்கணத்தில் மிகவும் வல்ல பண்டிதர். இவர் யாப்பு, பொருள், அணி என்ற மூன்றுக்கும் உரிய இலக்கணங்களும் அவற்றுக்குரிய உதாரணச் செய்யுளும் பாடிப் பெருமை பெற் றவர். இவற்றை எல்லாம் மாறன் என்ற நம்மாழ்வார் பெயரா லேயே பாடியிருக்கிறார். யாப்புக்கு இவர் பாடிய இலக்கணம் மாறன் பா - பாவினம் ஆகும். பொருளுக்கு மாறன் அகப் பொருள். அதற்கு எடுத்துக் காட்டாகத் திருப்பதிக் கோவை. அணி இலக்கணத்திற்கு எடுத்துக் காட்டாக மாறன் அலங்காரம். இவை யாவும் அச்சிடப்பட்டுள்ளன. இவற்றை 16ஆம் நூற் றாண்டின் இலக்கிய வரலாறு இரண்டாம் பகுதியில் இலக்கணம் என்ற அத்தியாயத்தில் காணலாம். இவருடைய வரலாற்றையும் அங்கு விரிவாகச் சொல்லுகிறோம்.

இவர் திருக்குருகை மான்மியம் என்ற பெயரில் நம்மாழ் வாரின் அவதாரத்தலமாகிய திருக்குருகூருக்கு ஒரு புராணம் செய்தார். அப்புராணத்தை மட்டும் இங்கு நாம் ஆராய்கிறோம்.

## திருக்குருகை மான்மியம்

### முன்னுரை

பெருங்காவியமாகிய இது பூர்த்தியாகக் கிடைக்கவில்லை. கடவுள் வாழ்த்து, பதிகம் என்ற உறுப்புக்களுக்குப் பின் 28 சருக்கங்கள் இருந்தன என்று ஐயரவர்கள் பிரதியின் ஏட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது. மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் செந்தமிழ்ப் பத்திரிகைப் பிரசுரமாக இதன் பகுதி 1938 வரை பல ஆண்டுகள் வெளிவந்து 574 பக்கத்தில் முடிவடைந்தது. சங்கத்தார் ஏட்டில் 19 சருக்கம் வரையில் மட்டுமே உள்ளது. ஐயரவர்கள் உதவிய ஒரு பிரதியில் 26ஆம் சருக்கம் 83ஆம் செய்யுள் வரையிருந்தது; பின் மாமணவாள ரெங்காசாரியர் 83 - 88 பாடல்களைப் பிரதி செய்து தொடுத்து அச்சருக்கம் பூர்த்தியாயிற்று. அடுத்த இரு சருக்கங்கள் மாறன் திருவவதாரச் சருக்கம், மவுனம் நீங்கு சருக்கம் என்றும், மொத்தம் 3030 பாடல் என்றும், ஐயரவர்கள் ஏட்டுப் பிரதியின் முகப்பேட்டில் சொல்லப்பட்டுள்ளது. ஆனால் 26 வரம் பெறு சருக்கம் வரை பாடல்கள் 2624 மட்டுமே அச்சாயின. பின்னால், மாறன் திருஅவதாரச் சருக்கம் என்ற தலைப்பில் 48 பாடல்கள் அச்சாயின. ஆனால் இப்பகுதி மட்டும் தனியாக, மாறன் திருவவதாரச் சரிதை என்ற பெயரில் தனி வரலாறாகவும் ஏடுகளில் காணப்படுகிறது.

அவையடக்கமாகக் கூறும்போது, தமிழின் ஐந்திலக்கணங் களையும் குறிப்பிடுகிறார். சிறப்பான அகப்பொருள் நூலும் மாறனலங்காரமாகிய அலங்காரங்களும் இவர் செய்துள்ளமை யும் இங்கு சிந்திக்கத்தக்கது.

> எழுத்துச் சொற்பொருள் யாப் பலங்கார மென்றிசைத்தே
> வழுத்தும் அஞ்சதிகாரமும் ஆசறுத்தறியேன்
> பழுத்த பாவலர் பாத கமல மென் முடிமேல்
> அழுத்து நன்னெறி யாசறக் கற்றதே அறிவேன்.

இம் மான்மியத்தைப் பராசர முனிவர் தம் புதல்வர் வியாச முனிவருக்குக் கூற, அவர் சுகருக்குக் கூறினார். இவ்வாறு வந்த வடமொழி நூலை, தமக்கு ஆதிநாதபட்டர் மொழி பெயர்த்துக் கூற, அது கொண்டு தாம் தமிழில் பாடியதாக இவர் உரைக் கிறார் (11) இதைத் தமிழிற் கூறிய புலமையால், சடையன் என்ற

*பெயருடைய தாம் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் என்று பெயர் பெற்றதாகவும் கூறுகிறார்.*

இருக்குமுதற் பனுவலினால் இயற்றமிழ்தேர் நாவீறன்
என்னும் மேன்மை
அருட்புயலைப் புகழ்புலமைத் திருக்குருகைப் பெருமாள்பே
ரன்பு கூரும்
தருக்குலவும் பொழிற்குருகாபுரிவணிகன் சடையனிதைத்
தமிழாற் சாற்றித்
திருக்குருகைப் பெருமாள்வண்கவிராச னெனப்புனைபேர்
சிறந்த தன்றே.

*அடுத்த பாடல் அரங்கேற்றிய காலம் கொல்லம் 723 (கி.பி. 1548) என்று கூறுகிறது.*

அறந்திகழாண் டவைஎழுநூற் றிருபான் மூன்றில்,
அணிகிளர்கார்த் திகைமாத மெட்டில் வாழ்வு
சிறந்திடுதிங் களினாளுத் தரத்தில் ஏகா
தெசி மகா முகுத்தமிவை திருத்த முற்றத்
துறந்தவரெண் மகிழ்மாறர் திருமுன்னாதிச்
சுருதியுடன் மிருதியுஞ்சொற் றமிழின் வாய்மை
பிறந்த பெருங் காப்பியமுந் தெரிந்தோர் கேட்கும்
பெற்றியுடன் அரங்கேற்றப் பெற்ற தன்றே.

*பதிகம் எனத் தக்க ஏழு பாடல்களும் இதன்பின் உள்ளன. பொதுவாய் எல்லாப் புராணங்களும், பின்னால் உள்ள சருக்கங்களின் பெயரை ஒன்றுவிடாமல் நிரலே பதிகத்துள் சொல்லும். ஆனால் இப்பதிகம் அவ்வாறு அமையவில்லை. சருக்கங்கள் பல சொல்லப் படவில்லை. சொன்னவையும் முறையாக அமையவில்லை. இறுதி இரு பாடல்களில், 'நாம், காரியார் சேயாய், நம்மை நாம் புகழ் வான் வருகுவம் என நவின்று, எம்மை யாண்டவன் புகழ்ச் சட கோபனாகி, வேதம் நாலையும் நால்வகைப் பனுவலாய் விரித்த வாய்மையும், பதின்மரும் வீடு பெற்றமையும் புகல்வாம்' என்கிறார்.*

**நூல்**

*நூல் வாழ்த்தோடு தொடங்குகிறது. வாழ்த்து என்ற ஒரு பாடல் கடவுள் வணக்கத்துக்குப் புறம்பாகத் தொடக்கத்தில் காணப்படுகிறது.*

வாழி வாழிநா னிலம்மும்மும் மாரியின் வளனும்
வாழி வாழிஇல் லறமும்நல் லறப்பெரு வனப்பும்
வாழி வாழிநா லாயிரப் பனுவல் நான் மறைநூல்
வாழி வாழிசீ பராங்குச ஆணை வைகலுமே.

*கடவுள் வணக்கப் பகுதி இரண்டே பாடல். முதற்பாடல் திருமால் காப்பு, இரண்டாம் பாடல் குரு வணக்கம். காப்புச் செய்யுளில் முத்தொழில் செய்யும் மூவரையும் குறிப்பிடுகிறார்.*

பூத்ததா மரையயன் படைக்கப் பொற்புடைக்
கூத்தனாகிய சிவன் துடைக்குங் கொள்கை சேர்
ஏத்துதற் கரியபல் லுலகை இன்புறக்
காத்தமால் குருகை மான் மியததைக் காக்கவே.

*இவ்வாறு மூவரையும் குறிப்பிடுதல், இவரது சமரச மனப்பான்மையைக் காட்டுகின்ற ஓர் இயல்பு. பின்னரும் 'பரசுபாணியனும் அயனுமாம் சொருபம் பயின்ற கேசவன்' (296) என்று கூறுகிறார். தம் குருவை 'ஆரியனென எதிர்ந்து அரிய பேதைமையும் நீக்கியோன்' (3) என்கிறார். பதிகம் என்ற பகுதி, கடவுள் வாழ்த்தின்பின், 17 பாடல் கொண்டது. எனினும், இதன் முதல் 10 பாடல்கள் காப்புடன் சேர்ந்து பாயிரம் என்னத் தக்கவை. இப்பகுதியின் முதற் பாடலில் இவர் சொல்லும் கருத்து, சைவ சமயத்தில் எங்கும் சொல்லப் பெறும் கருத்தையொத்துள்ளது.*

பூவாகிநன் மணமாய்ப் பொன்னாகி யும் ஒளியாய்ப்
பாவாகியும் இசையாய்ப் பாலாகி யுஞ் சுவையாய்
மேவா ருயிர்க் குயிராய் வேறுவே றாகிநின்ற
மூவா முழு முதலின் மூதா ரறிவாரே.

*இதனை, பின்வரும் சிவகாம சுந்தரி துதியுடன் ஒப்புநோக்கி யுணர்க (வேறு புராணப் பாடல்):*

சொற்பொருளும்உடலுயிரும் சுடரொளியும் விரைமலரும்
சுவையும் பாலும்
நிற்கும் நிலைஎனத் தெளிந்து சிவத்தில் அனன்னியமாகி.

*இவர் கூறும் அடியார் வணக்கம் சிறப்பானது.*

கடியார் பசுந்துளவக் கார்மேனிச் செங்கண்
நெடியானை எட்டெழுத்தாய் நின்றானைப் புள்ளின்
கொடியானை என்னுளத்துட் கொண்டானை ஏத்தும்
அடியார் அடியார் அடியார் அடியேனே.

இப்பகுதியில் பல பாடல்கள் குருகையில் உள்ள பொருநைத் துறையான சங்கணித் துறையை வருணிக்கின்றன. இவ்வாசிரிய ருடைய வருணனைகளில், ஒரே அமைப்புடைய எளிய தொடரை வைத்துப் பல பாடல்களை அடுக்கி முடிப்பது ஒரு வழக்கம். 'விரசைமேற் கொள்வதுந் திடனாமே' என்ற முடிபுடைய பாடல்கள் ஆறு; பின்வருவது ஒன்று (120);

> பூவின்மேற் கொளும் திருமகள் கலந்தமெய்ப் பொருணாமம்
> நாவின் மேற் கொளும் நாவலர் நால்வகைத் தெனலாகும்
> பாவின் மேற்கொளச் சங்கணித் துறையெனப் பகர்ந்தாலத்
> தேவு மேற்கொளும் விரசைமேற் கொள்வதுந் திடனாமே.

புறநகர் வாழ்த்து என்ற அடுத்த சருக்கத்தில் உலகாயதன், வாமன், அருகன், புத்தன், நானே பிரமம் என்பான் ஆகிய சமயத்தாரைப் பல பாடல்களால் கண்டிக்கிறார். நானே பிரமம் என்போரைக் கண்டிக்கும் பாடல்கள் நூலுள் பல. 14 பாடல்களில் தசாவதா ரங்களையும் போற்றிப் பாடுகிறார். மீனம், கமடம், கேழல், நாரசிங்கம், குறள், பரசிராமன், வென்றித் தனுராமன், பெலதேவன், கோபாலக் குழந்தை, துரகதமாந் தனிமுதல்வன் என; கோபால னுக்கு மட்டும் 5 பாடல்; இப்படியே நூலுள் பிற இடங்களிலும் அவதாரங்களைச் சந்தர்ப்பம் நேர்ந்த போதெல்லாம் போற்றி யுரைக்கிறார். வானரங்களின் செயல்கள் மிகவும் அதிகமான பாடல்களில் (224 - 256) சொல்லப்படுகின்றன. பெண்களின் தன்மையை உரைக்கும் போது, பெருங்காப்பியத் தன்மைக் கேற்ப, அவர்களின் கற்பிலக்கணம் அடுத்த சருக்கத்தில் 11 பாடல் களில் சொல்லப்படுகிறது; வேளாளர், வணிகர், மன்னர், வேதியர் தன்மைகள் முறையாகத் தொடர்ந்து பல பாடல்களில். முன் னுள்ள பேரிலக்கியங்களின் பொருளைத் தழுவியே எங்கும் பாடுவார்; கிள்ளைகள் வேதமும் தமிழும் பாடுகின்றனவாம்:

> போத மேதகப் பூரணன் பூமகள்
> காத வானெனக் கண்டவர் மாளிகை
> வேத வாய்மையும் மெய்த் தமிழ் வாய்மையும்
> கீத வாய்மையும் கிள்ளை மிழற்றுமே. 462

அடுத்து, கோயில் வருணனை என்ற சருக்கத்தில் ஒலியின் பிறப்பு என்று தொடங்கி, வாக்கு, எழுத்து, சொல், பொருள், அகம், புறம், வெண்பாமாலை, படலம் ஈராறு, யாப்பு, அலங் காரம், இசைத்தமிழ், நாடகத்தமிழ் என்பது முடியக் கூறித் திருப்புளி வருணனையோடு முடிக்கிறார். அடுத்த சருக்கத்தில்

*சந்தப் பாடல்களும் மடக்கும் அதிகமாக அமைத்திருக்கிறார்; நூலெங்குமே சந்தப் பாடல்களைக் காணலாம். பரமபத வருணனையில் பரமபத நாதன் அமைந்துள்ள தோற்றத்தைப் பத்துப் பாடல்களால் வருணிக்கிறார். அங்குள்ள மரங்களைக் கூறும்போது நான்கு பாடல்களில் அடைமொழி இல்லாமலே கூறுவது சுவைபடவுள்ளது (719 - 722):*

தில்லியம் பாரிசாதம் தேவதாரம் மந்தாரம்
சல்லிய கரணிசாலி சந்தகில் ஓமை காட
வல்லிமல் லிகை அசோகு வலம்புரி மாழைவாழை
நெல்லி வெண் ணாவல் பூவை ஞாழல் ஏலந்தற் கோலம்.

மாதவி சூரல் வேரல் மராமரம் பலவு கொன்றை
சூதம் ஆம்பிரம் பலாசு தோன்றிமா தளைஇ ருப்பை
தாதகி நாளி கேரந் தணக்கில வங்கங் கன்னல்
கேதகை குல்லை முல்லை கிஞ்சுக மில்லம் வில்வம்.

வன்னிகுற் குலுக்கொ ழுந்து மகிழிரு வேரி வெள்ளில்
கன்னிகா ரங்கு ருந்து கடுகரீ தகிசெ ருந்தில்
பன்னிபுன் னாகம் பூகம் பாதிரி நமைவெட் பாலை
சன்மலி பகன்றை பூல்வேற் காமரா விரைமஞ்சட்டி.

கடம்புநா ரத்துத் தாலங் களங்கருங் காலி சீந்தி
அடம்பர சாச்சா வெட்சி அழிஞ்சில்சீ ரகம்உ ழிஞ்சில்
வடந்தரா யெலுமிச் சிஞ்சி அரிசன மாஞ்சி யென்றே
இடம்பயின் றனவா யேனை யவற் றோடு மெண்ணின்றாயே.

*அண்டவுற்பத்திச் சருக்கம், புராண லட்சணம் என்பதற்கேற்ப உலகத் தோற்றத்தை உரைக்கிறது. நரகத்தைக் கூறுமிடத்து, என்னென்ன பாவம் செய்தோர் நரகில் உழல்வார் என்பது 40 பாடல்களால் சொல்லப்படுகிறது. அகம் பிரமம் என்பவரும் இத்தீவினையால் நரகத்தில் உள்ளனர்.*

*மிக முயன்று எழுதி வைத்த ஏடுகளைத் திருடுவோர், கற்றிடாததையும் கற்றதாய் மேற்கொண்டு உரைப்பவர், குருத் துரோகிகள், வயிற்றுக்காகக் கவி பாடிப் புன்கவிகள் என்று பெயர் வாங்கினோர் - இவர்கள் போன்றவரும் நரகில் உள்ளனர்.*

கடவுளா மெனவே குரவரை மதித்துக்
  களைகணாக் கற்றநூல் பனைமா
மடல்களிற் கரமு மெருத்தமும் பரடும்
  வருந்தவே கங்குலும் பகலும்

சுடர்நுதி வயிர வூசியாற் பொறித்துத்
　　தொகுத்த பொத்தகங்களைக் கரவிற்
படரிருளிடைக் கன்னுவிற்கவர் பவராய்ப்
　　படுபழி படைத்த பாதகத்தோர். 987

கற்றிடாதையுங் கற்றதாய் மேற்கொள்
　　கரவொடுங் கவிசிறி துரைப்பத்
துற்றுளார் முழுதுடையம்யாம் அவற்றிற்
　　கொண்மையேம் என அவை யடக்கப்
பெற்றுளார் கழகத் துரைத்திடர்ப் படுபின்
　　பேணியே அவர்கள் பாலவற்றைத்
தெற்றென வுணர்ந்து கற்றிடாதிடரே
　　செயத்துணிந் துழல் படிறுடையோர். 988

கன்ன பரம்பரை முறையே இலக்கணமும்
　　இலக்கியமுங் கற்பிப் போர்கள்
சொன்னவரும் பதங்களினைச் சிறைப் புறத்துத்
　　துன்னினராய்த் துணிந்தா ராய்ந்த
பின்னரவைக் களத் தெரிந்து பிணங்கினராய்
　　வாது செயப் பெற்றகாலை
இன்னதிது வெனவிஃதென் றிறுமாந்த
　　குருத்துரோகி களாமினர். 990

பொற்புடைச் செந்தமிழ் தெரிந்து சொன்னலமும்
　　பொருணலமும் புணர்வதாகச்
சிற்பரன் மேலுயிர்க் காக்கங் குறித்தறிஞர்
　　அணிபெறவே செறித்த யாப்பை
அற்பரெனத் திரிநரர்தம் பேரினொடும்
　　ஊரினைவைத் தவிழுக் காகத்
தற்கரப்புன் கவிகளெனப் பிறர் சிரிப்பக்
　　கொடுத்துயிர்க்குத் தவறு பூண்டோர். 991

*பிரமன் தோத்திரச் சருக்கம் என்ற அத்தியாயத்தில், துதிப் பாடல்கள் அனேகம். உறுப்புக்கள் பெற்ற பயன் இறைவனுக்கு ஆட்செய்வதே என்று பல உறுப்புக்களையும் சுட்டிச் சொல் கிறார். ஒரு பாடல்:*

நாவாரவே புகழ்ந்து நாராயணா நமவென்று
ஓவா வுரையினொடுங் கண்ணீ ருரம் நனைப்பக்

காவார் மலர் பறித்துக் கண்ணாநின் காற்கமலந்
தூவாதார் கையினையுங் கையென்று சொல்வாரே? 1220

*அடுத்து இங்கு சித்திரக் கவிகள் பலவற்றையும் அமைத்திருக் கிறார். கொம்பும் காலும் ஒன்றும் இன்றி வந்த நிரோட்டகம், அதில் பிற வகைகள், மடக்குக்கள், வல்லினம் இடையினம் மெல் லினத்தால் வந்த பாட்டுக்கள் முதலியன இங்கு காணப்படும். திருவாராதனச் சருக்கம் திருமாலின் பூசைக் கிரியைகளை விரி வாகக் கூறுகிறது. துணைப்படை வதைப்படு சருக்கம் என்பது போரின் வருணனை. மக்கட் செல்வம் பற்றிப் பெருங்கவிஞர் அனைவருமே பாடுகிறார்கள். இவரும் பாடுகிறார் (2550):*

மைந்தர் மூரல் வாய் முத்தமு ண்ணாதவாய் வாயோ,
மைந்தர் சொற்கொளாச் செவிகளுஞ் செவிகளோ, மழலை
மைந்தர் சீறடிச் சுவடுழா மார்புமோர் மார்போ,
மைந்தர் காட்சி கண்டின் புறாக் கண்கள் கண்மலரோ.

*நூலெங்கும் சந்தப் பாடல்கள் நிரம்ப அமைத்திருக்கிறார். இவர் அருணகிரிநாதரின் திருப்புகழை நன்கு பயின்றவர் போலும். அதே அமைப்பில் பல இடத்தும் பாடல்களை அமைத்திருக்கிறார்.*

பூதவிநோத நம்பி கோதமனார் மடந்தை
பூதல மேல் விழுந்த துயரேதீர்
பாதவிநோத நம்பி பூமகண் மேவுநம்பி
பார்மகண் மேவு நம்பி னுறவோர் சேர்
வேதவிநோத நம்பி யாடகனா வியுண்ட
வீரவிநோத நம்பி குழல்வாய் வேய்
நாத விநோத நம்பி சீர் புகழ்வாய் மையன்பர்
நானில மீது வந்து பிறவாரே. 2600

நீதிப் புராணமறை போதித்த போத மறை
நேசித்த கேள்வியவை வழியாயே
சோதிச் சொருபசுக ரூபத்த ராகியொளிர்
சோபைப் பொன் வீடுதனி ..................
னாதிப் பிரானெனவு மாழிப் பிரானெனவும்
ஆசைப் படாமலுன தடிபேணார்
சாதித்த தேவரடி பூசிப்பதா லுறுதி
சாதிப்ப தேதிவர்கள் அறியேனே. 2619

## கூடற் புராணம்

மதுரை மாநகரில் கோவில் கொண்டெழுந்தருளியுள்ள கூடலழகர் கோயிலுக்குரியது. இந்தப் புராணம்; ஆசிரியர் பெயர் தெரியவில்லை. இது இந்த நூற்றாண்டுக்குரியது. இந் நூல் பற்றிய ஆராய்ச்சியை இப்பகுதியுட் காணலாம்.

### கூடல்

கூடலழகர் கோயில் என்று பெயர் பெறுகின்ற இக்கோயில் மதுரை நகரிலுள்ளது. 108 வைணவத் திருப்பதிகளுள் ஒன்று. இத்தலத்துக்கு இரு பாசுரங்கள் உள்ளன என்று ஆன்றோர் கருதுவர் (திருமங்கை 9. 2, 9 திருமழிசை நான்முகன் திருவந்தாதி 39). எத்தனையோ பெயர் விளக்கமில்லாத பல சிறு தலங்கள் ஆழ்வார் பதிகங்கள் பெற்றிருக்க, சிறப்பான தலை நகரிலுள்ள இத்தலம் ஏன் எந்தப் பதிகமும் பெறவில்லை என்பது விளங்க வில்லை. மதுரை மீனாட்சி சோமசுந்தரக் கடவுள் கோயிலுக்கு அன்று முதல் இன்று வரை இருந்துவருகின்ற பெருஞ்சிறப்பால் இது புறக்கணிக்கப்பட்டது போலும். எனினும், பண்டைத் தமிழ் நூல்களில் இருந்தை, இருந்தையூர் என்றும், இருந்த வளமுடையார் என்றும் சிறப்பிப்பது இத்தலத்தையும் இங்கு இருந்த கோலத்தில் எழுந்தருளியுள்ள திருமாலையுமே என்று பெரியோர்* கருதுகிறார்கள். மதுரை, நான்மாடக் கூடல் என்று சைவ நூல்களில் பெயர் பெறும்; இப்பெயர் பரிபாடல் கலித் தொகை ஆகிய சங்க நூல்களில் காணப்பெறும். நான்கு மாடம் கூடலின் நான்மாடக் கூடலென்றாயிற்று. அவை திருவாலவாய் திருநள்ளாறு திருமுடங்கை திருநடுவூர். இனிக் கன்னி கரிய மால் காளி ஆலவாய் என்றுமாம் என்று நச்சினார்க்கினியர் கலித்தொகை (92) உரையுள் கூறுவது காணத்தக்கது. 'கன்னி திருமால் காளி ஈசன் காக்கும் கடிமதில் சூழ் மாமதுரை' என்பது திருவாலவாயுடையார் திருவிளையாடல். தேவாரத்தும் திருவிளையாடற் புராணம் முதலியவற்றுள்ளும் இது சிவத்தல மாக அதிகம் இடம்பெற்றுள்ளது. புராணங்கள், நான்மாடக் கூடலான படலம் என்றே விரித்துப் பேசுகின்றன.

---

* மு. இராகவையங்கார் ஆராய்ச்சித் தொகுதி 1938, பக்கம் 241 - 244. ஸ்ரீ இருந்தவளமுடையார் என்ற கட்டுரை பார்க்க.

மதுரையின்கண் திருமால் கோயில் கொண்டிருத்தலைச் சிலப்பதிகாரம் பாராட்டியுரைக்கிறது. 'உவணச் சேவல் உயர்த்தோன் நியமம்' எனவும், நீடுநீர் வையை நெடுமால் எனவும் அங்கு வரும். பிந்தியதை அரும்பதவுரைகாரர் ஸ்ரீ இருந்த வளமுடையார் என்றார்; அடியார்க்கு நல்லார், அவரை அந்தர வானத் தெம்பெருமான் என்றார்; இவ்விரு கோலங்களும், மதுரைக் கூடலழகர் கோயிலின் கருவறையில் இருந்த திருக்கோலமான மூலமூர்த்தியாகவும் மேல் விமானத்தில் பள்ளி கொண்ட திருக்கோலமாகவும் ஆராய்ச்சியாளர்* கருதுவர். இக்கோயில் வையைக்கரைக் கண்ணது 'இருந்தையூரமர்ந்த செல்வ' என்பது பரிபாடல் (பேராசிரியர் நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டு), திருமால் இருந்தவூர் இருந்தையூர் என்று மருவியிருக்கலாம். (சைவத்தில் பூசலார் நாயனார் தலம் நின்றவூர் என்று பெயர் பெறுதல் போல). கூடற்புராணம் என்பது இத்தலத்து எம்பெருமான் புகழைக் கூறும் புராணமாகும்.

### ஆசிரியர்

இந்நூலாசிரியரைக் குறித்து யாதும் தெரியவில்லை. இந்நூலே இவருடைய சிறப்பை நன்குணர்த்துவது. வடமொழியிற் பிரமாண்ட புராணத்து மதுரை மான்மியமுரைக்கும் பகுதியே தமக்கு மூலமென்கிறார்; இது சம்பிரதாயமாகச் சொல்லும் சொல்லேயாகும். நூல் முழுமையும் இவருடைய சொந்தப் படைப்பே. பெரியாழ்வார் மதுரைக்கு வந்தமையும், பாண்டியன் கொண்டாட வந்து கிழியறுத்தமையும் கூறுகின்ற இறுதி இரு சருக்கங்களால் இது நன்கு தெளியலாம்.

இவர் வடமொழியிலும் தமிழிலும் புலமை மிக்கவரென்பதை நூலால் நன்கறியலாம். வேத வேதாங்கங்களில் மிக்க மதிப்பும் ஈடுபாடும் கொண்டவர். வைகானசம் பாஞ்சராத்திரம் என்ற இரு வைணவாகமப் பிரிவுகளையும் போற்றியே எழுதுகின்றார். அன்றியும் இவர் திருமாலடிக்கே பேரன்பு பூண்டொழுகும் பரம வைஷ்ணவர். இவர் உள்ளமுருகப் பாடிய பாடல்களை ஆங்காங்கு எடுத்துக்காட்டியிருக்கிறோம். ஆழ்வார்களையும் அவர்களுடைய பிரபந்தங்களையும் இவர் பெரிதும் போற்றியுரைப்பது இயல்பு. இராமானுசரிடம் இவருக்கு ஈடுபாடு மிகுதி என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை.

---

* தி.கி. இராமானுச ஐயங்கார் கூடற்புராண முகவுரை, 1929 பக்கம் 2.

*இருப்பினும், பிற மத நிந்தை இவர் எப்போதுமே செய்வ தில்லை. பரம்பொருள் ஒன்றே என்ற கருத்தமையை இவர் பாடிய இடங்களும் பல. இரண்டொன்றை எடுத்துக் காட்டலாம். நூலின் முதற் செய்யுளே சிறப்புமிக்கது.*

**பொன்பூத்த புரிசடையும் பூண்மணிப்பொன் நீண்முடியும்**
**மின்பூத்த ஒருபாலும் திருமார்பும் வெண்ணீறும்**
**மன்பூத்த மான்பதமும் மானிடமும் வளையு மணிந்து**
**அன்பூற்றி உலகளிக்கும் அவரே எம் வினை தவிர்ப்பார்.**

*இங்கு ஆசிரியர் சங்கர நாராயண வடிவத்தைப் பேசுகிறார் என்பது கருதத்தக்கது. பின்னும் ஆற்றுப் படலத்தில் முதல் பாடலில் 'கோவிந்தன் தனைக் கூடலழகனை நாவின்பம் பெற நாம் பாடுதுமரோ' என்று சொல்லிவிட்டு அடுத்த பாடலில் நீல மிடற்றினரைப் பாடுகிறார். ஒன்பதாம் பாடலில் கூறுகிறார்.*

**கண்ணன் கீர்த்தியும் கண்ணுதல் சீர்த்தியும்**
**விண்ணின் மீனமும் தேவரும் மேதினிக்**
**கெண்ண ரெண்ணும்என் றிட்ட வுரைகள்போல்**
**தண்ணெனும் மழைத் தாரைகள் வீழுமால்.**

*பெரியாழ்வார் வரலாற்றை இரண்டு படலங்களால் பாடிய ஆசிரியர் பின்னும் பல இடங்களில் தமக்கு அவரிடமுள்ள ஈடுபாட்டைப் புலப்படுத்திக் கொண்டே போகிறார். ஆசிரியர் புலமை மிக்கவர். சந்தப் பாடல் பாடுதலிலும் யமகந் திரிபு பாடுதலிலும் வல்லவர். சித்திரக்கவிகள், யாழ் முதலியவற்றைக் குறிப்பிடுவார்.*

*ஆசிரியர் வாழ்ந்த காலம், பக்தி மிகுந்த காலம்; காலமுறை யுணர்வு இல்லாத காலம். (இன்றுங்கூட, அறிஞரிடையே வரலாற் றுணர்வு குறைந்தே காணப்படுகிறதல்லவா?) இறுதியில் பாடு கிறார்;*

பதின்மர் பாடலுக்குமுற் பதிக மாகவே
புதுவை யாசிரியனார் புகல்பல் லாண்டுதான்
மதுரைமா நகர்தனிற் பிறந்த வாய்மையால்,
இதனைநேர் தலம் நிலத்து இயம்ப வல்லமோ?

**காலம்**

*ஆசிரியரைக் குறித்த செய்திகள் சொல்லப்படாமை போலவே, காலத்தைப் பற்றிய குறிப்போ, சிறப்புப் பாயிரமோ,*

அரங்கேற்றிய காலமோ சொல்லப்படவில்லை. இவர் ஆழ்வார் அனைவரையும் கூறுவதாலும், ஆசாரியருள் எம்பெருமானார் காலமாகிய 12ஆம் நூற்றாண்டின் பிற்பாதிக்குப் பிற்பட்டவ ரென்பது தெளிவு பின்னும் இரு கருத்துக்கள் கூறத்தக்கன. அடுத்த நூற்றாண்டின் தொடக்கத்தில் மூன்றாம் குலோத்துங்க சோழன் திரிபுவனத்தில் தன் பெயரால் மிகப்பெரிய சிவாலய மொன்று எடுப்பித்து அதில் சரப மூர்த்திக்கு வேறெங்குமில்லாத பெருஞ் சிறப்புச் செய்தான். 16ஆம் நூற்றாண்டில் முதல்பத்து ஆண்டுகளில் வாழ்ந்து சொக்க நாதருலாப் பாடிய புராணத் திருமலை நாதர் சிவ மகாபுராணத்தைத் தமிழாற் பெரும் புராணமாகப் பாடி அதில் ஒரு பகுதியாக, சரப மூர்த்தியின் வரலாற்றைச் சரப புராணம் என்ற பெயரால் தனிப்படலமாகச் சுவைபடப் பாடினார். மதுரையிலிருந்தே பாடினார்; அங்குள்ள சிவனடியார் வேண்டப் பாடியதாக அவரே கூறியிருப்பதை அந்நூலாராய்ச்சியில் கண்டோம். சரப மூர்த்தி வரலாறாவது, நரசிங்காவதாரமாய் உருவெடுத்து வந்த திருமால், அந்த வடிவத்தில் தம் உக்கிரம் தணியாதவராகி உலகையே அழிக்கத் தலைப்படவும், அவருடைய கொடுமை தாங்காத தேவர்கள் வேண்டுதலுக்கு இரங்கிச் சிவபெருமான், தமது அம்சமாகிய வீரபத்திரரை அனுப்பி நரசிங்கத்துக்கு அறிவுரை கூறச் செய்தும் அவர் கேட்காமையால் சரபமூர்த்தியாக வந்து, நரசிங்கத்தின் வலிமையை அடக்கினார் என்பது அந்த வரலாறு. வைணவ உலகத்தில் இப்புராண கதைக்கு ஒரு மறுப்புச் சொல்ல வேண்டு மென்றே உணர்வு மேலோங்கியது தவிர்க்க முடியாதது. எனவே, கூடற் புராண ஆசிரியர், தாம் புராணம் பாடியபோது, இந்த நினைவினால், நரசிங்கமூர்த்தி சரபத்தை அடக்கினார் என்ற ஒரு செய்தியை விரித்துப் பாடுகிறார். புராணத் திருமலை நாதர் மதுரையிலிருந்தே தம் புராணம் பாடியதாலும், ஓரளவு அவரை யும் புராணம் பாடியதை நேரில் அறிந்திருந்ததாலுமே கூடற் புராணத்தை தாம் முற்கூறியவாறு பாடினார் என்று கருதுகிறோம். இருவருக்கும் கால இடையீடு அதிகம் இருக்க முடியாது. சுமார் 50 அல்லது எழுபத்தைந்து ஆண்டுகளே இருந்திருக்கலாம். புராணத் திருமலை நாதர் புராணம் பாடியது 1508. எனவே, கூடற் புராணம் பாடிய காலம் 1575 - 1600க்குள் இருக்கும் என்று சொல்லலாம்.

மற்றுமொரு குறிப்பு. வரதுங்க ராம பாண்டியர் சங்கர நயினார் கோயிலிலிருந்து அரசாண்ட காலத்தில் அவருடைய

அவையில் ஐயம்பெருமாள் சிவந்த கவிராசர் என்ற ஒரு பெரும் புலவர் இருந்தார். நளன் அரிச்சந்திரன் கதைகள் போல, மகா பாரதத்தின் மற்றொரு கிளைக்கதையான புரூரவச் சக்கரவர்த்தி கதையை அவர் புரூரவ சரிதை என்ற பெயருள்ள அழகிய சிறு காவியமாகப் பாடினார். புரூரவன் கதை மிகவும் பிரசித்தமான கதை. வரதுங்க ராமருடைய ஆட்சிக்காலம் 1588 - 1610. வரதுங்க ராமர் மூத்தவராயிருந்தும், சுவீகாரம் போன தம்பி தென்காசி யில் 1564இல் பட்டமேற்க, இவர் சங்கர நயினார் கோயிலில் 1588இல் தான் பட்டமேற்க முடிந்தது என்று அவருடைய வர லாற்றில் குறிப்பிட்டோம். கவிராசர் தம் நூலைப் பல ஆண்டுகள் முன்னமே பாடியிருத்தல் கூடும். புரூரவ சரிதை ஊர்வசியின் சாப வரலாறு கூறுகிறது. அக்கதையில் மக்களுக்குள்ள ஈடு பாட்டைக் கூடற் புராண ஆசிரியர் நன்குணர்ந்து தமது புராணத்தில் ஊர்வசி சாபம் நீங்கிய செய்தியையும் அமைத்துப் பாடியிருக்கிறார். இந்த நிலைமை பொதுவாகப் புராணம் பாடு பவர்களுக்குப் பொருந்தக் கூடியதே; சிறப்பான செய்திகளையும் வரலாறுகளையும் காணும்போது, அவை தங்கள் தலத்துக்கு உரியன என்று பாடுதல் புராண ஆசிரியருக்கு இயல்பு. இதை நோக்க, இவர் புரூரவ கதை பாடிய பின் அவ்வரலாற்றையும் ஊர்வசி சாப நீக்கத்தையும் தம் புராணத்தில் அமைத்தார் என்று கருதத் தோன்றுகிறது. புராணத் திருமலைநாதர், கவிராசர், புராண ஆசிரியர் ஆகிய அனைவர் வரலாறுகளும் பாண்டிய நாட்டிலேயே நிகழ்கின்றன என்பதும் கருதத்தக்கது. ஆதலால், இவர் புராணம் பாடிய காலம், 1590 - 1600 ஆக இருக்கலாமோ என்று கருத இடமுண்டு.

16ஆம் நூற்றாண்டானது சைவத்திலும் வைணவத்திலும் புராணங்கள் மிகவும் அதிகமாகத் தோன்றிய காலமென்பது இவ்வரலாற்று நூலால் நன்கு விளங்கும். மேற்கூறியவாறு பொரு ளால் மட்டுமன்றி, புராணத்தின் நடையாலும், இது பின்னும் பிந்திய நூலாக முடியாது; இந்த நூற்றாண்டுக்கே உரியதென்று கருதத் தோன்றுகிறது.

## பதிப்பு

மதுரைத் தமிழ்ச் சங்கப்பதிப்பு, செந்தமிழ்ப் பிரசுரம் 52, 1929, தி.கி. இராமானுச ஐயங்கார் பரிசோதித்தது.

**கூடற் புராணம்**

இப்புராணம் பாயிரப் பகுதி கிருத காண்டம், திரேத காண்டம், துவாபரகாண்டம், கலிகாண்டம் என ஐந்து பகுதி களாயுள்ளது; பிந்திய நான்கும் நான்கு யுகங்களின் பெயர் என்பது அறியத்தக்கது. பாடல் 757. பாயிரப் பகுதியுள் கடவுள் வணக்கம், புராண வரலாறு, ஆற்றுப் படலம், நாட்டுப் படலம், நகரப் படலம் என்ற பிரிவுகள் உள்ளன.

கடவுள் வணக்கப் பகுதியுள் திருமாலன்றி சேனைத் தலைவர், பெரிய திருவடி, அனுமன், ஐம்படைகள், பரம பாகவதர் வணங்கி, பெரியாழ்வாருக்கும் கோதைக்கும் வணக்கம் சொல்லுகிறார். அதன் பின் புத்தூரரான் பல்லாண்டு பாட வந்த மல்லாண்ட தோளன் அடி பணிந்து தலத்துத் தாயாராகிய மதுரை வல்லி பதமும் நாவின் செல்வியும் பத்து அவதாரங் களும் வணங்கி, பன்னிரு ஆழ்வாரையும் வணங்குகிறார். அதன் பின் எம்பெருமானாரை வணங்கி அண்டகோளத்தார்* என்னும் பாடலைக் குறிப்பிட்டுப் பதின்மர் பாடலைத் தரித்தவருடைய தாளைப் போற்றுகிறார்:

> அண்ட கோளத் தாரென்னு மாரியத் தமிழாலன்று
> தன்டமிழ்ச் சங்கம் வென்ற சடகோபர் தாமேசிற்பங்
> கண்டதோர் வடிவாற் பேசத்திரைப் புறத்திருந்திக்காலத்
> துண்டெனப் பதி ன்மர் பாடலுந் தரித்தவர் தாள்போற்றி.

'அண்டகோளத்தார் என்னும் ஆரியத்தமிழ்' என்று இங்கு சொல்லியது, பதினேழு அடி கொண்ட ஓர் ஆசிரியப்பா. இப் பாடலை மதுரைச் சங்கத்தாருக்கு நம்மாழ்வார் அனுப்பிப் பொருள் காணச் சொன்னாரென்றும், அவர்கள் பொருள் காணமாட்டாது விழித்தார்களென்றும் ஒரு கதை எழுந்தது. இக்கதையையே இப்பாடல் காட்டுகிறது.

அவையடக்கம் 4 பாட்டு. இங்கு மீண்டும் பெரியாழ்வார் பாடலைக் குறிப்பிடுவது காணத்தக்கது. பின் புராண வரலாறு என்ற பகுதி 16ஆம் பாடல். இது நூலுக்குப் பதிகமாக அமைந்தது. ஒரு பாடலில், இப்புராணம் பிரமாண்ட புராணத்துள் கேத்திர மான்மிய காண்டத்தில் 82 - 93 கதைகளாக 12 அத்தியாயம் உள்ளது என்கிறார்.

---

* இப்பாடல் முழுமையும் எமது தமிழ் இலக்கிய வரலாறு 9ஆம் நூற்றாண்டு இரண்டாம் பாகம் நம்மாழ்வார் வரலாற்றில் காணலாம்.

*அடுத்தது ஆற்றுப் படலம், இந்நூல் சிறந்த காப்பியமாக ஆசிரியர் கருதிப் பாடினார் என்பதை உணர்த்தும். திரிபு யமக மாக 20 பாடலுக்கு மேல் இங்கு உள்ளன. எடுத்துக்காட்டாகச் சில குறிப்பிடுவோம்.*

ஆகமாக வளாகங் கலக்குமே
யாகமாக வளாகங் கலக்குமே
நாகநாகமை நாகம் புரையுமே
னாக நாகமை நாகம் புரை யுமே.

காலையே நிகர் போவதுங் காலையே
மாலையேயென நாறலு மாலையே
சேலையே றலை விந்தை தன் சேலையே
பாலையேய் வனபாலை வனபாலையே.

*ஆறு என்பது இங்கு வையை. இது வேகவதி, வையை, கிருத மாலை என்று முப்பெயர் பெற்றதென்று ஆசிரியர் காட்டுகிறார்:*

வேக மாதலில் வேக வதியென்றும்
மாகம் வாய்ந்த தனால் வையை யென்றும் தார்
ஆகலாற் கிருத மாலை யாமென்றும்
நாகர் முப்பெயர் நாட்டும் நதியரோ.

*அடுத்தது நாட்டுப்படலம். உம்பர்கோன் வாழி என்று உழவர் செந்நெல் வித்துகிறார்கள். பயிர், தருமம், பாத்திரம் அறிந்து செய்தவர் குலம் தழைப்பது போல் கிளைத்தோங்குகிறது. நெற் களங்கள், பண்டு நான்முகன் பரப்பிய தளிகை யோதனங்கள் போல் விளங்குகின்றன. ஞானியர் வைச்சுவதேவருக்கு அருத்திப் பின் உண்கிறார்கள். இப்பகுதியில் தமிழ் இலக்கணச் செய்திகள் பலவும் குறட் கருத்துக்கள் பலவும் சொல்லப் பெற்றுள்ளன.*

*அடுத்தது நகரப் படலம். எங்கும் பெருங்காப்பியம் போலவே சொல் தொடையும் பொருள் தொடையும் அமைய ஆசிரியர் பாடுகிறார். நாக பாயலைப் போன்றது கூடல் மாநகரம். ஒரு சந்தப் பாடல்:*

தஞ்சையும் உறந்தையும் தடங்கடற் கலிங்கமும்
வஞ்சியும் குடக்கொடே வடக்கும் வந்தெதிர்ப்பினும்
விஞ்சு காலி னாலுடைந்த பஞ்சுபோலும் வேள்கணை
அஞ்சினாலு டைந்த பேதை நெஞ்சு போலு மாகுமே.

பாஞ்சராத்திரியரைச் சொல்லி அடுத்த பாடலில் 'கிழியறுத்த பட்டனார் குலத்துளோர் வைகானசர் வழிவழித் தொடர்ச்சியாக வாழும் வீதி' என்கிறார். பாட்டுக்களின் வகையும், கழங்கு அம்மனை பந்தடியும்:

> ஒருமுறை கேட்ட பாட்டும் எழுத்தொளித் தோது பாட்டும்
> பொருள்நிலை கரந்தபாட்டும் கணக்குமைந் தங்கப் போக்கும்
> வருபல வினாவுங் கூறி மன்னராற் புகழும் வாணர்
> தெரிவையர் கழங்கம் மானை பந்தடித் தொகையுந் தேர்வாம்.

புலவோர் பூவாளத்தாற் பள்ளியுணர்த்துகிறார்கள். மக்கள் உண்ணீர் வம்மென்றெறிமணி யொற்றி உணவூட்டுகிறார்கள்.

முதலாவது கிருத காண்டம், நைமிச முனிவர் மதுரை மான்மியம் கூறு என்று வியாழனை வினாவுகிறார்கள். புலன்கள் அயல் போக்காது எண்ணி எழுதும் ஓவியம் போல் இருந்து கேண்மின் என்று அவன் கூறுகிறான். இங்கு பல இடங்களில் சொல்லமைப்பும் வாக்கிய அமைப்பும் வடமொழி யமைப்பாக இருத்தலைக் காணலாம். எடுத்துக் காட்டு; நும்மால் நன்றாய்க் கேட்கப்பட்டேன் நான்; நோன்பாற்றும் உம்மால் இந்நூல் கேட்பதனுக் குண்டதிகாரம். இங்கும் இயற்கை வருணனை அதிகம். தென்றலானது குருகையின் மாறற்கு ஆம் இது எனும்படி குளிர்கின்றது. பாண்டி நாட்டில் இந்நகரின் ஈசனுக்கும் இமய மகளுக்கும் தாம் மணம் முடிப்பதற்காக வந்த செய்தியைத் திருமால் உணர்த்துகிறார். திருமணம் நிகழ்கிறது. காசிபன் சக்கர தீர்த்தக்கரையில் தவம் புரிகிறான். நான்கு பாடல்களில் துதிக்கிறான்:

> பேராயிரமோ பிரமமோ எவ்வெவைக்கும்
> வேராய காரணமோ மேனித் தனிப் பொருளோ
> பாராயண மறைகள் பார்த்துணருந் தொல்லுருவோ
> நாராயணவோ நமோ நமோ உன்னடிக்கே.

பின்னும் பல பாடல்கள் சமயப் பொருள்களைச் சொல்லுகின்றன. காசிபனுக்கு மக்களும், அவர்களுக்கு எவ்வகையிலும் அலைவின்மையும், திருமால் அருளுகிறார்.

இரண்டாவது திரேத காண்டம் பிருதுச் சக்கரவர்த்தி பூசித்து வரம் பெறுகிறான். அடுத்த காலநேமி வதைப் படலத்தில், திருமால் அவ்வசுரனைத் தொலைத்த செய்தியைக் கூறும் போது, சிறு போர் வருணனையும் காண்கிறோம்.

*மூன்றாவது துவாபர காண்டத்தில், முதலில் அத்திகிரிப் படலம், யானைமலைக் கதை. இம்மலையில் ரோமச முனிவன் முன் தோன்றிய நரசிங்கத்தின் உக்கிரம் தணியாமையால், தேவர் சரபமூர்த்தியை ஏவி உக்கிரம் தணிக்குமாறு செய்ய, நரசிங்கம் சரபத்தை வென்று பின் தானே சாந்தமடைந்தது. அடுத்தது அம்பரீடப் படலம்; அம்பரீடன் மதுராபுரியில் வந்து திரு மாலைப் பணிந்து முத்தி பெறுகிறான். இங்கு அவன் கண்ட நகர வருணனை 18 பாடல், புனல் விளையாட்டு 45 பாடல்.*

*நான்காவது கலி காண்டம். முதலாவது உருவசி சாபநீங்கு படலம். தேவ சபையில் உருவசி சாபம் பெற்றுப் பூவுலகு அடைந்து புரூரவனை மணந்து வாழ்ந்து பின் சாபம் நீங்கித் தேவருலகடைதல். இரண்டாவது மலயத்துவசன் தவம் செய்து தடாதகையைப் பெண்ணாகப் பெறுதல். பின்னர் தடாதகை அரசாள, மலயத்துவசன் முத்தி பெறுதல். மூன்றாவது சீவல்லவ பாண்டியன் ஆட்சியில், செல்வ நம்பியைப் பீடத்திருத்தி, பொற் கிழி தூக்கி, பெரும் பொருட்டத்துவத்தை உணர்த்துபவருக் குக் கிழி என்று திட்டமிடுதல். சீவில்லிபுத்தூர் பட்டாசாரியன் விண்டுசித்தன் மெய்ப் பொருளை உணர்த்தல் வேண்டி மதுரைக்கு வருதல். நான்காவது பட்டாசாரியன் மதுரையடைந்து பல்லாண்டு பாடி மெய்ப் பொருள் நிறுவிப் பொற் கிழி பெறுதல். பல்லாண்டு கூறுமிடத்து, நூலாசிரியர் பட்டர்பிரான் கூற்றாக மூன்று பல் லாண்டுப் பாடல்கள் பாடியிருக்கிறார். ஒன்று பின்வருவது.*

மல்லாண்டிலங்கு மணத்தின்தோள்
　　மாயா, தூய பரமேட்டி,
தொல்லாண்டிருந்த குடியடியோம்
　　உன்னோடு யாமும், தொழு தொழும்பும்,
எல்லாந் தருமுன் திருவடிகள்
　　இரண்டும், பண்டை எமதுணர்வும்,
பல்லாண் டுழி பல்லாண்டு
　　பலகால் நூறா யிரத்தாண்டே.

## *அரிதாசர்*

*திருமால் சமயத்தை உயர்த்திச் சொல்லுகின்ற இரு சமய விளக்கம் என்ற ஒரு பெரு நூல் செய்தவர் அரிதாசர் என்ற புலவர். இவருடைய வரலாறும் பிற செய்திகளும் தெரிவதற்கு ஆதாரங்கள் பல உள்ளன.*

### ஆசிரியர்

இவர் தொண்டை நாட்டில் குன்றவர்த்தனக் கோட்டத்தில் அரிவாசபுரம் அரிகண்டபுரம் என்று பெயர் வழங்குகின்ற அரிதை என்ற ஊரில் காராளர் மரபில் பிறந்தவர். இதை,

> இந்துதவழ் பைம்பொழில்சூழ் வளமிக்க அரிதை நகர்
> இறைவன் என்னும்
> மந்தர புயத்து அண்ணல் அரிதாசன் அருள்சுரந்து
> வகுத்துச் செய்த
> முந்தை இரு சமயவிளக் கப்பெருநூல் ஒருகவியை
> மொழிந்தோர் கற்றோர்
> பைந்துளவப் பரஞ்சுடரின் அருட்பேற்றால் இகபரமும்
> படைப்பர் மாதோ.

என்ற நூற்பயன் கூறுகின்ற பாடலால் இதை அறியலாம். இவ் வூர் இப்போது நாகலாபுரம் என்று வழங்குகிறது. 'சந்திரகிரி இராச்சியத்து வேதகிரி தேசத்து ஹரிவாசபுரமான நாகலா தேவி அம்மன் புரம்' என்பது நாகலாபுரத்துக் கல்வெட்டு. வேத நதியாவது ஆரணி நதி (ஆரணம் - வேதம்). இவ்வூர் ஆரணி யாற்றங்கரையில் உள்ளது. ஆரணியை வைத்தே ஆசிரியர் தம் நூலைத் தொடங்குகிறார். இவ்வூரில் இவர் காராளர் மரபில் களப்பாள கோத்திரத்தில் பிறந்தவர். இதை இவரே 'அம்மாநகர் நீடு அரிவாச புரம் பெரும்பேர் இம்மாநிலத்தில் இம்மாநகர்க் கண்... அரிதாசன் என்றோதும் நாமக் களப்பாளன்' (நகரப் படலம் 4, 6) என்ற சொற்களால் குறிப்பிடுகிறார். காராளர் மரபு என்பதை, சோழ நாட்டு நாச்சியார் கோயில் என்ற திருநறை யூரில் கி.பி. 1514இல் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டொன்று இவருடைய தமையனாரை 'அரிகண்ட புரத்துக் காராளர் மரபினரான ஆவினி களப்பாளன் திருவேங்கடமுடையார் வடமலையண்ணகள்' என்று கூறுவதனாலும் நன்கு அறியலாம். இவ்வடமலை யண்ணன் வரலாற்றைப் பின்னர் விரித்துக் கூறுவோம். அரிதாசருடைய தந்தையார் பெயர் திருவேங்கட முடையார் என்று அறிகிறோம். திருவேங்கடமுடையார் சிறந்த திருமால் பக்தர். இவர் தமது மரபில் பிறந்த பெருமாள் முதலிச்சியார் என்ற அம்மையாரை மணந்து இல்வாழ்க்கை நடத்தி வந்தபோது இவருக்கு வடமலையண்ணல், தெய்வங்கள் பெருமாள், திருமலையப்பர் என்ற புதல்வர் மூவர் பிறந்திருந்தனர். மூன்றாம் புதல்வரான திருமலையப்பரே பின்னால் அரிதாசர்

என்று புகழ் பெற்ற நூலாசிரியர். இவருக்குக் கிருஷ்ணன் என்ற தாசிய நாமமும் உண்டு. நாகலாபுரம் செப்பேடு ஒன்று இந்தப் பெயரைக் குறிப்பிட்டு, இவர் அவ்வூர்க் கோயில் கைங்கரியங் களைச் செய்து வந்ததால் அரிதாசர் என்று வழங்கப் பெற்றார் என்று கூறுகிறது.

அக்காலத்தில் விசய நகரத்தில் சிறப்பு மிக்க மன்னராய் விளங்கியவர் கிருஷ்ண தேவராயர். அவர் கலிங்க தேசத்தைக் கடகம் (இன்றைய கட்டாக்) என்ற அதன் தலைநகரிலிருந்து ஆட்சி புரிந்த கஜபதி அரசனான பிரதாபருத்திரன் என்பவனை அடக்க வேண்டி அந்நாட்டின் மீது படையெடுத்துச் சென்று (1520) அவனை வென்று அங்கு செயத்தம்பம் நாட்டினார். நாட்டப் பட்ட இடம் விசாகப்பட்டினத்தை அடுத்துள்ள சிம்மாசலம் என்று பெயர் வழங்குகின்ற சிங்காத்திரி ஆகும். கிருஷ்ண தேவ ராயர் சிம்மாசலத்திடம் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். வெற்றி கொண்டு செயத்தம்பம் நாட்டிய ராயர் தெற்கு நோக்கி வந்த போது அரிதை என்ற அரிகண்டபுரத்தில் அரிதாசர் கட்டியிருந்த கருமாணிக்க வண்ணர் வேதவல்லி நாச்சியார் ஆலயத்தையும் வணங்கி, அங்கு ஆராதனைக்கு வேண்டிய நிபந்தங்களையும் கொடுத்தார்.

ராயரே தெலுங்கு மொழியில் கவிஞர். அவர் பாடிய ஆமுக்த மால்யதா என்ற நூலிலும் அவரது ஆத்தான கவிபெத்தண்ணா பாடிய காவியத்திலும் செயத் தம்பம் நாட்டிய ஊர் பொட்டுனூர் என்று சொல்லப்படுகிறது. இதை ராயர் சிதம்பரம் நடராசப் பெருமானை வணங்கி அங்கு வடக்குக் கோபுரம் கட்டி வைத்த போது பொறித்த கல்வெட்டும் உணர்த்துகிறது. 'இந்தக் கோபுரம் ராசாதிராசன் ராச பரமேசுவரன் ஸ்ரீ வீரப் பிரதாப கிருஷ்ண தேவமகாராயரின் தர்மமாக சிம்மாத்திரி பொட்டுனூருக்கு எழுந்தருளிச் செயத்தம்பம் நாட்டித் திரும்பிப் பொன்னம்பல நாதனையும் சேவித்து வடக்குக் கோபுரம் கட்டி வைத்த சேவை' என்று சிதம்பர சாசனம் கூறுகிறது. இதை அரிதாசரும் தம் முடைய நூலுள் குறிப்பிடுகிறார்:

> கிரிபோல் விளங்கிக் கிளரும்புயக் கிருட்ண ராயர்
> தரைமீது சிங்காத் திரியிற்சயத் தம்பம் நாட்ட
> வரமா தரவால் அளித்தேவட கூவ மேவும்
> கருமா மணிவண் ணனைநீடு கருத்துள் வைப்பாம்.

கிருஷ்ண தேவராயரின் தாயார் பெயர் நாகலாதேவி. இவர் பெயரால் தான் பின்னர் இந்த அரிகண்டபுரம் என்ற ஊர் நாகலாபுரம் என மாற்றிப் பெயர் வழங்கலாயிற்று.

அரிதாசருடைய முன்னோர் புலமை மிகுந்தவர்கள். ஆற்றுவன்பாடி என்ற கிராமத்திலிருந்தவர்கள் என்பதை ராயர் காலத்தில் சகம் 1446 (கி.பி. 1523)இல் அமைந்த சாசனம் (ஆரணித் தாலுக்கா தேவிகாபுரம்) குறிப்பிடுகிறது. 'செயங்கொண்ட சோழ மண்டலத்துப் பல் குன்றங்கோட்டத்து மேல் குன்றநாடு முருகமங்கலப் பற்று இராஜ கம்பீரன் மலைக்கு அடுத்த பற்று செய்யாற்று இதன் பிரிவான தேவக்காபுரம் உடையார் திருநாமக் காணியான சோள பூண்டியில் தேவக்காபுரம் பிக்ஷாமடத்து விசுவேசுவர சிவாசாரியரும் தான மயேசுவர கைக்கோள முதலி களும், ஆற்றுவான்பாடி வித்துவான்களில் திருவேங்கலநாதர் மகன் வடமலையார்க்கு இறையிலி காணியாச்சி பண்ணிக் கொடுத்தபடி இத்திருவேங்கலநாதரே வடமலையாரின் தந்தை திருவேங்கட முடையார் என்பது மு. இராகவையங்கார் குறிப்பு.* இதற்கு முந்திய ஆண்டில் (சகம் 1415) ராயர் நாகலாபுரத்தைச் சர்வ மானியமாக அளித்தார் என்று ஒரு கன்னடக் கல்வெட்டுக் கூறுகிறது. 'சகாத்தம் 1445இல் சுபானு வருஷம் கார்த்திகை மாதம் திங்கட்கிழமை சுக்கிலபக்ஷம் உத்தானத் துவாதசியில் துங்க பத்ரா தீரத்து, ஹேமகூட பர்வதத்தால் அலங்கரிக்கப் பட்ட ஸ்ரீ விட்டலேச விருபாக்ஷர் ஸந்நிதியில், ஹரிவாஸ புரேச ராய் வேதாசலத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ நீலமாணிக்க தேவருக்கு, சந்திரகிரி ராஜ்யத்தில் கங்கை மரபிற் பிறந்தவரும், திருமாலின் திருவடிகளில் வண்டு போன்றவரும், நீலமாணிக்க தேவருக்குக் கைங்கரியங்கள் புரிவதையே புருஷார்த்தமாகக் கொண்டவரும், அப்பெருமானுக்குக் கோபுர மண்டப விமான ஆவரண ரதாதித் திருப்பணிகள் எல்லாஞ் செய்தவரும், வட மலை என்ற பெயருள்ள மந்திரி சிரேஷ்டரைத் தம் தமையனா ராகக் கொண்டவரும், திருமால் பக்தரும் சிறந்தவருமான ஹரிதாஸரால் கேட்டுக் கொள்ளப்பட்டுப் பெருமாளுக்குத் திருவமுதுக்கும் நிர்த்த கீதமகாவாத்யாதிகட்கும் நாகலாபுரம் என்ற பிரதி நாமங் கொண்ட அரிகண்டபுரம் சர்வ மான்ய மாகக் கொடுக்கப்பட்டது.❖

---

* சாசன தமிழ்க் கவி சரிதம் 1937, பக்கம் 149.

❖ சாசன தமிழ்க் கவி சரிதம், பக்கம் 146.

இக்கல்வெட்டுப் பல செய்திகளைத் தெரிவிப்பதோடு, வடமலை வேளாளர் குலம், அரிதாசர் தமையனார், ராயருக்கு மந்திரியாயிருந்தார் என்ற செய்திகளையும் தெரிவிக்கிறது. இவரை அரிதாசர், திருமால் வணக்கம் கூறும் பாட்டொன்றிலும் குறிப்பிடுகிறார்.

படமா சுணமும் முதிரா இளம் பச்சை சூலும்
திடமா மறைகந் தமும்ஆகிநற் செல்வன் ஆன
வடமா மலை அண் ணனதுள்ளமும் வைக நாளும்
இடமாம் ஒருவற் கடியோங்களி யாங்கள் தாமே.

வடமலையார் அமைச்சராய் மிக்க செல்வாக்கோடு விளங்கின மையால், அக்காலத்தில் அரசர் மேல் ஆணையிட்டு மக்கள் சொல்வது போல இவர் பேராலும் ஆணையிட்டுச் சொல்லும் வழக்கம் இருந்தது என்பதைத் தத்துவப் பிரகாசர் வரலாற்றில் வரும் குறிப்பால் அறிகிறோம்.

மருவுபுகழ்க் கிட்ண மகராசர் ஆணை,
அரிய வடமலையார் ஆணை, – திருவாரூர்ப்
பாகற் கொடியறுப்பார் பாதத் திருவாணை,
த்யாகக் கொடியிறக்கா தே.

என்ற பாடலைத் தத்துவப் பிரகாசர் பாடி, திருவாரூர்ச் சிவா லயத்தில் நடந்த கேடுகளைக் கருத்தில் கொண்டு இப்பாடலில் சொன்னவாறு மூன்று ஆணையுமிட்டு, கொடி யிறக்காதவாறு தகைந்தார் என்பதைத் தமிழ் நாவலர் சரிதை கூறுகிறது (225); பாகற் கொடியறுப்பார், தியாகராசப் பெருமான். திருக்கழுக் குன்றத்துச் சாசனமொன்றும் வடமலையாரைக் குறிப்பிடுவ தோடு இவர்கள் பரம்பரையையும் கூறுகிறது; 'ஐயங்கொண்ட சோழ மண்டலத்துக் குன்றுவர்த்தனக் கோட்டத்து வடகூவத் துள்ள அரிகண்ட புரத்து ஹரிவாசபுரமான நாகலாபுரம் என்ற ஊரினராகிய ஆவினி களப்பாளர் திருவேங்கடமுடையார் என்பவரின் புத்திரர்களான வடமலையண்ணகள், தெய்வங்கள் பெருமாள், திருமலையப்பர் என்ற மூவர் தங்கள் தாயார் பெருமாள் தேவிச்சியார் புண்ணியமாகவும் அரசர் கிருஷ்ண தேவராயர் தர்மமாகவும், குறுமுகை என்ற ஊரைக் கோயிலுக்கு உதவினர்* என்று கூறுகிறது. எனவே இச்சாசனக் குறிப்புக் களாலும் பாடல்களாலும் அரிதாசருடைய பரம்பரையும்

---

* சாசன தமிழ்க் கவி சரிதம், பக்கம் 148.

வரலாறும் நன்கு தெளிவாகின்றன. இவர் சிறந்த வேளாளர் மரபில் வந்தவர் என்பதும், அரசியலில் பெரும் பதவி வகித்த வடமலையாரின் இளவல் என்பதும், கிருஷ்ண தேவராயரால் பெரிதும் கௌரவிக்கப்பட்டார் என்பதும் அறிகிறோம்.

## இரு சமய விளக்கம்

அரிதாசர் பாடிய நூல் இரு சமய விளக்கம் என்று பெயர் பெறும். சைவம், வைணவம் என்ற இரு சமயங்களையும் விளக்கு வது என்று நூற்பெயர் குறிப்பிட்ட போதிலும், இது சைவக் கதைகளை மறுத்து வைணவத்தைச் சொல்லவந்த நூலேயாகும். சைவ வைணவக் கருத்து வேற்றுமைகளும் ஓரளவு சிறு பூசல் களும் அக்காலத்து இருந்தமை உண்மையே. 13ஆம் நூற்றாண் டில் சிவஞான சித்தியார் செய்த அருணந்தி சிவாசாரியர் மற்றை யோர் கருத்துக்களை எடுத்துக் கூறிக் கண்டிக்கும் பகுதியாகிய பரபக்கம் என்ற பகுதியில், உலகாயதன் தொடங்கி நிரீச்சுர சாங்கியன் ஈறாகப் பதின்மூன்று சமயவாதிகளின் கருத்துக்களை விளக்கமாக எடுத்துக் கூறி, சித்தாந்தபரமாக அவற்றுக்கு மறுதலை தெரிவிக்கிறார். பதினான்காவதாக, பாஞ்சராத்திரி மதத்தைக் கூறும்போது, அவர் புராணக்கதைகளைக் கூறுகிறாரே யன்றி, வைணவ சமய தத்துவங்களைச் சொல்லி மறுக்கவில்லை. கி.பி. 1100க்குப்பின் வைணவ சமயம் மிகுதியான அளவில் வளர்ந்தது. பெருத்த மதமாற்றம் செய்தது; சமயத் துறையில் பெருநூல்கள் யாவும் வடமொழியிலும் மணிப் பிரவாளத்திலும் செய்தது. செய்தோர் அனைவரும் (சிறுநூல் செய்தவர் ஓரிருவர் நீங்கலாக) பிராமணரே. அவர்களுள் தமிழ்த்துறைக்கு வந்தார் இலர். 16ஆம் நூற்றாண்டில் தோன்றிய அரிதாசர் குலத்தால் வேளாளர். திருமால் பக்தி நிறைந்தவர். சமயத் தத்துவமாக வடமொழியிலோ, மணிப்பிரவாளத்திலோ நூல் செய்வதை விட்டு இவர் சைவர்களிடத்தில் அதிகம் பரவியிருந்த சிவஞான சித்தி பரபக்கத்தில் பாஞ்சராத்திரி மத மறுதலையாகக் கூறிய வற்றை மனத்துட் கொண்டு, சிவபுராணக் கருத்துக்களையெல் லாம் மறுத்துத் திருமால் பரமாக நூல் செய்ய முனைந்தார். பாஞ்சராத்திரி மதம், மறுதலை என்ற இரு பகுதிகளும் 7, 31 பாடல்கள் கொண்டவை. இதை மறுத்துத் திருமால் சமயத் தைக் கதை மூலம் நிலை நாட்ட எண்ணியவர் இதுபற்றி இரண் டாயிரத்துக்கு அதிகமான பாடல்களே பாடி விட்டார்.

தாம் இளமையில் சிறுவர்களோடே இணங்கித் திரிந்த காலத்தில், வடிவழகிய நம்பி* என்ற குருவானவர் அன்போடு 'வா சில உறுதி விளம்புகேம். இது பொருள், மருள் தங்கிடாது உணர்தி' என்று அழைத்து உணர்த்தினார் என்றும், இவர் வைணவ குல துங்கர் என்றும் கூறுகிறார். மேலும், பெத்த பெருமாள் என்ற மற்றொருவர், இவ்வடிவழகிய நம்பி, பொன் மலரடி பணிந்து நங்குருவாயடைந்து மிக மனமகிழ்ந்தே உயர்ந் தோன்', பெத்த பெருமானெனும் செல்வன் தம்மையழைத்து இரு சமய நூல்களையும் சங்கையறத் தெளிவித்த ஆசான் - என்றும் கூறுகிறார். இவ்விருவரையும் குறித்த வரலாறுகள் தெரியவில்லை.

நூலானது காண்டம் என்ற பெரும் பாகுபாட்டையும், படலம் என்ற அத்தியாயப் பிரிவையும், பரிச்சேதம் என்ற உட்பிரிவையும் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. இத்தகைய அமைப்புப் பொதுவாகத் தமிழ் நூல்களில் இல்லை. இவர் வடமொழி நூல் அமைப்பைத் தழுவிச் செய்தார் போலும். பாயிர காண்டம், பூர்வகாண்டம், உத்தரகாண்டம், வேத பரமார்த்த காண்டம் என்பன காண்டப் பாகுபாடுகள்; படலங்கள் முறையே 9, 7, 46; பரிச்சேதம், பாயிர காண்டத்தில் இல்லை மற்றையவற்றுள் மொத்தம் 130. நூலுக்குப் புறம்பாகத் தொடக்கத்தில் தனியன் என்ற தலைப்போடு 13 பாடல்கள் உள்ளன. இவற்றுள் முதல்மூன்று பாடல்கள் அரிதாசரைத் துதிப்பவை. அடுத்த எட்டுப் பாடல்கள் நூற் பயன் கூறி நூலைப் போற்றுபவை. இறுதி இரு பாடல்களும் பழிச்சினர்ப் பரவல் என்று தலைப்பிட்டு, வடிவழகிய நம்பியையும் பெத்த பெருமாள் என்பவரையும் போற்றுபவை.

பாயிர காண்டம் முழுமையுமே நூலுக்குத் தோற்றுவாயாக உள்ளது. முதல்கடவுள் வாழ்த்துப் படலம் எதிராசர், குருகூரன், சேனாதிபதி, வடகூவம், கருமாமணி வண்ணன் என்று துதி சொல்லுகிறது. வழக்கமாகச் சொல்லும் முறை திருமால் முதலாக எதிராசர் இறுதியாக. இவர் தலைகீழாகச் சொல்லுகிறார். அரி தாசரின் துதிகளில் ஒன்று:

---

* பிற்காலத்தில் வடிவழகிய நம்பிதாசர் என்ற பெயருடையவர் ஒருவர் இருந்து ஆழ்வார் வரலாறுகளைச் செய்யுள் வடிவில் குருபரம்பராப்பிரபாவம் என்ற பெயரில் எழுதினார் இங்கு குறிப்பிட்ட வடிவழகிய நம்பி அவரினும் வேறாவர்.

விரியோத நெடுங்கடல் சூழ் வியனுலகிற் கமலவிழி
மேக மேனிக்
கருதாத பகவனுல கெவ்வுயிரும் படைத்தளித்துக்
காக்குந் தன்மை
பிரிவேது மில்லாது பழமறைகள் துணிபொருளைப்
பேணிப் பேசும்
அரிதாதன் இருசரணம் எனதுசிரத் தணிந்து துயர்
அகற்றி னேனே.

*நூற்பயன்:*

வளங்கெழு செல்வ முண்டாம், மனக்கருத் தெல்லாம் முற்றும்
களங்கமில் ஞான மெய்தும்; காட்சிசேர் முத்தி வாய்க்கும்
தளங்கமழ் துளவக் கோலத தாரரி தாதன் வாக்கால்
விளங்கிரு சமய நூலின் மெய்ப்பொருள் விரும்பு வார்க்கே.

*பழிச்சினர்ப் பரவல்:*

செதுமதிய ரிடும்புகூர் சிறியவரொ டிணங்கியே
திரிதருமெனை யன்பிலா சிலவுறுதி விளம்புகேம்,
இது பொருண்மருள் தங்கிடா தினிதுணர்தி யென்று நீடு
இருசமய விளங்குநூல் எனதிதயம் அழுந்தவே
முதுகுருவடி வங்கொளா முறைதவறுதல் அன்றியே
முழுவுறவக எங்கமாய் மொழிமுதன் மையன் எம்பிரான்
மதுகையிலுயர் சிங்கமேர் வயிணவகுல துங்கனாம்
வடிவழகிய நம்பிசே வடியிணைகள் வணங்குவாம்.

சுந்தர மிலங்குபழ மறைகட்கு மாறாய
சொல்லு மெழுநான் காகமம்
துன்மார்க்க மென்றுதெரி யாமற் புகழ்ந்திடுந்
துட்டர்கள் செய் செருவ டங்க
வந்தனைக் கருகன்மா லென்று வெளி யிட்டாண்ட
வடிவழகியன் நம்பிபொன்
மலரடி பணிந்துநங் குருவா யடைந்துமிக
மனமகிழ்ந்தே யுயர்ந்தோன்.

சந்ததஞ் சிறியவர் களோடே யிணங்கித்
தலத்திற் றிரிந்த என்னைத்
தயையினா லேயழைத் திருசமய நூலினைச்
சங்கையற வோதி யேநீ

சிந்தையி லினித்தெளிந் தேயறிந்தி டெனவுரை
செப்பியறி வித்த ஆசான்
செயசமய சிங்கேறு பெத்தபெரு மாளெனும்
செல்வனடி போற்று வோமே.

## நூற்பொருள்

*இருசமய விளக்கம் என்பது தமிழில் ஒரு விசித்திரமான பெருநூல். இதனுள் அரிதாசர் இரண்டு பெண்களை நதிக்கு நீராடிச் செல்லச் செய்கிறார். அவர்கள் இருவரும் திருமால் அடியவளும் சிவன் அடியவளும் ஆவர். பெயர்கள் முறையே ஆரணவல்லி, ஆகமவல்லி ஆகும்.*

செல்லும் திரளில் திருஆழியும் சங்கும் மென்தோள்
புல்லும் குறியும் திரு நாமமும் பொற்பு லாவும்
வல்லன்ன கொங்கை வனமாலையும் ஆக வாயில்
பல்லென்னு முல்லை நிரைகொண்டொரு பாவை சென்றாள்.

வில்லார் நுதலில் திரிபுண்டர வெள்ளை நீறும்
அல்லார் குழல்மேல் அணி கொன்றையும் அக்கு மாலை
புல்லா வளர்பொன் முலையும் பொலி வாக இன்பச்
செல்லார் அமுதன் னவள்ஓர்தனித் தோகை போனாள்.

இம்மான அனையார் இருவோர்களும் மேலி யான்முன்
அம்மால் அரனைப் புகழ்கின்றவர் ஆக நாட்டும்
செம்மா தளைநேர் நகை ஆரணச் செல்வ மாதும்
மைம்மா முகில்நேர் குழல் ஆகம வல்லி ஆகும்.

*போகும்போது ஆரணி (வேதவதி நதி) தீர்த்தத்தில் ஆடிக்கரை யேறி இருவரும் தங்கள் தங்கள் தெய்வத்தைத் துதிக்கிறார்கள். ஆகமவல்லி 'நம முக்கணனே நமவே' என ஐந்து பாடல் பாடுகிறாள்.*

ஆல மரத்தை அடக்கிய வித்தென அண்டம் எலாம் எளிதில்
சால அடக்கி அளிப்பவனே, திகழ் சந்திர சேகரனே
மாலயனுக்கும் அனந்த மறைக்கும் நல் வானவருக்கும்எலாம்
மூலம் எனத்தகு காரணனே நம, முக்கணனே நமவே.

*ஆரணவல்லி, 'அரியே பரிபூரணனே நமவே' என்று தானும் ஐந்து பாடல் பாடுகிறாள்.*

அந்தமும் ஆதியும் ஆகிய பேர்ஒளி ஆம்உனை மாமறையால்
முந்துணர் வோர்சிலர் அல்லது மாறுகொள் மோகன நூல் வழி நீ

தந்த பெருஞ்சம யங்களை யேபர தத்துவம் என்றுணர
புந்தி மயக்கிடும் அச்சுதனே, பரி பூரணனே நமவே.

அப்போது ஆகமவல்லி, 'நீ சொல்லியது புதுமையாயிருக்கிறது. எங்கள் தெய்வமே பழம் பொருள்' என்று சொல்ல, இருவரும் வாதம் செய்கிறார்கள். அங்குள்ள யோகிகள் அந்தணர் பாகவதர் பாசுபதத்தார் ஆகிய அனைவரையும் கூட்டி அவர்கள் முன் தங்கள் பேச்சுக்களைப் பேசத் தொடங்குகிறார்கள். இதுவரையில் பாயிர காண்டம். பதிகம் என்று பிறநூல்கள் சொல்லும் பகுதியை இவர் விடயத்திறப் படலம் என்று கூறுகிறார்.

ஓரியல்பைக் குறிப்பிடலாம். பெண்கள் இருவரும் ஒருவரையொருவர் விளிக்கும்போது அழகான தொடர்களைச் சொல்லியே விளிக்கிறார்கள். அரும்பிய கொங்கை நல்லாய், திங்கள் நேர் முகத்துச் சிவாகவல்லி கேள், ஏலவார் குழலாகமப் பெண்ணே, கங்கு நிறப் பொங்கு குழல் கலக விழிச் சிலை நுதலாகமப் பூங்கோதாய், வாளொன்று கண்ணாரணவல்லி, அன்ன நடையாய், பஞ்சமூத்து மெல்லடியாய், தாமம் சேர் கருங்குழலாய், இக்குமொழியாய், தாமமணியும் நறுங்குழற் கோதாய் என்றுள்ள தொடர்களைக் காண்க.

வேதம் 4, வேதாந்தம் 32, சாத்துவிக தருமசாத்திரம் 6, இராசத தரும சாத்திரம் 6, தாமத தரும சாத்திரம் 6, புராணங்களில் தாமசம் 6, இராசதம் 7, சாத்துவிகம் 6, உபபுராணம் 18, உபஸ்மிருதி 18, சங்கிதை 108, நூல் பாஞ்சராத்திரம் வைகானசம் என 2, இராகவ காதை, பாரத காதை, பரதம், வாகடம், சோதிடம், தரிசனம் 6, மதம் 6, சமயம் 6, சைவாகமம் 28, பிற சாத்திரங்கள் என நூற் பெயர்கள் இங்கு மிக்க விரிவாய்ச் சொல்லியிருப்பதைக் காணலாம்.

இரண்டாம் காண்டமாகிய பூர்வ காண்டம் என்பது ஏழு படலமுடையது. முதலாவது உலக வழக்கப் படலத்தில் சைவ நாயன்மார் அறுபத்து மூவரானால், வைணவத்தில் ஆழ்வார் பதின்மருடன் எழுநூற்று எழுபதின்மர் உள்ளனர் என்கிறாள். ஊரின் மேற்கில் திருமால் ஆலயம் இருப்பதை ஆகமவல்லி சுட்டிக் காட்ட அதற்கு மற்றவள் அனேக சிற்ப சாத்திரச் சான்றுகளைக் காட்டி, அரன்திருமால் கோயிலுக்குப் பரிவார தேவதை என்பதை அரிவாசபுரத்திலும் காணலாம் என்கிறாள். இரண்டாம் படலம் அண்ணாமலை ஆழிமலை என்று கூறுவது. மூன்றாவது சங்கரனுக்குப் பல முனிவர் சாபம் சூழ்ந்தது என்றும், நான்காவது

தக்கன் யாக அழிவும், ஐந்தாவது சர்வ சங்கார வஸ்துஅரியே என்றும் கூறுகின்றன. ஆறாவது வரபாலனப்படலம் என்பது காசியைக் காபாலிக்குத் திருமால் கொடுத்தார் என்பது முதலான கதைகளைச் சொல்கிறது. ஆறாவது படலம் திருநீறு, உருத்திராக்கம், சிவபூசை, சிவதீட்சை முதலியவற்றின் சிறப்பை ஆகமவல்லி சொல்வதாக முடிகிறது.

மூன்றாவது உத்தரகாண்டத்தின் இரு படலங்கள் மேற் கூறியவை அனைத்தையும் மறுக்கிறது. அடுத்த இரு படலங் களும் விஷ்ணு பூசையே பூசை என்று சொல்லிச் சிவபூசையைக் கண்டிக்கிறது.

நான்காவது வேத பரமார்த்த கண்டம் என்பது முதலில் பரமார்த்தப் பொருளை விரித்துக் கூறி அப்பொருள் திருமாலே என்று முடிக்கிறது. இரண்டாவது உபாசனை முழுமையும் திருமாலுக்கே உரியது என்கிறது. மூன்றாவது சிருஷ்டி முழுமை யும் திருமால் செய்வதே, சிவனுக்குப் பற்பல பிறப்புக்கள் உள்ளன, திருமாலே பிறப்பிலி என்று முடிக்கிறது. நான்காவது, காக்கின்ற திருவருள் திருமாலே, சர்வ அந்தர்யாமியும், காயத்திரிப் பொருளும் திருமாலே என்று கூறுகிறது. ஐந்தாவது எல்லா வேள்விகளுக்கும் தலைவன் முகுந்தனே என்று முடிக்கிறது. இறுதியான படலம் அனந்த வேதங்களும் நாராயணனே பரம் என்று சாதிப்பதைச் சொல்லவும், ஆகமவல்லி, அம்முடிவுக்குச் சம்மதம் தெரிவிக்கிறாள் என்பதோடு நூல் முடிகிறது.

உலகத்து வாதம் செய்வோரிடம் காணப்படும் இயல்புகள் இங்கு காணப்படும். தனக்கு ஏற்றதெல்லாம் சரி, மற்றதெல் லாம் பிழை, அசத்தியம் என்று கூறுவது உலக வழக்கு. அதே வழக்கை இங்கும் காணலாம். வியாசர் காசி க்ஷேத்திரத்தில் தன் வலக்கையை நீட்டி, நாராயணனே பரம்பொருள் என்று முக்காலும் சத்தியம் செய்து சாதித்தார். இதைப் பிரமாண்ட புராணமும் பாரதமும் மற்றெல்லா நூல்களும் கூறுகின்றன.

வையகத் தெவருங் கண்டு தேறத்தன்
வலக்கையை வானுற நீட்டி
ஐயமற் றிடு சொலாவது முக்கா
லாவதும் சத்தியம் இதுவே
மெய்யுரைச் சுருதி தன்னிலும் பெரிதாய்
விளங்கு சாத்திரங்களு மில்லை

செய்யகே சவனுக் கதிகமாய் நின்ற
  தெய்வமு மில்லைஎன் றிசைத்தார்.

*கேட்ட ஆகமவல்லி, மெல்ல ஒரு வார்த்தை மறுப்பாகச் சொன்னாள்: 'அப்படி சொன்ன வியாசருக்கு நீட்டிய கை மடங்காமல் நின்றதேன்?' இவ்வாறு கேட்டவுடனே ஆரணவல்லிக்குக் கோபம் அதிகமாய் வந்துவிட்டது:*

'வேதமா மடந்தாய், அப்படிப் பகர்ந்த
  வியாசருக்கு அவ்வியா சத்தால்
ஏதறும்புயத் தம்பனம் விளைந்ததென
  உலகினில் உரைப்பதேன்?' என்னச்
சீதளக் குமுதச் செவ்விதழ் மேனித்
  திலம்பதித் தெனக் கையும் சிறப்பக்
கோதறு சைவாகம மடந்தை யுடன்
  குளிர் மறைக் கோமளம் கூறும்.

*இத்தனையும் பொறாமையினால் சொல்லுவது; கை மடங்காமை சொல்லும் கதை அசத்தியமே:*

மங்குல்நேர் குழலாய், சிவசம யத்தோர்
  மாச்சரி யத்தினாற் சூத
சங்கையென்றோர் கற்பனா கதையைச்
  சாற்றிய தன்மையே போல,
இங்கிது தனையும் பொறாமையி னாலே
  இயம்புகின் றார்களத் தனையே,
அங்க தெப்படியே யென்னில், உன் மனமொப்
  பாமெனும் படிவிளம் பக்கேள்.

மெய்ப்பொருள் மறைகொண் டரிபரத் துவம்நான்
  விளம்பியே வருகையி னாலும்,
இப்பொருள் தனையே முன்னமே வியாதர்
  இயம்பிய தாகையி னாலும்,
அப்பெரு வியாதர் மறையெலாம் பிரித்து
  ஆராய்ந்தவ ராகையி னாலும்,
செப்பிய புயத்தம் பனமவ ரிடத்திற்
  செறிந்ததே யெனல் அசத் தியமே.

*வாதங்களின் போக்குக்கு இது ஓர் எடுத்துக்காட்டு. இதையும் சொல்லுபவர் அரிதாசரே. தன் கட்சி யொன்றே சரி, பிறர் என்ன சொன்னாலும் பிழை, அசத்தியம் என்பதே, திருமாலடியாளான ஆரணவல்லியின் வாதம்.*

*இதுபற்றி அதிகம் விவரிக்க வேண்டிய அவசியமில்லை. இந்த 20ஆம் நூற்றாண்டில் அமெரிக்க நாகரிகத்தின் மோதுத லால் சில விபரீதமான வாதங்கள் நிகழக் காண்கிறோம். கும்ப கர்ணன் பெரியவனா விபீஷணன் பெரியவனா, பரதன் பெரி யவனா லக்ஷ்மணன் பெரியவனா என்ற வாதங்கள். இவையாவும் வீண் விதண்டா வாதங்களேயன்றி, உண்மை வாதங்கள் ஆகா. இவையொத்த இந்த விதண்டா வாதத்தைச் செய்கிறார் அரிதாசர் என்று சொல்லி அவ்வளவோடு நிறுத்திக் கொள்கிறோம். இதிலுள்ள சிறப்பு, 20ஆம் நூற்றாண்டின் இலக்கணமான விதண்டாவாதப் பட்டிமன்றத்தை 16ஆம் நூற்றாண்டில் அரி தாசர் மிகவும் விரிவாக நடத்திக் காட்டுகிறார் என்பதாகும்.*

*நூலில் சிறப்பாகச் சொல்லத் தக்கவாறு கவிதை அமைய வில்லை. பாடல்கள் தொட்ட இடமெல்லாம் உரைநடையாக இருக்கின்றனவே யன்றி, கவிதையை எங்கும் காண்பதற்கில்லை. இரண்டு தொடர்ந்த பாடல்களைக் கீழே தருகின்றோம். 'கண்ணனார் கயிலாய யாத்திரையில் துவாரகை காவலரை நோக்கி, "திண்ணிய மற்புய மரபீர், திரும்பி நான் வருமளவும், திகிரி சங்கம் நண்ணின தோளினரை அல்லால் நகர் புகுதல் ஒழித்தீர்" என நவின்ற மாற்றம், மண்ணுலகில் பஞ்சம வேதப் பொருளாம் அரிவம்சம் அதனில் கூறும். "என்னுடைய பக்தர் களுக்கு இருபுயத்தில் சங்காழி எழுதல் வேண்டும், அன்னிய தேவதைகள் தமது ஆலயத்தில் புகழ்வாரை அஞ்சலித்தல், பின்னர் அவர் தமைப் புகழ்தல், தவிர்ந்திடலும் வேண்டும்' எனப் பீதகவாடைப் பன்னக மாசயனத்தோன் பார்த்தனுக்குச் சொன் னது பாரதத்தில் கூறும்." ஒரு பாட்டு இரண்டு பாட்டல்ல - நூல் முழுமையும் பக்கம் பக்கமாக இப்படியே உள்ளது. பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் கட்டுரைப் பயிற்சி போல்வது. ஆனால் நல்ல உரைநடை.*

**காலம்**

*அரிதாசர் காலம் கிருஷ்ணதேவராயர் காலமே (1497 - 1540) என்பது அவர் சரித வரலாற்றால் நன்கு விளங்கும். இவர் தமையனரான வடமலையண்ணனைக் குறிப்பிடும் சாசனங் கள் கி.பி. 1514, 1523 முதலான ஆண்டுகளில் எழுந்தன என்று முன்னமே காட்டினோம். தமையனை இவர் தம் நூலுள்ளும் குறிப்பிடுகிறார். ஆதலால் இவர் காலம் இக்குறிப்புக்களுக்குப் பொருத்தமான 1500 - 25 என்று கொள்வது பொருந்தும்.*

# ஆதார நூல்கள்

அத்தியாயம்

1. சதாசிவ பண்டாரத்தார் பாண்டியர் வரலாறு, திருக்கருவைத் தலபுராணம். இங்கு ஆராய்ந்த நூற் பதிப்புக்கள்: இவை ஆங்காங்கு குறிப்பிடப்பட்டுள்ளன.

2. நூற்பதிப்புக்கள். திருவான்மியூர் ஐயரவர்கள் நூல் நிலையத்துள்ள தந்திவனப் புராண ஏடு, தஞ்சை சரசுவதி மகாலில் உள்ள திருவையாற்றுப் புராண ஏடு.

3. நூற்பதிப்புக்கள். திருச்செங்காட்டங் குடிப் புராண ஏடு. திருவான்மியூர் திருவெண்காட்டுப் புராண சார ஏடு.

4. நூற்பதிப்புக்கள், சரசுவதி மகால் ததீசி, வினாவிடைப் புராண ஏடுகள். திவாகர நிகண்டு ஏடுகள். திருவான்மியூர் நூல் நிலையச் சீவலமாறன் கதை ஏட்டுப் பிரதி, இறைசைப் புராணக் காகிதப் பிரதி.

5. நூற்பதிப்புக்கள், குருகை மான்மியம் வெளிவந்த செந்தமிழ்ப் பத்திரிகைத் தொகுதிகள்.

பிற :

ஐயரவர்கள் பதிப்புக்கள், கட்டுரைகள், மு. இராகவையங்கார் - பெருந்தொகை, ஆராய்ச்சித் தொகுதி, சாசனத் தமிழ்க்கவி சரிதம். ரா. இராகவையங்கார் - சேதுநாடுந் தமிழும், சோமசுந்தர தேசிகர் பதினாறாம் நூற்றாண்டுத் தமிழ்ப்புலவர் வரலாறு. தமிழ் நாவலர் சரிதை, தனிச் செய்யுட் சிந்தாமணி, சென்னைச் சர்வகலாசாலைத் தமிழ்ப் பேராசிரியர் ச. அனவரத விநாயகம் பிள்ளை தமிழ்ப்புராணம் என்ற தலைப்பில் எழுதிய கட்டுரைகள், வடமொழிக் கிரந்த எழுத்து காமிகாகமம் சண்முகசுந்தர முதலி யார் பதிப்பித்தது, 1897. தொண்டை சோழ மண்டல சதகங்கள்.

முன் குறிப்பிட்ட ஏட்டுச் சுவடிகளன்றி எம்மிடமுள்ள திவாகரம், பாகவதம், அருணாசல புராணம், சிதம்பர புராணம், திருவெண்காட்டுப் புராணம் - ஏட்டுச் சுவடிகள்.

*அட்டவணைகள்:*

## *வடமொழிப் புராணங்களின் தொகை*

**மகாபுராணங்கள் 18**

*இவற்றுள் சிவபுராணங்கள் 10:-*

*மச்சம், கூர்மம், வராகம், வாமனம், சிவமகாபுராணம், இலிங்கம், பவிடியம், காந்தம், மார்க்கண்டேயம், பிரமாண்டம் (அல்லது வாயவியம்).*

*விஷ்ணு புராணம் 4:*

*விஷ்ணு புராணம், பாகவதம், வருடம், நாரதீயம்.*

*பிரம புராணம் 2 — பிரமம், பத்மம்.*

*அக்கினி புராணம் 1 — ஆக்கினேயம்.*

*சூரிய புராணம் 1 — பிரமவைவர்த்தம்.*

*பிரமாண்டமும் வாயவியமும் வேறல்ல என்பர் ஆராய்ச்சியாளர். அன்றியும் இவற்றுள் ஏழு புராணங்கள் ஓரளவு பழமை உடையவை என்றும், ஏனைய பதினொன்றும் காலத்தால் பிற்பட்டவை என்றும் ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். கால முறைப்படி இப்பதினெட்டையும் பின்வருமாறு வரிசைப்படுத்தியுள்ளனர்:*

*முதல் ஏழு:*

*வாயு புராணம் (பிரமாண்ட புராணம்), மார்க்கண்டேயம், விஷ்ணுபுராணம், மச்ச புராணம், பாகவத புராணம், கூர்ம புராணம், சிவமகா புராணம்.*

*ஏனைய பதினொன்று:*

*வாமனம், இலிங்கம், வராகம், பத்மம், நாரதீயம், அக்கினி, காருடம், பிரமம், ஸ்காந்தம், பிரமவைவர்த்தம், பவிஷ்ய புராணம்.*

**உபபுராணங்கள் 18**

*சனற்குமாரம், நாரசிங்கம், நந்தி, நிச்சுவாசம், சிவதருமம், நாரதீயம், காபிலம், மானவம், ஔசனம், வாசிட்டலைங்கம், வாருணம், காளிகம், சாம்பேசம், அங்கிரம் அல்லது பிரமாண்டம், சௌரம், பராசரம், மாரிசம், பார்க்கவம்.*

இவற்றுள் வாசிட்டலிங்கம், பார்க்கவம் என்ற இரண்டுக்கும் பதிலாகக் காந்தமும் மாகேசுவரமும் சொல்லியிருக்கக் காண்கிறோம். இந்தப் பட்டியல் வடமொழியில் வெவ்வேறு நூல்களில் வெவ்வேறு வகையாகச் சொல்லப்பட்டுள்ளது. தமிழ்க் கூர்ம புராணத்தில் இப்பட்டியலைக் காணலாம். மேலும் உபபுராணங்கள் பதினெட்டுக்கு மேல் அதிகமானவை, நூற்றுக்கணக்கில் இருந்தன என்ற கருத்தும் உண்டு. இவற்றின் காலம் பொதுவாக கி.பி. 650 - 800 என்று வடமொழிவாணர் சொல்வார்கள்.

### அதிபுராணங்கள் 18

மேற்சொன்னவையன்றி அதிபுராணம் என்ற பெயரில் பின்வரும் 18உம் சொல்லியிருக்கக் காண்கிறோம். ஆதிகம், இலக்குமி, கர்க்கம், கல்கி, சண்டி, சிவோத்தர ரூபம், தேவி சரிதம், பசுபதி, பரானந்தம், பவிஷ்யோத் தரம், பார்க்கவம், பிருகத் தர்மம், பிருகத் வாமனம், பிருகத் மாத்ஸ்யம், பிருகத் நாரதீயம், மகா பாகவதம், முத்கலம், வசிட்டம், இவற்றுள்ளும் பெயரில் வேறு பாடுகள் உண்டு. முத்கலம் என்பது விநாயக புராணம்.

## புராண ஆசிரியர் செய்த பிற நூல்கள்

16ஆம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு முதல் பாகம் - புராண இலக்கியம் என்ற இந்த நூலில், இதுவரை கூறி யுள்ளபடி 22 ஆசிரியர் செய்த 36 புராணங்களின் வரலாற்றை ஆராய்ந்தோம். இவ்வாசிரியர்களுள் பதினொருவர் இப்புராணங் களன்றி மேலும் பிற வகை நூல்கள் - சாத்திர நூல்கள், சாத்திர உரைகள், இலக்கணங்கள், பிரபந்தங்கள், தனிக் காவியங்கள், தோத்திரம், பிற இலக்கியம் என்ற பல்வகை நூல்கள் - செய்திருக் கிறார்கள், அந்நூல்கள் யாவும் இந்நூற்றாண்டு வரலாற்றின் இரண்டாம் பாகத்தில் ஆராயப்பெற்றுள்ளன. அப்பதினொரு வருள் பின் கண்ட ஐவர் செய்த புராணங்கள் மட்டுமே இங்கு ஆராயப்பட்டன; அவர்களின் வாழ்க்கை வரலாறுகள் இங்கு விரித்துச் சொல்லப் பெறவில்லை:

| | ஆசிரியர் | பாகம் | பக்கம் |
|---|---|---|---|
| 1. | கமலை - ஞானப்பிரகாசர் | 2 | 205 - 225 |
| 2. | கண்கட்டி - மறைஞான சம்பந்தர் | 2 | 158 - 184 |
| 3. | ரேவண சித்தர் | 2 | 90 - 99 |
| 4. | திருக்குருகைப் பெருமாள் கவிராயர் | 2 | 117 - 145 |
| | | 3 | 77 - 83 |
| 5. | திருவொற்றியூர் - ஞானப்பிரகாசர் | 3 | 63 - 69 |

இவ்வைவர் செய்த பிறநூல் ஆராய்ச்சி விரிவாக இருந்தமையால், பிற பாகங்களில் வரலாறு விரித்துரைக்கப்பட்டது. இவ்வைவர் போக, ஏனைய பதினைவரின் வாழ்க்கை வரலாறுகளே இங்கு விரித்துச் சொல்லப்பட்டன. இவ்வைவர் வரலாறுகள் இரண்டாம் பாகத்தில் இவர்களுடைய பிற நூல்களை ஆராயுமிடத்து விரித்துரைக்கப்பட்டுள்ளன.

இனி, இந்த முதற் பாகத்தில் ஆராய்ந்த ஆசிரியர்களுள், பிற நூல் செய்த பதினொரு ஆசிரியர்களையும் அவர்கள் செய்த பிற வகை நூல்களையும் அவை ஆராயப்பெறும் அத்தியாயத்தையும் கீழே ஓர் அட்டவணையாகக் காட்டுகிறோம்.



## 16ஆம் நூற்றாண்டுப் புராண ஆசிரியரின் பிற நூல்கள்

இந்த நூல்கள் எமது தமிழ் இலக்கிய வரலாறு 16ஆம் நூற்றாண்டு பாகம் 2, 3 இல் ஆய்வு செய்யப் பெற்றுள்ளன. பாகத்தின் எண்ணும் பக்க எண்ணும் 4, 5 பத்திகள் காட்டும்.

| எண் | புராண ஆசிரியர் | பிற நூல்கள் | பாகம் | பக்கம் | நூலின் தன்மை |
|---|---|---|---|---|---|
| 1 | வரகுணராமர் | அம்பிகைமாலை | 1 | 20 | தோத்திர இலக்கியம் |
| 2 | வரதுங்கராமர் | கருவை அந்தாதிகள் 3 | 3 | 154 - 162 | தோத்திர இலக்கியம் |
| | | கொக்கோகம் | 3 | 290 - 295 | பிற வகை |
| 3 | அதிவீர ராம பாண்டியர் | நைடதம் | 2 | 36 - 47 | காப்பிய இலக்கியம் |
| | | வெற்றிவேற்கை | 2 | 50 - 54 | நீதி நூல் |
| 4 | புராணத்திருமலைநாதர் | சொக்கநாதர் உலா | 3 | 221 - 225 | பிரபந்தம் |
| 5 | கமலை ஞானப்பிரகாசர் | சைவானுட்டான அகவல் | 2 | 215 | சைவ இலக்கியம் |
| | | சிவபூசை அகவல் | 2 | 216 | சைவ இலக்கியம் |
| | | புட்ப விதி | 2 | 215 | சைவ இலக்கியம் |
| | | பிராசாத மாலை | 2 | 217 | சைவ இலக்கியம் |
| | | சிவானந்த போதசாரம் | 2 | 222 | சைவ இலக்கியம் |
| | | அத்துவாக் கட்டளை | 2 | 225 | சைவ இலக்கியம் |
| | | சாதி நூல் | 2 | 221 | பிற வகை |
| 6 | நிரம்ப அழகியதேசிகர் | சித்தியார் உரை | 3 | 58 - 61 | சைவ சாத்திர உரை |
| | | திருவருட்பயன் உரை | 3 | 61 - 63 | சைவ சாத்திர உரை |

| என் | புராண ஆசிரியர் | பிற நூல்கள் | பாகம் | பக்கம் | நூலின் தன்மை |
|---|---|---|---|---|---|
| 7 | எல்லப்ப நாவலர் | திருவாரூர்க் கோவை | 3 | 228 - 230 | பிரபந்தம் |
| | | திருவருணைக் கலம்பகம் | 3 | 227 - 228 | பிரபந்தம் |
| | | திருவருணை அந்தாதி | 3 | 226 - 227 | பிரபந்தம் |
| | | சௌந்தரிய லகரி உரை | 3 | 12 - 20 | தோத்திர சாத்திர உரை |
| 8 | மறைஞான சம்பந்தர் | சிவதருமோத்தரம் | 2 | 167 - 174 | சைவ சாத்திரம் |
| | | சைவ சமய நெறி | 2 | 174 - 175 | சைவ சாத்திரம் |
| | | பதிபசு பாசப் பனுவல் | 2 | 175 - 176 | சைவ சாத்திரம் |
| | | சங்கற்ப நிராகரணம் | 2 | 178 - 179 | சைவ சாத்திரம் |
| | | மற்றவை பல | 2 | 179 - 184 | சைவ சாத்திரம் |
| 9 | திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் | சித்தியர் பரபக்க உரை | 3 | 65 - 67 | சைவ சாத்திர உரை |
| | | சங்கற்ப நிராகரண உரை | 3 | 67 - 69 | சைவ சாத்திர உரை |
| 10 | ரேவண சித்தர் | அகராதி நிகண்டு | 2 | 90 - 99 | இலக்கணம் |
| | | சிவஞான தீபம் | 2 | 269 - 274 | சைவ சாத்திரம் |
| 11 | திருக்குருகைப்பெருமாள் கவிராயர் | மாறனலங்காரம் | 2 | 132 - 134 | இலக்கணம் |
| | | மாறனகப் பொருள் | 2 | 123 - 126 | இலக்கணம் |
| | | பாப்பாவினம் | 2 | 126 - 132 | இலக்கணம் |
| | | திருப்பதிக் கோவை | 3 | 77 - 79 | இலக்கணம் |
| | | நம்பெருமாள் மும்மணிக் கோவை முதலியன | 3 | 79 - 81 | பிரபந்தம் |
| | | | | 81 - 83 | பிரபந்தம் |

16ஆம் நூற்றாண்டு – புராண ஆசிரியர் – சைவம் – பெயர் கால அட்டவணை

| எண் | ஆசிரியர் | காலம் | புராண எண் | புராணம் | புராண வகை | சருக்கம் | பாடல் | பக். |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | வரகுணராம பாண்டியர் | 1560 - 1600 | 1 | இலிங்கபுராணம் | சிவதருமம் | 154 | 2506 | 11 |
| | | | 2 | வாயு சங்கிதை | சிவதருமம் | 60 | 1333 | 17 |
| 2 | வரதுங்கராம பாண்டியர் | 1588 - 1610 | 3 | பிரமோத்தரம் | சிவதருமம் | 22 | 1323 | 27 |
| 3 | அதிவீரராம பாண்டியர் | 1564 - 1610 | 4 | காசிகண்டம் | சிவதருமம் தலபுராணம் | 100 | 2526 | 41 |
| | | | 5 | கூர்மபுராணம் | சிவதருமம் | 97 | 3717 | 49 |
| 3a | (பெயர் தெரியவில்லை) | 1564 - 1610 | 6 | மாகபுராணம் | தலபுராணம் தீர்த்தம் | 28 | 1424 | 53 |
| 4 | சிதம்பர நாதகவி | 1575 -1600 | 7 | சங்கர விலாசம் | தலபுராணம், சிவதருமம் | 23 | 1437 | 60 |
| 5 | கமலை ஞானப்பிரகாசர் | 1550 - 75 | 8 | திருமழபாடி | தல புராணம் | 8 | 571 | 79 |
| | | | 9 | திரு ஆனைக்கா | தல புராணம் | 14 | 571 | 84 |
| 6 | நிரம்ப அழகிய தேசிகர் | 1560 - 1610 | 10 | திருப்பரங்கிரி | தல புராணம் | 11 | 526 | 92 |
| | | | 11 | சேதுபுராணம் | தல புராணம் | 45 | 3438 | 95 |
| | | | 12 | திருவையாறு | தல புராணம் | 41 | 2207 | 102 |
| | | | 13 | வேணுவனம் | தல புராணம் | 2 | 454 | 106 |
| 7 | அளகை சம்பந்த முனிவர் | 1575 - 1600 | 14 | திருவாரூர் | தல புராணம் | 111 | 2929 | 114 |
| 8 | திருவொற்றியூர் ஞானப்பிரகாசர் | 1575 - 1600 | 15 | திருஒற்றியூர் | தல புராணம் | 16 | 599 | 118 |

